## இராமலிங்க அபயம் துணை

## அருட்பெருஞ்ஜோதி அகவல் - உரை

**அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி**
**அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி** (2)

உலகிலே இதுவரை தோன்றிய மகான்களும், ஞானிகளும் கடவுளைப் பற்றிக் கூறியுள்ள விளக்கங்கள் ஏராளம் ஏராளம். வெவ்வேறு வடிவங்களிலும் வெவ்வேறு பெயர்களிலும் தெய்வங்கள் நமக்குக் காட்டப்பட்டுள்ளன. பலவேறு சமயங்களும், பலவேறு மதங்களும், பலவேறு மார்க்கங்களும் இந்த உலகிலே நிலவி வருகின்றன. பிறக்கும் போதே இந்தச் சமயத்தைச் சார்ந்த குடும்பத்தில்தான் பிறக்க வேண்டும் என்று யாரும் விரும்பிப் பிறவி எடுக்கவில்லை. உலக அறிவு தோன்றும்போதுதான் தன்னுடைய பெற்றோர் வணங்கும் தெய்வத்தையும் அவர்கள் சார்ந்துள்ள சமயத்தையும் உணர்ந்துகொள்ள முடிகிறது. அப்படியிருந்தும் தான் சார்ந்துள்ள அந்தச் சமயத்தின் மீது அளவு கடந்த பற்றை மக்கள் ஏற்படுத்திக் கொள்கின்றார்கள். அதன் காரணமாக மற்ற சமயங்களைப் புறக்கணிப்பது மட்டுமின்றி அவமதிக்கவும் துணிகின்றார்கள். இதன் முடிவு சமயச் சண்டை, மதச் சண்டை என ஆகிறது. பல ஆயிரக் கணக்கான மக்கள் உண்மை உணராமல் மாண்டு போகின்றார்கள்.

முன்னால் தோன்றிய மகான்கள் எந்த அடிப்படையில் தெய்வ உருவங்களைக் கற்பனை செய்தார்கள் என்று திருவருட் பிரகாச வள்ளலார் ஆய்வு செய்து ஒரு பேருண்மையைக் கண்டார். அதாவது சிற்சபையில் தவம் செய்வோர் முடிவாகத் தங்களுடைய அனுபவத்திலே கண்ட பேரொளியையே புறத்திலே பலப்பல வடிவங்களில் இறைவனாகக் காட்டினார்கள், என்ற உண்மையை வள்ளலார் விளக்குகின்றார். அதாவது சைவம் முதலாக விளங்குகின்ற ஒவ்வொரு சமயமும் தன் தெய்வம், தன் தெய்வம் என்று தனித்தனியாகக் காட்டுவது சிற்சபை ஒளி தவிர வேறில்லை என்கிறார்.

**சைவ முதலாக நாட்டும் - பல**

சமயங்களெல்லாம் தனித் தனிக் காட்டும்
தெய்வ மிது வந்து பாரீர் - திருச்
சிற்றம்பலத்தே திருநட ஜோதி. (திருவருட்பா 4605)

எல்லாச் சமயத்தாருக்கும் பொதுவாக இறைவன் ஒருவன் தான் இருக்க முடியும். அந்த ஒருவனேயாகிய கடவுளைத்தான் ஒவ்வொரு சமயத்தவரும் ஒவ்வொரு பெயரில் வணங்கி வருகின்றார்கள். எனவே எல்லாப் பெயர்களும், எல்லா வடிவங்களும் அந்த ஒரே ஒரு கடவுளைத் தான் குறிக்கின்றன என்பதே உண்மை. வள்ளலாரும் இந்த அடிப்படையில்தான் எல்லாத் தெய்வங்களையும் பாடியுள்ளார். இதை அவரே ஒரு பாடலில் தெரிவிக்கின்றார்.

வண்ணம் வேறெனினும் வடிவு வேறெனினும் மன்னிய உண்மை ஒன்றென்றே
எண்ணியதல்லால் சச்சிதானந்தத் திறையும் வேறெண்ணியதுண்டோ
அண்ணனின் பாதமறிய நானறியேன் அஞரினிச் சிறிது மிங்காற்றேன்
திண்ணமே நின்மேலாணை என்றன்னைத் தெளிவித்துக் காப்பதுன் கடனே (திருவருட்பா 3636)

சமயத் தெய்வங்கள் தனித்தனியாக இருப்பதாக வள்ளலார் எப்போதும் நம்பியதில்லை.

திருஅருட்பாவை நன்கு ஆய்ந்தால் ஒரு பெரிய உண்மையை உணரலாம். அதாவது கடவுள் அநாதி என்றும் அவரிடம் அருட்சக்தி அநாதி என்றும் கூறுகிறார். அந்த அருள் தான் பெருஞ்ஜோதி என்று கூறுகின்றார் வள்ளலார். (ஆதாரம்)

திருக் கதவம் திறவாயோ திரைகளெல்லாம் தவிர்த்தே
திருவருளாம் பெருஞ்ஜோதி திருவுருக்காட்டாயோ?
(பாட்டு எண் 3760)

## திரு அருளாம் பெருஞ்ஜோதி

இதையே தான் அருள் பெருஞ்ஜோதி என்று கூறியுள்ளார். அருளானது கடவுளிடமிருந்து அடைவதல்லவா. எனவேதான் ஆண்டவன் தனக்கு அருட்பெருஞ்ஜோதியை அளித்ததாகக் கூறுகிறார்.

அஞ்சலை நீ ஒரு சிறிதும் என் மகனே
அருட்பெருஞ்ஜோதியை அளித்தனம் உனக்கே
துஞ்சிய மாந்தரை எழுப்புக நலமே சூழ்ந்த
சன்மார்க்கத்தில் செலுத்துக சுகமே
விஞ்சுற மெய்ப் பொருள் மேனிலை தனிலே
விஞ்சைகள் பலவுள விளக்குக என்றாய்
தஞ்சமென்றவர்க்கருள் சத்திய முதலே
தனி நடராஜ என்சற்குரு மணியே (திருவருட்பா 3699)

இந்தப் பாடலிலிருந்து என்ன புரிகின்றது? அருட்பெருஞ்ஜோதி என்பது ஒருவரால் கொடுக்கப்பட்டு மற்றொருவரால் வாங்கப்படும் பொருளாகத் தோன்றுகிறது.

இந்த அருளாகிய பெருஞ்ஜோதியை உடைய ஆண்டவரைத் தான் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே என்று அழைக்கின்றார். இந்த அருளையடைய ஆன்றோர்கள் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு வழிகளை அதாவது தாசமார்க்கம், சற்புத்திர மார்க்கம், சக மார்க்கம், சன்மார்க்கம் என்ற நான்கு வழிகளில் முயற்சி செய்தார்கள். வள்ளலாரும் மனித தேகம் எடுத்தவர்கள் அடைய வேண்டிய அரும்பெரும் புருஷார்த்தங்கள் :

1. ஏம சித்தி 2. சாகாக் கல்வி 3. தத்துவ நிக்கிரகம் செய்தல் 4. கடவுள் நிலை அறிந்து அம்மயமாதல் ஆகிய நான்கு என்றும், இவற்றையடைய நாம் உண்மையுடன் கடைப்பிடித்து ஒழுக வேண்டிய பெருநெறி ஒழுக்கங்களும் 1. இந்திரிய ஒழுக்கம் 2. கரண ஒழுக்கம் 3. ஜீவ ஒழுக்கம் 4. ஆன்ம ஒழுக்கம் என நான்காக வரையறை செய்கிறார்.

ஒவ்வொருவரும் இந்த நான்கு நெறிகளிலும் நின்று வள்ளலார் காட்டியுள்ள நான்கு பெரும் புருஷார்த்தங்களையும் அடைய வேண்டும் என்பதற்காக அருட்பெருஞ்ஜோதி நான்கு முறை கூறப்பட்டுள்ளது.

நால்வகை நெறியினும் நாட்டுக எனவே
பால்வகை முழுவதும் பணித்த பைம்பொன்னே (அகவல் வரி 1364)

மனித தேகம் எடுத்த ஒவ்வொருவரும் நான்கு நெறிகளிலும் நின்று இறைவனை அடைய வேண்டும்.

**அருட் சிவ நெறிசார் அருட்பெருநிலைவாழ்**
**அருட் சிவ பதியாம் அருட்பெருஞ்ஜோதி** (4)

சிவ என்பதற்குப் பொருள் அனாதியாய் மலமில்லாத சர்வ வல்லபம் உடையது என்பதாகும்.

பெரு நிலை வாழ்வென்பது எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்விதத்தும் எவ்வளவும் தடைபடாது வாழ்கின்ற வாழ்வேயாகும்.

அருள் என்பது கடவுள் விளக்கம்.

அருளே வடிவாய், அனாதியாய், மலமில்லாததாய் (ஆணவம்-மாயை- கன்மமே மலமாகும்) சர்வ வல்லபமும் உடையதாய் விளங்கும் சிவத்தை அடையும் நெறி எதுவோ அதைச் சார்ந்து எக்காலத்தும் எதனாலும் தடைபடாது வாழக்கூடிய பெருவாழ்வை உடையோர்க்கு அருள் அளிக்கும் சிவபதியாம் அருட்பெருஞ்ஜோதி.

சிவ நெறி என்பது ஜீவகாருண்யமாகும். பெரு வாழ்வை யடைதற்குத் தவமே வழியாகும்.

"கூற்றறியாத பெருந்தவர் உள்ளக்
கோயிலிருந்த குணப் பெருங்குன்றே"

பிற ஜீவன்கள்படும் துன்பத்தைத் தன்னுடைய துன்பமாகவே எண்ணி, அந்த ஜீவர்களின் துயர் துடைக்கும் ஜீவகாருண்யத்தைச் சார்ந்து, எக் காலத்தும் தடைபடாத வாழ்வளிக்கும் தவ வாழ்வு உடையோர்க்கு அருள் அளிக்கும் சிவ பதியாய் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

**ஆகம முடி மேல் ஆரண முடி மேல்**
**ஆக நின்று ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி** (6)

நம் மனித தேகத்தை ஆலயமாக்கி மனித தேகத்தில் இறைவன் இருக்கும் இடமாகிய சிற்சபையைக் கருவூலமாக்கி அனுபவங்களையும் அறிவுரைகளையும் சடங்குகளாக்கி வைத்தனர் நம் முன்னோர். பண்டைய காலத்தில் ஆலயங்கள் ஏற்படுத்தவும்,

அதிலே மூர்த்தங்களை நிறுத்தவும், அவண் செய்ய வேண்டிய சடங்குகளையும் விளக்கச் சாத்திரங்கள் வரையப்பட்டன. இந்தச் சாத்திரங்கள் ஆகமங்கள் ஆகும். மனித உடம்பில் செயல்படும் ஜீவ விளக்கமே ஆலயமாவதால் ஆகமங்கள் பசு நூல் எனப்பட்டன (ஜீவன் = பசு).

இறைவனின் தன்மை, குணம், ரூபம், சொரூபம் முதலியவற்றைப் பல்வேறு துறைகளில் நின்று விளக்கும் நூலே வேதங்களாகும். ஆரணம் என்பது வேதம்.

இந்த ஆகமங்களும், வேதங்களும் முடிந்த முடிபாக எந்த விளக்கத்தைத் தருகின்றனவோ அவைகட்கு உட்பட்டதுபோல் நின்று அவைகளின் முடிபிற்கு எட்டாது மேலும் ஓங்கி விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

**இக நிலைப் பொருளாய்ப் பரநிலைப் பொருளாய்**
**அக மறப் பொருந்திய அருட்பெருஞ்ஜோதி.** (8)

இக நிலை என்பது உலகியல்
பர நிலை என்பது அருளியல்

மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய பஞ்ச பூதங்கள் மட்டுமின்றி, உலகின் கண்ணுள்ள ஜடப் பொருள்களுமாகி மேலும் உயிருள்ள அனைத்து ஜீவர்களுமாகி அந்த ஜீவர்கட்கு இன்ப துன்பங்களை அளிக்கும் பொருள்கள் அத்தனையுமாகியும்,

அருளியல் வாழ்வை மேற்கொண்டோர் அனுபவிக்கின்ற பேரறிவடைதல், காணாத காட்சி காணல், கேளாத கேள்வி கேட்டல், உண்ணாது உண்ணுதல் போன்ற அனுபவங்கள் மட்டுமின்றி இறைவனுடன் கலக்கின்ற சித்தி இன்பமும் ஆகி நிற்கும் அருட்பெருஞ்ஜோதி, தனக்கென வாழாது ஆசைகளைத் தன் அகத்தே அறுத்தோர் உள்ளத்தே மட்டும் பொருந்தி விளங்குகின்றதாம்.

(ஆதாரம்)

மறப்பற்ற நெஞ்சிடை வாழ்கின்ற வள்ளல்

மலப் பற்றறுத்தவர் வாழ்த்தும் மணாளர்
சிறப்புற்ற மங்கையர் தம்மொடும் நான் தான்
சிற்றம்பலம் பாடிச் செல்கின்ற போது
புறப் பற்றகற்றத் தொடங்காத பெண்ணே
புலை அகப்பற்றை அறுத்தாய் நினக்கே
இறப்பற்ற தென்கின்றார் என்னடியம்மா
என் கை பிடிக்கின்றார் என்னடியம்மா

(திருவருட்பா 5678)

அகமறப் பொருந்தும் என்பதற்கு ஆதாரம்.

உரை மனம் கடந்த ஒரு பெரு வெளி மேல்
அரைசு செய்து ஓங்கும் அருட்பெருஞ்ஜோதி (அகவல் வரி 12)

**ஈனமின்றிகபரத்து இரண்டின் மேற் பொருளாய்**
**ஆனலின் றோங்கிய அருட்பெருஞ்ஜோதி** (10)

முன் வரியிலே உலகியல், அருளியல் அனைத்துப் பொருள்களும் அவனாகக் கூறப்பட்டது. கேவலமான இழிந்த பொருள்களும் உள்ளனவே - அவற்றை நீக்கி உயர்ந்தவை மட்டுமே கொள்ளப்படுகிறது. இழிவில்லாத, கேவலமில்லாததாய் உலகியல் அருளியல் ஆகிய அனைத்துப் பொருள்களுக்கும் மேற்பட்டதாய், சிறந்ததாய் அருட்பெருஞ்ஜோதி விளங்குகின்றது.

ஆனல் என்பது ஆகாயம். ஆகாயம் என்பதும் வெளி தான். முன் வரியில் அகமறப் பொருந்திய அருட்பெருஞ்ஜோதி என்றார். அகத்திலே அருட்பெருஞ்ஜோதி எங்கே பொருந்தும் என இந்த வரியில் விளக்குகின்றார். பிண்டத்தில் அண்டம் புருவமத்தி என்பது வள்ளலார் வாக்கு. அந்தப் புருவ மத்தியாகிய சிற்சபையில் தோன்றி ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி.

ஆகாயத்தில் ஒளிரும் என்பதற்கு ஆதாரம்.

சாகாக் கலை நிலை தழைத்திடு வெளி எனும்
ஆகாயத் தொளிர் அருட்பெருஞ்ஜோதி (அகவல் வரி 52)

**உரை மனங் கடந்த ஒரு பெரு வெளி மேல்**

## அரைசு செய்து ஓங்கும் அருட்பெருஞ்ஜோதி (12)

மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றையும் திரிகரணம் என்பார்கள். தேகத்தை எந்தக் காரியமும் செய்யாமல் சும்மா வைத்திருக்கலாம். வாயினாலும் பேசாமல் சும்மா இருக்கலாம். ஆனால் மனதைச் சும்மா வைத்திருக்க முடியுமா? எப்போதும் எதையாவது நினைத்துக் கொண்டேதான் இருக்கும். நிதம் எண்பது கோடி நினைவுகள் ஏற்படுமாம். மனதினாலே மந்திரங்களை (நமச்சிவாய, சிவ சிவ, சரவணபவ) உச்சாடனம் செய்வதற்கு ஜெபம் என்று பெயர். ஏதாவது ஓர் உருவத்தை வெளியே பார்த்து அதை அப்படியே கண்களை மூடிக்கொண்டு உள்ளே காண முயற்சி செய்வதற்குத் தியானம் என்று பெயர். மனதிலே எதையும் நினையாமல் சும்மா இருப்பதற்குத் தவம் என்று பெயர். இந்த மூன்றில் சிறந்தது தவமே. மனம் செயல்படாது நின்று போனால் அங்கே தோன்றுவது சூன்யம். அதாவது வெளி. அதுவே பெரு வெளி.

மனம் செயல்படுகின்ற வரையில் இறை அனுபவம் கிட்டாது.

மனதின் செயல்பாடு அற்றவுடன் ஏற்படுகின்ற மௌன வெளியில் தன்னரசு செலுத்தி ஓங்கி நிற்கின்ற அருட்பெருஞ்ஜோதி. மன உணர்வு செல்லாத் தலத்தாடும் பெருமான் வடிவை உரைக்கவல்லார் யார் வழுத்தாய் என்கின்றார் வள்ளலார்.

காற்றுருவோ கனலுருவோ கடவுளுரு என்பார்
காற்றுருவும் கனலுருவும் கண்டுரைப்பீரென்றால்
வேற்றுருவே புகல்வர் அதை வேறொன்றால் மறுத்தால்
விழித்து விழித்து எம்போல்வார் மிகவும் மருள்கின்றார்
தோற்றுமந்தத் தத்துவமும் தோற்றாத தத்துவமும்
துரிசாக அவை கடந்த சுக சொருபமாகி
மாற்ற மனவுணர்வு செல்லாத் தலத்தாடும்
பெருமான் வடிவுரைக்க வல்லவரார் வழுத்தாய் என் தோழி,
(திருவருட்பா 5638)

மனம் கடந்த மௌன நிலையில் அருட்பெருஞ்ஜோதி அனுபவமாக விளங்கும் என்பதே முடிவான கருத்து.

ஜாக்ரத், சொப்னம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என அவஸ்தைகள் ஐந்து என்பர்.

| | | |
|---|---|---|
| சொப்னம் | - | தூக்க நிலையில் மனம் செயல்படுவது |
| சுழுத்தி | - | உறக்க நிலையில் மனம் செயல்படாது இருப்பது. |
| ஜாக்ரத் | - | விழிப்பு நிலையில் மனம் செயல்படுவது |
| துரியம் | - | விழிப்பு நிலையில் மனம் செயல்படாது இருப்பது. |

துரிய மலை மேல் உளதோர் ஜோதி வள நாடு
தோன்றும் அதில் ஐயர் நடம் செய்யும் மணி வீடு
தெரியுமது கண்டவர்கள் காணில் உயிரோடு
செத்தார் எழுவார் என்று கைத்தாளம் போடு.
(திருவருட்பா 5263)

விழிப்பு நிலையில் மனம் செயல்படாது நிற்கும் நிலையே துரியம் - அதுவே தவம். அந் நிலையில் பெருஞ்ஜோதிக் காட்சி தோன்றும். இதே அனுபவத்தைத் தான் மனங் கடந்த பெரு வெளி மேல் அரைசு செய்து அருட்பெருஞ்ஜோதி ஓங்கும் என்கிறார்.

**ஊக்கமும் உணர்ச்சியும் ஒளி தரும் ஆக்கையும்**
**ஆக்கமும் அருளிய அருட்பெருஞ்ஜோதி.** (14)

மனங்கடந்த பெரு வெளிமேல் அரைசு செய்து அருட்பெருஞ்ஜோதி ஓங்கும் என முன் வரியில் கூறப்பட்டது.

சும்மா இருக்கும் சுகமல்லவா மனம் கடந்த பெரு நிலை. அது எளிதில் கிட்டுமா? நம்மால் ஆகக் கூடிய செயலா என்றெல்லாம் எண்ணி எண்ணி முயற்சி செய்யாமல் விட்டு விடுவோமோ என அஞ்சினாரில்லை நம் பெருமானார்.

பன்னிரண்டாண்டு தொடங்கித் தவ வாழ்க்கையை மேற்கொண்டார். விடா முயற்சியும், அடைந்தே தீர வேண்டும் என்ற அழுத்தமான உணர்ச்சியும் கொண்டார். அவர் பட்டபாடு இவ்வளவு என்று அளவு சொல்ல முடியாது.

ஆதாரம் :

பனிரண்டாண்டு தொடங்கி இற்றைப் பகலின் வரையுமே
படியில் பட்ட பாட்டை நினைக்கில் மலையும் கரையுமே
துனியாதந்தப் பாடு முழுதும் சுகமதாயிற்றே
துரையே நின் மெய்யருளிங்கெனக்குச் சொந்தமாயிற்றே
(திருவருட்பா 5041)

ஈராறாண்டு தொடங்கி இற்றைப் பகலின் வரையுமே
எளியேன் பட்ட பாட்டை நினைக்கில் இரும்பும் கரையுமே
ஏராயந்தப் பாடு முழுதும் இன்பமாயிற்றே
இறைவா நின் மெய்யருளிங் கெனக்குச் சொந்தமாயிற்றே
(திருவருட்பா 5042)

இவ்வாறு அரும்பாடுபடுவதற்கு வேண்டிய ஊக்கமும், எப்பாடுபட்டாகினும் அடைந்தே தீர வேண்டும் என்ற மிக மிக அழுத்தமான உணர்ச்சியும் ஆண்டவன் அருளினான். அதன் பயனாகத்தான் அவருடைய தூல உடம்பு ஒளி உடலாக மாறியது. எல்லாச் சித்திகளும் அவருக்குக் கைவரப் பெற்றன. தான் கொண்ட விடா முயற்சியாலும், அடைந்தே தீர வேண்டும் என்ற அதி தீவிர உணர்ச்சியாலும் ஒளி தேகமும் எல்லாம் செய் வல்லபமும் அவர் பெற்றார்.

ஊக்கமும் உணர்ச்சியும் ஒளி தரும் யாக்கையும் சித்தி வல்லபமும் தான் தன் முயற்சியால் அடைந்தேன் என்று கூறாமல் எல்லாம் அருட்பெருஞ்ஜோதியானது அவருக்கு அருளியதாம்.

குறிப்பு: ஆக்கம் என்பது செல்வம் என்று பொருள்படும். ஒளி தரும் யாக்கை பெற்றோர் உலகியல் செல்வமா நாடுவர்? எனவே தான் ஆக்கம் என்ற சொல்லிற்குச் செல்வம் என்று பொருள் தராமல் சித்தி வல்லபம் என்று கூறப்பட்டது.

**எல்லையில் பிறப்பெனும் இருங்கடல் கடத்தி என்**
**அல்லலை நீக்கிய அருட்பெருஞ்ஜோதி** (16)

ஒளியுடலும், எல்லாச் சித்திகளும் தான் பெற்றதை முன் வரியில் கூறினார். ஒளியுடல் பெற்றவருக்கு மரணம் நீங்கிவிடும். மரணத்தை வென்றவர் இறப்பதுமில்லை - மீண்டும் பிறப்பதுமில்லை. எல்லையில் பிறப்பு என்பதை எல்லை இல் பிறப்பு என்று பிரித்துக் கொண்டால் அளவிட முடியாத பிறப்பு என்று பொருள்படும். எல்லை என்ற சொல்லுக்கு முடிவு என்றும் பொருளுண்டு. மனித வாழ்வின் முடிவில் மரணம் ஏற்படுகிறது. யாராயிருந்தாலும் மரணத்தைச் சந்திப்பவர்கள் மீண்டும் பிறந்தே ஆக வேண்டும். ஏனெனில் ஜீவன் உடம்பெடுத்தே இயங்கும் என்றும், தனித்து இயங்காது என்றும் எடுத்துக் காட்டியுள்ளார்.

ஒளியுடம்பு பெற்றதன் பயனாக, முடிவே இல்லாத, இறப்பு பிறப்பு எனும் இருண்ட பிறவிக் கடலை நான் கடக்குமாறு செய்து பிறவி என்ற துன்பத்தை நீக்கிய அருட்பெருஞ்ஜோதி.

**ஏறா நிலைமிசை ஏற்றி என்றனக்கே**
**ஆறாறு காட்டிய அருட்பெருஞ்ஜோதி.** (18)

தமது பன்னிரண்டாம் வயதில் தவ வாழ்க்கை ஆரம்பித்த வள்ளலார் பூத நிலை கடந்து, நாதம், பரவிந்து, பரநாதம், திக்கிராந்தம், அதிக்கிராந்தம் முதலிய அனுபவங்களை ஒவ்வொன்றாக அடைந்து முடிவாக சுத்த சிவ நிலை அனுபவத்தையும் பெற்றுக் கடவுளுக்கு என்னென்ன குணங்கள், வல்லபம், தன்மை முதலியன உண்டோ அவையனைத்தும் அவர் பெற்றுக் கடவுளாகவே விளங்குகின்றார். தூல தேகமாக இருந்த அவரது தேகம், சுத்த தேகமாக; பிரணவ தேகமாக, ஞான தேகமாக மாறியது. இதுவரை யாரும் அடைந்தறியாத அனுபவங்களை அவர் அடைந்தார்.

பிரமர்கள், நாரணர்கள், உருத்திரர்கள் மற்றவர்கள் யாரும் அடையாத அனுபவத்தை வள்ளலார் அடைந்தார்.

உருத்திரர்கள் ஒரு கோடி நாரணர் பல் கோடி
உறுபிரமர் பல கோடி இந்திரர் பல கோடி

பெருத்த மற்றைத் தேவர்களும் முனிவர்களும் பிறரும்
பேசிலனந்தங்கோடி ஆங்காங்கே கூடித்
திருத்தமுறும் திருச்சபையின் படிப்புறத்தே நின்று
தியங்குகின்றார் நடங்காணும் சிந்தையராயந்தோ
வருத்தமொன்றுங் காணாதே நானொருத்தியேறி
மாநடங்காண்கின்றேன் என் மாதவந்தான் பெரிதே.
(திருவருட்பா 5776)

தான் அடைந்த பூரண நிலை அனுபவத்தால் மன நிறைவடைந்த வள்ளலார் பூரிப்படைந்து என்னிடமிருந்து துன்பத்தைக் கழற்றி எறிந்து விட்டேன் கவலையை ஒழித்துவிட்டேன் - பிறவி என்ற சட்டத்தைக் கிழித்து எறிந்து விட்டேன் - தூக்கத்தைத் துறந்து விட்டேன் - சாவையும் நோவையும் தவிர்ந்து விட்டேன் - இறைவனின் செல்வப் பிள்ளையும் ஆயினேன் - எனக்கிது போதும் என்று ஆனந்த எக்களிப்பில் துள்ளுகின்றார்.

கட்டமும் கழன்றேன் கவலை விட்டொழிந்தேன் கலக்கமும்
தீர்ந்தனன் பிறவிச்
சட்டமும் கிழித்தேன் தூக்கமும் துறந்தேன் சாவையும்
நோவையும் தவிர்ந்தேன்
சிட்டமுமடைந்தேன் சிற்சபையுடையான் செல்வ மெய்ப்பிள்ளை
என்றொரு பேர்ப்
பட்டமுந் தரித்தேன் எனக்கிது போதும் பண்ணிய தவம்
பலித்ததுவே. (திருவருட்பா 4736)

என்னைப் போல நோவாது நோன்பு கும்பிட்டவரும் சாவா வரம் எனைப் போல் அடைந்தவரும் இறைவனே நின்பேரருளை என்போலப் பெற்றவரும் எவ்வுலகில் யாருளர் நீ சற்றே அறை என்று இறைவனையே வள்ளலார் கேட்கின்றார்.

நோவாது நோன்பு எனைப் போல் நோற்றவரும் எஞ்ஞான்றும்
சாவா வரம் எனைப் போல் சார்ந்தவரும் - தேவா நின்
பேரருளை என் போலப் பெற்றவரும் எவ்வுலகில்
யாருளர் நீ சற்றே அறை. (திருவருட்பா 5624)

இறைவன் இவ்வினாவிற்கு விடை அளித்திருக்கிறான். உன்னைத் தவிர உலகில் வேறு யாரும் தகுதியானவர்

எனக்கில்லாததினால்தான் எல்லாம் வல்ல சித்துக்களை உனக்களித்தேன் என்று வள்ளலாரிடம் இறைவன் கூறினான்.

(ஆதாரம்)

எல்லாம் வல்ல சித்து எனக்கு அளித்து எனக்குனை
அல்லாதிலையெனும் அருட்பெருஞ்ஜோதி (அகவல் வரி 298)

இதுவரை யாரும் அடையாத அனுபவ நிலைக்கு வள்ளலார் ஏறி அடைந்தார் என்று கூறினால் மட்டும் விளக்கம் முழுமையடையாது. மனிதராய்த் தோன்றிக் கடவுள் மயமானவர் வள்ளலார். தான் பெற்ற அந்தப் பேற்றை இந்த வரியில் வள்ளலார் விளக்குகின்றார்.

இதுவரை யாரும் ஏறியறியாத அனுபவ நிலைக்கு என்னை ஏற்றி என் தனக்கு முப்பத்தாறு தத்துவங்கள் நிலையை விளக்குவித்தருளிய அருட்பெருஞ்ஜோதி.

ஆறாறு என்பதை 6 x 6 - 36 என்றால் தத்துவங்கள் 36.

ஆறு என்றால் வழி அல்லது மார்க்கம் என்று பொருள். ஆறு என்பது வேதாந்தம், சித்தாந்தம், போகாந்தம், யோகாந்தம், நாதாந்தம், கலாந்தம் என அந்தங்கள் என்றால் அவைகளின் மார்க்கம் இன்னதென எனக்கறிவித்த அருட்பெருஞ்ஜோதி எனவும் பொருள் கொள்ளலாம்.

## ஐயமும் திரிபும் அறுத்து எனது உடம்பினுள்<br>ஐயமும் நீக்கிய அருட்பெருஞ்ஜோதி (20)

ஐயம் என்பது உண்டா, இல்லையா - நடக்குமா, நடக்காதா - வருமா, வராதா - முடியுமா, முடியாதா என்பது போன்று மனதிலே எழும் சந்தேகமாகும்.

திரிபு என்பது ஒன்றை மற்றொன்றாகத் தவறாக நினைப்பது ஆகும். அதாவது இரவிலே ஒரு கட்டையைப் பார்த்துக் கள்வனோ என்று திகைப்பதும், கீழே வளைந்து கிடக்கும் ஒரு கயிறைப் பாம்பாக எண்ணிப் பயப்படுவதும், கிளிஞ்சலை

வெள்ளியாக எண்ணி ஏமாறுவதும், பித்தளையைப் பொன்னோ என எண்ணுவதும் திரிபு அல்லது மயக்கம் என்பார்கள்.

மார்பகத்திலே சளி பெருக மூச்சு விட முடியாமல் திணற வைக்கும் நோய்வயப்பட்டு மரணப் படுக்கையில் உள்ளவர்க்கு இவ்வாறு நிகழுமானால் மரணம் உடனே சம்பவிக்கும் என்பார்கள். இந்தச் சீதளத்தைத்தான் உடம்பினுள் ஐயம் என்கின்றார்.

மனதிலே உண்டாகிய சந்தேகத்தையும் மயக்கத்தையும் அறுத்து எனது உடம்பினுள் இருந்த சீதளத்தால் ஏற்படும் ஈரச் சளியையும் நீக்கிய அருட்பெருஞ்ஜோதி.

**ஒன்றென இரண்டென ஒன்றிரண்டென இவை**
**அன்றென விளங்கிய அருட்பெருஞ்ஜோதி.** (22)

திருவருட்பாவிலே கையாளப்பட்டுள்ள சொற்களில் எளிதில் விளங்கிக் கொள்ள முடியாத சில வார்த்தைகட்குப் பொருள் மற்ற நூல்களிலோ அகராதிகளிலோ தேடாமல் திருவருட்பாவிலேயே தேட வேண்டும்.

ஒன்றென இரண்டென என்பதற்கு ஒவ்வொருவர் மனதிலும் ஒவ்வொரு பொருள் வரலாம். ஆனால் வள்ளலார் எந்தப் பொருளில் இதை எழுதியிருப்பார் என்று ஆய்ந்து பொருள் கண்டால் உண்மைப் பொருளை அறியலாம்.

ஒன்று, இரண்டு என்றவர் அடுத்து மூன்று என்னாமல் ஒன்றிரண்டு என்கிறார். அதாவது ஒன்று என்றது எதுவோ, இரண்டு என்றது எதுவோ அவை இரண்டும் சேர்ந்தது ஒன்றிரண்டு.

திருவருட்பா கீர்த்தனைப் பகுதியில் வாரீர் சிதம்பரவல்லி சிவகாமவல்லி மணாளரே வாரீர் என்று தொடங்கி 104 கண்ணிகளை இயற்றியருளியுள்ளார்கள். அவற்றில் 43வது கண்ணியைக் காண்க.

"உருவாய் அருவாய் உருவருவாய் இவை
ஒன்றுமல்லீர் இங்கு வாரீர்
என்றும் நல்லீர் இங்கு வாரீர்.

(திருவருட்பா 4396)

இந்தக் கண்ணியை ஆயுமிடத்து

ஒன்று - உருவம்
இரண்டு - அருவம்
ஒன்றிரண்டு - உரு அருவம்

ஒன்றிரண்டு என்ற சொல் ஒன்றையும் இரண்டையும் சேர்த்து உருவருவம் ஆயிற்று.

இரண்டாவது வரியில் இவை அன்றென விளங்கிய அருட்பெருஞ்ஜோதி என்கிறார். கீர்த்தனைக் கண்ணியிலும் இவை ஒன்றுமல்லீர் என்கின்றார். எனவே இந்த அகவல் வரிக்கு எல்லா வகையிலும் பொருத்தமான விளக்கமாக இந்தக் கீர்த்தனைக் கண்ணி விளங்குகிறது.

இதுவரை தோன்றிய அருளாளர்கள் அத்துணைபேரும் எந்தச் சமயத்தவராய், எந்த மதத்தவராய் இருந்தாலும் இறைவனை ஒரு சாரார் உருவமாக இருப்பவன் என்றும், மற்றொரு சாரார் இல்லை, இல்லை இறைவன் அருவமாகவே இருக்கின்றான் என்றும், இவை இரண்டையும் மறுத்து வேறொரு சாரார் இறைவன் இரண்டுமாக அதாவது உருவருவமாக இருக்கின்றான் என்றும் கூறியுள்ளனர். ஒட்டு மொத்தமாகக் கண்டால் இறைவனை உருவமாக, அருவமாக அல்லது உருவருவமாக இந்த மூன்றாகவே காட்டியுள்ளனர். இறைவனைப் பற்றிய எல்லா விளக்கங்களும் இந்த மூன்றினுள் அடங்கிவிடும்.

வள்ளலார் இந்த அகவல் வரியில் தரும் விளக்கமோ என்னவெனில் உருவமாக (ஒன்றென) அருவமாக (இரண்டென) உருவருவமாக (ஒன்றிரண்டு) இவையெல்லாம் விளக்கம் அன்று என்று விளங்கிய அருட்பெருஞ்ஜோதி..

**ஓதாது உணர்ந்திட ஒளி அளித்து எனக்கே ஆதாரமாகிய அருட்பெருஞ்ஜோதி.** (24)

தன்னைப் பற்றி வள்ளலார் கூறுகின்றார். அதாவது எந்த ஆசிரியரிடத்தும் சென்று கல்வி பயிலாமலேயே தான் எல்லா நூல்களையும் உணர்ந்து கொண்டதை அறிவிக்கின்றார். ஓதாது என்ற சொல் ஆசிரியரிடத்துச் சென்று கல்வி பயிலாததை மட்டுமின்றி எந்த நூலையும் தான் படிக்கவில்லை என்றும் வள்ளலார் கூறுவதாக அமைந்துள்ளது.

வள்ளலார் தோன்றிய போதே ஞான அறிவுடன்தான் வந்தார் என்பதற்கு இதைவிட வேறு ஆதாரம் வேண்டுமோ?

எந்தப் பள்ளியிலும் சென்று எந்த ஆசிரியரிடத்தும் எந்த நூலையும் ஓதாமலே எல்லாக் கலைகளையும் உணருமாறு ஒளி அளித்தது மன்றி என்னைத் தாங்கி வளர்த்து எனக்கு ஆதாரமாக அதாவது ஊன்று கோலாக விளங்கிய அருட்பெருஞ்ஜோதி என்கிறார்.

ஓதாமல் உணருவது சாத்தியமா? சத்தியப் பெரு விண்ணப் பத்தில் தன்னைப் பற்றி வள்ளலார் கூறுவது :-

> "எல்லாமானவராயும் ஒன்றுமல்லாதவராயும், எல்லா அண்ட சராசரங்களின் அகத்தும் புறத்தும் நிறைந்து விளங்குகின்ற தனித் தலைமைக் கடவுளே! குமார பருவத்தில் என்னைக் கல்வியிற் பயிற்றும் ஆசிரியரையின்றியே என் தரத்தில் பயின்று அறிதற்கருமையாகிய கல்விப் பயிற்சியை எனதுள்ளத்தே யிருந்து பயிற்றுவித்தருளினீர்"

ஓர் ஆசிரியரின்றி தான் அனைத்தையும் இறைவனிடமே அறிந்து கொண்டதாகக் கூறுகின்றார்.

உபதேசக் குறிப்புகளில் வள்ளலார் கூறியுள்ளது.

> "பத்து ஆள் சுமை ஒரு வண்டி பாரம். நானூறு வண்டிச் சுமை ஒரு சூல் வண்டி பாரம். சூல் வண்டி ஆயிரங்கொண்ட நூல்களை ஒரு ஜென்மத்தில் ஒருவன் அதி தீவிர ஜீவ முயற்சியால் படிக்கச் சிறிய உபாசனைச் சகாயத்தால் முடியும்.

அப்படிப்பட்டவன் ஆயிரம் ஜென்மம் எடுத்துப் படிக்கும் கலை அறிவை அருள் முன்னிடமாகச் சுத்த சிவ நோக்கத்தால் அறியத் தொடங்கினால் ஒரு கணத்தில் படித்துக் கொள்ளலாம். இது சத்தியம்."

இதையே திருவருட்பாவிலும் ஒரு பாட்டில் குறிக்கின்றார்.

காரணமிது புரிகாரியமிது மேற் காரணக் காரியக் கருவிது பலவாய்
ஆரணமாகம மிவை விரித்துரைத்தே அளந்திடும் நீ அவை
அடைந்திடன் மகனே
பூரண நிலை அனுபவ முறில் கணமாம் பொழிதினிலறிதி
எப்பொருள் நிலைகளுமே
தாரணி தனில் என்ற தயவுடையரசே தனி நடராஜ என்
சற்குருமணியே. (திருவருட்பா 3695)

ஒவ்வொரு நூலையும் படித்துத்தான் அறிந்து கொள்ள வேண்டும் என்பதில்லை. பூரண நிலை அனுபவம் ஏற்படும்பொழுது கணத்தில் எப்பொருள் நிலைகளையும் அறிய முடியும் என்கிறார்.

இன்னொரு பாட்டிலும் தான் கற்றது, கேட்டது, கண்டது, பெற்றது எல்லாம் இறைவனிடத்தே என்றும், தான் புரிந்தது பெருந்தவம் என்றும், இவ்வாறு தான் அடைந்தது அதிசயமே என்றுங் கூறுகின்றார்.

சுற்றது மற்றவ்வழி மாசூதது என்றெண்ணாத்
தொண்டரெலாங் கற்கின்றார் பண்டுமின்றுங் காணார்
எற்றதும்பு மணி மன்றில் இன்ப நடம்புரியும்
என்னுடைய துரையே நான் நின்னுடைய அருளால்
கற்றது நின்னிடத்தே பின் கேட்டது நின்னிடத்தே
கண்டது நின்னிடத்தே உட்கொண்டது நின்னிடத்தே
பெற்றது நின்னிடத்தே இன்புற்றது நின்னிடத்தே
பெரிய தவம்புரிந்தேன் என் பெற்றி அதிசயமே.
(திருவருட்பா 3044)

தான் ஓதாது உணர்ந்ததைப் பற்றி வள்ளலாரே வெளிப்படுத்திய அகச் சான்றுகள் சிலவற்றைக் கண்டோம்.

அவரது முதல் மாணவராகக் கருதப்படும் தொழுவூர் வேலாயுத முதலியார் அவர்கள் சென்னை அடையாறு தியாசாபிகல் சங்கத்தார்க்கு அளித்த வாக்குமூலம் ஒன்றிலும் அடியிற் குறித்துள்ளவாறு கூறியுள்ளார்.

"இவர் தம் ஒன்பதாம் வயதிலேயே ஆரியர்களாலும், திராவிடர்களாலும் சரி சமானமாய் அபிமானித்தவர். அகத்தியர் முதலிய முனிவர்களால் எழுதப்பட்ட பாக்களை ஓதாமலே மனப்பாடமாய்ப் பாடும் நாவளத்தைப் பெற்றிருந்ததாகவும் சொல்லக் கேள்வி."

இவருக்கு முன்னும் அருணகிரியார், குமரகுருபரர் போன்றோர் இறையருள் வல்லபத்தால் பாடல்கள் இயற்றினர் என்றும் அவர்களும் எந்த ஆசிரியரிடத்தும் கல்வி பயின்றவரில்லை என்றும் வரலாறு கூறுகின்றது. எனவே ஓதாது உணர்தல் சாத்தியம் சாத்தியமே.

**ஔவியம் ஆதியோர் ஆறும் தவிர்த்த பேர்**
**அவ்வியல் வழுத்தும் அருட்பெருஞ்ஜோதி.** (26)

ஔவியம் என்பது பொறாமை. பக்தி என்ற சொல்லை வெறுமனே சொல்லாமல் பயபக்தி என்று கூறுவதுண்டு. அதாவது பக்தி உடையோர் இறைவனுக்குப் பயந்து நடக்க வேண்டும் என்பதும், அதற்கு அடையாளம் அவர்கள் தவறு செய்யப் பயப்படுவார்கள் என்பதும் இதன் விளக்கம். தவறு செய்யாதவர்கள் குணத்தில் எவ்வாறு விளங்குவார்கள்? அவர்களிடத்தில் எந்தத் தீய குணமும் இருக்காது. அப்படி காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சர்யம் (பொறாமை) ஆகிய ஆறு இழி குணங்களையும் அடியோடு நீக்கியவர்கள் தூய்மையுடன் வணங்கிப் போற்றும் அருட்பெருஞ்ஜோதி.

**திருநிலைத் தனி வெளி சிவ வெளி எனுமோர்**
**அருள் வெளிப் பதிவளர் அருட்பெருஞ்ஜோதி** (28)

அருட்பெருஞ்ஜோதி அகவல் அ என்ற எழுத்தில் தொடங்கி அகர வரிசையில் ஔ வரை எழுதப்பட்டுள்ளது. ஔ என்ற

எழுத்திற்குப் பின் ஆயுத எழுத்தாகிய ஃ என்ற எழுத்து வர வேண்டிய இடத்தில் திருநிலை என்று எழுதப்பட்டுள்ளது. திருநிலை என்பது ஆயுத எழுத்தைக் குறிக்கின்றது. இந்த ஆயுத எழுத்து எதைக் குறிக்கின்றது? மனித முகத்திலுள்ள இரண்டு கண்களை ஆயுத எழுத்தின் கீழுள்ள இரண்டு புள்ளிகளும் நெற்றியிலுள்ள கண்ணை மேலே உள்ள புள்ளியும் குறிக்கின்றது. ஆக இந்த ஆயுத எழுத்தானது முகத்திலுள்ள முக்கண்களேயாகும்.

திருநிலை என்பது ஆயுத எழுத்தையும் முகத்திலுள்ள கண்களையும் மட்டுமே குறிக்கின்றது என்பதற்குத் திருவருட்பாவிலே சான்று உள்ளது.

வாரீர் சிதம்பரவல்லி சிவகாமவல்லி மணாளரே வாரீர் என்ற கீர்த்தனைப் பாடலைக் கவனித்தால் அந்தக் கீர்த்தனைக் கண்ணிகளும் அகர வரிசையில் எழுதப்பட்டுள்ளன. அங்கும் அ என்ற எழுத்திலிருந்து ஔ என்ற எழுத்துவரை வரிசையாக எழுதிய நம்பெருமானார் ஔ விற்குப்பின் ஆயுத எழுத்தாகிய ஃவர வேண்டிய இடத்தில் கண்ணனையீர் என்று எழுதுகிறார். ஆயுத எழுத்து கண்களே தவிர வேறில்லை என்பது நிரூபணமாகின்றது.

முக்கண்களாகிய மூன்று புள்ளிகளையும் சேர்த்தால் முக்கோணம் அதாவது மாடம் ஒன்று உருவாகும். அந்த இடத்திற்குச் சிற்சபை என்றும் புருவமையம் என்றும் இன்னும் எவ்வளவோ பெயர்கள் வழங்குகின்றன.

திருநிலையாகிய தனி வெளி, சிவ வெளி எனப்படும் அருள் வெளியாகிய இடத்தில் வளர்கின்ற அருட்பெருஞ்ஜோதி.

மனதைக் கட்ட வேண்டிய இடம் இந்தப் புருவமையம் தான். மனம் அங்கே அடங்கினால் அங்கே தோன்றுவது ஒப்பற்ற வெளி. மனம் அடங்கிச் சும்மா இருக்கும் நிலையில் ஏற்படுவதே சிவானுபவம். அருள் விளங்குவதும் அதே இடம் தான். எனவேதான் அந்தப் புருவ மையம், திருநிலைத் தனி வெளி, சிவ வெளி, அருள் வெளி என்றெல்லாம் கூறப்பட்டது.

முக்கண்கள் எனப்படும் புருவ மையமாகிய சிற்சபையில் அருட்பெருஞ்ஜோதி அனுபவம் வளருமாம்.

ஒரு நிலை இதுவே உயர் நிலை எனும் ஒரு
திருநிலை மேவிய சிவமே சிவமே (அகவல் வரி 950)

திருநிலை என்பது சிவமாகிய அருளை அடையக் கூடிய பெரு நிலை எனச் சுட்டிக் காட்டப்படுவது காண்க.

**சுத்த சன்மார்க்கச் சுகத் தனி வெளி எனும்**
**அத்தகைச் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி** (30)

பொறி, புலன்களை அடக்கிச் சும்மா இருப்பதையே சுகம் என்று முன்னோர் கூறினர். சுத்த சன் மார்க்க சுகம் எதுவென்று வள்ளலார் கூறுகிறார்.

அகவலில் வரும் கடைசி வரிகளை ஆய்வோம்.

உலகினில் உயிர்கட்கு உறும் இடையூறெலாம்
விலக நீ அடைந்து விலக்குக மகிழ்க
சுத்த சன்மார்க்க சுக நிலை பெறுக
உத்தமனாகுக ஓங்குக என்றனை (1590 - 1592)

உலக உயிர்களின் துயரங்களைத் தானடைந்து விலக்கி மகிழ்ச்சி அடைவதே சுத்த சன்மார்க்க சுக நிலை என்பதா? நடராஜபதி மாலையில் உள்ள ஒரு பாட்டு.

துன்பெலாந் தீர்ந்தன சுகம் பலித்தது நினைச் சூழ்ந்தது அருள்
ஒளி நிறைந்தே சுத்த சன்மார்க்க நிலை அனுபவம்
நினக்கே சுதந்தரமானது உலகில்
வன்பெலா நீக்கி நல் வழியெலாம் ஆக்கி மெய்
வாழ்வெலாம் பெற்று மிகவும் மன்னுயிரெலாம் களித்திட
நினைத்தனை யுன்றன் மன நினைப்பின்படிக்கே
அன்ப நீ பெறுக உலவாது நீடூழி விளையாடுகஅருட்ஜோதியாம்
ஆட்சி தந்தோம் உனைக் கைவிடோம் கைவிடோம்
ஆணை நம்மாணை என்றே
இன்புறத் திருவாக்கு அளித்து என்னுளே கலந்து இசைவுடன்
இருந்த குருவே எல்லாம் செய்வல்ல சித்தாகி
மணி மன்றினில் இலங்கு நடராஜ பதியே.
(திருவருட்பா 3676)

செத்தாரெழுந்தனர் சுத்த சன்மார்க்கஞ் சிறந்தது.
ஒத்தார் உயர்ந்தார் இல்லா ஒருவனையுற்றடைந்தே நான்
சித்தாடுகின்றனன் சாகா வரமும் சிறக்கப் பெற்றேன்
இத் தாரணியிலெனக்கிணை யாரென்றியம்புகேனே

தான் அருள் அடைந்து அந்த அருளைக் கொண்டு பிறர் துயர் துடைக்க அதனால் ஏற்படும் இன்பமே சுத்த சன்மார்க்க சுக நிலைச்சுகம் என அறியப்படுகிறது.

முன்வரியில் தனி வெளியின் சிறப்பு கூறப்பட்டது. (அந்த அனுபவம் பெற்றோர்கட்கு) சுத்த சன்மார்க்கச் சுகமாகிய, எக்காலத்தும் எதனாலும் அழியாத பேரின்பப் பெரு வாழ்வைத்தரவல்ல சுத்த சிவநிலைக்கும் அதீதமான அனுபவ நிலைச் சிற்சபை ஓங்கும் அருட்பெருஞ்ஜோதி.

**சுத்த மெய்ஞ்ஞானச் சுகோதய வெளியெனும்**
**அத்து விதச் சபை அருட்பெருஞ்ஜோதி** (32)

சுத்த சன்மார்க்க சுகம் என்பது பிற உயிர்கட்கு உண்டாகும் துன்பத்தை நீக்கி அவை மகிழும்போது அதைக் கண்டு ஏற்படும் இன்பமே என முன் வரியில் கூறப்பட்டது.

ஜீவன் வேறு இறைவன் வேறு என்பது துவைதம். ஒவ்வொரு ஜீவனும் இறைவனையடைய முயற்சி செய்து இறைவனுடன் இரண்டறக் கலக்கப் பெறும் நிலை அத்வைதம் எனப்படும். துவைதமாயிருந்தால் அத்வைதம் தானே ஆகும் என்று வள்ளலார் கூறுகின்றார். அந்த அத்வைத நிலை அடைகின்ற போது தோன்றுகின்ற சுகம் வளரும் தன்மையுடைய பேரின்பமாதலால் சுக உதயம் எனப்பட்டது. இரண்டற்ற நிலை அனுபவம்தான் மெய்ஞ்ஞானம் அளிப்பது. இந்தப் பேரின்பத்தை அளிக்கும் அத்வைத அனுபவச் சபையாகிய சிற்சபையில் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

**தூய கலாந்த சுகந்தரு வெளி எனும்**
**ஆய சிற்சபையில் அருட்பெருஞ்ஜோதி** (34)

கலைகள் 64 என வரையறை செய்யப்பட்டுள்ளன. அந்தக் கலைகள் அனைத்தினையும் ஒருவன் அறிந்து கொள்வானானால் அவனுக்கு ஏற்படும் பெருமிதம், அதனால் விளையும் ஆனந்தம் அளவிட முடியாதது. அந்தக் கலைகள் எந்த முடிவை அறிவிக்கின்றனவோ அந்த முடிவே கலாந்தம். சிற்சபை அனுபவமானது அந்தக் கலாந்த முடிவை எளிதில் அளித்துவிடும். சிற்சபையில் மனம் அடங்கும் சமயத்தில் தோன்றும் வெளி அனுபவத்தில் கலைகள் அனைத்தையும் அறிந்து கொள்ள முடியும்.

கலைகள் அனைத்தினையும் அறிந்த சுகத்தைத் தருகின்ற சிற்சபையில் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

**ஞான யோகாந்த நடத்திரு வெளியெனும்**
**ஆனியில் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி** (36)

சரியை கிரியை முதலிய சாதகம் நான்கில் ஞானயோகம் என்பது பதினைந்தாவதுபடியாகும். இந்த அனுபவம் ஏற்படும்போது மனதில் நிராசை உண்டாகிறது. நிராசை உண்டானதும் மனம் செயல்பாடின்றி அறுந்து விடுகிறது. மனம் அறுபட்டவுடன் இறை அனுபவம் தோன்ற ஆரம்பிக்கின்றது. அது பரநாத அனுபவத்தில் பேரொளியாக விளைகிறது.

ஞான யோகாந்தம் என்னும் 15ம் படி அனுபவத்தில் தோன்றும் ஒளி அசைவைக் காட்டும் திருவெளி என்று கூறப்படும் குற்ற மற்ற சிற்சபையின் அருட்பெருஞ்ஜோதி.

**விமல போதாந்த மாமெய்ப் பொருள் வெளி எனும்**
**அமல சிற்சபையில் அருட்பெருஞ்ஜோதி.** (38)

ஆணவம் மாயை கன்மம் என்கின்ற மும்மலங்களால் வரும் இன்பத்தை மட்டுமே ஜீவர்களாகிய நாம் அறிந்து அனுபவித்து வருகின்றோம். நிராசை தோன்றிய மனதிலே இந்த மல போதம்

நீங்கி விடுகின்றது. மல போதம் நீங்கிய விடத்தே இறை அனுபவம் தோன்றுகின்றது. இந்த இன்பமே மேலான உண்மையான இன்பம். இதைத்தான் விமல போதம் என்கின்றார். இந்தப் போத முடிவில் மேன்மையுடையதாய் உண்மையான மெய்ப் பொருள் எதுவோ அதைக் காட்டும் வெளி என்று சொல்லப்படும் ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மலமற்ற சிற்சபையில் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

**பெரிய நாதாந்தப் பெரு நிலை வெளி எனும்**
**அரிய சிற்றம்பலத்து அருட்பெருஞ்ஜோதி.** (40)

தவம் செய்வோர் பரநாத நிலை அனுபவம் பெறுவோர் இறைவனைப் பெருஞ்ஜோதியாகக் காணுவர். அதனால்தான் இந்த அனுபவத்தைப் பெரிய நாதாந்தப் பெரு நிலை என்று கூறுகின்றார். அடைவதற்கு அருமையான சிற்றம்பலத்தில் உள்ள வெளியிலே நாதாந்தத்தின் முடிவிலே விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி.

நாதாந்தத்தில் பெருஞ்ஜோதி தோன்றும் என்பதற்கு ஆதாரம்.

ஈற்றறியேன் இருந்திருந்திங்கதிசயிப்பதென்னீ
என்கின்றாய் நீ எனை விட்டேகுதொறு நான்றான்
காற்றறியாத் தீபம் போலிருந்திடு மத்தருணம்
கண்ட பரிசென்புகல்வேன் அண்ட பகிரண்டந்
தோற்றறியாப் பெருஞ்ஜோதி மலை பரநாதத்தே
தோன்றிய தாங்கதனடுவே தோன்றியதொன்றதுதான்
மாற்றறியாப் பொன்னொளியோ அவ்வொளிக்குள்ளாடும்
வள்ளலருளொளியோவீததிசயிக்கும் வகையே (5767)

நாதாந்தத்தின் முடிவிலே நடமிடும் ஒளியே இறைவன்.

வேதத்தின் முடி மிசை விளங்குமோர் விளக்கே
மெய்ப்பொருளாகம வியன் முடிச் சுடரே
நாதாந்தத்தின் முடிநடு நடமிடும் ஒளியே
நவையறு முளத்திடை நண்ணிய நலமே
ஏதத்தினின்றெனையெடுத்து அருள் நிலைக்கே
ஏற்றிய கருணை யென்னின்னுயிர்த் துணையே
தாதுற்ற உடம்பழியா வகை புரிந்தாய்
தனி நடராஜ என்சற்குருமணியே. (திருவருட்பா 3700)

**சுத்த வேதாந்தத் துரிய மேல் வெளி எனும்**
**அத்தகு சிற்சபை அருட்பெருஞ்ஜோதி.** (42)

வேதங்கள், ஆகமங்கள் முதலிய எல்லாவற்றிலும் பல உண்மைகளை மக்களுக்கு உணர்த்துவதற்காகப் பலப்பல சம்பவங்களை, நமது முன்னோர் எழுதி வைத்துள்ளனர். சொல்ல வேண்டிய உண்மைகளை நேரடியாகச் சொல்லாமல், கதைகள் மூலமாகவும், சில சில சம்பவங்கள் மூலமாகவும், கூறியிருக் கிறார்கள். வேதங்களையும், ஆகமங்களையும் கற்றவர்கள், விளக்குபவர்கள், அவைகளிலுள்ள சம்பவங்களை எடுத்துச் சொல்கின்றார்களே தவிர அவற்றில் மறைக்கப்பட்டுள்ள உண்மைகளை எடுத்துச் சொல்வதில்லை. அவைகளில் உண்மைகள் வெளிப்படையாகச் சொல்லப்படாமல் மறைக்கப் பட்டுள்ளன என்பதற்கு ஆதாரம்.

வேதாகமங்களென்று வீண் வாதமாடுகின்றீர்
வேதாகமத்தின் விளைவறியீர் - சூதாகச்
சொன்னவலால் உண்மை வெளி தோன்ற உரைத்தலிலை
என்ன பயனோ இவை

(திருவருட்பா 5516)

வேதாகமங்களிலுள்ள உண்மையை உணர்ந்து கொள்ள வேண்டும். உலகத்தார் உண்மையை உணராமல் பொய்யான வற்றையே நம்புகிறார்கள்.

(ஆதாரம்)

தோன்றிய வேதாகமத்தைச் சாலமென வுரைத்தேம்
சொற்பொருளும் இலக்கியமும் பொய்யெனக் கண்டறியேல்
ஊன்றியவேதாகமத்தின் உண்மை நினக்காகும்
உலகறி வேதாகமத்தைப் பொய்யெனக் கண்டுணர்வாய்
ஆன்ற திருவருட் செங்கோல் நினக்களித்தோம் நீயே
ஆள்க அருளொளியால் என்றளித்த தனிச் சிவமே
ஏன்ற திருவமுதெனக்கும் ஈந்த பெரும் பொருளே
இலங்கு நடத்தரசே என் இசையுமணிந்தருளே

(திருவருட்பா 4177)

கலையுரைத்த கற்பனைகளையெல்லாம் கண் மூடித்தனமாக அப்படியே நம்பி விடாமல் அவற்றின் உண்மையை ஆய்ந்தறிவதே சன்மார்க்கம்.

வேதாந்தத்தின் உண்மை உணர்வதே சுத்த வேதாந்தம்.

ஜாக்ரத், சொப்னம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்ற அவத்தைகளில் துரியம் என்பது விழிப்பு நிலையில் மனம் செயல்படாதிருத்தலாகும். மனம் செயல்படாதபோது அதில் எண்ணங்கள் கூட எழாது. சூன்யமாக இருப்பதால் அதை வெளியென்றும் இதற்கு மேல் பெரியது ஒன்றுமில்லையாதலால் துரிய மேல் வெளி என்றும் கூறப்பட்டுள்ளது. துரிய நிலை அனுபவம் ஏற்படுமானால் ஜோதி தெரியும் என்கின்றார் வள்ளலார்.

(ஆதாரம்)

துரிய மலை மேலுளதோர் ஜோதி வள நாடு
தோன்றுமதில் ஐயர் நடம் செய்யு மணி வீடு
தெரியுமது கண்டவர்கள் காணிலுயிரோடு
செத்தார் எழுவார் என்று கைத்தாளம் போடு
(திருவருட்பா 5263)

வேதாந்தத்தின் உண்மையாய் விளங்குவதாயும் துரியம் என்று சொல்லப்படுகின்ற மேலான வெளி அனுபவமாய் விளங்குவதாயும் உள்ள சிற்சபையில் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

**சுத்த சித்தாந்த சுகப் பெரு வெளி எனும்**
**அத்தனிச் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி** (44)

நாதாந்தத் திருவீதி நடந்து கடப்பேனோ என்று தொடங்கும் பாடலில் வேதாந்த சித்தாந்த சமரசமும் வருமோ என்று பாடுவதிலிருந்து வேதாந்தமும் சித்தாந்தமும் மாறுபட்ட கருத்துக் களையுடையது என்பது புரிகின்றது.

சித்தாந்தத்தின் உண்மையை உணர்ந்து கொண்டதால் ஏற்படும் சுகமாகிய பெருவெளி என்பது ஒப்பற்ற சிற்சபையே ஆகும். அச்சிற்சபையில் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

ஜீவனானது இறைவனுடன் இரண்டறக் கலக்க முடியும் என்று வேதாந்தம் கூறினால் முடியவே முடியாது எந்த நிலை அனுபவம் ஜீவனுக்கு ஏற்பட்டாலும் இறைவன் வேறுதான், ஜீவன் வேறுதான், என்றும் இரண்டும் கலக்கவே கலக்காது என்று சித்தாந்தம் கூறும்.

**தகர மெய்ஞ்ஞானத் தனிப்பெரு வெளி எனும்**
**அகர நிலைப் பதி அருட்பெருஞ்ஜோதி** (46)

தகரம் என்பது உடம்பு அதாவது மெய் வாய் கண் மூக்கு செவி ஆகிய இந்திரியங்கள்.

அகர நிலைப்பதி என்பதில் அ என்பது உயிர் அதாவது ஜீவன். அகர நிலை என்பது ஜீவன் இருக்குமிடம். அதாவது ஜீவாகாசம். ஜீவாகாசம் என்பது சிற்சபை. எனவே அகர நிலை என்பது சிற்சபை.

அழியும் உடம்பை என்றும் அழியாத நிலைபெற்று விளங்க வைக்கின்ற ஞானத்தையே தகர மெய்ஞ்ஞானம் என்பர்.

தேகத்தை ஞான தேகமாக மாற்றக் கூடிய பேரனுபவத்தைத் தரக் கூடிய பெரு வெளியாக விளங்கும் சிற்சபை எனும் ஜீவாகாசத்து இறைவனாகிய அருட்பெருஞ்ஜோதி.

தேகத்தை அழியாத தேகமாக மாற்ற முடியுமா என்பதற்கு நிறைய ஆதாரங்களைத் திருஅருட்பாவிலே நம் பெருமானார் தருகின்றார். உதாரணமாக

பொத்திய மலப் பிணிப் புழுக்குரம்பைதான்
சித்தியல் சுத்த சன்மார்க்கச் சேர்ப்பினால்
நித்தியமாகியே நிகழும் என்பது
சத்தியம் சத்தியம் சகத்துளீர்களே (திருவருட்பா 5402)

தன் தேகம் அழியாத நிலை பெற்றதையும் வெளிப்படுத்துகிறார்.

ஆடுகின்ற சேவடிக்கே ஆளானேன் மாளாத யாக்கை பெற்றேன்
கூடுகின்ற சன்மார்க்க சங்கத்தே நடுவிருந்து குலாவுகின்றேன்
பாடுகின்றேன் எந்தை பிரான் பதப்புகழை பாடிப்பாடி
நீடுகின்றேன் இன்பக்கூத்தாடுகின்றேன் எண்ணமெலாம்
நிரம்பினேனே (திருவருட்பா 5445)

**தத்துவா தீதத் தனிப் பொருள் வெளியெனும்**
**அத்திரு வம்பலத்து அருட்பெருஞ்ஜோதி.** (48)

தத்துவம் அண்ட தத்துவம், பிண்ட தத்துவம் என இரண்டாக விளங்குகின்றது. அண்டத்தில் காட்டப்பட்டுள்ள பிரும்மா, விஷ்ணு முதலியவை அண்ட தத்துவங்கள். மனம், புத்தி, சித்தம், அகங்காரம், பசி, காமம், குரோதம், லோபம், மோகம், மாச்சரியம், உறக்கம், மரணம் முதலானவைகளெல்லாம் பிண்ட தத்துவத்தில் அடங்கும்.

தத்துவங்கள் அனைத்தினையும் கடந்து, தத்துவங்கட்கு அப்பாற்பட்ட அதீத நிலையில், சித்திகள் விளங்கப் பின்னர் சிவ நிலை தோன்ற, அவ்வனுபவத்தில் யான் என்பதும் எனதென்பதும் கரைந்து போய்விடக் கண்ட அனுபவிகள் பெற்றதே உண்மை அனுபவம். மனித தேகம் எடுத்த ஒவ்வொருவரும் அடைய வேண்டிய உண்மைப் பொருள் இதுவே.

தத்துவங்கள் அனைத்தினுக்கும் அப்பாற்பட்ட நிலையில் அடையக்கூடிய பெரும் பொருளைத் தரவல்ல ஆகாயம் எனக் கூறப்படும் திரு. அம்பலத்தே விளங்கும் அருட்பெருஞ்ஜோதி

**சச்சிதானந்தத் தனிப்பரவெளியெனும்**
**அச்சியல் அம்பலத்து அருட்பெருஞ்ஜோதி.** (50)

வேதாந்தம், சித்தாந்தம், நாதாந்தம் முதலியவைகளும் தத்துவங்கள்தான். அண்ட தத்துவம், பிண்ட தத்துவம் அனைத்தினையும் கடக்கின்ற தத்துவாதீத நிலை முன்வரியில் கூறப்பட்டது. அந்தத் தத்துவாதீத நிலையில் கிடைக்கும் பொருள் எதுவாக இருக்கும்?

அதுதான் சச்சிதானந்தம்

சத்து என்பது இயற்கை உண்மை
சித்து என்பது இயற்கை விளக்கம்
ஆனந்தம் என்பது இயற்கை இன்பம்

எல்லாத் தத்துவங்களையும் கடந்துவிட்ட நிலையில் தோன்றும் சுகமே சச்சிதானந்தமாகும்.

தேர்ச் சக்கரம் பொருந்தியிருக்க அச்சாணி இருப்பதுபோல் இந்த உடம்பு அழியாமல் விளங்க நம் உடம்பில் அச்சாணியாக உள்ளது சிற்சபையே ஆகும்.

சச்சிதானந்த சுகத்தைத் தரவல்ல ஒப்பற்ற மேலான வெளி என்று சொல்லப்படுகின்ற அச்சாணியன்ன விளங்கும் சிற்றம்பலத்து அருட்பெருஞ்ஜோதி.

**சாகாக் கலை நிலை தழைத்திடு வெளியெனும்**
**ஆகாயத் தொளிர் அருட்பெருஞ்ஜோதி** (52)

சாகாக் கலை என்பது சாகாத் தலை, வேகாக்கால், போகாப்புனல் என்ற மூன்று பகுதிகளைக் கொண்டது. இந்த மூன்றின் முதல் எழுத்துக்களை ஒன்று சேர்த்தால் சாவே போ என்று வரும்.

மரணத்தைத் தவிர்க்கும் சாகாக் கல்வி செழிக்கும் இடம் பிண்டத்தில் ஆகாயமாகிய புருவ மத்தியே ஆகும். கருவேரற்றிடவே களைகின்ற என் கண்ணுதலே என்று பாடுவார்கள். பிறவியை வேரறுக்க வல்லது நுதற் கண்ணாகிய புருவ மத்தியே யாகும். கரண ஒழுக்கத்தில் மனதை எந்தவித ஆபாசத்திலும் செலுத்தவொட்டாமல் இழுத்து நிறுத்துதல் என்று கூறியவர் அடுத்து முதலில் புருவ மத்தியில் நிறுத்துதல் என்கிறார். கட்டுக் கடங்கா மனப் பரியைக் கட்ட வேண்டிய இடம் புருவ மத்தியே ஆகும். மனம் புத்தி சித்தம் அகங்காரம் ஆகிய அந்தக் கரணங்கள்தான் நம்மை அருள் வழியில் செல்ல வொட்டாது தடுத்து உலகியலில் அழுத்துகின்றன என எல்லோரும் எண்ணுகின்றோம் ஆனால் அதே கரணங்கட்கு மரணத்தையே தடுக்கக் கூடிய பேராற்றல் உண்டு என்கிறார்.

மரணப் பெரும் பிணி வாராவகை மிகு
கரணப் பெருந்திறல் காட்டிய மருந்தே (அகவல்)

சாகாத கல்வியைத் தரக்கூடிய அனுபவம் செழித்து விளங்கும் வெளியாகிய சிற்சபை எனும் புருவமத்தியாகிய ஆகாயத்தே பிரகாசிக்கின்ற அருட்பெருஞ்ஜோதியே.

**காரண காரியம் காட்டிடு வெளியெனும்**
**ஆரணச் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி** (54)

காரணம் என்பது சூட்சுமம். அதன் செயல்பாடே காரியம் ஆகும். உண்பது செயல் அதற்குக் காரணம் பசி. ஒருவருடன் சண்டை போடுகிறோம். அது செயல். அதற்குக் காரணம் அவர் மீதுள்ள கோபம். காரணம் வெளிப் படையாகத் தெரியாமல் இருக்கலாம். காரியம் வெளியே புலப்படுவது. நல்ல உதாரணம் வள்ளலார் கூறுகின்றார், அதாவது இந்த உடம்பு காரியப்படுகிறது. அதற்குக் காரணமாய் இருப்பது இந்த உடம்பிலுள்ள உயிரே ஆகும். அதுபோல் அண்ட சராசரங்களின் செயல்பாடு காரியம். அதற்குக் காரணம் இறைவன். இறைவன், உயிர் ஆகிய இரண்டு காரணங்களையும் காரியத்தால் மட்டுமே அறிய முடியும் என்கின்றார். ஆதாரம்

பரமதனோடுலகுயிர்கள் கற்பனையே யெல்லாம்
பகர் சிவமே யெனவுணர்ந்தோமாதலினால் நாமே
பிரமமெனப் பிறர்க்குரைத்துப் பொங்கி வழிந்தாங்கே
பேசுகின்ற பெரியவர்தம் பெரிய மதம் பிடியேல்
உரமிகு பேருல குயிர்கள் பரமிவை காரியத்தால்
உள்ளனவே காரணத்தால் உள்ளன வில்லனவே
தரமிகு பேரருளொளியாற் சிவமயமே யெல்லாந்
தாமெனவே யுணர்வது சன்மார்க்க நெறி பிடியே
(திருவருட்பா 5699)

புராணக் கதைகள் வெளிப்படையாகத் தெரிகின்றன. எந்த நீதியை அல்லது உண்மையைச் சொல்வதற்காக அந்தக் கதைகள் புனைந்து எழுதப்பட்டனவோ அந்த உண்மைகள் புராணங்கள் படிக்கின்ற அத்துணை பேர்களுக்கும் புரிந்து விடுவதில்லை. ஒரு சிலரே அவற்றின் உண்மைகளைப் புரிந்து கொள்கின்றனர். வேதங்கள் ஆகமங்கள் புராணங்கள் இதிகாசங்கள் முதலியன எந்த உண்மையை வெளிப்படுத்த எழுதப்பட்டனவோ அந்த உண்மைகளே காரணமாகும். எழுதப்பட்ட செயல் காரியம்.

ஆசாரியன் அனுக்கிரகத்தால் யார் தன்னுடைய நெற்றிக் கண்ணைத் திறக்கப் பெற்றுக் கொள்கின்றார்களோ அவர்களுக்கு எல்லாம் பட்டப் பகல் போல விளங்கும் என்கின்றார். ஆசாரியன் அனுக்கிரகம் பெறாமலும், தங்களது நெற்றிக் கண்ணைத் திறக்கப் பெற்றுக் கொள்ளாமலும் பல கோடிக்கணக்கான மக்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் யாவரும் வேதங்கள் முதலியவற்றின் உண்மைகளை அறியாமலும் அவற்றின் பயனை அடையாமலும் மாண்டு போய்க் கொண்டிருக்கின்றனர்.

பிண்டத்தில் ஆகாயம் புருவமத்தி - அதுவே நெற்றிக் கண் - அதுவே சிற்சபை - எனவே காரணம் இது காரியம் இது எனச் சுட்டிக் காட்டுகின்ற ஆகாச வெளியாகிய புருவமத்தியாகிய சிற்சபையைத்தான் வேதங்கள் விளக்குகின்றனவாம். வேதங்களால் போற்றப்படும் சிற்சபையில் விளங்கும் அருட்பெருஞ்ஜோதியானது காரணமிது காரியமிது என விளக்குகின்றது.

காரண காரியங்களைத் தெரிவிப்பன வேதங்கள் ஆகும் : ஆதாரம்

ஆரணம் என்பது வேதம்

காரணக் காரியக் கல்வியைக் கற்பித்து
ஆரண வீதியில் ஆடச் செய்தீரே

(திருவருட்பா 4645)

பதிநிலையை விளக்கும் ஆரணமாகிய வேதம் இந்த வரியில் கூறப்பட்டது.

**ஏகம் அனேகம் எனப்பகர் வெளியெனும்**
**ஆகமச் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி** (56)

இந்த அண்டங்களும் பிண்டங்களும் அனைத்தும் செயல்படக் காரணமாயுள்ளது பரம்பொருள். முதற்காரணமான பரம்பொருள் முன் வரியில் கூறப்பட்டது.

உலகத்தின் கண் வாழ்கின்ற ஜீவ ராசிகளில் பிண்டங்கள் செயல்படக் காரணமாயுள்ளது உயிர். அதாவது பசு. அதை இந்தவரியில் கூறுகின்றார்.

மனித உடலை ஆலயமாக்கி ஜீவனின் இருப்பிடத்தைக் கருவூலமாக்கி அனுபவங்களைச் சடங்குகளாக்கி ஆகமங்களை உருவாக்கினர் முன்னோர்.

வேதம் பதி நூல் - ஆகமம் பசு நூல்.

இறைவன் ஒருவன் அது ஏகம். ஒருவனேயாகிய இறைவனை அனேக வடிவங்களிலும் அனேகப் பெயர்களிலும் ஞானிகள் காட்டியுள்ளனர். அது அனேகம்.

சிற்சபையில் பிரகாசித்துக் கொண்டிருக்கின்ற ஒளியைத் தான் முன்னால் தோன்றிய ஞானிகள் பலப்பல தெய்வங்களாகக் காட்டினர்.

சைவம் முதலாக நாட்டும் பல
  சமயங்களெல்லாம் தனித்தனிக் காட்டும்
தெய்வ மிது வந்து பாரீர் திருச்
  சிற்றம்பலத்தே திருநடஜோதி.

(திருவருட்பா 4605)

சைவம் முதலாக உள்ள அத்தனை சமயங்களும் காட்டியுள்ள எல்லாத் தெய்வங்களும் திருச்சிற்றம்பல ஜோதி ஒன்றே யாகும். இந்த உண்மையை உணர்ந்தவரும் கூறியவரும் வள்ளலார் ஒருவரே. வள்ளலாரும் ஆரம்பத்தில் எல்லாத் தெய்வங்களையும் வழிபட்டதாகச் சிலர் சொல்கின்றார்கள். எல்லாத் தெய்வங்களும் திருச்சிற்றம்பல ஜோதியின் விளக்கமே என்ற உண்மை வள்ளலாருக்கு ஆரம்பத்திலேயே தெரியுமாதலால் எல்லாத் தெய்வங்களையும் ஜோதியின் சாயலாகவே அவர் பாடுகின்றார்.

மாயையாற் கலங்கி வருந்திய போதும் வள்ளல்
  உன்தன்னையே மதித்துன்
சாயையாப் பிறரைப் பார்த்ததேயல்லால்
  தலைவ வேறெண்ணியதுண்டோ
தூய பொற்பாதமறிய நானறியேன் துயரினிச்
  சிறிதுமிங் காற்றேன்
நாயகா எனது மயக்கெலாம் தவிர்த்தே
  நன்றருள் புரிவதுன் கடனே. (திருவருட்பா 3635)

மகாதேவ மாலையில் மெய்யுணர்ந்த வாதவூர் மலையைச் சுத்த வெளியாக்கிக் கலந்து கொண்ட வெளியே என்று வள்ளலார் பாடுகின்றார். இறைவனை வெளியாகக் குறிப்பிடுகின்றார். அந்த வெளியாகிய இறைவனை ஏகன் என்றும் அனேகன் என்றும் ஆன்றோர் விளக்கினர். ஆகமங்கள் அந்த நிலையை விளக்கவே தோற்றுவிக்கப்பட்டன. ஏகம் அனேகம் எனப் பகர் வெளி என்கின்ற ஆகமங்கள் விளக்கும் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி.

**வேதாகமங்களின் விளைவுகட்கெல்லாம்**
**ஆதாரமாம் சபை அருட்பெருஞ்ஜோதி.** (58)

வேதங்களும் ஆகமங்களும் தரும் விளக்கமே முன் வரிகளில் கூறப்பட்டது. பதி நூலாகிய வேதமும், பசு நூலாகிய ஆகமங்களும் எதை விளக்குவதற்காகத் தோற்றப்பட்டனவோ அவைகட்கெல்லாம் மூலகாரணமாயுள்ளது நமது புருவ மத்தியாகிய சிற்சபையே ஆகும். சிற்சபையை ஆதாரமாக வைத்தே வேதங்களும் ஆகமங்களும் உருவாக்கப்பட்டுள்ளன.

ஆதாரம் :

கொடியிடைப் பெண்பேதாய் நீ அம்பலத்தே நடிக்கும்
கூத்தாடி என்றெனது கொழுநர்தமைக் குறித்தாய்
படியிடத்தே வானிடத்தே பாதலத்தே அண்ட
பகிரண்ட கோடியிலே பதி விளக்கமெல்லாம்
அடிமலர் கொண்டையர் செய்யுந் திருக்கூத்தின் விளக்கம்
ஆகுமிது சத்தியமென்று அருமறை ஆகமங்கள்
கெடியுறவே பறையடித்துத் திரிகின்ற அவற்றைக்
கேட்டறிந்து கொள்வாய் நின் வாட்ட மெலாந் தவிர்த்தே
(திருவருட்பா 5760)

வேதங்கட்கும் ஆகமங்கட்கும் அவை கூறும் விளக்கங்கட்கும் ஆதாரமாக விளங்கும் சிற்சபை வாழ் அருட்பெருஞ்ஜோதி

**என்றாதிய சுடர்க்கியனிலையாயது**
**அன்றாம் திருச்சபை அருட்பெருஞ்ஜோதி** (60)

எல் என்பது ஒளி - ஆதிய முதலாகிய
சுடர் : சூரியன் சந்திரன் நட்சத்திரம்

முச்சுடர்களாக விளங்கும் சூரியன் சந்திரன் நட்சத்திரங்கள் ஆகிய அனைத்தினுக்கும் ஆதியாகி விளங்கி அவைகட்கும் ஒளி அளித்து அவற்றின் ஒளி நிலையை என்றும் உள்ளதாக நிலையானதாக விளங்கச் செய்துகொண்டும் அப்படி ஒன்று இல்லாததாகத் தோன்றுமாறும் இருக்கின்ற சிற்சபைக் கடவுளே.

இந்த அண்டத்தில் முதலில் தோன்றியது சூரியனாகிய ஒளி அதனிடமிருந்துதான் மற்ற எல்லாம் உண்டாயின. எனவே சூரிய ஒளியே ஆதி எனலாம். ஆனால் ஆதியான அந்த ஒளி என்று தோன்றியதோ அதற்கு இயல்பாக எது இடமளித்ததோ அது தான் வெளி. அந்த வெளிக்கு ஆதி என்ற ஒன்றே இல்லை. அந்த வெளியைத் திருச்சபையாகக் கொண்டுள்ள அருட்பெருஞ்ஜோதியே.

**சமயங்கடந்த தனிப் பொருள் வெளியாய்**
**அமையும் திருச்சபை அருட்பெருஞ்ஜோதி** (62)

முன் வரியில் கூறப்பட்ட திருச்சபையை இடமாகக் கொண்டுள்ள பரிபூரணப் பொருளை விளக்கவே சமயங்கள் தோற்றப்பட்டன. ஆனால் எந்தச் சமயத்தாலும் முழுமையை உள்ளவாறு உணர்த்த முடியவில்லை. சமயங்களைத் தோற்றிய ஞானிகள் அனுபவத்தைப் பிறர்க்கு விளக்கச் சிலஉருவங்களைக் கற்பித்தார்கள். பின்னர் வந்தவர்களோ கற்பனைகளை உண்மையென்று தாம் நம்பியதுடன் மற்றவர்களும் நம்புமாறு செய்து விட்டார்கள். முடிவாக உண்மை என்பது அடியோடே மறைந்து போனது மட்டுமின்றிக் கற்பனையாகக் காட்டப்பட்ட சமயங்களும் அவற்றில் கூறப்பட்டுள்ள தெய்வ உருவங்களுமே நிலையானதாக மக்கள் மத்தியில் நின்று விட்டன. பாவங்களை மன்னிக்குமாறு வேண்டுவதும், நன்மைகளைத் தருமாறு பிரார்த்திப்பதும் ஆகிய புறவழிபாட்டோடு சமயங்கள் நின்று விட்டன, சரியை, கிரியை யோகம் ஞானம் ஆகிய நான்கில் முடிந்த முடிபாகிய ஞானவழி

நிற்கும் ஞானிகள் மட்டுமே இறைவனைத் தன்னுள்ளே காண முயற்சி செய்கிறார்கள். இவர்கள் மட்டுமே வெளி அனுபவத்தைப் பெறக் கூடியவர்கள்.

சமயங்கள் தருகின்ற எல்லா விளக்கங்கட்கும் அப்பால் ஒப்பற்ற பொருளாய் விளங்குகின்ற வெளியாய் அமைந்துள்ள திருச்சபையை இடமாகக் கொண்டுள்ள அருட்பெருஞ்ஜோதி.

**முச்சுடர்களும் ஒளி முயங்குற அளித்தருள்**
**அச் சுடராஞ் சபை அருட்பெருஞ்ஜோதி** (64)

அண்டத்திலே ஆண்டவன் காரியப்படும் இடம் என 1. அக்கினி 2. சூரியன் 3. சந்திரன் 4. நட்சத்திரம் ஆகிய நான்கினையும் நம் பெருமானார் குறிக்கின்றார்கள். இந்நான்கில் சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் ஆகிய மூன்று சுடர்களும் நம் ஊனக் கண்களுக்கே தோற்றமாய் உள்ளன. அந்த மூன்றினுக்கும் ஒளி அளிக்கின்ற சுடர் எதுவோ அச்சுடராய் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

ஆதாரம் :

சந்திர சூரியர் ஒளி பெற விளங்கும்
தனி அருட் பெரு வெளித் தலத்தெழுஞ் சுடரே
வந்திர விடை யெனக் கருளமுதளித்தே
வாழ்க வென்ற ருளிய வாழ் முதற் பொருளே
மந்திரமேயெனை வளர்க்கின்ற மருந்தே
மாநிலத்திடை யெனை வருவித்த பதியே
தந்திரம் யாவையு முடைய மெய்ப் பொருளே
தனி நடராஜ என் சற்குரு மணியே.

(திருவருட்பா 3701)

<u>வேறு பொருள்</u>

ஞான நெறி நின்று தவம் செய்வோர் தன்னுள்ளே இறைவனை ஒளியுருவில் காண்பர். அந்த ஒளி அனுபவம் எவ்வாறு இருக்கும் என நம் பெருமானார் விளக்குகின்றார். பரநாத நிலை அனுபவம் அடையுங்கால் பேரொளி

வெள்ளொளியாகத் தோன்றுமாம். அவ்வொளி நடுவே பொன்னொளி காணக் கிடைக்குமாம். முடிவில் அப் பொன்னொளி நடுவே செவ்வொளி தோன்றுமாம். அச்செவ்வொளியே இறைவனாம்.

அனுபவத்திலே மூன்று விதமான ஒளி தோன்றுவதற்கு

ஆதாரம்

ஈற்றறியேன் இருந்திருந்திங் கதி சயிப்பதென்னீ
என்கின்றாய் நீ யெனை விட்டேகுதொறு நான்றான்
காற்றறியாத் தீபம் போலிருந்திடு மத்தருணம்
கண்ட பரிசென் புகல்வேன் அண்ட பகிரண்டந்
தோற்றறியாப் பெருஞ்ஜோதி மலை பரநாதத்தே
தோன்றியதாங்கதனடுவே தோன்றிய தொன்றதுதான்
மாற்றறியாப் பொன்னொளியோ அவ்வொளிக்குள்ளாடும்
வள்ளலருளொளியோ வீததிசயிக்கும் வகையே

(திருவருட்பா 5767)

மற்றுமொரு ஆதாரம் :

உள்ளொளி ஓங்கிட உயிரொளி விளங்கிட
வெள்ளொளி காட்டிய மெய்யருட்கனலே.

இந்த மூன்று ஒளி அனுபவங்களையும் அளித்து அவ்வொளி நிலைபெற்று விளங்குமாறும் செய்தருள்வீராக என அச் சுடர்கட்கெல்லாம் சுடராய் விளங்கும் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரை வேண்டுகின்றார்.

**துரியமுங் கடந்த சுக பூரணம் தரும்**
**அரிய சிற்றம்பலத்து அருட்பெருஞ்ஜோதி** (66)

முன் வரியில் மூன்று ஒளி அனுபவங்கள் தோன்றுவது கூறப்பட்டது. அந்த அனுபவம் எந்த நிலையில் கைகூடும் என இவ்வரியில் கூறப்படுகின்றது.

ஜாக்ரத், சொப்னம், சுழுத்தி என்ற மூன்று அவத்தைகளையும் கடந்த பின் ஏற்படும் அனுபவமே துரியம் எனப்படும். அந்தத் துரிய அனுபவமும் கடந்த நிலை துரியா தீதம் ஆகும். அந்தத் துரியாதீத நிலையில் தோன்றும் சுகமே

குறைவற்ற நிறைந்த பூரண சுகமாகும். அப்படிப்பட்ட சுகத்தைத் தருவது சிற்றம்பலம் எனப்படும் நமது புருவ மத்தியே. அந்த அனுபவம் எளிதில் கிடைப்பதல்ல, என்பதை உணர்த்தவே அரிய சிற்றம்பலம் எனப்பட்டது. துரியாதீத நிலையில் ஒளி தோன்றும் என்பதற்கு ஆதாரம் :

துரிய மலை மேலுளதோர் ஜோதி வள நாடு
தோன்றுமதில் ஐயர் நடம் செய்யும் மணி வீடு
தெரியுமது கண்டவர்கள் காணில் உயிரோடு
செத்தார் எழுவார் என்று கைத் தாளம் போடு
(கையறவிலாது எனும் கீர்த்தனை)
(திருவருட்பா 5263)

அருமையாகிய சிற்றம்பலத்து அருட்பெருஞ்ஜோதியானது துரியாதீத நிலையில் குறைவற்ற சுகம் தரும் என்பதாம்.

**எவ்வகைச் சுகங்களும் இனிதுற அளித்தருள்**
**அவ்வகைச் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி** (68)

முன் வரியில் சுக பூரணம் எனப்பட்டது. பூரணம் என்பது உலகியலாயினும் அருளியலாயினும் வளர்கின்ற ஒவ்வொரு நிலையிலும் மனதில் நிறைவு தோன்றி இன்பத்தை ஏற்படுத்துகின்றது.

உலகியலில் மன நிறைவு அடையாதவர்கள் அருளியலிலும் நிறைவு பெற முடியாது. நம் பெருமானார் போன்ற பிறவி ஞானிகளுக்கு இது பொருந்தாது. சமுசாரிகட்கு உலகியலும் வேண்டும் அருளியலும் வேண்டும். அதனால்தான் வள்ளலாரும் சோறு வேண்டினும், சுகமலாற் சுகமாம் வேறு வேண்டினும் நினை அடைந்தன்றி மேவொணாது எனும் மேலவர் உரைக்கோர் மாறு வேண்டிலேன் என்று நமக்காகப் பாடியுள்ளார். உலகியல் சுகத்தை மட்டும் நாடுவோர் அருளியல் சுகத்தை இழக்கின்றார்கள். ஆனால் அருளியல் சுகத்தை நாடுவோர் அருளியல் சுகம் மட்டுமின்றி உலகியல் சுகத்தையும் நன்றாகவே அனுபவிக்கின்றனர் என்பது பலர் அனுபவங்களைப் பார்த்து அறிந்த உண்மை. இது பற்றியே உலகியல் சுகமோ அருளியல் சுகமோ எவ்வகைச் சுகமாயினும் இன்பம் அடைதற் பொருட்டே

அளித்தருள்கின்ற தன்மையுடைய சிற்சபையில் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**இயற்கை உண்மையதாய் இயற்கை இன்பமுமாம்**
**அயர்ப்பிலாச் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி** (70)

இந்த உலகத்திலே மட்டுமல்லாது எந்த உலகமாயினும் இதுவரை கடவுளைப் பற்றிக் கூறப்பட்ட விளக்கங்களும், வடிவங்களும், வண்ணங்களும், பெயர்களும், தன்மைகளும் மனிதர்களாகிய ஞானிகளால் கற்பனையாக எழுதப்பட்டவையே ஆகும். அதனால் அந்த விளக்கங்களை இயற்கை எனக்கொள்ள முடியாது. அவை அனைத்தும் செயற்கையே. இறைவனுடைய இயற்கையான வடிவை, உண்மையை இதுவரை யாரும் கண்டாருமில்லை, விண்டாருமில்லை. இந்த விளக்கங்களை யெல்லாம் வாய்ப்பந்தல் என்று நம் பெருமானார் கூறுகின்றார். (ஆதாரம்)

ஏய்ப்பந்தி வண்ணரென்றும் படிக வண்ணரென்றும்
இணையில் ஒளி உருவரென்றும் இயல் அருவரென்றும்
வாய்ப் பந்தல் இடுவதன்றி உண்மை சொலவல்லார்
விண்ணிடத்தும் மண்ணிடத்தும் மற்றிடத்தும் இலையே
(திருவருட்பா 5634)

நாம் அனுபவிக்கும் சுகங்கள் இயற்கையானதல்ல. இயற்கை என்றால் என்றும் மாறுபடாதது எனப் பொருள். உலகியல் சுகங்களும் இன்பங்களும் உண்மையானதல்ல. எப்படியெனில் உணவு, உடை, பொருள், வீடு, மனை, மக்கள், புகழ் முதலிய எவ்வகைச் சுகங்களும் நிலையானதாக இருப்பதில்லை. சில காலத்திற்குள் அவற்றின் மீது நமக்கே சலிப்பு ஏற்பட்டு விடுகிறது. இந்த மாற்றத்தினால் நாம் அனுபவிக்கின்ற சுகங்கள் இயற்கையானதுமல்ல - உண்மையானதுமல்ல - நிலையானதுமல்ல எனத் தெரிகின்றது.

விடா முயற்சியால் சாதனை பயின்ற காலத்துச் சிற்சபையாகிய புருவ மத்தியில் தம் இயற்கை உண்மை வடிவினைக் காட்டி தளர்வடையாமலும், சோர்ந்து போகாமலும்

இயற்கை உண்மை இன்பத்தை எக்காலத்தும் அளித்து மூப்பின்றிக் காக்கும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**சாக்கிராதீதத் தனி வெளியாய் நிறைவு**
**ஆக்கிய சிற்சபை அருட்பெருஞ்ஜோதி** (72)

அட்டாங்க யோகம் முதலிய சாதனையின் முடிவாக ஏற்படும் சமாதி நிலையில் ஒரு மனிதன் தனது சுய நினைவை அடியோடு இழந்து தன்னையே மறந்து விடுகிறான். மீண்டும் சுய நினைவிற்கு அவன் வரும் வரை அவன் சமாதி நிலையில் இருப்பதாக எண்ணுகிறோம். நம் பெருமானாரோ சமாதிப் பழக்கம் பழக்கமல்ல என்கிறார். யோகம், சமாதி நிலையில் கொண்டு விடுவதால்தான் யோகம் செய்தல் வேண்டுவதில்லை. அதில் அழுந்தி விட்டால் மீளுதல் அருமை. மூடம் உண்டாகும் என்று நம் பெருமானார் எச்சரிக்கை செய்கின்றார்.

வெண்ணிலாக் கீர்த்தனையில்

தன்னை யறிந்து இன்பமுற வெண்ணிலாவே
ஒரு தந்திரம் நீ சொல்ல வேண்டும் வெண்ணிலாவே

என்று பாடுகின்றார். இதை மனதில் கொண்டு இந்த அகவல் வரிக்கு உரை காண்போம்.

சாக்கிரம் என்பது விழிப்பு நிலை. விழிப்பு நிலையில் மனம் செயல்படுவது சாதாரண நிலை. விழிப்பு நிலையின் அதீதத்தில் மனம் அடங்குமானால் அந்த நிலைக்கு ஈடு இணை சொல்ல முடியாது. மனம் செயல்படாது, அடங்கிய நிலையையே வெளி எனப்பட்டது. மனம் அடங்கிய நிலை மிகச் சிறந்தது எனவே தனி வெளி என்று கூறப்பட்டது.

விழிப்பு நிலையின் அதீதத்தில் சிற்சபையாகிய புருவ மத்தியில் மனம் அடங்கும் ஒப்பற்ற அனுபவம் ஏற்படும்போது எல்லா நிறைவுகளையும் உண்டாக்கித் தருகின்ற அருட்பெருஞ்ஜோதி.

ஆதாரம் :

எல்லா நிறைவுகளையும் நம் பெருமானார் பெற்றதால் எனக்கிது போதும் என்ற மன நிறைவைப் பத்து பாடல்களில் வெளிப்படுத்துகின்றார். அதில் ஒரு பாடல்

கட்டமும் கழன்றேன் கவலை விட்டொழிந்தேன்
கலக்கமும் தீர்ந்தனன் பிறவிச்
சட்டமும் கிழித்தேன் தூக்கமும் துறந்தேன்
சாவையும் நோவையும் தவிர்ந்தேன்
சிட்டமும் அடைந்தேன் சிற்சபையுடையான்
செல்வ மெய்ப் பிள்ளை என்றொரு பேர்ப்
பட்டமும் தரித்தேன் எனக்கிது போதும்
பண்ணிய தவம் பலித்ததுவே (திருவருட்பா 4736)

பூரண நிறைவு பெற்றதனால் இல்லாமை எனக்கில்லை என்கிறார்.

எல்லாமும் செயவல்ல தனித்தலைவர் பொதுவில்
இருந்து நடம்புரிகின்ற அரும்பெருஞ்சோதியினார்
நல்லாய் நன்னாட்டார்கள் எல்லாரும் அறிய
நண்ணி எனை மணம் புரிந்தார் புண்ணியனாரதனால்
இல்லாமை எனக்கில்லை எல்லார்க்கும் தருவேன்
என்னுடைய பெருஞ்செல்வம் என் புகல் வேனம்மா
செல்லாத அண்டமட்டோ அப்புறத்தப்பாலும்
சிவஞானப் பெருஞ்செல்வம் சிறப்பது கண்டறியே
(திருவருட்பா 5740)

**சுட்டுதற்கரிதாம் சுகாதீத வெளியெனும்**
**அட்ட மேற் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி** (74)

முன் வரியில் நிறைவான சுகம் என்பது குறிப்பிடப்பட்டது. சர்க்கரை இனிக்கும் என்று தான் கூற முடியுமே தவிர, அந்த இனிப்பு எப்படி இருக்கும் என்று கேட்டால், அப்படிக் கேட்பவர் வாயில் சர்க்கரையைப் போட்டு அவர் சுவைக்கும்படிச் செய்தால்தான் அந்த இனிப்பை அவரால் உணர முடியும்.

நாம் அறிந்த சுகம் எதுவோ அதற்கெல்லாம் அப்பாற்பட்டதாய், எத்தகைய சுகத்திற்கும் அதீதமானதாய் உள்ள சுகத்தை அளிக்கும் வெளியாகிய ஜீவகாசமாகிய சிற்சபையோ

இதுவெனச் சுட்டிக் காட்ட எவராலும் இயலாததாய் உள்ளது. அட்டம் என்பது - எட்டு ஆகும். எட்டு என்பது தமிழில் " அ " என்ற எழுத்தாகும். அதாவது இதை அகாரம் என்பார்கள். அகாரம் என்பதோ உயிர் ஆகும். உயிராகிய ஜீவகாசமே சிற்சபை. அகாரமே உயிர் என்பதற்கு ஆதாரம் :

அகாரம் உயிரே உகாரம் பரமே
மகாரம் மலமாய் வருமுப்பதத்தில்
சிகாரம் சிவமாய் வகாரம் வடிவமாய்
அகாரம் உயிரென்று அறையலுமாமே (திருமந்திரம்)

எந்தச் சுகத்திற்கும் மேற்பட்ட அதீதமான சுகத்தை அளிக்கும் ஜீவகாசமாகிய சிற்சபையோ இதுவெனச் சுட்டிக் காட்ட இயலாத ஒன்றாகும். அத்தகைய சிற்சபையில் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

**நவந்தவிர் நிலைகளும் நண்ணுமோர் நிலையாய்**
**அவந்தவிர் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி** (76)

புதிய ஒரு பொருள் கிடைத்தாலோ அல்லது வாங்கினாலோ சில நாட்களுக்காவது அப்பொருளின் மீது தனிப்பட்ட ஓர் ஆசை எழுவது இயல்பு. ஆனால் அதைத் துளியும் லட்சியம் செய்யாது நிராசையுடன் வாழும் துறவிகளும் உள்ளனர். நவம் என்பது புதியது. (நவயுகம் என்பது புதிய யுகம்) அந்த நிராசை மனங்கொண்ட நிலையை அடைந்தோர்கூட விரும்பக் கூடிய ஒரு நிலையாய் கேவலங்களையும் தாழ்வுகளையும் இழிவுகளையும் தவிர்க்கின்ற சிற்றம்பலத்து அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கில் சரியையில், சரியை கிரியை யோகம் ஞானம் என விரியும். அவ்வாறே கிரியை, யோகம், ஞானம் ஆகிய மூன்றும் விரியும். ஆக மொத்தம் பதினாறு நிலைகளில் பதினைந்தாம் படியாகிய ஞானயோக நிலையில் நிற்போர் நிராசை கொண்ட மனங் கொண்டிருப்பர்.

**உபய பக்கங்களும் ஒன்றெனக் காட்டிய**
**அபய சிற்சபையில் அருட்பெருஞ்ஜோதி** (78)

முன் வரியில் நிராசை என்பது கூறப்பட்டது. நிராசை கொண்டோர் மனம் எப்படி இருக்கும் என்பது இந்த வரியில் கூறப்படுகிறது. இன்பம் துன்பம், ஏங்கல் சலித்தல், உண்டு இல்லை, விருப்பு வெறுப்பு, நல்லது கெட்டது, புண்ணியம் பாவம், ஏற்றம் இறக்கம், செல்வம் வறுமை என்பன ஒவ்வொருவருடைய வாழ்விலும் ஏற்படும் இரண்டு பக்கங்களாகும். அந்த இரண்டையும் சமமாக யார் ஏற்றுக் கொள்கின்றார்களோ அவர்களே ஞானிகளாவர். நடப்பதெல்லாம் இறைவன் செயலன்றி நம் செயல் யாதொன்றும் இல்லை என்னும் சீரிய கொள்கையுடையோரும் அவர்களே ஆவர். அப்படிப்பட்ட ஞானிகட்கே பயமற்ற அபய வாழ்வு தருகின்ற சிற்சபை அருட்பெருஞ்ஜோதி.

நிராசை கொண்ட மனமுடையவர்களால் மட்டுமே இன்ப துன்பம் அனைத்தையும் சமமாக ஏற்றுக் கொள்ள இயலும். இந்திரியங்களும் கரணங்களும் மாயையின் தொடர்பு இல்லாமல் இருக்கும். எனவே மாயையின் விளைவாகிய கர்மம் அதாவது செயல்பாடு இருக்காது.

மேலும் யார் இன்ப துன்பம் போன்ற அனைத்தினையும் சமமாக ஏற்றுக் கொள்கின்றார்களோ அவர்கட்கு எதைப் பற்றியும் பயம் இருக்காது. அதனால்தான் அபய சிற்சபை என்று கூறப்பட்டது.

**சேகரமாம் பல சித்தி நிலைக்கெலாம்**
**ஆகரமாம் சபை அருட்பெருஞ்ஜோதி** (80)

இந்திரியங்களும், கரணங்களும் சேட்டையற்று இருக்க வேண்டிய நிலை முன் வரியில் கூறப்பட்டது. அவ்வனுபவத்தில் கைவசம் ஆகின்ற சித்திகளைப்பற்றி இவ்வரியில் கூறப்படு கின்றது.

சொற்சித்தி தொடங்கிக் கருமசித்தி, யோகசித்தி, ஞானசித்தி இவற்றுடன் அட்டமா சித்திகள் போன்ற அனைத்துச் சித்திகளுடன் முடிந்த முடிபான முத்தேக சித்தி

நிலைகளையெல்லாம் ஒன்று சேரக் கொண்டிருக்கின்ற பெட்டகமாய் விளங்கும் சிற்சபையின் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

ஆதாரம் : கரணங்கள் சேட்டையற்று இருந்தால் சித்திகள் எல்லாம் கைவசம் ஆகும் என்பதற்கு ஆதாரம்.

காட்டையெலாங் கடந்து விட்டேன் நாட்டையடைந்துனது
கடிநகர்ப் பொன்மதிற் காட்சி கண் குளிரக் கண்டேன்
கோட்டையெலாங் கொடி நாட்டிக் கோலமிடப் பார்த்தேன்
கோயிலின் மேல் வாயிலிலே குறைகளெலாந் தவிர்த்தேன்
சேட்டையற்றுக் கருவியெலாம் என் வசம் நின்றிடவே
சித்தியெலாம் பெற்றேனான் திருச்சிற்றம்பலமேல்
பாட்டையெலாம் பாடுகின்றேன் இது தருணம் பதியே
பலந்தருமென் உளந்தனிலே கலந்து நிறைந்தருளே (3820)

**மனாதிகட் கரிய மதாதீத வெளியாம்**
**அனாதி சிற்சபையில் அருட்பெருஞ்ஜோதி** (82)

மனம் புத்தி சித்தம் அகங்காரம் ஆகிய கருவிகளுக்கு எட்டாததாயும் அரியதாயும் அதேபோல வேதாந்தம், சித்தாந்தம், நாதாந்தம், யோகாந்தம், போதாந்தம், கலாந்தம் ஆகிய மதங்கட்கும் அப்பாற்பட்டதாய், எட்டாத பொருளாகிய வெளியே சிற்சபை ஆகும். அந்த வெளி என்று தோன்றியது என்று சொல்ல முடியாத அனாதி ஆனது. அந்த சிற்சபையில் அனாதியாய் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

மனம் முதலிய கருவிகளால் அறிய முடியாதது என்பதற்கு ஆதாரம் :

காற்றுருவோ கனலுருவோ கடவுளுருவென்பார்
காற்றுருவும் கனலுருவும் கண்டுரைப்பீர் என்றால்
வேற்றுருவே புகல்வர் அதை வேறொன்றால் மறுத்தால்
விழித்து விழித்து எம்போல்வார் மிகவும் மருள்கின்றார்
தோற்றுமந்த தத்துவமும் தோற்றாத தத்துவமும் துரிசாக
அவை கடந்த சுக சொரூபமாகி
மாற்ற மன உணர்வு செல்லாத் தலத்தாடும் பெருமான்
வடிவுரைக்க வல்லவரார் வழுத்தாயென் தோழி (5638)

**ஓதி நின்று உணர்ந்து உணர்ந்து உணர்தற்கரிதாம்**
**ஆதி சிற்சபையில் அருட்பெருஞ்ஜோதி** (84)

மனதால் உணர முடியாதது என முன்வரியில் கூறப்பட்டது. படித்தும் உணர முடியாதவன் இறைவன் என இந்த வரியில் கூறப்படுகிறது.

வேதங்கள் ஆகமங்கள் புராணங்கள் முதலிய கலைகள் இறைவனைப் பற்றிய விளக்கங்களை எவ்வளவு தர முடியுமோ அவ்வளவையும் தருகின்றன. கல்வி அறிவினால் இந்த நூல்களையெல்லாம் படித்து இறைவனை உணர முற்பட்டோமானால் எவ்வளவுதான் படித்தாலும் எவ்வளவு உணர்ந்தாலும் முழுமையாக இறைவனை உணர முடியாது.

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் விளங்குகின்ற சிற்சபையோ முன்னதாகவே தோன்றியதாகும். முன்னதாகவே விளங்குவதாக இருந்தும் நூலறிவினாலே உணர முடியாத சிற்சபையில் விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**வாரமும் அழியா வரமும் தரும் திரு**
**ஆரமுதாம் சபை அருட்பெருஞ்ஜோதி** (86)

மனதாலும் உணர முடியாது. எந்த நூலைப் படித்தும் அறிய முடியாது என்றால் அதை அறிய என்ன முயற்சி செய்ய வேண்டும் என்பதை இந்த வரியில் உணர்த்துகின்றார்.

வாரம் என்பது அன்பு. ஒரு ஜீவன் மற்றொரு ஜீவன் மீது கொள்ளும் இரக்கத்தைப் பரிவு, கருணை, ஈரம், தயவு, பாசம் என்றெல்லாம் குறிப்பிடும் நம் பெருமானார் இறைவன் மீது நாம் கொள்ள வேண்டிய பக்தியை அன்பு என்று கூறுகின்றார். அவர் எழுதிய ஒவ்வொரு கடிதத்திலும் "ஜீவர்களிடத்துத் தயவும் பிரபஞ்சத்தில் வெறுப்பும், கடவுளிடத்து அன்பும் மாறாமல் இருக்க வேண்டும்" என்ற வாசகத்தைக் காணலாம்.

அந்தச் சிற்சபையானது தன் மீது அன்பு கொள்ளுமாறு அதுவே செய்வதுடன் அதன் பிரதிபலனாக அழியா வரமும்

அளிக்கின்றதாம். அமுதத்தை உண்போர் மரணமில்லாமல் வாழ்வர் என்கிறது சித்தர்களின் ஞானநூல். அப்படிப்பட்ட அமுதமாய் விளங்குகின்ற சிற்சபை வாழ் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**இழியாப் பெருநலம் எல்லாம் அளித்தருள்**
**அழியாச் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி** (88)

இறவாத வாழ்வை சிற்சபை அளிக்கும் என்றார். இறவாத வாழ்வு பெற்றால் போதுமா? அந்த வாழ்வு எப்படி அமைய வேண்டும் என்று இந்த வரியில் விளக்குகின்றார்.

பிறர் தூற்றாமலும், வசைபாடாமலும் நாம் அடையும் நன்மைகள் அமைய வேண்டும். பாப காரியங்கள் இல்லாமல் நல்ல வழியில் ஈட்டும் பொருளும், தான தருமங்கள் செய்து அதனால் வரும் புண்ணியங்களும், நோயற்ற வாழ்வு கொண்ட திடதேகமும், எந்தக் குற்றமும் புரியாத காரணத்தால் உண்டாகும் பயமற்ற வாழ்வும், பக்தி கொண்ட நல்ல உள்ளமும் இவற்றால் பெறக்கூடிய புகழ் முதலியனவே இழியாப் பெருநலன்களாகும். இழிவு அதாவது கேவலமில்லாத பெரிய பெரிய நன்மைகள் எவ்வளவு உண்டோ அவை அனைத்தினையும் அளிக்க வல்லதாகிய என்றும் உள்ளதாய் அழியாது விளங்கும் சிற்சபை வாழ் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**கற்பம் பல பல கழியினும் அழிவுறா**
**அற்புதம் தரும் சபை அருட்பெருஞ்ஜோதி** (90)

முன் வரிகளில் அழியா வரமும், இழியாப் பெருநலமும் அறிவிக்கப்பட்டன. அந்த அழியா வாழ்வின் எல்லை இந்த வரியில் கூறப்படுகிறது.

கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆகிய நான்கு யுகங்களின் மொத்த கால அளவு ஒரு கற்பம் எனச் சொல்லப்படுகிறது. இப்படிப்பட்ட கற்ப காலங்கள் பலப்பல அதாவது எத்தனை கடந்தாலும் அழிவே இல்லாது வாழக் கூடிய மிக மிக அற்புதத்தை அளிக்கின்ற சிற்சபையில் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு : இரும்பு என்றால் ஈரமும் காற்றும் அதில்படும்போது அதில் துரிசு ஏறி நாளடைவில் அந்த இரும்பு உதிர்ந்து விடும். அதன் கெட்டித் தன்மை தூளாகிவிடும். இது இரும்பின் இயல்பு. ஆனால் வடலூர் ஞானசபையைச் சுற்றி நம்பெருமானார் அமைத்துள்ள இரும்புச் சங்கிலியானது 1872ம் ஆண்டு தொடங்கி இன்றுவரை வெய்யிலில் காய்ந்தும், மழையில் நனைந்தும், காற்றில் தோய்ந்தும் துரிசு ஏறாமலும், அதன் தன்மை கெடாமலும் இருப்பது அற்புதம் அல்லவா. இது நம் பெருமானார் நமக்குத் தரும் அறிவுரையாக விளங்குகின்றது. அதாவது துருபிடிக்கக்கூடிய சாதாரண இரும்பையும் துரு ஏறாமல் காலங்காலமாகச் சிதைவுபடாது காப்பாற்ற முடியும் என்றால் பிறவியிலேயே உயர்ந்ததாகிய மானிட தேகத்தைக் காப்பாற்ற முடியாதா! முடியும் என்கிறது வடலூர் சத்திய ஞானசபையின் இரும்புச் சங்கிலி.

**எனைத்தும் துன்பிலா இயலளித்து எண்ணிய**
**அனைத்தும் தரும் சபை அருட்பெருஞ்ஜோதி** (92)

கற்பகாலம் எத்தனை கடந்தாலும் வாழ்கின்ற வாழ்வைப் பெற்றால் மட்டும் போதுமா? அந்த வாழ்வு துன்பமற்றதாக அல்லவா இருக்க வேண்டும். இந்தக் கருத்தைத் தருகின்றது இந்த வரி.

நம்முடைய அஜாக்கிரதையினால் வரும் துன்பங்களை நாமே தவிர்த்துக் கொள்ளலாம். ஆபத்தினால் ஏற்படும் துன்பங்கள்தான் நம்மால் தவிர்க்க முடியாதவை என்பது மட்டுமல்ல, பெருந்துன்பமும் அவையே ஆகும். ஆனால் அப்படிப்பட்ட ஆபத்தினால் வரக்கூடிய பெருந்துன்பங்களையும் நீக்கவல்லது சிற்சபையே ஆகும். (ஆதாரம்)

ஆபத்தை நீக்கி வளர்த்தே சற்றும்
அசையாமல் அவியாமல் அடியேன் உளத்தே
தீபத்தை வைத்தது பாரீர் திருச்
சிற்றம்பலத்தே திருநட ஜோதி (திருவருட்பா 4590)

ஆபத்தினால் வரும் துன்பங்களே நீங்கிவிடும் என்றால் மற்றைத் துன்பங்கள் ஏற்படவே வழியில்லை.

அடுத்தது எண்ணிய அனைத்தினையும் பெறுவது, சிற்றம்பல நடம் காண்போர் எவரோ அவர்கட்கு எண்ணிய எண்ணமெல்லாம் இனிது முடியும் என்கின்றார் நமது பெருமானார்.

பண்ணிய பூஜை நிறைந்தது சிற்றம்பல நடங்கண்டு
எண்ணிய எண்ணம் பலித்தது மெய்யின்பம் எய்தியதோர்
தண்ணிய லாரமுதுண்டனன் கண்டனன் சாமியை நான்
நண்ணிய புண்ணியம் என்னுரைக்கேன் இந்த நானிலத்தே
(திருவருட்பா 5398)

காலையிலே எழுந்து சிற்சபை நடங்கண்டு வாழ்வோர்க்குப்பின் விளைவாக நினைத்தவையெல்லாம் கைகூடுமாம். (ஆதாரம்)

முன் பாட்டுக் காலையிலே வருகுவர் என் கணவர்
மோசமிலை மோசமென மொழிகின்றார் மொழிக
பின்பாட்டுக் காலையிலே நினைத்தவெலாம் முடியும்
பிசகிலை இம்மொழி சிறிதும் பிசகிலை இவ்வுலகில்
துன்பாட்டுச் சிற்றினத்தார் சிறுமொழி கேட்டுள்ளந்
துளங்கேல் நம் மாளிகையைச் சூழ அலங்கரிப்பாய்
தன்பாட்டுத் திருப்பொதுவில் நடத்திறைவர் ஆணை
சத்தியம் சத்தியம் மாதே சத்தியம் சத்தியமே
(திருவருட்பா 5706)

எவ்விதத் துன்பமுமில்லாத வாழ்வளித்து எண்ணிய எண்ணங்கள் அனைத்தையும் முடித்துத் தரவல்ல சிற்சபை வாழ் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**பாணிப் பிலதாய்ப் பரவினோர்க்கருள் புரி**
**ஆணிப் பொன்னம்பலத்து அருட்பெருஞ்ஜோதி** (94)

துன்பமற்ற வாழ்க்கையும் எண்ணிய அனைத்தையும் முடித்துக் கொடுக்கும் வல்லபத்தையும் அளிக்க வல்லது என முன் வரியில் கூறப்பட்டது. யாருக்குத் தர வேண்டும் எப்போது தர வேண்டும் என இந்த வரியில் கூறப்படுகின்றது.

பாணிப்பு என்ற சொல்லின் பொருள் காலதாமதம் என்பதாகும். பொன்னின் வகை ஐந்து என்பர்.

1. ஆணிப் பொன் 2. பசும்பொன் 3. செம்பொன்
4. ஜம்புநதம் 5. கிளிச்சரை.

இவற்றுள் ஆணிப் பொன் என்பது மிக மிகச் சிறந்ததாகும்.

மிக மிகச் சிறந்ததாகிய ஆணிப் பொன்னையொத்த பொன்னம்பலத்தே நடனமிடும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே தங்களை வாழ்த்தினோர்க்கும் வேண்டினோர்க்கும் காலதாமதமின்றி உடனே அருள்புரிவீராக.

குறிப்பு : துன்பமற்ற வாழ்வும் எண்ணியதை எண்ணியவாறு அடையும் வண்ணமும் தரக்கூடியவர்தான் கடவுள். அதைக் காலங்கடந்து அளித்தால் என்ன பயன்? சில பயிர்வகைகட்கு முன் மழை வேண்டும் மழையின்றி அப்பயிர் வெய்யிலால் காய்ந்து கெட்டுப் போன பிறகு மழை பொழிந்து என்ன பயன்? அதுபோல் இள வயதில் அருள் பெற்றால் நன்கு பயனை அடைய முடியும். மூப்பு நெருங்கிய பிறகு எதை அனுபவிக்க இயலும். எனவே தக்க காலத்தில் அருள்புரிவீராக.

முன் மழை வேண்டும் பருவப் பயிர் வெயின் மூடிக் கெட்ட
பின் மழை பேய்ந்தென்ன பேறு கண்டாய் அந்தப்
பெற்றியைப்போல்
நின் மழை போல் கொடையின்றன்றி மூப்பு நெருங்கியக்கால்
பொன் மழை பேய்ந்தென்ன கன் மழை பேய்ந்தென்ன
பூரணனே. (திருவருட்பா 2267)

**எம்பலம் எனத் தொழுதேத்தினோர்க்கருள்புரி**
**அம்பலத்தாடல் செய் அருட்பெருஞ்ஜோதி** (96)

முன் வரியில் உன்னை வாழ்த்தினோர்க்கு அருள்புரிவாயாக என்று வேண்டினார். வாழ்த்துகின்ற மக்கள் கோடிக் கணக்கில்

உள்ளனர். எப்படி வாழ்த்தினால் அருள்புரிவான் இறைவன் என்பது இவ் வரியில் கூறப்படுகின்றது.

ஜீவ சுதந்தரம், தேக சுதந்தரம், போக சுதந்தரம் என மூன்று அற்ப சுதந்தரங்கள் மனித குலத்திற்கு மட்டும் தரப்பட்டுள்ளன. அதைப் பயன்படுத்திச் சிற்சில காரியங்களைத் தங்கள் விருப்பத்திற்கேற்ப மனிதர்களால் செய்ய இயலும். தங்கள் விருப்பம்போல் மனிதர்கள் செயல்படுவதால் அவர்கள் செயலிலுள்ள நன்மை, தீமைகட்கேற்ப வினைப் பயனை அவர்கள் அனுபவிக்க வேண்டியதாகிறது. மற்ற எந்த ஜீவ ராசிகட்கும் இந்தச் சுதந்தரம் இறைவனால் அளிக்கப்படாததால் அவைகட்கு அவைகளின் செயல்கட்கு வினை ஏதுமில்லை. வினை என்பது மனிதர்கட்கு மட்டுமே உண்டு என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

இந்த மூன்று சுதந்தரங்களையும் இறைவனுக்கே ஒப்புக் கொடுத்துவிட்டு அவன் என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளட்டும் எல்லாம் அவன் செயலே என்ற அளவில் இறைவனிடம் யார் சரணாகதி அடைகிறார்களோ அவர்கட்கு இறைவனுடைய ஆற்றல்கள் அனைத்தும் சொந்தமாகின்றன.

அம்பலத்தே அருள் நடனம் புரிகின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே தங்களையே பரிபூரணமாக நம்பி, தங்கள் பலமே எங்கள் பலம் என்று உங்களையே யார் தொழுது வாழ்த்துகின்றார்களோ அவர்கட்கு அருள்புரிவீராக.

நடராச பலமது நம் பலமே - நடமிடுவது திருஅம்பலமே.

**தம்பர ஞான சிதம்பரம் எனும் ஓர்**
**அம்பரத் தோங்கிய அருட்பெருஞ்ஜோதி** (98)

தம்பலம் என நம்பி யார் வழிபடுகின்றார்களோ அவர்கட்கு அருள்புரிவாயாக என்று முன் வரியில் வேண்டினார். அப்படி அருள்கின்ற அம்பலம் எது என்றால் தமக்குள்ளே எல்லாவற்றினுக்கும் மேலானதாய் விளங்கும் ஞானபூரண ஆகாயம் எனப்படும் புருவமத்தியாகிய சிற்சபையே.

பரம் - மேலானது
சிதம்பரம் : ஆகாயம்

பிண்டத்தில் ஆகாயம் புருவ மத்தி என்கிறது உரைநடை. அதற்குப் பொது என்றும் பெயர். பொது என்பது சபை. ஞான பூரண ஆகாயமாக நம்மிடையே விளங்குவது பொதுவெனும் புருவ மத்தியே ஆகும். அந்தப் புருவ மத்தியாகிய அம்பரத்தே ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி.

ஞான பூரண ஆகாயம் பொது என்பதற்கு ஆதாரம் :

வேதாந்த நிலை நாடி விரைந்து முயன்றறியேன்
மெய்வகையும் கைவகையும் செய்வகையும் அறியேன்
நாதாந்தத் திருவீதி நடந்திடுதற் கறியேன்
நானாரென்றறியேன் எங்கோன் யார் என்றறியேன்
போதாந்தத் திருநாடு புகவறியேன் ஞான
பூரணாகாய மெனும் பொதுவை அறிவேனோ
ஏதாந்தீயேன் சரிதம் எங்ஙனம் நான் புகுவேன்
யார்க்குரைப்பேன் என்ன செய்வேன் ஏதுமறிந்திலனே.
(திருவருட்பா 3317)

**எச்சபை பொதுவென இயம்பினர் அறிஞர்கள்**
**அச்சபை இடங்கொளும் அருட்பெருஞ்ஜோதி** (100)

ஞான சிதம்பரமாக விளங்குவது பொதுவென முன்வரியில் விளக்கப்பட்டது. அந்தப் பொது எல்லோர்க்கும் பொதுவானதே என இந்த வரியில் கூறப்படுகிறது.

இந்துக் கோயில்களில் இந்துக்கள் அல்லாதார் உள்ளே நுழையக் கூடாது என முன் வாயிலில் அறிவிப்பைக் காணலாம். கிறித்துவ ஆலயங்களில் கிறித்தவர்கள் மட்டுமே அங்கத்தினராக முடியும். முகம்மதியர் வணங்கும் தர்காவிலும் அந்த மதத்தவர் மட்டுமே வழிபட முடியும். ஒவ்வொரு சமயத்தவரும் தங்களுக்கென ஆலயங்கள் அமைத்துக் கொண்டார்கள். எல்லாச் சமயத்தவரும் பேதமின்றி வணங்கக்கூடிய ஆலயங்கள் அல்ல இவை. வடலூரில் வள்ளலார் அமைத்த சத்திய ஞான சபை ஒன்று தான் எல்லாச்

சாதியினரும், எல்லாச் சமயத்தவரும், எல்லா மதத்தவரும் வந்து வணங்கக் கூடிய பொதுவான ஆலயமாகும். புறத்தே அறிஞர்கள் கூறுகின்ற பொதுவான சபை வடலூர் ஞானசபை ஒன்றே.

அகத்தே உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம் என்பார் திருமூலர். இந்த மனித உடம்பிலே இறைவனின் இருப்பிடம் நெற்றியிலே உள்ள புருவ மத்தியே ஆகும். இந்துக்கள் நெற்றியிலே திருநீறும் திரு மண்ணும் அணிந்து கொள்கின்றார்கள். கிறித்துவர்களும் பரமபிதாவின் இருப்பிடமாக நெற்றியையே சுட்டுகின்றார்கள். மகம்மதியரும் சலாம் என ஒருவரையொருவர் மரியாதை செய்வதும் நெற்றியைக் காட்டித்தான். எனவே எல்லாச் சமயத்தவரும், எல்லா மதத்தவரும் நெற்றியே இறைவனின் இருப்பிடம் என வகுத்துள்ளனர். புறத்தேயுள்ள ஆலயங்களில் சமயபேதம் மதபேதம் இருந்தாலும் அகத்திலே அதாவது மனித தேகத்திலே சற்றும் மாறுபாடின்றி நெற்றியே இறைவனின் இருப்பிடமாக அறிஞர்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர். முன்னரே கூறியது போல இந்துக்கள் அல்லாதார் உள்ளே நுழையக்கூடாது என்ற அறிவிப்பினை இந்துக்களின் ஆலயங்களில் காண்கின்றோம்.

மெக்காவிற்கு மகம்மதியர்கள் தவிர மற்றையோருக்கு அனுமதியில்லை.

கிறித்துவ ஆலயங்களில் பிற சமயத்தவர் செல்வதற்கு ஒரு வேளை அனுமதித்தாலும் அந்தத் தேவாலயங்களில் கிறித்துவர் அல்லாதார் பதிவு செய்து கொள்ளவோ, வழிபாடு நடத்தி வைக்கவோ அனுமதியில்லை.

வழிபடும் ஆலயங்கள் சமய, மத பேதத்துடன் விளங்கு கின்றதேயன்றி சமரச நோக்குடன் இல்லவே இல்லை. எல்லா அறிஞர்களும் பொதுவான ஆலயம் என ஏற்றுக் கொள்ளக்கூடியது புறத்தே வடலூர் சத்திய ஞான சபை ஒன்றே. அவ்வாறே அகத்திலே அறிஞர்கள் அனைவரும் பொதுவெனக் கூறுவது புருவமத்தியே ஆகும்.

எந்தச் சபையை அறிஞர்கள் அனைவரும் பொதுவானது எனக் கூறுகின்றார்களோ (புருவ மத்தியாகிய சிற்றம்பலம்) அந்தச் சபையை இடமாகக் கொண்டு விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி.

**வாடுதல் நீக்கிய மணி மன்றிடையே**
**ஆடுதல் வல்ல அருட்பெருஞ்ஜோதி** (102)

(முன்வரியில் அனைவருக்கும் பொதுவானதாக இறைவன் விளங்குவது சிற்சபையாகிய புருவ மத்தியே எனக்கூறப்பட்டது. இந்த வரியில் சிற்சபையின் பயன் இதுவெனக் கூறப்படுகின்றது).

வாடுதல் என்பது மரணமடைதல். மரணத்தை நீக்கிய மணிமன்றமாகிய சிற்சபையில் ஆடுகின்ற வல்லபம் பெற்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

ஆடுகின்ற சேவடிக்கு ஆளானதால் தான் மாளாத யாக்கை பெற்றதாக அறிவிக்கின்றார்.

ஆடுகின்ற சேவடிக்கு ஆளானேன் மாளாத யாக்கை பெற்றேன்
கூடுகின்ற சன்மார்க்க சங்கத்தே நடுவிருந்து குலாவுகின்றேன்
பாடுகின்றேன் எந்தை பிரான் பதப்புகழைப் பாடிப் பாடி
நீடுகின்றேன் இன்பக் கூத்தாடுகின்றேன் எண்ணமெலாம்
நிரம்பினேனே. (திருவருட்பா 5445)

மற்றொரு பாடலில்

கருவேரற்றிடவே களைகின்ற என் கண்ணுதலே
என்று பாடுகின்றார்கள்.

ஆக புருவமத்தியாகிய சிற்சபையே மரணத்தை நீக்க வல்ல ஆற்றலுடையது என இந்த வரியில் விளக்கப்படுகின்றது.

**நாடகத் திருச்செயல் நவிற்றிடும் ஒரு பேர்**
**ஆடகப் பொது வொளிர் அருட்பெருஞ்ஜோதி** (104)

(மரணத்தையே நீக்கவல்ல புருவமத்தியாகிய சிற்சபை முன் வரியில் கூறப்பட்டது. அந்தச் சிற்சபையில் இறைவன் எவ்வாறு விளங்குகின்றான் என இந்த வரியில் கூறப்படுகின்றது.)

உள்ளொளியின் அசைவினையே நடராச நடனம் அல்லது ஆனந்த நடனம் என்று நம்பெருமானார் எடுத்துக் காட்டுகின்றார். ஒவ்வொரு மனிதனுடைய தலை மண்டை ஓட்டுக்குள்ளே அதாவது கபாலத்திற்குள்ளே இறைவனானவன் திருச் சிற்றம்பலத்தை இடமாகக் கொண்டு நடனமிட்டுக் கொண்டிருக்கின்றான்.

"ஓலக் கபாடத்தைச் சாலத் திறந்தருள்
ஓலக்கம் காட்டினீர் வாரீர்
காலக் கணக்கில்லீர் வாரீர்." (திருவருட்பா 4450)

பொது என்கின்ற சிற்சபையை ஒரு பேர் ஆடகம் எனப்படும் மிகச் சிறந்த நடன சபையாகக் கொண்டு நாடகம் என்கின்ற ஒளியின் அசைவைத் திருச் செயலாகக் காட்டிப் பிரகாசத்துடன் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு : புருவ மத்தியாகிய சிற்சபையை ஆடகம் என்றும் ஒளியின் அசைவை நாடகம் என்றும் வர்ணிக்கின்றார்.

**கற்பனை முழுவதுங் கடந்து ஒளி தரும் ஓர்**
**அற்புதச் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி** (106)

முன் வரியில் சிற்சபையை நடன அரங்கமாகக் கொண்டு அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் ஒளியாக நின்று அசைவாகிய திருச் செயலை ஞான நாடகமாக நடத்திக் கொண்டிருக்கிறார் என்பது விளக்கப்பட்டது. இறைவன் எங்கே இருக்கின்றான், எவ்வாறு விளங்குகின்றான், என்ன செய்து கொண்டிருக்கின்றான் என்பதெல்லாம் கூறப்பட்டாலும் அவனது உருவை அவனது செயலை எவ்வளவுதான் கற்பனை செய்தாலும் அந்தக் கற்பனைக்குள் அடங்காது என்கின்றது இந்த வரி.

ஞானிகள், அருளாளர்கள், பேரறிவாளர்கள் யாருடைய கற்பனை எவ்வளவு நீண்டாலும் அவற்றிற்கெல்லாம் அடங்காது அவைகட்கு அப்பாற்பட்டுப் பிரகாசிக்கின்ற ஓர் ஒளியைத் தருகின்ற மிக அற்புதமான சிற்சபையில் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**ஈன்ற நற்றாயினும் இனிய பெருந் தயவு**
**ஆன்ற சிற்சபையில் அருட்பெருஞ்ஜோதி** (108)

முன் வரியில் கற்பனைக்கு எட்ட முடியாத ஒன்றுதான் இறைவன் என விளக்கப்பட்டது. அப்படிப்பட்ட ஒரு பொருளால் நமக்கென்ன பலன் என்கின்றது இந்த வரி.

உலகிலே எதையும் விடச் சிறந்தது ஒரு நல்ல தாயின் அன்பே எனக் கூறுவர். அதுவும் பெற்றெடுத்த தாய் என்றால் சொல்லவே வேண்டியதில்லை. மகன் எப்படிப்பட்ட துர்க்குணமுடையவனானாலும் எவ்விதமான குற்றம் புரிந்தாலும் அவனை மன்னிக்கவே செய்வாள். ஆனால் அப்படிப்பட்ட நல்ல தாயுங்கூடச் சில நேரத்தில் மகன் செய்த பிழையைக் கண்டு சிறிது கண்டிப்பைக் காட்டுவாளாம். சிற்சபையில் விளங்கும் ஆண்டவரோ எந்தக் குற்றமும் குறியாமல் பெற்ற தாய் காட்டும் கருணையை விட பல கோடிப் பங்கு அதிகமான கருணை காட்டுவார். மாறாத கருணை உடைய சிற்சபை அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் இன்பத்தை மட்டுமே அளிக்கின்ற தயவுடையவர் ஆவார். (ஆதாரம்)

நற்றாயும் பிழை குறிக்கக் கண்டோம் இந்த நாநிலத்தே
மற்றவர் யார் நாடார் வீணே
பற்றாயும் அவர் தமை நாம் பற்றோம் பற்றில் பற்றாத
பற்றுடையார் பற்றி உள்ளே
உற்றாயும் சிவபெருமான் கருணை ஒன்றே உறு பிழைகள்
எத்துணையும் பொறுப்பது என்று உன்
பொற்றாளை விரும்பியதும் மன்றுளாடும் பொருளே
என் பிழையனைத்தும் பொறுக்கவன்றே.

(திருவருட்பா 2166)

### இன்புறு நானுளத்து எண்ணியாங்கு எண்ணியாங்கு
### அன்புறத் தருசபை அருட்பெருஞ்ஜோதி (110)

முன் வரியிலே ஈன்ற தாயைவிடப் பெருந் தயவுடையது சிற்றம்பலத்து அருட்பெருஞ்ஜோதி என்று கூறப்பட்டது. நாம் கேட்பவையெல்லாம் கிடைக்குமா - கொடுக்குமா என்றால் ஆம் கொடுக்கும் கிடைக்கும் என்கிறது இந்த வரி.

எல்லா உயிர்களும் இன்புற்று வாழ வேண்டும் என்று மட்டுமே என் உள்ளத்தில் எண்ணினேன். நான் அவ்வாறு எண்ணிய போதெல்லாம் எண்ணியவாறே எனக்கு அளித்ததால் அந்தச் சிற்சபை ஆண்டவர் மீது எனக்கும் அன்பு ஏற்பட்டது. நான் எண்ணியதை யெல்லாம் அளித்து என்னை இன்பமடையச் செய்து

தன் மீதும் அன்பு வளருமாறு தருகின்ற சிற்சபை அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு : பிற உயிர்கள் இன்ப மடைய வேண்டும் என்று தன் உள்ளத்திலே எண்ணம் ஏற்பட்டது என்பதற்கு ஆதாரம்

மண்ணுலகதிலே உயிர்கள் தாம் வருந்தும்
வருத்தத்தை ஒரு சிறிதெனினும்
கண்ணுறப் பார்த்தும் செவியுறக் கேட்டும்
கணமும் நான் சகித்திட மாட்டேன்
எண்ணுறும் எனக்கே நின்னருள் வலத்தால் இசைத்த
போதிசைத்த போதெல்லாம்
நண்ணுமவ் வருத்தம் தவிர்க்க நல் வரந்தான்
நல்குதல் எனக்கிச்சையாமெந்தாய்

(திருவருட்பா 3408)

அவர் எண்ணியவாறு ஆண்டவன் தந்தான் என்பதற்கு ஆதாரம்.

துன்பெலாந் தீர்ந்தன சுகம் பலித்தது நினைச்
சூழ்ந்ததருளொளி நிறைந்தே
சுத்த சன்மார்க்க நிலை அனுபவம் நினக்கே
சுதந்தரமதானது உலகில்
வன்பெலா நீக்கி நல் வழியெலாமாக்கி மெய்
வாழ்வெலாம் பெற்று மிகவும்
மன்னுயிரெலாம் களித்திட நினைத்தனையுன்றன்
மன நினைப்பின்படிக்கே
அன்ப நீ பெறுக வுலவாது நீடூழிவிளை
ஆடுக அருட்ஜோதியாம்
ஆட்சி தந்தோம் உனைக் கைவிடோம் கைவிடோம்
ஆணை நம் மாணை என்றே
இன்புறத் திருவாக்களித்து என்னுளே கலந்து
இசைவுடன் இருந்த குருவே
எல்லாம் செய்வல்ல சித்தாகி மணி மன்றினில்
இலங்கு நடராஜ பதியே (திருவருட்பா 3676)

**எம்மையும் என்னை விட்டு இறையும் பிரியாது**
**அம்மையப்பனுமாம் அருட்பெருஞ்ஜோதி** (112)

முன் வரிகளில் தாயினும் தயவுடையவர் என்றும் எண்ணிய அனைத்தினையும் தருபவர் என்றும் ஆண்டவரைப் பற்றிக் கூறப்பட்டது. புருவ மையமாகிய திருச்சிற்றம்பலம் நம்மைவிட்டு எப்போதும் பிரியாது அன்னையைப் போல் அருளையும் அப்பனைப்போல் அறிவாற்றலையும் தந்து கொண்டே இருக்கும் என்கிறது இந்த வரி.

எக்காலத்தும் என்னைவிட்டுப் பிரியாமல் எனக்கு அன்னையுமாய் அப்பனுமாய் விளங்கிக் காக்கின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**பிரிவுற்றறியாப் பெரும் பொருளாய் என்**
**அறிவுக் கறிவாம் அருட்பெருஞ்ஜோதி** (114)

எக்காலத்தும் பிரியாமல் அம்மையுமாய் அப்பனுமாய் விளங்கிச் சிற்சபை ஆண்டவர் காப்பாற்றிக் கொண்டிருக்கின்றார் என்று முன் வரியில் கூறப்பட்டது. ஏன் பிரிய மாட்டார் என்று விளக்குகின்றது இந்த வரி.

உலகியலில் நாம் ஈட்டுகின்ற எந்தப் பொருளும் நிலையானதல்ல. காலத்தினாலே பிரிந்து விடக் காண்கின்றோம். பொருள்கள் மட்டுமின்றி மனிதர்கள் உறவிலும் பிரிவு ஏற்படுகின்றது. நட்பிலே பிரிவைக் காண்கின்றோம். கருணையும் சிவமுமான பெரும்பொருள் எனக்குக் கிடைத்தது. அது எக்காலத்தும் எந்நேரமும் எனைப் பிரிந்ததே இல்லை. ஏனெனில் பிரிவு என்பது என்னவென்றே அது அறியாதது. அது என் அறிவோடு கலந்து அறிவினுக்கு அறிவாய் விளங்குகின்றது.

என் அறிவினுக்கு அறிவாய் விளங்குவது எது தெரியுமா? அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே தாங்களே கருணையும் சிவமுமாய் பிரிவின்றி அவ்வாறு விளங்குகின்றீர்.

**கருணையும் சிவமும் பொருள் என்றதற்கு ஆதாரம்.**

தருணமிஞ்ஞான்றே சுத்த சன்மார்க்கத் தனிநெறி
உலகெலாம் தழைப்பக்
கருணையும் சிவமே பொருள் எனக்கருதும் கருத்தும்
உற்று எம்மனோர் களிப்பப்
பொருள் நிறை ஓங்கத் தெருள் நிலை விளங்கப்
புண்ணியம் பொற்புற வயங்க
அருள் நயந்தருள்வாய் திருச்சிற்றம்பலத்தே
அருட்பெருஞ்ஜோதி என்னரசே (3757)

சிவமே பொருளென்று தேற்றி என்னைச்
சிவ வெளிக்கேறும் சிகரத்தில் ஏற்றிச்
சிவமாக்கிக் கொண்டது பாரீர் - திருச்
சிற்றம்பலத்தே திருநட ஜோதி
(திருவருட்பா 4586)

சிவமே பொருளென்று அறிவால் அறிந்தேன்
செத்தாரை மீட்கின்ற திண்மையைப் பெற்றேன்
உவமேய மில்லாத ஒரு நிலை தன்னில்
ஒன்றிரண்டென்னாத உண்மையில் நின்றேன்
தவமே புரிகின்றார் எல்லாரும் காணத்
தயவால் அழைக்கின்றேன் கயவாதே தோழி
அவமே போகாதென்னோடு ஆடேடி பந்து
அருட்பெருஞ்ஜோதி கண்டாடேடி பந்து
(திருவருட்பா 4958)

**சாதியும் மதமும் சமயமும் காணா**
**ஆதி அனாதியாம் அருட்பெருஞ்ஜோதி** (116)

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் பிரிவென்பதே இல்லாது கருணையும் சிவமுமாய் அறிவோடு கலந்து விளங்குவதாக முன் வரியில் கூறப்பட்டது. அப்படியானால் அனைவரும் அவரை ஏன் அறிந்து கொள்ள இயலவில்லை என்பதற்கு இந்த வரி விடையளிக்கிறது.

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே உனக்கு முன் தோன்றியது எதுவும் இல்லை. உனக்குப் பின் இருக்கப் போவதும் எதுவும் இல்லை. ஆதியும் அனாதியுமாய் விளங்குவது நீர் ஒருவரே. அப்படி இருந்தும் இடையில் மனிதர்களால் கற்பிக்கப்பட்ட ஜாதி மதம் சமயம் ஆகிய பற்றுக்களைக் கொண்டோர் காண முடியாத ஒன்றாய் விளங்குகின்றீர். ஜாதி வெறி, மத வெறி, சமய வெறி, முதலியவற்றை விடாது பற்றிக் கொண்டிருப்போர் கல்வி நூல்களை எவ்வளவுதான் கசடறக் கற்றுணர்ந்திருந்தாலும் பரம்பொருளாகிய உன்னைக் காணவே முடியாது, அவர்கள் புறத்திலேயே மனதைச் செலுத்தித் தங்கள் தங்கள் சமய மதத் தெய்வங்களின் மீது அசையா நம்பிக்கை கொண்டு அந்தந்த வடிவங்களிலும் பெயர்களிலும் வண்ணங்களிலும் உண்மையிலேயே இருப்பதாக நம்பி வழிபடுவதால் அக அனுபவமாகிய திருச்சிற்றம்பலம் அவர்கள் அறிய முடியாத பொருளாகி விடுகின்றது.

சாதிப் பற்றும் மதப் பற்றும் சமயப் பற்றும் கொண்டோர் காண முடியா வகை ஆதியும் அனாதியுமான அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் விளங்கிக் கொண்டிருக்கின்றார்.

சாதியும் சமயமும் தவிர்த்தோர்க்கு மட்டுமே இறைவன் உறவாய் இருக்கிறான் என்பதற்கு ஆதாரம் :

ஆதியும் அந்தமும் இன்றி ஒன்றாகி
அகம் புறம் அகப்புறம் புறப்புறம் நிறைந்தே
ஓதியும் உணர்ந்தும் இங்கறிவரும் பொருளே
உளங்கொள் சிற்சபை நடு விளங்கு மெய்ப்பதியே
ஜோதியும் ஜோதியின் முதலும் தானாகிச்
சூழ்ந்தெனை வளர்க்கின்ற சுதந்தர அமுதே
சாதியும் சமயமும் தவிர்த்தவர் உறவே
தனி நடராச என் சற்குரு மணியே

(திருவருட்பா 3704)

**தனுகரணாதிகள் தாம் கடந்து அறியுமோர்
அனுபவமாகிய அருட்பெருஞ்ஜோதி** (118)

சாதிப் பற்று, சமயப் பற்று, மதப் பற்று, முதலியவற்றைக் கைவிட முடியாதவர்கள் காண முடியாத அந்த இறைவனை யாரால் காண முடியும் என்ற விளக்கம் தருகின்றது இந்த வரி.

தனு என்பது உடம்பு - அதாவது மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய இந்திரியங்கள்

கரணம் என்பது மனம், புத்தி, சித்தம், அகங்காரம், உள்ளம் ஆகியவை.

இந்திரியங்களும் கரணங்களும் சதா சர்வ காலமும் செயல்பட்டுக் கொண்டே இருக்கின்றன. அவை செயல்படுகின்ற வரை இறை அனுபவம் ஏற்படுவதே இல்லை. இந்திரியங்களும், கரணங்களும் செயல்படுகின்ற நிலையைக் கடந்து, பின்னர் அறிவு மட்டும் செயல்படுகின்றபோது அறியக் கூடிய ஓர் அனுபவமாக விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

சதா சர்வ காலமும் இறைவனையே என் மனதில் நினைத்துக் கொண்டிருக்கின்றேன். வேறு சிந்தனையே என் மனதில் எழுவதில்லை என்று கூறுவர் சிலர். வேறு சிலர் நான் எப்போதும் அவனுடைய புகழையே பேசுகின்றேன். அவன் பாடல்களையே எப்போதும் பாடுகின்றேன் என்பர். மனதினாலே நினைப்பதினாலும் வாயால் பேசுவதாலும் இறை அனுபவம் வந்திடுமா என்றால் வாராது என்கின்றார். புலன்களைக் கடக்க முதலில் என்ன செய்ய வேண்டும்? பாசத்தை அறுக்க வேண்டும். பிறகு தான் கரணங்கள் அடங்கும். பாசத்தை அறுத்த உண்மை அறிவுடையோர் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய கரணங்களைச் செயல்படவொட்டாது நீக்கி, மூச்சையும் அவ்வாறே அகற்றி, மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய கருவிகளை அகற்றி, ஆசை எனும் மாயையை விட்டு, உலகியலில் அனுபவிக்கின்ற அற்ப சுகங்களையெல்லாம் அடியோடே விட்டொழித்து ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மும்மலங்கள் எழும்பாவண்ணம் அவற்றையும் நீக்கி, தவம் மேற்கொண்டு

உலகியலில் சிறிதும் ஒட்டாது நின்றால் அவர்களை இந்த இறை அனுபவமானது தானே சூழ்ந்து கலந்து விடுமாம். ஆதாரம் :

மட்டகன்ற நெடுங்காலம் மனத்தால் வாக்கால்
மதித்திடினும் புலம்பிடினும் வாராது என்றே
கட்டகன்ற மெய்யறிவோர் கரணம் நீக்கிக்
கலையகற்றிக் கருவியெலாம் கழற்றி மாயை
விட்டகன்று கருமமலபோதம் யாவும் விடுத்து
ஒழித்துச் சகசமல வீக்கம் நீக்கிச்
சுட்டகன்று நிற்க அவர் தம்மை முற்றும்
சூழ்ந்து கலந்திடும் சிவமே துரியத்தேவே
(திருவருட்பா 2126)

குறிப்பு : நினைவில் பசுமரத்தாணிபோல் பதிய வைத்துக் கொள்ள வேண்டியது என்னவென்றால் அருட்பெருஞ்ஜோதி என்பது ஒரு மனிதனால் அறியக்கூடிய ஓர் அனுபவமே. அருட்பெருஞ்ஜோதி ஓர் அனுபவம் அனுபவமே.

**உனுமுணர் உணர்வாய் உணர்வெலாங்கடந்த**
**அனுபவாதீத அருட்பெருஞ்ஜோதி** (120)

இந்திரியங்களும், கரணங்களும் கடந்து அறியக்கூடிய ஓர் அனுபவமே இறைவனாகிய அருட்பெருஞ்ஜோதி என்று முன் வரியில் கூறப்பட்டது. அந்தக் கரண உணர்வுகளை எவ்வாறு கடப்பது என இந்த வரியில் உணர்த்தப்படுகின்றது.

ஓர் ஆசாரியனைக் கொண்டு தியானம் செய்வதற்குப் பயிற்சி ஏற்றுக் கொண்டால் புருவ மையமாகிய சிற்சபையில் ஓர் உணர்வு எறும்பு ஊறுவது போலத் தோன்றும். அந்த உணர்வு மிக மிகத் துல்லியமானதும் மெல்லியதாகவும் ஆரம்பத்தில் இருக்கும். அந்த உணர்வின் மீது நாட்டம் கொண்டு பொறி புலன்களால் ஏற்படும் உணர்வைக் கடக்கும் நிலையைத்தான் உனும் உணர். உணர்வால் உணர்வெலாம் கடந்து என இந்த வரியில் கூறப்பட்டுள்ளது. அப்படி இந்திரிய கரண உணர்வுகளைக் கடந்து அனுபவிக்கின்ற அனுபவத்தின் முடிவில் தோன்றுகின்ற பேரொளியே அருட்பெருஞ்ஜோதி.

**பொது உணர் உணரும் போதலால் பிரித்தே**
**அது எனில் தோன்றா அருட்பெருஞ்ஜோதி** (122)

இறைவனாகிய அருட்பெருஞ்ஜோதி ஓர் அனுபவம் என்றும் அதை, உணர்வுகளைக் கடந்து அனுபவிக்கலாம் என்றும் முன் வரியில் கூறப்பட்டது. அந்த அனுபவத்தை நம் உடம்பின் எந்தப் பாகத்தில் அறியலாம் என்பது இந்த வரி தரும் விளக்கமாகும்.

பொது என்பதற்கு என்ன விளக்கம்? எல்லோரையும் பொதுவாக அதாவது பாரபட்சமின்றிச் சமமாகப் பார்ப்பது என்பதா? அப்பொருளும் உள்ளது. ஆயினும் இந்த வரிக்கு அந்தப் பொருள் பொருந்தாது. ஞானம் பூரணமாக விளங்கக் கூடிய ஆகாயமாகிய புருவ மத்தியே பொது என்பதாகும்.

ஆதாரம் :

**வே**தாந்த நிலை நாடி விரைந்து முயன்றறியேன்
மெய்வகையும் கைவகையும் செய்வகையும் அறியேன்
நாதாந்தத் திருவீதி நடந்திடுதற்கறியேன்
நான் ஆர் என்றறியேன் எங்கோன் ஆர் என்றறியேன்
போதாந்தத் திருநாடு புகவறியேன் ஞான
பூரணாகாய மெனும் பொதுவை அறிவேனோ
ஏதாந் தீயேன் சரிதம் எங்ஙனம் நான் புகுவேன்
யார்க்குரைப்பேன் என்ன செய்வேன் ஏதுமறிந்திலனே
(திருவருட்பா 3317)

அண்டத்தில் அண்டம் ஆகாசம். பிண்டத்தில் அண்டம் புருவமத்தி.

அருட்பெருஞ்ஜோதியை நம் உடம்பின் எந்த பாகத்தில் உணர முடியும் என்றால் ஞான பூரண ஆகாயம் என்று சொல்லப்படுகின்ற பொதுவாகிய சிற்சபையில்தான் உணர முடியுமே தவிர அதை விட்டுப் புறத்தே அது என்று சுட்டிக் காட்டத் தோன்றாத ஒன்றாகும். அருட்பெருஞ்ஜோதி ஆண்டவராகிய அனுபவத்தைப் புருவமத்தியில் உணர முடியுமே தவிர அவ்விடம் தவிர்த்து அகத்திலும் புறத்திலும் எவ்விடத்தும் தோன்றாத ஒன்று தான் அருட்பெருஞ்ஜோதி.

இறைவன் அது தான் என்றும் இதுதான் என்றும்
சுட்ட வொண்ணாது என்பதற்கு ஆதாரம் :

பொதுவென்றும் பொதுவில் நடம் புரியா நின்ற
பூரண சிற்சிவமென்றும் போதானந்த
மதுவென்றும் பிரமமென்றும் பரமமென்றும்
வகுக்கின்றோர் வகுத்திடுக அதுதான் என்றும்
இதுவென்றும் சுட்ட வொண்ணாது அதனால் சும்மா
இருப்பதுவே துணிவு எனக் கொண்டிருக்கின்றோரை
விதுவென்ற தண்ணளியால் கலந்து கொண்டு
விளங்குகின்ற பெரு வெளியே விமலத் தேவே

(திருவருட்பா 2136)

குறிப்பு : அருட்பெருஞ்ஜோதி என்பது ஓர் அனுபவம் என்றும், கருவி கரணாதிகள் கடந்த பின் புருவ மையமாகிய சிற்சபையில் தோன்றும் ஓர் ஒளி அனுபவம் என்றும் சிற்சபை தவிர அகத்தேயும் புறத்தேயும் வேறெங்கும் சுட்டிக் காட்ட முடியாத ஒன்று என்றும் விளக்கப்பட்டுள்ளது.

## உளவினில் அறிந்தால் ஒழிய மற்றளக்கின்<br>அளவினில் அளவா அருட்பெருஞ்ஜோதி (124)

முன் வரியில் ஞானபூரண ஆகாயமாகிய புருவமையத்தில் உணரும் போது மட்டுமே அறிய முடியும் எனக் கூறப்பட்டது. அந்தப் புருவ மையத்தை எவ்வாறு அறிய வேண்டும்?

உளவு என்பது ஒரு பொருளைப் பிறர் அறியா வண்ணம் இரகசியமாக அறிவது. உதாரணம்: தடித்த இரும்புத் துண்டை வளைக்க வேண்டுமானால் அப்படியே வளைக்க இயலாது. அதைப் பழுக்கக் காய்ச்சி வளைத்தால் எளிதாக வளையும். பழுக்கக் காய்ச்ச வேண்டும் என்று தெரிந்து கொள்வதே உளவு.

இரகசியமாக அறிய வேண்டியதை இரகசியமாக அறிவதே உளவு. ஒரு நல்ல குருவை நாடி அவர் கருணையினாலே அவர் மூலமாக இரகசியமாக அந்தப் பொதுவை அறிந்து கொள்ள வேண்டும். அவ்வாறு அறிந்து கொள்ளாதவர்கள் வேறு எந்த வகையில் எவ்வாறு முயற்சி செய்து முயன்றாலும் என்றும் அறிய முடியாது. எந்த அளவைக் கொண்டு அளந்து பார்த்தாலும் அந்த அளவினில் அடங்காதது, அந்தப் பொதுவில் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி, தக்க ஆசாரியனைக் கொண்டு நெற்றிக் கண்ணைத் திறந்து கொள்ள வேண்டும் என்கிறது உரைநடை.

இறைவனிடத்தில் நாம் நேரடியாகத் தொடர்பு கொள்ள முடியாது என்பதனால்தான் கோயில்களில் பூஜை செய்ய அர்ச்சகர்களை ஆதி காலத்திலிருந்தே நியமித்திருக்கின்றார்கள். இறைவனை அடைவதற்கு ஒவ்வொருவருக்கும் நல்ல, குரு தேவை. தனக்கு அவ்வாறு ஒரு நல்ல குரு அமையவில்லை என்பதைத்தான் ஓங்கிய ஓர் துணையின்றி உயர்ந்த ஒட்டுத் திண்ணையில் தூங்கி மிகப் புரண்டு விழ என்ற வரிகளில் தெரிவிக்கின்றார்.

எதனாலும் ஆண்டவனை அளக்க முடியாது என்பதற்கு ஆதாரம் :

பேராய அண்டங்கள் பலவும் பிண்டபேதங்கள் பற்பலவும்
பிண்டாண்டத்தின்
வாராய பல பொருளும் கடலும் மண்ணும் மலையுளவும் கடலுளவும்
மணலும் வானும்
ஊராத வான் மீனும் அணுவும் மற்றை உள்ளனவும் அளந்திடலாம்
ஓகோ உன்னை
ஆராலும் அளப்பரிது என்று அனந்த வேதம் அறைந்து இளைக்க
அதி தூரமாகும் தேவே

(திருவருட்பா 2124)

இதுவரை அளந்து பார்த்த அத்துணை பேர்களும் எதைக் கொண்டு அளந்தார்களோ அது தேய்ந்ததே தவிர இறைவன் அளவைக் கண்டாரில்லை.

ஆதாரம் :

கிளக்கின்ற மறையளவை ஆகமப் பேரளவைக்
கிளந்திடு மெய்ச் சாதனாம் அளவை அறிவு அளவை
விளக்குமிந்த அளவைகளைக் கொண்டு நெடுங்காலம்
மேலவர்கள் அளந்து அளந்து மெலிகின்றாராங்கே
அளக்கின்ற கருவியெலாம் தேய்ந்திடக் கண்டாரேல்
அன்றி ஒருவாறேனும் அளவு கண்டாரிலையே
துளக்கமுறு சிற்றறிவால் ஒருவாறென்றுரைத்தேன்
சொன்ன வெளிவரையேனும் துணிந்தளக்கப்படுமோ
(திருவருட்பா 5703)

இறைவனை உள்ளே காண உளவு அறிய வேண்டும்

உள்ளானைக் கதவு திறந்து உள்ளே காண
உளவெனக்கே உரைத்தானை உணரார் பாட்டைக்
கொள்ளானை என்பாட்டைக் குறிக் கொண்டானை
கொல்லாமை விரதமெனக் கொண்டார் தம்மைத்
தள்ளானைக் கொலை புலையைத் தள்ளாதாரைத்
தழுவானை யான் புரிந்த தவறு நோக்கி
எள்ளானை இடர்தவிர்த் திங்கென்னை ஆண்ட
எம்மானைக் கண்டு களித்திருக்கின்றேனே.
(திருவருட்பா 3936)

## என்னையும் பணி கொண்டு இறவா வரமளித்து அன்னையிலு வந்த அருட்பெருஞ்ஜோதி (126)

முன் வரியில் உளவறிவோர் மட்டுமே இறைவனை அறிய முடியும் என அறிவிக்கப்பட்டது. உளவு என்பது எல்லோருக்கும் பொதுவானதல்ல. எல்லோரும் உளவறிய இயலாது. திறமை, சாமர்த்தியம், அறிவு, வேகம், துணிவு முதலிய பல தகுதியுடையோர்க்கு மட்டுமே உரிமையுடையது. அந்த உளவை அறிந்து கொள்ளும் தகுதி உனக்கில்லை என்று என்னைத் தள்ளி விடாமல் பணி கொள்வாயாக என்று இந்த வரியில் வேண்டப்படுவது காண்க.

நான் அந்த உளவை அறியத் தகுதியானவன் அல்ல என்று என்னைத் தள்ளி விடாமல் என்னையும் உன் பணி செய்யக்கூடிய அன்பர்களில் ஒருவனாகச் சேர்த்துக் கொண்டு அதன் முழுப் பலனாகிய மரணமிலாப் பெருவாழ்வு தந்து என்தாயினும் பெரு மகிழ்ச்சியடைகின்ற என் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

இறைவன் பணி செய்யப் பலர் தகுதியுடனும் ஆவல் கொண்டும் உள்ளனர். அவ்வாறு இருந்தும் இறைவனோ வள்ளலாரை மட்டும் தன் பணி செய்ய ஆட்கொண்டானாம். (ஆதாரம்)

உய்பிள்ளை பற்பலர் ஆவல் கொண்டே
உலகத்திருப்ப இங்கென்னைத் தன் ஏவல்
செய் பிள்ளை ஆக்கிற்றுப் பாரீர் - திருச்
சிற்றம்பலத்தே திருநட ஜோதி

(திருவருட்பா 4611)

பேருற்ற உலகிலுறு சமய மத நெறியெலாம் எனத் தொடங்கும் நடராச பதிமாலைப் பாடல்

"நீ என் பிள்ளை ஆதலாலே இவ்வேலை புரிக
என்றிட்டனம் - மனதில் வேறெண்ணற்க என்ற குருவே"

(திருவருட்பா 3677)

நாடு கலந்தாள்கின்றோர் எல்லாரும் வியப்ப எனத் தொடங்கும் திருவருட்பா (5470)

"எனை நீ பாடுக என்னோடு கலந்து ஆடுக
என்றெனக்கே பணியிட்டாய்"

**ஓதி ஓதாமல் உற எனக் களித்த**
**ஆதி ஈறில்லா அருட்பெருஞ்ஜோதி** (128)

தன்னை இறைவன் பணி கொண்ட பேற்றை முன் வரியில் அறிவித்த நமது தெய்வத் தந்தையார் அந்த உளவானது தக்க ஓர் ஆசாரியனால் மட்டுமே அறிவிக்கப்பட வேண்டும் என்றாலும்

அவ்வாறு ஓர் ஆசாரியன் தனக்கு வாய்க்கவில்லை என்பதை இந்த வரியில் உணர்த்துகின்றார்.

குருநாதர் சீடன் காதிலே மந்திரச் சொல்லை உச்சரிப்பதே ஓதினார் என்பது.

சீடன் அதை மீண்டும் கூறுவது ஓதுதல் ஆகும்.

ஓதி ஓதாமல் என்பது எனக்கு யாரும் கற்பித்து நான் கற்கவில்லை என்று பொருள்படுகிறது.

நம் பெருமானார்க்கு மனித வடிவில் ஒரு குருநாதர் அமைந்து அவர் ஓத நம் பெருமானார் ஓதவில்லை.

ஒருவரால் கற்றுக் கொடுக்கப்பட்டு நான் கற்காமல் எல்லா ஞானங்களையும் நான் அடையுமாறு எனக்கு அறிவளித்தவரே, தனக்கு ஓர் ஆரம்பமும் முடிவும் இல்லாத அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே. எந்த ஆசாரியனும் தனக்கு ஓதவில்லை. எந்த நூலையும் தானும் ஓதவில்லை என்கிறார் வள்ளலார்.

ஏதும் அறியாது இருளில் இருந்த சிறியேனை
எடுத்து விடுத்து அறிவு சிறிதேய்ந்திடவும் புரிந்து
<u>ஓதுமறை முதற் கலைகள் ஓதாமல் உணர</u>
<u>உணர்விலிருந்து உணர்த்தி</u> அருள் உண்மை நிலை காட்டித்
தீதுநெறி சமயநெறி செல்லுதலைத் தவிர்த்துத் திருவருள்
மெய்ப்பொது நெறியில் செலுத்தியும் நான் மருளும்
போது மயங்கேல் மகனே என்று மயக்கெல்லாம் போக்கி
எனக்குள்ளிருந்த புனித பரம்பொருளே (திருவருட்பா 3053)

நாதா பொன்னம்பலத்தே அறிவானந்த நாடகம் செய்
பாதா துரும்பினும் பற்றாத என்னைப் பணிகொண்டெல்லாம்
ஓதாதுணர உணர்த்தி உள்ளே நின்று உளவு சொன்ன
நீதா நினை மறந்தென் நினைக்கேன் இந்த நீணிலத்தே
(திருவருட்பா 2775)

ஓதாதுணர்ந்திட ஒளி அளித்தெனக்கே
ஆதாரம் ஆகிய அருட்பெருஞ்ஜோதி (அகவல் வரி 24)

**படி அடி வான் முடி பற்றினும் தோற்றா**
**அடி முடி எனும் ஓர் அருட்பெருஞ்ஜோதி** (130)

ஓர் ஆசாரியனால் தனக்கு ஓதப்பட்டுப் பின்னர் அவ்வாசாரியன் ஓதிய வண்ணம் தான் ஓதி அறிந்து கொள்ளவில்லை. யாராலும் ஓதப் படாமலும் தானும் எந்த நூலையும் ஓதாமலும் இறைவனை அடைந்தேன் என்று முன் வரியில் கூறினார். அவ்வாறு அடைய முடியுமானால் அவன் அதாவது இறைவன் அவ்வளவு எளியவன் என்று எண்ணிவிடலாமா !!!

மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் எனும் பஞ்ச பூதங்களில் மண் என்பது அடியானால் ஆகாயம் என்பது முடி.

ஆகாயம் - முடி

காற்று, நெருப்பு, நீர் } நடு

மண் - அடி

நீர், நெருப்பு, காற்று ஆகியவை இவ்விரண்டின் நடு ஆகும். சகல ஜீவராசிகளும் பரம் பொருளும் இவைகட்குள்ளேதான் விளங்குகின்றன. இறைவனைக் காண மிகுந்த ஆவல் கொண்ட ஒருவன் மிக ஆற்றல் பெற்றவனாயுமிருந்தான். இறைவனை எப்படியாவது கண்டுவிட வேண்டும் என்று ஒரு கையால் அடியாகிய பூமியைப் பற்றிக் கொண்டான். மறு கையால் முடியாகிய ஆகாயத்தைப் பற்றிக் கொண்டான். இவ்வாறு மண்ணை ஒரு கையாலும் விண்ணை மறு கையாலும் பிடித்துக் கொண்டு பார்த்தாலும் இறைவன் தோன்ற மாட்டான். அப்படியானால் அவன் இல்லையோ என்று எண்ணிவிடக் கூடாதாம். எந்த அடியையும் எந்த முடியையும் பற்றிக் கொண்டு பார்க்கின்றோமோ அதே அடி முடியாக விளங்குபவன் அவனேயாகும். மண்ணாக விண்ணாக அவன் இருந்தாலும் அந்த மண்ணையும் விண்ணையும் காண்போராலும்

காண முடியாதவன் இறைவன். அவன் பூமியேயானாலும் விண்ணே ஆனாலும் காண்போர்க்குத் தன்னைக் காட்டுவதில்லை (ஆதாரம்)

மந்திரமாய்ப் பதமாகி வன்னமாகி
வளர் கலையாய்த் தத்துவமாய்ப் புவனமாகிச்
சந்திரனாய் இந்திரனாய் இரவியாகித்
தானவராய் வானவராய்த் தயங்கா நின்ற
தந்திரமாய் இவை ஒன்றும் அல்லவாகித்
தானாகித் தனதாகித் தானான் காட்டா
அந்தரமாய் அப்பாலாய் அதற்கப்பாலாய்
அப்பாலுக்கு அப்பாலாய் அமர்ந்த தேவே

(திருவருட்பா 2090)

**பவனத்தின் அண்டப் பரப்பின் எங்கெங்கும்**
**அவனுக்கு அவனாம் அருட்பெருஞ்ஜோதி** (132)

பஞ்ச பூதங்களில் அடியாகிய உலகினை ஒரு கையால் பற்றிக் கொண்டு, முடியாக விளங்கும் வானை மறு கையால் பற்றிக் கொண்டு தேடிப் பார்க்கினும் அவனைக் காண ஒண்ணாது என்று முன்வரியில் இறைவனைப் பற்றிக் கூறப்பட்டது. அப்படியானால் அவன் தன்மைதான் என்ன?

புவனம் என்பது உலகம். பவனம் என்பது அழகு - இந்த உலகமாகிய ஒரு கோளுடன் ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி ஆகிய கோள்களும் இன்னும் பெயரிடப்படாத அளவற்ற கோள்களையும் தன்னுள் கொண்டது ஓர் அண்டமாகும். இந்தப் பிரபஞ்சத்திலே அண்ட வெளியிலே இங்கு அங்கு என்னாதபடி எங்கெங்கும் விளங்கும் இறைவனுக்கு நிகர் வேறு எவருமிலர். அவனுக்கு நிகர் அவனே என விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

அண்ட வெளியிலே நாம் காணும் பொருட்களை இரண்டு வகைகளாய்ப் பிரிக்கலாம். ஒன்று உயிர் உள்ளவை. மற்றொன்று உயிரில்லாத ஜடப்பொருட்கள். உயிருள்ளவற்றை ஆண், பெண் என இரண்டாகப் பிரிக்கலாம். எல்லாப் பொருள்களிலேயும் எல்லா ஜீவர்களிலேயும் நீக்கமற இறைவன் கலந்திருப்பதால், இறைவன்

ஆணோடு ஆணாக, பெண்ணோடு பெண்ணாக, அதுவாகிய ஜடப் பொருளில் அதுவாக அவன் விளங்குவதாகப் புரிந்து கொள்ள முடிகிறது. இதுவரை தோன்றிய அருளாளர்கள் இறைவனை அவன், அவள், அது என்று வர்ணித்திருக்கின்றார்கள். எல்லாமாக இறைவன் விளங்குகின்றான் என்பதற்கு ஆதாரம்.

உலக நிலை முழுதாகி ஆங்காங்குள்ள
உயிராகி உயிர்க்குயிராம் ஒளி தானாகிக்
கலக நிலை அறியாத காட்சியாகிக்
கதியாகி மெய்ஞ்ஞானக் கண்ணதாகி
இலகு சிதாகாசமதாய்ப் பரமாகாச
இயல்பாகி இணை ஒன்றும் இல்லாதாகி
அலகில் அறிவானந்தமாகிச் சச்சி
தானந்த மயமாகி அமர்ந்த தேவே

(திருவருட்பா 2071)

உலக நிலை முழுதாகி என்ற ஒரு சொற்றொடரே அவன் எல்லாமாகி விளங்குகின்றான் என்று கூறுவதால் இறைவனை ஆங்காங்குள்ள உயிராகி என்றும் உயிர்க்குயிராய் விளங்கும் அவனை, ஆண், பெண் அதாவது அவன், அவள் என்றும் ஜடமாயும் விளங்குவதால் அது என்றும் கூறுவது பொருந்தும். உயிருள்ளவற்றில் மனித இனந்தவிர மற்ற இனத்தினை அஃறிணை என்று கூறி அவற்றையும் அது என்று கூற இலக்கணம் வழி வகுப்பதால் இறைவன் உயர்திணையாகிய ஆண் ஆகவும், பெண் ஆகவும் இருப்பதுடன் ஆடு, மாடு, ஈ, எறும்பு போன்ற அஃறிணையாகவும் இருந்து செயல்படுகின்றான். இந்த வரியில் அவனை அந்த இறைவனை "அவன்" என விளித்து அழைக்கப்படுகிறது.

**திவளுற்ற அண்டத் திரளின் எங்கெங்கும்**
**அவளுக்கு அவளாம் அருட்பெருஞ்ஜோதி** (134)

முன் வரியில் அவன் எனக் கூறப்பட்ட இறைவன் இந்த வரியில் அவள் எனக் கூறப்படுகிறான்.

இறைவனை அவள் என்று அழைப்பதிலே ஆழ்ந்த பொருள் ஏதேனும் இருக்கலாம். அவனாகிய ஆண் அறிவு மயமானால் அவளாகிய தாய் கருணை மயம். அதனால் இறைவனை அருட்பெருஞ்ஜோதி என்ற திருவருட்பிரகாச வள்ளலார் அவனது அருளை தனிப்பெருங்கருணை என்று போற்றுகின்றார். இந்த மண்ணுலகானது நம்மைத் தாங்குவதுடன் உணவைத் தருவதுடன், தன்னைத் தானே சுற்றிக் கொள்வதன் மூலம் இரவு, பகல் ஏற்பட வைத்து, பொன்னையும் பொருளையும் அள்ளித் தந்து அளவற்ற நன்மைகளால் நம்மை வாழ வைக்கின்றது. பொழிகின்ற வானம் பொய்த்தால் நமக்கு வாழ்வேது? காற்று இவ்வுலகைவிட்டு முழுவதுமாக விலகிவிடுமானால் நாம் உயிர் வாழ முடியாதே. எவ்வளவோ செயல்பாடுகளால் இயற்கையானது நம்மை அன்னை போலக் காத்து வாழவைப்பதால் இறைவனை அன்னையாக அவளாக அழைத்துப் போற்றுகின்றோம்.

உருண்டு, திரண்டு உருவாகியுள்ள கோள்கள் இந்த அண்ட வெளியில் எவ்வளவு இருக்கின்றனவோ அவைகள் அனைத்திலும், எங்கெங்கும் அவளுக்கு அதாவது உயிரினத்தின் பெண் தன்மைக்கு நிகர் அவளே என விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி..

**மதனுற்ற அண்ட வரைப்பின் எங்கெங்கும்**
**அதனுக்கு அதுவாம் அருட்பெருஞ்ஜோதி** (136)

அவளுக்கு அவளாக இருக்கும் இறைவன் அதுவாகவும் விளங்குவதை இந்த வரி சுட்டிக் காட்டுகின்றது.

நிலைபெற்று அழகாக விளங்கும் இந்த அண்ட வெளியின் எல்லை மட்டும் பரிபூரணமாக நிறைந்து விளங்கும் மக்கள் மட்டுமல்லாது மற்ற உயிரினங்களிலும் ஜடப் பொருள்களிலும் கலந்து நிறைந்து அது என்பதற்கு நிகர் அதுவாகவே உள்ளவாறு விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

எல்லாப் பொருள்களிலும் கலந்து அவனில் அவனாக, அவளில் அவளாக, அதனில் அதுவாக நிறைந்து விளங்குவது அருட்பெருஞ்ஜோதி.

அவனும் அவளும் உருவமானால் அது என்பது அருவமும் ஆகிறது. எனவே இறைவன் உருவமாகவும், அருவமாகவும் எப்படியும் இருக்கலாம். தனக்கென வடிவம் ஏதும் எடுத்துக் கொள்ளாது, உயிருள்ள, உயிரற்ற எல்லாப் பொருள்களிலேயும் தான் கலந்து நிறைந்து விளங்குகின்ற இறைவனை இந்த வரியில் அதுவெனச் சுட்டிப் போற்ற வைக்கின்றது.

**எப்பாலுமாய் வெளியெல்லாம் கடந்து மேல்**
**அப்பாலும் ஆகிய அருட்பெருஞ்ஜோதி** (138)

முன் வரிகளில் இறைவனை அவன், அவள், அது என்று அண்டப் பரப்பின் எல்லைக்குள் விளங்கும் கோள்கள் மற்றும் அவைகளிலுள்ள உயிருள்ள உயிரற்ற அத்துணைப் பொருட்களிலும் எல்லாவற்றிலும் விளங்குதல் போற்றப்பட்டது.

இந்த வரியில் அண்டப்பரப்பு அனைத்தினையும் கடந்து அதற்கு அப்பால், அதற்கு அப்பால் என்று கூறப்படும் எல்லாம் கடந்து, எப்பாலுமாய், வெளிகள் எத்தனை உண்டோ, அவற்றையெல்லாம் கடந்து அவ்வெளிகட்கும் அப்பாலாய் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

இறைவன் உயிருள்ள ஜீவன்களில் ஆணாய், பெண்ணாய், உயிரற்ற ஜடப் பொருட்களில் அதுவாய், அண்டத்திலே அமைந்துள்ள கோள்களிலும், அண்டத்திற்கு அப்பாலும் எல்லா வற்றிலும் கலந்து நிறைந்து விளங்குவதற்கு ஆதாரம் :

அண்டவகை எவ்வளவோ அவ்வளவும் அவற்றில்
அமைந்த உயிர் எவ்வளவோ அவ்வளவும் அவைகள்
கண்ட பொருள் எவ்வளவோ அவ்வளவும் அவற்றில்
கலந்த கலப்பு எவ்வளவோ அவ்வளவும் நிறைந்தே
விண்டகுமோர் நாதவெளி சுத்தவெளி மோனவெளி
ஞானவெளி முதலாம் வெளிகளெல்லாம் நிரம்பிக்
கொண்டதுவாய் விளங்குகின்ற சுத்த சிவமயமே
குலவு நடத்தரசே என் குற்றமும் கொண்டருளே.

(திருவருட்பா 4169)

**வல்லதாய் எல்லாமாகி எல்லாமும்**
**அல்லதாய் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி** (140)

முன்வரியில் இறைவன் வெளிகட்கு எல்லாம் அப்பாலும், அதற்கப்பாலும் இருக்குமிடம் கூறப்பட்டது. இந்த வரியில் அந்த இறைவனது ஆற்றல் கூறப்படுகின்றது.

இறைவனால் ஆகாத காரியம் எதுவும் இல்லை. அவன் எல்லாம் வல்லவன்.

இறைவன் இந்தப் பிரபஞ்சத்தில் உள்ள உயிருள்ள, உயிரற்ற அனைத்துப் பொருள்களிலும் நீக்கமறக் கலந்து அவனே எல்லாமாகி விளங்குவது முன்னால் விளக்கப்பட்டது. அவ்வாறு நீக்கமற எங்கும் எதிலும் நிறைந்திருந்தாலும் அவனைக் காண முடியவில்லை. எனவே இறைவன் எதிலும் இல்லாதது போலும் எண்ண முடிகின்றது.

சர்வ வல்லபம் பொருந்தியவனாகவும், எல்லாப் பொருட்களிலும் கலந்து நிறைந்து விளங்குபவனாயும், தோற்றமில்லாமல் இருப்பதால் எல்லாப் பொருட்களிலும் அவன் இல்லாதவனாயும் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

**எப்பொருள் மெய்ப் பொருள் என்பர் மெய்கண்டோர்**
**அப்பொருள் ஆகிய அருட்பெருஞ்ஜோதி.** (142)

முன் வரிகளில் இறைவன் எல்லாம் வல்லவன் என்றும், எங்கும் நிறைந்தவனானாலும் எதிலும் இல்லாதவன் போல் விளங்குபவன் என்றும் கூறப்பட்டது. உண்மையைக் கண்டவர்க்கு அவனும் மெய்ப்பொருளே எனக் கூறப்படுகின்றது.

இந்த உலகிலுள்ள எல்லாச் சமயங்களும் இறைவனைப் பற்றி என்ன கூறுகின்றன என்று ஆய்வு செய்தால் இறைவனின் விளக்கம் உருவம், அருவம், உருவருவம் என்ற மூன்றினுக்குள் அடங்கிவிடும். ஆனால் இறைவனோ உருவம், அருவம், உருவருவம் இவை ஒன்றுமல்லாதவன் எனத் திருவருட்பா கூறுகின்றது.

உருவாய் அருவாய் உருவருவாய் அவை
ஒன்று மல்லீர் இங்கு வாரீர் (திருவருட்பா 4396)

அந்திவண்ணன் என்றும், ஸ்படிக வண்ணன் என்றும், ஈடு இணை கூற முடியாத ஒளிவடிவினன் என்றும், அருவம்தான் அவன் வடிவம் என்றும் இவ்வாறெல்லாம் இறைவனைப் பற்றிக் கூறுவதோ வெறும் வாய்ப் பந்தலே தவிர உண்மையல்ல என்கிறார் வள்ளலார்.

ஏய்ப் பந்தி வண்ணரென்றும் படிக வண்ணரென்றும்
இணையில் ஒளி உருவர் என்றும் இயல் அருவர் என்றும்
வாய்ப் பந்தல் இடுவதன்றி உண்மை சொல வல்லார்
மண்ணிடத்தும் விண்ணிடத்தும் மற்றிடத்தும் இலையே
காய்ப் பந்த மரமென்று கண்டு சொல்வதன்றிக்
காய்த்த வண்ணம் பூத்த வண்ணம் கண்டு கொள மாட்டாத்
தாய்ப் பந்த உணர்வுடையேன் யானோ சிற்சபையில்
தனி முதல்வர் திருவண்ணம் சாற்றவல்லேன் தோழி.

(திருவருட்பா 5634)

பதினாறு படிகளுக்கப்பால் ஒளியாகப் பிரகாசித்து விளங்கும் பரம்பொருளே என்னால் ஆவது ஒன்றும் உனக்கில்லை எனினும் உன்னால் வாழுகின்றேன் எனக்கு உண்மை உரைத்தருளே என்று வேண்டுவார்.

நன்னாலுங் கடந்தே ஒளிர் ஞான சபாபதியே
பொன்னாருஞ் சபையாய் அருட் பூரண புண்ணியனே
என்னாலாவதொன்றும் உனக்கில்லையெனினுமெந்தாய்
உன்னால் வாழுகின்றேன் எனக்குண்மை உரைத்தருளே

(திருவருட்பா 4262)

சாதனை பயின்று மெய்யறிவால் தன்னுளே விளங்குகின்ற உண்மையை உணர்ந்து பின்னர் எந்தப் பொருளை இதுதான் மெய்ப் பொருள் என்று கூறுகின்றார்களோ அந்தப் பொருளாக விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி.

**தாங்ககிலாண்ட சராசர நிலை நின்று**
**ஆங்குற விளங்கும் அருட்பெருஞ்ஜோதி** (144)

முன் வரியில் பிண்டத்தில் விளங்குகின்ற மெய்ப்பொருள் பற்றிக் கூறப்பட்டது. இந்த வரியில் அந்த மெய்ப்பொருள் அண்டத்தில் எவ்வாறு விளங்குகின்றது என விவரிக்கப்படுகின்றது.

எல்லா அண்டங்களையும் அவற்றிலுள்ள கோள்களையும், அந்தக் கோள்களிலுள்ள அசையும் பொருட்களாகிய பிண்டங்கள் பொருந்திய ஜீவர்களையும், அசையாப் பொருட்களாகிய ஜடப் பொருட்களையும் தாங்குகின்றது எதுவெனில் பெரு வெளியே. இவை அனைத்தும் அந்தப் பெருவெளியிலே அமைந்து அவைகள் தன்னைத் தானே சுற்றியும் மற்ற கோள்களையும் தனக்கென அமைத்துக் கொண்டுள்ள பாதை மாறாது அதே பாதையில் சுற்றியும், நிலை மாறாது உள்ளதை அறிவோம். அந்தப் பெருவெளியிலும், அண்டங்களிலுமுள்ள அனைத்துப் பொருட்களிலும் நிலையாக உள் நின்று சிறப்புற விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே. (ஆதாரம்)

ஓங்கும் பிண்டாண்டங்கள் தாங்கும் பெருவெளி
ஓங்கு நடேசரே வாரீர்
பாங்கு செய்வீரிங்கு வாரீர் (திருவருட்பா 4446)

பிண்டங்களையும் அண்டங்களையும் தாங்குவது பெருவெளி. அந்தப் பெரு வெளியையே இறைவனாகக் காணுதற்குரிய ஆதாரம்

மெய்யுணர்ந்த வாதவூர் மலையைச் சுத்த
வெளியாக்கிக் கலந்துகொண்ட வெளியே
(திருவருட்பா 2122)

**சத்தர்கள் எல்லாம் தழைத்திட அகம் புறத்து**
**அத்திசை விளங்கும் அருட்பெருஞ்ஜோதி** (146)

காரியங்களைக் காரியப்படுத்துவது சத்திகள். எல்லாக் காரியங்கட்கும் ஏதாவது காரணம் இருந்தே ஆக வேண்டும். காரணம் இல்லாமல் காரியம் இல்லை. காரியத்தைச் சக்திகள் என்றும் அக் காரியங்கட்குக் காரணமாயுள்ளதைச் சத்தர்கள்

என்றும் விளக்குகின்றார்கள். சத்திகளை இயக்குவிக்கின்றவர்கள் சத்தர்களாவர்.

செயல்பாடுகளை ஆற்றுவிக்கும் சத்திகளத்தனைக்கும் அவர்களை நடாத்துவிக்கும் சத்தர்கள் உண்டு. அப்படி உள்ள எல்லாச் சத்தர்களும் குறைவின்றி செழித்திட எல்லாச் சீவர்கட்கும் அகத்தேயும் புறத்தேயும் அதாவது உள்ளேயும் வெளியேயும் எல்லாத் திசைகளிலும் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**சத்திகள் எல்லாம் தழைக்க எங்கெங்கும்**
**அத்தகை விளங்கும் அருட்பெருஞ்ஜோதி** (148)

சத்திகள் என்பது செயல்பாடுகளே. இயற்கையின் செயல்பாடுகள் எதுவும் எக்காலத்தும் தடைபட்டதே இல்லை. பூமி தன்னைத்தானே சுற்றுவதும், தினமும் சூரியன் தோன்றுவதும், மறைவதும் இதனால் பகல் இரவு ஏற்படுதலும், பருவகாலம் தவறாது மழை பொழிவதும், இன்னும் இது போன்ற பல செயல்கள் இயற்கையின் செயல்களாகும்.

இந்தச் செயல்பாடுகள் அனைத்தும் தடைபடாது ஓங்கி வளர்ந்து செழித்து நடைபெற எங்கெங்கும் அதாவது செயல்பாடுகள் நடைபெறும் அனைத்து இடங்களிலும் நிறைந்து அவ்வச் செயல்பாடுகளாகவே விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : ஆரணம் என்பது வேதம். இது காரணம் ஆகும்.
ஆகமம் என்பது பசு நூல். இது காரியமாகும்.

பதி நூலாகிய வேதம் காரணமாயிற்று
பசு நூலாகிய ஆகமம் காரியமாயிற்று.

சிருட்டி நியாயத்தில் சாமான்ய ஜீவன் காரணப்பட விசேஷ ஜீவன் காரியப்படும் என்று நம் பெருமானார் அருளியுள்ளதைக் கூர்ந்து நோக்குக.

**முந்துறும் ஐந்தொழில் மூர்த்திகள் பலர்க்கும்**
**ஐந்தொழில் அளிக்கும் அருட்பெருஞ்ஜோதி** (150)

முன்னோர் வகுத்த ஐந்தொழில்கள்

1. படைத்தல் 2. காத்தல் 3. அழித்தல்
4. மறைத்தல் 5. அருளல்

வள்ளலார் வகுத்த ஐந்தொழில்கள்

1. படைத்தல் 2. காத்தல் 3. குற்றம் நீக்குவித்தல்
4. பக்குவம் வருவித்தல் 5. விளக்கம் செய்வித்தல்

முன்னோர் வகுத்த ஐந்தொழில் கர்த்தர்கள்

1. படைத்தல் - பிரும்மா
2. காத்தல் - விஷ்ணு
3. அழித்தல் - ருத்ரன்
4. மறைத்தல் - மகேஸ்வரன்
5. அருளல் - சதாசிவன்

எத்தொழிலுக்கும் முதன்மையாக விளங்குவது மேற்குறித்த ஐந்தொழில்களேயாகும். இத் தொழில்களை நிகழ்த்துகின்ற கர்த்தர்கள் அனேகராக இருந்து ஆங்காங்கே செயல்பட்டுக் கொண்டிருக்கின்றனர். இவ்வாறு விளங்குகின்ற ஐந்தொழில் மூர்த்திகள் பலர்க்கும் அவரவர்க்குரிய தொழில்களை அளித்து விளங்கும் அருட்பெருஞ்ஜோதி. ஐந்தொழில் கர்த்தர்கள் பலர் என்பதற்கு ஆதாரம்.

உருத்திரர்கள் ஒரு கோடி நாரணர் பல் கோடி
உறுபிரமர் பல கோடி யிந்திரர் பல் கோடி
பெருத்த மற்றைத் தேவர்களும் முனிவர்களும் பிறரும்
பேசிலநந்தங்கோடி யாங்காங்கே கூடித்
திருத்தமுறு திருச்சபையின் படிப்புறத்தே நின்று
தியங்குகின்றார் நடங்காணும் சிந்தையராயந்தோ
வருத்தமொன்றுங் காணாதே நானொருத்தியேறி
மாநடங் காண்கின்றேனென் மாதவந்தான் பெரிதே

(திருவருட்பா 5776)

**பெரிதினும் பெரிதாய்ச் சிறிதினும் சிறிதாய்**
**அரிதினும் அரிதாம் அருட்பெருஞ்ஜோதி** (152)

எந்தப் பெரிய பொருளும் உன்னுள் அடக்கம். எனவே எதனினும் பெரிய பொருள் நீயே. உன்னைவிடப் பெரிய பொருள் எதுவும் இல்லை. எது பெரியதோ அதைவிடப் பெரியது நீயே.

எந்தப் பொருள் மிக மிகச் சிறிய பொருளோ அந்தப் பொருளுக்குள்ளும் நீயே இருக்கின்றாய். நீ இல்லாத பொருள் எதுவும் இல்லை. எந்தச் சிறிய பொருளுக்குள்ளேயும் இருக்கும் நீ சிறிய பொருளுக்கெல்லாம் சிறிய பொருள் ஆகிறாய். எனவே உன்னை விடச் சிறிய பொருள் எதுவும் இல்லை.

கிடைத்தற்கு அரிய பொருளோ உன்னைத் தவிர வேறில்லை. மற்ற எல்லாமே கிடைத்தற்கு உரியவையே. உன்னை அடைவதுதான் அரிது அரிது. எனவே அரிய பொருள் எதுவென்று கண்டாலும் அதைவிட அரிய பொருள் நீயே. இவ்வாறு பெரிய எந்தப் பொருளையும் விடப் பெரியதாயும் சிறிய பொருள் எதுவோ அதைவிடச் சிறிய பொருளாயும் அரிய பொருளைவிட அரிய பொருளாயும் விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி.

பெரியதினும் பெரியது என்பதற்கு ஆதாரம் :-

நான்முகர்கள் மிகப் பெரிய ராங்கவரிற் பெரியர்
நாரணர்கள் மற்றவர்கள் நாடின் மிகப் பெரியர்
வான்முகத்த வுருத்திரர்கள் மற்றவரிற் பெரியர்
மயேச்சுரர்கள் சதாசிவர்கள் மற்றவரிற் பெரியர்
மீன் முகத்த விந்து அதனில் பெரிது அதனில் நாதம்
மிகப் பெரிது பரையதனின் மிகப் பெரியளவளின்
ஆன்முகத்திற் பரம்பரந்தான் பெரித தனிற் பெரிதாய்
ஆடுகின்ற சேவடி யாரறிவார் காண் தோழி.

(திருவருட்பா 5645)

சிறியதினும் சிறியது என்பதற்கு ஆதாரம் :-

சிருட்டி ஒன்று சிற்றணுவிற் சிறிததனிற் சிறிது
சினைத்த கரணக் கருவச் சினைக் கருவிற் சிறிது
வெருட்டியமான் அம்மானிற் சிறிது மதி மதியின்
மிகச் சிறிது காட்டுகின்ற வியன்சுடரொன்றதனில்
தெருட்டுகின்ற சக்தி மிகச் சிறிததனிற் கோடித்
திறத்தினிலோர் சிறிதாகும் திருச்சிற்றம்பலத்தே
அருட்டிறட்டினடிக்கின்ற என்னுடைய தலைவர்
அருட்பெருமை எவருரைப்பார் அறியாயென் தோழி
(திருவருட்பா 5644)

அரியதினும் அரியது என்பதற்கு ஆதாரம்.

அரிதாகி அரியதினும் அரியதாகி
அநாதியாய் ஆதியாய் அருளதாகிப்
பெரிதாகிப் பெரியதினும் பெரியதாகிப்
பேதமாய் அபேதமாய்ப் பிறங்கா நின்ற
கரிதாகி வெளிதாகிக் கலைகளாகிக்
கலை கடந்த பொருளாகிக் கரணாதீதத்
தெரிதான வெளிநடுவில் அருளாம் வண்மைச்
செழுங்கிரணச் சுடராகித் திகழும் தேவே
(திருவருட்பா 2083)

**காட்சியும் காணாக் காட்சியும் அது தரும்**
**ஆட்சியும் ஆகிய அருட்பெருஞ்ஜோதி** (154)

எல்லாமாக இறைவன் விளங்குவதால் புறத்திலே காணுகின்ற அத்தனை காட்சிகளிலேயும் அவனையே காண்கின்றோம் என்பதே உண்மை. பக்தி காண்டிகள் இறைவனை சிலை வடிவங்களில் கண்டு வழிபாடு செய்வர் என்றும் ஞானிகள் அவனை எங்கும் உபாசிப்பார்கள் என்றும் நம் பெருமானார் கூறுவர். சரியை கிரியை ஆகிய நெறியில் நிற்போற்குப் புறக் காட்சியாக இறைவன் விளங்குகின்றான்.

யோகம், ஞானம் ஆகிய அக வழிபாட்டு நெறியில் நிற்போர் இறைவனைத் தனக்குள்ளே காண முயற்சி செய்வர். புறத்திலே மற்றவர்கள் காண முடியாத பல காட்சிகளை அகத்திலே அவர்கள் காணுவர். இதனையே காணாக் காட்சி என்று பெரியோர் கூறினர். அந்தக் காணாக் காட்சி எவ்வாறிருக்கும் என்னில் பரநாத நிலை அனுபவத்திலே அண்ட பகிரண்டம் தோற்றறியாப் பெருஞ்ஜோதி ஒன்றும் அதன் நடுவே பொன்னொளியும் தோன்றுமாம். முடிந்த முடிபாக அப்பொன்னொளியின் நடுவே இறைவன் செவ்வொளியாகக் காட்சி அளிப்பானாம். இதுவே காணாக் காட்சி.

இந்தக் காட்சியைக் கண்டபெரும் புண்ணியவான்கள் இறைவனைக் கண்டு கலந்து நிற்பவர்கள் ஆதலால் இறைவன் எவ்வாறு ஆட்சி செய்கின்றானோ அந்த ஆட்சியை இவர்கள் பெறுவதால் அது தரும் ஆட்சி என்று கூறினார்.

புறத்திலே கண்ணால் காண்கின்ற இயற்கைக் காட்சிகளாகவும், கண்ணால் காண முடியாது அகத்திலே தோன்றுகின்ற ஞான அனுபவக் காட்சியாயும், அப்படிப்பட்ட தவக் காட்சியினால் பெறக்கூடிய வல்லபமாகியும் விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி

ஞானக் காட்சி என்பதற்கு ஆதாரம் :

வான நாடரும் நாடரும் மன்றிலே வயங்கும்
ஞான நாடகக் காட்சியே நாம் பெறல் வேண்டும்
ஊன நாடகக் காட்சியால் காலத்தை ஒழிக்கும்
ஈன நாடகப் பெரியார்காள் வம்மினோ ஈண்டே
(திருவருட்பா 5550)

**இன்புறு சித்திகள் எல்லாம் புரிக என்று**
**அன்புடன் எனக்கருள் அருட்பெருஞ்ஜோதி** (156)

முன் வரியில் காணாக் காட்சியையும் அதன் விளைவாகத் தான் பெற்ற அருளாட்சியையும் வியந்து போற்றினார். அருளாட்சியின் பயனை இந்த வரியில் கூறுகின்றார்.

கரும சித்தியில் அடியிற் குறித்த அட்டமா சித்திகள் அடங்கும்.

1. அணிமா - துரும்பை மேருவாக்குகின்றது
2. மகிமா - மேருவைத் துரும்பாக்குகின்றது
3. கரிமா - மேருவை ஒன்றுமில்லாமல் செய்கிறது
4. லகிமா - ஒன்றுமில்லாத இடத்தில் அனேகங்களாகச் செய்கிறது
5. பிராத்தி - வேண்டுவதை அடைதல்
6. ஈசத்துவம் - குளிகை வல்லபத்தால் எங்கும் செல்லுவது
7. பிராகாமியம் - பரகாயப் பிரவேசம்
8. வசித்துவம் - எழுவகைப் பிறவியாகிய தேவ, மானுஷ்ய, நரக, மிருக, பட்சி, ஊர்வன, விருட்சம் முதலியவற்றைத் தன் வசப்படுத்துவது.

யோகசித்தி - 64 சித்திகளையும் தன் சுதந்தரத்தில் நடத்துவது

ஞானசித்தி - 64000 சத்திகளையும் தனது சுதந்தரத்தில் நடத்துகிறது. 647 கோடியாகிய மகா சித்தி களையும் தன்னிஷ்டம் போல் நடத்துகிறது.

(ஆதாரம் 130 - மூவகைச் சித்தி உரைநடை பக் 334)

சித்திகள் எவ்வளவாக இருந்தாலும் பிற ஜீவர்கட்கு இன்பம் அளிக்கின்ற சித்திகள் அனைத்தினையும் நீ புரியலாம் என்று அன்புடன் என்னை ஆசீர்வதித்து அருள்புரிந்த அருட்பெருஞ்ஜோதி.

**இறவா வரமளித்து என்னை மேலேற்றிய**
**அறவாழியாம் தனி அருட்பெருஞ்ஜோதி** (158)

இன்புறு சித்திகள் புரிய இறைவன் ஆணையிட்டது முன் வரியில் கூறப்பட்டது, அதற்கு அவன் அளித்த பரிசு என்ன?

என்றைக்கும் அழிவே இல்லாத மரணமிலாப் பெரு வாழ்வை அளித்ததோடன்றி இதுவரை யாரும் கண்டறியாத ஞான அனுபவத்தில் என்னை மேலேற்றிய கருணைக்கடலாம் ஒப்பற்ற அருட்பெருஞ்ஜோதி.

வள்ளலார் இறவா வரம் பெற்றதற்கு ஆதாரம் :-

காற்றாலே புவியாலே ககனமதனாலே
கனலாலே புனலாலே கதிராதியாலே
கூற்றாலே பிணியாலே கொலைக் கருவியாலே
கோளாலே பிறவியற்றும் கொடுஞ் செயல்களாலே
வேற்றாலே எஞ்ஞான்றும் அழியாதே விளங்கும்
மெய்யளிக்க வேண்டுமென்றேன் விரைந்தளித்தானெனக்கே
ஏற்றாலே இழிவென நீர் நினையாதீர் உலகீர்
எந்தை அருட்பெருஞ்ஜோதி இறைவனைச் சார்வீரே

(திருவருட்பா 5450)

மற்றவர்கள் பெறாத அனுபவத்தை வள்ளலார் பெற்றார் என்பதற்கு ஆதாரம் :

உருத்திரர்கள் ஒரு கோடி நாரணர் பல் கோடி
உறுபிரமர் பல கோடி யிந்திரர் பல்கோடி
பெருத்த மற்றைத் தேவர்களும் முனிவர்களும் பிறரும்
பேசிலனந்தங்கோடி ஆங்காங்கே கூடித்
திருத்தமுறு திருச்சபையின் படிப்புறத்தே நின்று
தியங்குகின்றார் நடங்காணும் சிந்தையராயந்தோ
வருத்த மொன்றுங் காணாதே நானொருத்தி ஏறி
மாநடங்காண்கின்றேன் என் மாத வந்தான் பெரிதே.

(திருவருட்பா 5776)

**நானந்தமில்லா நலம் பெற எனக்கே**
**ஆனந்தம் நல்கிய அருட்பெருஞ்ஜோதி** (160)

முன் வரியில் இறவா வரம் பெற்ற நிலை கூறப்பட்டது. இந்த வரியில் முடிவில்லா நன்மை பெற்றது கூறப்படுகின்றது.

இதுவரை வந்த ஆன்மீக வாதிகள் அனைவரும் ஒருமித்துத் தெரிவித்த கருத்து ஒன்று உண்டு. அது என்னவெனில் யாராயிருந்தாலும் என்றாவது ஒரு நாள் இறந்தே தீர

வேண்டும் என்பதுதான். தோன்றியது மறையும் என்றும், ஆரம்பம் என்று ஒன்று இருந்தால் முடிவு என்று ஒன்று உண்டு என்றும் கூறி வைத்தார்கள். ஆனால் நம் பெருமானார் ஒருவர் மட்டுமே பிறந்தால் இறந்தே தீர வேண்டும் என்ற அவசியம் இல்லை என்று போதித்தார். அதேபோல முடிவு என்பதே இல்லாத நன்மையை நான் அடைவதற்கு எனக்கே ஆனந்தத்தை அளித்த அருட்பெருஞ்ஜோதி.

முடிவில்லாத நிலை பெற்றார் என்பதற்கு ஆதாரம்::

ஆடுகின்ற சேவடிக்கே ஆளானேன் மாளாத யாக்கை பெற்றேன்
கூடுகின்ற சன்மார்க்க சங்கத்தே நடுவிருந்து குலாவுகின்றேன்
பாடுகின்றேன் எந்தை பிரான் பதப் புகழை அன்பினொடும்
பாடிப்பாடி
நீடுகின்றேன் இன்பக் கூத்தாடுகின்றேன் எண்ணம் எலாம்
நிரம்பினேனே (திருவருட்பா 5445)

**எண்ணிய எண்ணியாங்கு இயற்றுக என்றெனை**
**அண்ணி உள் ஓங்கும் அருட்பெருஞ்ஜோதி** (162)

முடிவே இல்லாத நலத்தைத் தான் பெற்றதை முன் வரியில் அறிவித்தார். இந்த வரியில் எண்ணியதைச் சாதிக்கும் திறன் பெற்றதை எடுத்துக் காட்டுகின்றார்.

நினைத்ததைக் கூற வேண்டும். கூறியதைச் செய்ய வேண்டும். அதாவது நினைத்ததே செயல்பட வேண்டும். இதைத்தான் திரிகரண சுத்தி என்பார்கள். மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றும் ஒன்றுக் கொன்று மாறுபடாமல் செயல்படுவது.

(நான்) நினைத்ததை நினைத்தவாறு செயல்படுத்துக என ஆசீர்வதித்து எனையடைந்து என்னுள்ளே ஓங்கி விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

இறைவன் வருவதற்கும் நினைத்ததை அவ்வாறே

செயல்படுத்துவதற்கும் ஆதாரம் :-

முன் பாட்டுக் காலையிலே வருகுவர் என் கணவர்
மோசமிலை மோசமென மொழிகின்றார் மொழிக
பின் பாட்டுக் காலையிலே நினைத்தவெலா முடியும்
பிசகிலை இம்மொழி சிறிதும் பிசகிலை இவ்வுலகில்
துன்பாட்டுச் சிற்றினத்தார் சிறுமொழி கேட்டுளந்
துளங்கேல் நம் மாளிகையைச் சூழ அலங்கரிப்பாய்
தன் பாட்டுத் திருப்பொதுவில் நடத்திறைவர் ஆணை
சத்தியம் சத்தியம் மாதே சத்தியம் சத்தியமே
(திருவருட்பா 5706)

**மேயினை மெய்ப்பொருள் விளங்கினை நீ அது**
**ஆயினை என்றருள் அருட்பெருஞ்ஜோதி** (164)

எண்ணியதைச் செயல்படுத்துக என இறைவன் அருளியதை முன் வரியில் கூறப்பட்டது. எவ்வாறு அந்நிலை பெற முடியும் என்பது இவ்வரியில் கூறப்படுகின்றது.

ஒரு புத்தகத்தைப் படிக்க வேண்டுமானால் கண்களிலே பார்க்கும் திறனாகிய ஒளி இருக்க வேண்டும். புறத்திலேயும் ஒளி இருக்க வேண்டும். புறத்திலே இருள் இருந்தால் எவ்வளவுதான் கண்ணைத் திறந்து பார்த்தாலும் படிக்க இயலாது. அவ்வாறே புறத்திலே ஒளி இருந்து கண்ணிலே பார்வை ஒளி இல்லையானாலும் படிக்க இயலாது. அதுபோல எந்தக் காரியம் நிறைவேற வேண்டுமானாலும் ஜீவ முயற்சியும் இறை அருளும் ஒன்று சேர வேண்டும். அவ்வாறு ஒன்றுபடாத போது காரியம் நிறைவேறுவதில்லை.

பன்னிரண்டாண்டு தொடங்கி நம்பெருமானார் ஞான முயற்சியில் ஈடுபட்டார். வெற்றி கண்டார். இதை வியந்து ஆண்டவன் கூறினான்.

நீயே நன் முயற்சியை மேற்கொண்டாய். மெய்ப் பொருள் எது என்று நன்கு அறிந்து கொண்டாய். பின்னர் அந்த மெய்ப்பொருளாக நீயே ஆகிவிட்டாய் என்றருள் அருட்பெருஞ்ஜோதி,

உலகாயதப் பொருளெல்லாம் அழியும் தன்மை உடையது. மெய்ப் பொருள் எது? சிவமே பொருளாகும். அதை வள்ளலார் அறிந்து கொண்டார். பின்னர் அவர் சிவத்தை அடைந்தார். முடிவாக அவரே சிவம் ஆனார்.

சிவமே பொருளென்று அறிவால் அறிந்தேன்.

**எண்ணிற் செழுந்தேன் இனிய தெள் அமுதென**
**அண்ணித் தினிக்கும் அருட்பெருஞ்ஜோதி** (166)

தானே சிவத்தை அறிந்து தாமே சிவமானது முன் வரியில் கூறப்பட்டது. அந்த அனுபவம் எப்படி இருக்கும்?

நல்ல செழுமையான தேனைச் சுவைத்தால் அந்த இனிப்பு எவ்வாறு இருக்குமோ அவ்வாறு

இனிமையான சிறப்பான அமுதம் என்ன சுவையாக இருக்குமோ அவ்வாறு அந்த இறைவனை நினைத்தால் எண்ணினால் மிக மிகச் சுவையாக இனிக்கின்றதே.

எண்ணுகின்றேன் எண்ணுதொறெ்ன் எண்ணமெலாந் தித்திக்க
நண்ணுகின்ற தென் புகல்வேன் நானிலத்தீர் - உண்ணுகின்ற
உள்ளமுதோ நான்றான் உஞற்று தவத்தால் கிடைத்த
தெள்ளமுதோ அம்பலவன் சீர்.

எண்ணுகின்ற தோறும் நல்ல செழுந்தேனைச் சுவைப்பது போல, நல்ல சிறப்பான அமுதை உண்டது போலக் குறையாத இனிப்பைத் தருகின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**சிந்தையில் துன்பொழி சிவம் பெறுக எனத்தொழில்**
**ஐந்தையும் எனக்கருள் அருட்பெருஞ்ஜோதி** (168)

இறைவனை எண்ணும்போதே எவ்வாறெல்லாம் இன்பம் தோன்றுகின்றதென முன் வரியில் கூறப்பட்டது. அப்படிப்பட்ட மனதிலே துன்பம் தோன்றுமா?

சிந்தையிலே, மனதிலே, எண்ணத்திலே துன்பம் தோன்றாது ஒழித்துவிடு - அங்கே சிவமாகிய பொருளை மட்டும் நிறுத்து என

வாக்களித்து ஐந்தொழில்தான் பெற இறைவனை வாழ்த்துகிறார் இந்த வரியில்.

இறைவனைப் பற்றிய எண்ணங்கள் தவிர மற்றவை அனைத்தும் துன்பம் தருபனவையே. துன்பம் விளைவிக்கின்ற அத்துணை எண்ணங்களையும் சிந்தையிலிருந்து அகற்றிவிடு வாயாக.

அத்தருணம் சிவத்தை அடைக எனக்கூறிப் படைத்தல், காத்தல், துரிசு நீக்குவித்தல், பக்குவம் வருவித்தல், விளக்கம் செய்வித்தல் ஆகிய ஐந்தொழில்களையும் எனக்கு அருளுக அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

ஊழை யாராலும் வெல்ல முடியாது. அனுபவித்தே தீர வேண்டும் என்பார்கள். ஆனால் நம் பெருமானாரோ இறைவனை அடைந்த உள்ளம் ஊழை அகற்றும் என்கிறார்.

ஊழை அகற்ற உளவறியாப் பொய்யன் இவன்
பீழை மனம் நம்மைப் பெறாத மனங்கொடிய
தாழை என எண்ணி என்னைத் தள்ளி விட்டாலென் செய்வேன்
ஏழை நான் ஒற்றி எழுத்தறியும் பெருமானே

(திருவருட்பா 746)

**எங்கெங்கிருந்துயிர் ஏதேது வேண்டினும்**
**அங்கங்கிருந்தருள் அருட்பெருஞ்ஜோதி** (170)

ஐந்தொழில் புரியும் ஆற்றல்வரை தனக்கு வேண்டியதை இறைவனிடம் கேட்டது முன் வரியில் கூறப்பட்டது. தான் பெற்ற பேறு இவ்வுலகம் பெறுதல் வேண்டும் என்ற பரந்த மனம் உடைய நம் பெருமானார் எல்லா உயிர்கட்கும் வேண்டுவதை இந்த வரி உணர்த்துகின்றது.

நான் திருப்பதிக்குப் போனேன். என் வறுமை நீங்கிவிட்டது. நான் மூன்று முறை சபரிமலைக்குப் போனேன் என்னுடைய நோய் நீங்கிவிட்டது. நான் திருநள்ளாறு போய் வந்தேன். என்னைப் பிடித்திருந்த சனி விலகி விட்டது. நான் திருமணஞ்சேரி போய் வந்தேன் என் மகளுக்குத் திருமணம் ஆகிவிட்டது.

இப்படியெல்லாம் மக்கள் பேசுவதை நாம் அறிவோம். இவைகள் உண்மைதானா? கடவுள் இப்படிச் சிலச் சில க்ஷேத்திரங்களில் மட்டும் இருந்து கொண்டு அங்கு வந்து பிரார்த்தனை செய்து கொள்ளும் பக்தர்கட்கு மட்டும் தான் அருள் பாலிப்பாரா?

இதுவரை வந்த அருளாளர்கள் அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்தவன் இறைவன் என்றெல்லாம் கூறினார்களே அது உண்மையல்லவா?

எல்லா உயிர்களினுள்ளும் இறைவன் இருக்கின்றான். எல்லா உயிர்களும் அவனுள் இருக்கின்றன.

ஆதாரம்

உயிருள் யாம் எம்முள் உயிர் இவை உணர்ந்தே
உயிர் நலம் பரவுக என்றுரைத்த மெய்ச் சிவமே

(அகவல் வரி 974)

எல்லா உயிர்களும் இறைவனும் தனித் தனியாக இல்லை. எனவே இறைவனைப் பிரார்த்தனை செய்வதற்காகத் தனியாக ஓரிடம் தேடிப் போக வேண்டிய அவசியம் உயிர்கட்கு இல்லை. எனவே எந்தெந்த இடத்திலிருந்து எந்தெந்த உயிர் என்னென்ன வேண்டிப் பிரார்த்தனை செய்கின்றனவோ இறைவா நீ அங்கேயே இருப்பதால் அந்தக் கணமே அந்த உயிர்களின் வேண்டுதலுக்கிரங்கி அருள்புரிவாயாக அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு : உயிர்கள் எங்கிருந்து கேட்டாலும் என்ன கேட்டாலும் அப்போதே அங்கேயே தந்துவிடு என்று எல்லா உயிர்கட்காகவும் இறைவனை வள்ளலார் வேண்டுகின்றார்.

எவ்வண்ணம் வேண்டுகினும் அவ்வண்ணம்
அன்றே இரங்கி ஈந்தருளும் பதம் (திருவடிப் புகழ்ச்சி)

**சக முதல் புறப்புறம் தங்கிய அகப்புறம்**
**அகம் புறம் முற்றுமாம் அருட்பெருஞ்ஜோதி** (172)

உயிர்கள் எங்கிருந்து கேட்டாலும் அங்கேயே இருந்து அருள் புரியுமாறு இறைவனை வேண்டியது முன் வரியில் கூறப்பட்டது. இந்த வரியில் கடவுள் காரியப்படும் இடங்களைத் தெரிவிக்கின்றார்.

கடவுள் காரியப்படும் இடங்கள் அண்டத்தில் நான்கு, பிண்டத்தில் நான்கு ஆகும். அவையாவன,

| | | | | |
|---|---|---|---|---|
| | | அண்டத்தில் | - | பிண்டத்தில் |
| அகம் | - | அக்கினி | - | ஆன்மா |
| அகப்புறம் | - | சூரியன் | - | ஜீவன் |
| புறம் | - | சந்திரன் | - | கரணம் |
| புறப்புறம் | - | நட்சத்திரங்கள் | - | இந்திரியம் |

இந்த உலகிலே நிலைபெற்று விளங்குகின்ற அக்கினி, சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் ஆகிய நான்கில் அண்டத்திலும், ஆன்மா, ஜீவன், கரணம் (மனம், புத்தி, சித்தம், அகங்காரம், உள்ளம்) இந்திரியங்கள் (மெய், வாய், கண், மூக்கு, செவி) வரை பிண்டத்திலும் முழுவதுமாக நிறைந்து விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

இந்த அகவல் வரியின் விளக்கமாகத் திருவருட்பாவில் பல பாக்கள் இருந்தாலும், மகாதேவ மாலை 11வது பாட்டு ஓர் உதாரணமாகக் கொள்ளப்படுகின்றது.

அண்டங்கள் பலவாகி அவற்றின் மேலும்
அளவாகி அளவாத அதீதமாகிப்
பிண்டங்கள் அனந்த வகையாகிப் பிண்டம்
பிறங்குகின்ற பொருளாகிப் பேதந்தோற்றும்
பண்டங்கள் பலவாகி இவற்றைக் காக்கும்
பதியாகி ஆனந்தம் பழுத்துச் சாந்தம்
கொண்டெங்கும் நிழல் பரப்பித் தழைந்து ஞானக்
கொழுங் கடவுள் தருவாகிக் குலவும் தேவே

(திருவருட்பா 2081)

**சிகரமும் வகரமும் சேர் தனி உகரமும்**
**அகரமும் ஆகிய அருட்பெருஞ்ஜோதி** (174)

எங்கெங்கிருந்து உயிர்கள் எதை எதை வேண்டினாலும் அங்கங்கிருந்து அருளுமாறு முன் வரியில் இறைவனை வேண்டினார். இந்த வரியில் மேற்கொண்டு விளக்கம் வருகிறது.

சி : எங்கும் நிறைந்தது, அனாதியாய் மலமில்லாதது
வ : எல்லாம் வல்லது சர்வ வல்லமையுடையது
உ : பரம்பொருள்
அ : ஜீவன்

எங்கும் நிறைந்ததாயும், அனாதியாய் மலமில்லாததாயும், எல்லாம் வல்லதாயும், சர்வ வல்லமையுடையதாயும், ஒப்பற்ற பரம் பொருளாயும், ஜீவனாயும் ஆகி விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு : சி - வ - என்பதன் பொருள் திருவருட்பா உரைநடையில் நம் பெருமானார் அருளியது.
உ - என்பது பரம் பொருள். அ - என்பது ஜீவன் என்பதற்கு ஆதாரம்.

அகாரம் உயிரே உகாரம் பரமே
மகாரம் மலமாய் வரு முப்பதத்தில்
சிகாரம் சிவமாய் வகாரம் வடிவமாய்
அகாரம் உயிரென்று அறையலுமாமே

(திருமந்திரம்)

**உபரச வேதியின் உபயமும் பரமும்**
**அபரமு மாகிய அருட்பெருஞ்ஜோதி** (176)

உப - இரண்டு

ரசவேதி - வைத்திய முப்பூ - வாதமுப்பூ

வைத்திய முப்பூ - இந்த முப்பூ கைவரப் பெற்றால் இதில் ஒரு துளி மருந்துடன் சேர்க்க அந்த

| | | |
|---|---|---|
| | | மருந்தின் சக்தியானது பல ஆயிரம் மடங்கு பெருகும். |
| வாதமுப்பூ | - | இந்த முப்பூ கைவரப் பெற்றால் இதில் ஒரு துளி எந்த உலோகத்தின் மீது தெளித்தாலும் அந்த உலோகம் தங்கமாக மாறும். |

பரம் சாஸ்திர ஞானம் அபரம் அனுபவ ஞானம்

சித்த வைத்தியர்களில் பெரும்பாலோர் மூலிகைகளைக் கொண்டு அல்லும் பகலும் அரும்பாடுபட்டு ரச வாதத்தில் ஈடுபட்டு அலைந்து கொண்டிருக்கின்றார்கள். ஆனால் ஞானிகட்கோ அவர்கள் ஆற்றும் தவத்தின் ஆற்றலால் அவர்கள் கைபட்டாலே எந்த நோயும் குணமாகும். அவர்கள் தொட்டதெல்லாம் தங்கமாக மாறும். இப்படிப்பட்ட அற்புத சித்திகளைத் தவத்தால் ஞானிகள் அடைகின்றார்கள். நம் பெருமானாரும் ஒரு கடிதத்தில் தங்கம், வெள்ளி உரைக்கின்ற உரைகல்லும் 8 பலம் நிறுக்கக்கூடிய தராசும் அதற்குரிய எடை கல்லும் அனுப்பிவைக்குமாறு கேட்டிருப்பதே போதுமான சான்றாகும்.

வைத்திய முப்பூவின் குணமாகிய நோய் தீர்க்கும் பயனாயும் வாதமுப்பூவின் குணமாகிய உலோகம் எதையும் பொன்னாக்கும் ஆற்றலாயும், சாஸ்த்திர ஞானமாகியும் பின்னர் தோன்றும் அனுபவ ஞானமாயும் விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**மந்தணம் இதுவென மறுவிலா மதியால்**
**அந்தணர் வழுத்தும் அருட்பெருஞ்ஜோதி** (178)

| | | |
|---|---|---|
| மந்தணம் | - | இரகசியம் |
| மறு | - | குற்றம் |
| அந்தணர் | - | வேதியர் - அறவழி நிற்போர் - நீதி தவறாது நடப்போர் |

இரசவேதியைப் பற்றி முன் வரியில் கூறப்பட்டது. செய்முறையை அனைவரும் அறிந்து கொண்டால் அனைவரும் சிறந்த மருத்துவர்களாயும் பெருந்தனவந்தராயும் விளங்கலாமே. வெளிப்படையாகப் போதிப்பது அல்ல. அது இரகசியம் என்கிறார் இந்த வரியில்.

சாஸ்த்திர ஞானம், அனுபவ ஞானம் என்றும் முன் வரியில் கூறப்பட்டது. வேதங்கள் சாஸ்த்திரங்கள் முதலியவெல்லாம் இறைவனைப் பற்றிய உண்மையை வெளிப்படையாக விளக்கிக் கூறாமல் அந்தக் கூட்டத்தார் மட்டுமே உணர்ந்து கொள்ளுமாறு குழுஉக் குறியாகக் கூறியுள்ளதால் இறை உண்மையானது இதுவரை இரகசியமாகவே மறைக்கப்பட்டுள்ளது. காமக் குரோதங்கள் முதலிய குற்றங்கள் இல்லாது அறவழி நின்று வாழும் ஞானிகள் உண்மையை உணர்ந்திருந்தும் புறமுகமாகச் சொல்லாமல் போற்றுமாறு விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு : சாத்திரங்கள் இறை உண்மையைப் புறமுகமாகக் கூறாமல் உண்மையை மறைத்துச் சூதாகவே கூறியுள்ளன என்பதற்கு ஆதாரம்.

சாத்திரங்களெல்லாம் தடுமாற்றம் சொல்வதன்றி
நேத்திரங்கள் போல் காட்ட நேராவே - நேத்திரங்கள்
சிற்றம்பலவன் திருவருட்சீர் வண்ணமென்றே
உற்றிங்கறிந்தேனுவந்து

(திருவருட்பா 5515)

வேதாகமங்களென்று வீண் வாதமாடுகின்றீர்
வேதாகமத்தின் விளைவறியீர் - சூதாகச்
சொன்னவலால் உண்மை வெளி தோன்ற உரைத்தலிலை
என்ன பயனோ இவை

(திருவருட்பா 5516)

சூதாகச் சொன்னதையே இரகசியம் என்று இந்த வரியில் குறிக்கப்பட்டது.

**எம்புயக் கனியென எண்ணுவார் இதய**
**அம்புயத்தமர்ந்த அருட்பெருஞ்ஜோதி** (180)

கையில் பழம் இருக்குமேயானால் எப்போது தேவைப்படுகின்றதோ அப்போது வாயில் போட்டுச் சுவைக்கலாம். இறைவனை நம் உள்ளங்கையில் உள்ள கனியென யார் உணர்ந்து எண்ணுகின்றார்களோ அவர்களது இதயமாகிய தாமரையில் அமர்ந்துவிடுகிறான். அவ்வாறு அமர்ந்துள்ள அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு : தங்களுடைய வாழ்விலே துன்பங்கள், இடையூறுகள், கவலைகள் முதலியன ஏற்பட்ட போதெல்லாம் இறையருளால் நீங்கப் பெற்றுக் கொண்டு இன்பம் துய்த்தவர்கள் அந்தச் சந்தர்ப்பங்களை எண்ணியெண்ணி ஆனந்தமடைவதுடன், வேண்டுந்தோறெல்லாம் இறைவன் தவறாது அருள் பாலித்துக் கொண்டிருக்கின்றான் என்று கண்டு கொண்டு, அவன் வேறெங்கும் இல்லை, உள்ளங்கைக் கனி போன்று தம்மிடமே இருக்கின்றான் என்ற உணர்வோடு எதைப் பற்றியும் அச்சமோ கவலையோ இல்லாது வாழ்வர். அன்னார் அனுபவம் இந்த வரியில் குறிக்கப்பட்டுள்ளது.

**செடியறுத்தே திட தேகமும் போகமும்**
**அடியருக்கே தரும் அருட்பெருஞ்ஜோதி** (182)

அடியார்கட்கு முதலில் தோன்றுகின்ற துன்பங்கள் அறுந்து போகும். அத்துடன் நோயற்ற, வலிமை மிக்க தேகம் பெறுவர். அத்துடன் இன்பங்கள் அடைந்து ஆனந்தமான வாழ்வும் பெறுவர்.

துன்பங்களை அறுத்து, வலிவுள்ள தேகத்தையும் ஆனந்தங்களையும் அடியார்கட்குத் தருகின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு : இந்த வரிகளுடன் அடுத்த இரண்டு வரிகளையும் கூர்ந்து நோக்கினால் அடியார், அன்பர் என்ற இரண்டு பாகுபாடுகளை நம் பெருமானார் உணர்த்துகின்றார் என்பது புரியும்.

இறைவனை எஜமானனாகக் கொண்டு தன்னை அடிமையாகப் பாவித்து வணங்குவோரை அடியர் எனக்கூறலாம். (ஆதாரம்)

அடியனாக்கிப் பிள்ளையாக்கி நேயனாக்கியே
அடிகளாக்கிக் கொண்டாய் என்னை அவலம் நீக்கியே
(திருவருட்பா 5035)

| | | |
|---|---|---|
| அடியன் | - | தாசமார்க்கம் |
| பிள்ளை | - | சத்புத்திரமார்க்கம் |
| நேயம் | - | சகமார்க்கம் |
| அடிகள் | - | சன்மார்க்கம் |

தாச மார்க்கமும் சற்புத்திர மார்க்கமும் புறவழிபாடு. புறவழிபாட்டில் ஈடுபடுபவரே அடியார்கள் என விளங்குகின்றது.

அடியார் வேறு அடிகளார் வேறு என்பதைக் கூர்ந்து நோக்கின் மாறுபாடு விளங்கும்.

அடியார்க்குக் கிடைப்பது திட தேகமும் போகமும் மட்டுமே.

**துன்பறுத்தொரு சிவ துரிய சுகந்தனை**
**அன்பருக்கே தரும் அருட்பெருஞ்ஜோதி**

முன்வரியில் அடியார்கள் பெறும்பேறு குறிக்கப்பட்டது. இவ்வரியில் அன்பர்கள் பெறும்பேறு கூறப்பட்டுள்ளது.

அன்பர் என்ற சொல்லுக்கு வள்ளலார் தரும் தனிப்பட்ட சிறப்பான விளக்கத்தைக் கவனிக்க வேண்டும்.

"அன்பர் என்பது பொருள் புகழாதியைக் குறித்துப் பயில்வோரை நீக்கிச் சிவானந்தம் எந்நாள் அடைதும் என்று இடைவிடாது அதனையே விரும்பிப் பயில்வோரைக் குறித்தது."

(ஒழிவிலொடுக்கப் பாயுர விருத்தியுரை)

சரியை, கிரியை ஆகிய புறவழிபாட்டில் ஈடுபடுவோர் அடியார் என முன் வரியில் எடுத்துக் காட்டப்பட்டது. யோகம், ஞானம் முதலிய அக வழி பாட்டில் உள்ளோர் அன்பர் ஆவர். (ஆதாரம்)

மணவாளர் வருகின்ற தருணமிது மடவாய்
மாளிகையின் வாயிலெலாம் வளம் பெற நீ புனைக
குணவாளர் அணையும் மலரணையகத்தை நானே
குலவும் மணி விளக்கத்தால் அலங்கரிக்கப் புகுவேன்
தணவாத சுகந்தரும் என் தனிக் கணவர் வரிலோ
சற்றும் அயல் வாதனைகள் உற்றிடுதல் ஆகா
அணவாத மனத்தவரைப் புறப்பணிக்கே விடுக
அன்புடையார்களுக்கிடுக அகப்பணி செய்திடவே

(திருவருட்பா 5732)

அகப்பணி செய்வோரே அன்புடையார் ஆவர்.

அகப்பணி செய்கின்ற அன்பர்கட்குத் துன்பங்களை நீக்குவது மட்டுமின்றி சாக்ரத், சொப்னம், சுழுத்தி, துரியம் என்கிற அவத்தைகள் நான்கில் துரிய நிலை அனுபவத்தில் தோன்றும் சுகத்தையும் தருகின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**பொதுவது சிறப்பது புதியது பழையது என்று**
**அதுவது வாய்த் திகழ் அருட்பெருஞ்ஜோதி** (186)

கல்லார்க்கும், கற்றவர்க்கும், வலிமை மிக்கவர்க்கும், பலமில்லாதவர்க்கும், நல்லவர்கட்கும், பொல்லாதவர்கட்கும், செல்வந்தர்க்கும், ஏழைகட்கும், இன்னும் எவ்விதமான ஏற்றத் தாழ்வுகள் மனிதரிடத்தே இருந்தாலும் இறைவனோ அனைவர்க்கும் பொதுவானவனாகவே இருக்கின்றான்.

உயர்ந்த கல்வி அறிவு பெறுவது சிறப்பே. குறையாத செல்வம் பெற்று வளமான வாழ்க்கை பெற்றால் அதுவும் சிறப்பே. உலகமே புகழும்படி சாதனைகள் புரிந்து புகழ்பட வாழ்தலும்

சிறப்பே. நோயற்ற வாழ்வு கிட்டுமேயானால் அதுவும் சிறப்பே. சிறப்புகள் எவ்வளவோ உள்ளன. அனைத்தினையும் சொல்லி முடியாது. உண்மையில் சிறப்பானது என்று ஒன்று இருக்குமானால் அது இறைவனே. இறைவனைவிடச் சிறப்பானது எதுவும் இல்லை.

எந்தப் பொருளும் ஆரம்பத்தில் புதியதாகத் திடமாக இருக்கும். காலப் போக்கில் அது நைந்து போவதாலோ, ஆற்றலை இழப்பதாலோ, தேய்ந்து போவதாலோ எக்காரணத்தாலோ புதுமையை இழந்து விடுகின்றது. எக்காரணத்தாலும், எக்காலத்தும் தன் நிலை இழக்காது என்றும் புதியதாக ஒன்று இருக்குமென்றால் இறைவன் தவிர வேறு எதுவும் இல்லை. என்றைக்கும் இறைமையே புதியது.

புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள் பழைய காலத்துப் பழமையான பல பொருட்களைப் பூமியிலிருந்து தோண்டி எடுக்கின்றார்கள். எந்த ஆண்டில் எழுதப்பட்டது என்றே கூற முடியாத மிக மிகப் பழமையான சிறப்பான நூல்களும் உள்ளன. உலகில் தோன்றிய எதுவும் இந்த உலகை விடப் பழமையானது அல்ல. இந்த உலகம் பழையது என்றால் அதைவிடப் பழமையானது சூரியன். இறைவனோ அதற்கும் பழமையானவன். எதையும் விடப் பழையது இறைவனே.

அனைவர்க்கும் பொதுவானதாகவும் எதையும்விடச் சிறப்பானதும் எதையும் விடப் புதுமையானதும், எதையும் விடப் பழைமையானதாகவும், எந்தப் பொருட்கள் இப்படியெல்லாம் இருக்கின்றனவோ (அல்லது) கருதப்படுகின்றனவோ அவ்வப்பொருளாகவே விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி.

**சேதனப் பெருநிலை திகழ் தரும் ஒருபரை**
**ஆதனத்து ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி** (188)

சேதனம்: அசைவு - இயக்கம். பிறத்தல், வாழ்தல், இறத்தல், மீண்டும் பிறத்தல் முதலிய இயக்கங்கள் உலகம் தோன்றிய அந்நாள் முதல் இந்நாள்வரை மட்டுமின்றி இனிவரும் நாட்களிலும் இடைவிடாது நிகழ்ந்து கொண்டே இருப்பதால் (உயிரினங்கள்) ஓரறிவுள்ள தாவரம் முதல் ஆறறிவுள்ள மனிதர்வரை

எந்தக் காலத்தும் அழிவுறாது உயிரினங்கள் இருந்து கொண்டே இருக்கின்றன. உயிரினங்கள் மட்டுமா இயங்கிக் கொண்டிருக்கின்றன? உயிரற்ற ஜடப் பொருள்களாகிய உலகம் சூரியனைச் சுற்றி வருவதுடன் தன்னைத் தானேயும் சுற்றிக் கொள்கின்றது. கோடையில் வெய்யிலும், மாரிக் காலத்தில் மழையும், பனிக் காலத்தில் பனியும் தவறாது இயங்குகின்றது.

உலகம் தன்னைத்தானே சுற்றுவதால் இரவு பகலும், சூரியனைச் சுற்றுவதால் காலங்களில் மாற்றமும் ஏற்படுகின்றன. உயிரினங்களில் ஆண் பெண் என இருவகை தோற்றுவித்து அவ்வினங்களின் சிருஷ்டியும், காலச் சக்கரத்தின் சுழற்சியில் அவ்வுயிரினங்களின் கிரமமான அழிவையும், அவ்வுயிரினங்களின் இடைப்பட்ட வாழ்வில் பலவிதமான ஏற்றத் தாழ்வுகளையும் உண்டாக்கி இப்படிப்பட்ட இயக்கங்கள் என்றும் நின்றுவிடாது நிகழ்கின்ற பெருநிலைக்கு மூலம் என மாயை என்ற ஒன்றைச் செயல்படுத்தி, அந்த மாயைக்குத் தான் வசப்படாது அதைத் தன் கீழ் அடக்கி அதையே தனக்கு ஆதனமாகக் கொண்டு ஓங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு : உலகுயிர்கள், மாயையின் ஆட்சிக்குட்பட்டு அதனால் ஆட்டி வைக்கப்படுவதால் தோன்றி, வாழ்ந்து, மறைந்து கொண்டுள்ளன. ஓர் ஆண் ஒரு பெண்ணை விரும்புவதும், ஒரு பெண் ஓர் ஆணை விரும்புவதும் அது மனிதர்மட்டுமின்றி பறவைகள் மிருகங்கள் எதுவாயினும் ஆண் பெண் கவர்ச்சி ஏற்பட மாயையே காரணமாயுள்ளது. பரம் பொருளோ இந்த மாயைக்கு உட்படாது, அதன் வசப்படாது, அதைத் தன் கீழ் அடக்கிவைத்திருப்பதால் என்றும் அசையாது அழியாது விளங்குகின்றது.

<u>ஆதாரம்</u> மயில் மாயை - முருகன் ஞானம்.

ஞானமாகிய முருகன் மாயையாகிய மயிலைத் தன் கீழ் அடக்கி அதனைத் தனது ஆசனமாக்கிக் கொண்டிருக்கின்றான்.

நடராசரோ முயலகனைத் தன் கீழ் மிதித்து அவன் மீது ஒரு காலை ஊன்றி நின்று கொண்டு ஐந்தொழில்களை இயற்றுகின்றாராம், ஆதனம் இருக்கை

பரம்பொருளுக்கு மாயையே இருக்கையாம்

**ஓமயத் திருவுரு உவப்புடன் அளித்தெனக்கு**
**ஆமயத் தடை தவிர் அருட்பெருஞ்ஜோதி** (190)

| | | |
|---|---|---|
| ஓமயத்திருவுரு | = | பிரணவ வடிவம் |
| ஆமயத் தடை | = | ஆ = பசு |
| பசு | = | ஐந்துமலங்கள் உடையது |
| ஜீவன் | = | மூன்று மலங்கள் உடையது |
| ஆன்மா | = | ஒரு மலம் உடையது |
| சிவம் | = | மலமில்லாதது |

ஓங்கார வடிவமாகிய பிரணவ வடிவை மகிழ்வுடன் எனக்களித்து ஆணவம், மாயை, கன்மம், மாமாயை, திரோதை ஆகிய ஐந்து மலங்களாலும் எனக்கு ஏற்படுகின்ற தடைகளைத் தவிர்த்து அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே வாழ்வளிப்பீராக.

குறிப்பு : முன் வரியில் மாயையின் ஆட்சிக்குட்பட்டு உயிரினங்கள் தோன்றி வாழ்ந்து மறைந்து உயிரின இயக்கமானது தொடர்ந்து நடைபெறுகின்ற பேராற்றல் கூறப்பட்டது. இந்த வரியில் மாயா மலங்களால் ஏற்படுகின்ற தடைகள் நீங்கியப் பிரணவ வடிவமாகிய ஓங்கார வடிவைப் பெறுதல் வேண்டுமெனக் குறிக்கப்பட்டது. ஓங்கார வடிவைப் பெறுகின்ற தருணத்தில்தான் அனைத்து மலங்களும் அடியோடே ஒழியும். கடைசியாக விலகுவது மூல மலமாகிய ஆணவ மலமே. பிரணவ வடிவம் பெறும்போது இறுதியாக உள்ள இந்த ஆணவ மலம் ஒழியுமாம்.

**எப்படி எண்ணியது என் கருத்து இங்கெனக்கு**
**அப்படி அருளிய அருட்பெருஞ்ஜோதி.** (192)

எப்படியெல்லாம் நீ அருள வேண்டும் என என் மனதில் எண்ணினேனோ அப்படியெல்லாம் இங்கேயே எனக்கு அருளிய அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு: நினைத்தவாறே அருள் பெற்றார் என்று கூறப்பட்டது. அவர் என்ன நினைத்தார், இறைவனும் அவ்வாறே அருளினான் என்பதை அறியும் போதுதான் வள்ளலாரின் பெருங்குணமும், பெருங்கருணையும், வெளிப்படுகின்றது. உயிர்கள் அனைத்தும் களிப்படைய வேண்டும் என்றே எண்ணினாராம். ஆதாரம்:

துன்பெலாம் தீர்ந்தன சுகம் பலித்தது நினைச்
சூழ்ந்தது அருள் ஒளி நிறைந்தே
சுத்த சன்மார்க்க நிலை அனுபவம் நினக்கே
சுதந்தரமதானது உலகில்
வன்பெலாம் நீக்கி நல்வழியெலாம் ஆக்கி மெய்
வாழ்வெலாம் பெற்று மிகவும்
<u>மன்னுயிரெலாம் களித்திட நினைத்தனை</u> உன்றன்
<u>மனநினைப்பின் படிக்கே</u>
<u>அன்ப நீ பெறுக</u> உலவாது நீடூழி விளை
யாடுக அருட்ஜோதியாம்
ஆட்சி தந்தோம் உனைக் கைவிடோம் கைவிடோம்
ஆணை நம்மாணை என்றே
இன்புறத் திருவாக்களித்து என்னுள்ளே கலந்து
இசைவுடன் இருந்த குருவே
எல்லாம் செய் வல்ல சித்தாகி மணி மன்றில்
இலங்கு நடராச பதியே. (திருவருட்பா 3676)

**எத்தகை விழைந்தன என் மனம் இங்கு எனக்கு**
**அத்தகை அருளிய அருட்பெருஞ்ஜோதி** (194)

எந்த விதமாக எது நிகழவேண்டும் என என் மனம் ஆசைப்பட்டதோ (விழைந்ததோ) அந்த விதமாகவே இங்கு எனக்கு நடத்திக் கொடுத்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு : முன் வரிக்கும் இந்த வரிக்கும் பெரிய மாறுபாடு இல்லையாயினும் சற்றே வேறுபாடுண்டு. எப்படி நினைத்தேனோ அப்படி அருள்க என்றது முன்வரி. அது எவ்வாறு நிகழ வேண்டும் என ஆசைப்பட்டேனோ அவ்வாறே அருளினான் என்பது இந்த வரி, உதாரணமாக - உன் அருள் எனக்கு வேண்டும் என எண்ணியது மனம். அருளை இறைவன் அளித்துவிட்டான் - இது முன்வரி,

பாடுபட்டுத் தவம் செய்து அருளை என்னால் அடைய முடியாது - என் மீது இரங்கி ஐயோ பாவம் எனக் கருதி அருளை நீ தரமாட்டாயா என விழைந்தது என் மனம். அவ்வாறே எந்தப் பாடும் படாது எனக்கு அருளைத் தந்தாயே என்கிறது இந்தவரி, (ஆதாரம்)

நோவாது நோன்பு எனைப்போல் நோற்றவரும் எஞ்ஞான்றும்
சாவா வரம் எனைப் போல் சார்ந்தவரும் - தேவா நின்
பேரருளை என் போலப் பெற்றவரும் எவ்வுலகில்
யாருளர் நீ சற்றே அறை. (திருவருட்பா 5624)

**இங்குறத் திரிந்து உளம் இளையாவகை எனக்கு**
**அங்கையிற் கனியாம் அருட்பெருஞ்ஜோதி** (196)

இறைவனை அடைவதற்காக அடியார்கள் திருத்தலங்கட்கும் திருக்கோயில்கட்கும் சென்று சென்று துதித்தனர், அவ்வாறே உன்னை அடைவதற்குத் தலங்கள் பலவற்றிற்கும் சென்று சென்று என் உள்ளமானது களைத்துச் சோர்வடைந்து போகாமல் பசித்தவனுக்கு அவன் கையிலே நல்ல பழம் இருந்தால் உடனே, பசித்தபோதே சற்றும் தாமதியாமல் உண்டு பசி நீங்கப்பெறுவானோ

அவ்வாறே உன் அருட்பசி தோன்றும் போதெல்லாம் உன் அருளை அப்போதே நான் அடையுமாறு என் உள்ளங்கையில் உள்ள பழம் போல விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : அடியார்கள் அனைவரும் பலப்பல தலங்கட்குச் சென்று பாமாலைகள் சாத்தி இறைவழிபாடு செய்தனர், ஆனால் இறைவனோ வள்ளலாரைத் தேடி அவர் இருந்த குடிசைக்கே வந்து அவருடன் கலந்தானாம் (ஆதாரம்)

**வா**னிருக்கும் பிரமர்களும் நாரணரும் பிறரும்
மாதவம் பன்னாட் புரிந்து மணிமாடநடுவே
தேனிருக்கும் மலரணை மேற் பளிக்கறையினூடே
திருவடி சேர்த்தருள்க எனச் செப்பிவருந்திடவும்
நானிருக்கும் குடிசையிலே வலிந்து நுழைந்தெனக்கே
நல்ல திருவருளமுதம் நல்கிய தன்றியும் என்
ஊனிருக்கும் குடிசையிலும் உவந்து நுழைந்தடியேன்
உள்ளமெனும் சிறு குடிசையுள்ளும் நுழைந்தனையே

(திருவருட்பா 3984)

## பாருயப் புரிகெனப் பணித்தெனக்கருளி என் ஆருயிர்க்குள் ஒளிர் அருட்பெருஞ்ஜோதி (198)

முன் வரியில் இறைவன் தானே வந்து தன்னை ஆட்கொண்டது தெரிவிக்கப்பட்டது. தன்னை ஆட்கொண்டது எதற்காக என இவ்வரியில் தெரிவிக்கின்றார்.

உலகத்து உயிர்கள் அனைத்தும் நல்வாழ்வு பெற்று உய்யுமாறு புரிவாயாக என எனக்கு ஆணையிட்டு, அவ்வாறு புரிவதற்குரிய அருளையும் கொடுத்து என் இனிய உயிரினுள் ஒளி விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**தேவியுற்று ஒளிர் தரு திருவுருவுடன் எனது**
**ஆவியிற் கலந்தொளிர் அருட்பெருஞ்ஜோதி** (200)

முன் வரியில் உயிரில் ஒளியுடன் கலந்து விளங்குகின்ற நிலை குறிக்கப்பட்டது. எப்படி வந்து கலக்க வேண்டும் என இவ்வரியில் கூறப்படுகின்றது,

தேவி = அருள் = கருணை

என் மீது கருணைகொண்டு எனக்கு அருள் புரிந்து ஒளி வீசக் கூடிய உனது (செஞ்சுடர்) வண்ணத்துடன் எனது ஜீவனில் கலந்து என்றும் ஒளி வீசிக் கொண்டிருப்பாயாக என் அருட்பெருஞ்ஜோதி.

**எவ்வழி மெய்வழி என்ப வேதாகமம்**
**அவ்வழி எனக்கருள் அருட்பெருஞ்ஜோதி** (202)

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே தங்களை அடைவதற்கு எந்த மார்க்கத்தை உண்மையான மார்க்கமாக வேதங்களும் ஆகமங்களும் கூறுகின்றனவோ அந்த வழியை எனக்குத் தெரிவித்து அருள்புரிவீராக.

வேதங்களிலும் ஆகமங்களிலும் உண்மை இருக்கின்றது என்பதற்கு ஆதாரம் :-

தோன்றிய வேதாகமத்தைச் சாலமென உரைத்தேம்
சொற்பொருளும் இலக்கியமும் பொய்யெனக் கண்டறியேல்
ஊன்றிய வேதாகமத்தின் உண்மை நினக்காகும்
உலகறி வேதாகமத்தைப் பொய்யெனக் கண்டுணர்வாய்
ஆன்ற திருவருட்செங்கோல் நினக்களித்தோம் நீயே
ஆள்க அருள் ஒளியால் என்றளித்த தனிச் சிவமே
ஏன்ற திரு அமுதெனக்கும் ஈந்த பெரும் பொருளே
இலங்கு நடத்தரசே என் இசையும் அணிந்தருளே

(திருவருட்பா 4177)

**வையமும் வானமும் வாழ்த்திட எனக்கருள்**
**ஐயறிவளித்த அருட்பெருஞ்ஜோதி** (204)

இதுவரை தெய்வத்தின் உண்மையை யாரும் உணர்ந்தாரில்லை. இறைவனை அறிந்து கொள்ளக்கூடிய அறிவை இறைவனே நம் திருவருட்பிரகாச வள்ளற் பெருமானுக்கு அளித்தான். அதனால் இறைவனை அறிந்து கொ்ணடார் வள்ளலார். இதனைக் கண்டு உலகத்திலுள்ள உயர்ந்த மக்களும் அதாவது சான்றோர்களும் அறிஞர்களும் வானுலகத்திலே இடம் பெற்றுள்ள பிரம்மா விஷ்ணு முதலியோரும் வள்ளற் பெருமானை வாழ்த்தினார்கள். போற்றினார்கள். இந்த உண்மையைத்தான் இங்கே எடுத்துரைக்கின்றார்.

வையம் என்பது உலகம்.
உலகம் என்பதோ உயர்ந்தோர் மாட்டே.
வானம் என்பது மேலுலகம்.
அங்கே இடம் பெற்றிருப்போர் பிரும்மா முதலியோர்.
ஆதாரம்:

வானிருக்கும் பிரமர்களும் நாரணரும் பிறரும்
மாதவம் பன்னாட் புரிந்து மணி, மாட நடுவே
தேனிருக்கும் மலரணைமேற் பளிக்கறையினூடே
திருவடி சேர்த்தருள்க எனச் செப்பி வருந்திடவும்
நானிருக்கும் குடிசையிலே வலிந்து நுழைந்தெனக்கே
நல்ல திருவருளமுதம் நல்கியதன்றியும் என்
ஊனிருக்கும் குடிசையிலும் உவந்து நுழைந்து அடியேன்
உள்ளமெனும் சிறு குடிசையுள்ளு நுழைந்தனையே
(திருவருட்பா 3984)

ஐந்து வயதிற்கு முன்னமேயே இறை உண்மை வள்ளலாருக்குத் தெரிந்தது என்பதற்கு ஆதாரம் :

வாலிபப் பருவம் தோன்றுவதற்கு முன்னரே எல்லா உயிர்கட்கும் இன்பம் தருதற்கு அகத்தும் புறத்தும் விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி உண்மைக் கடவுள் ஒருவரே உள்ளார் என்று

அறிகின்ற மெய்யறிவை விளக்குவித்தருளினிர்.
(பெருவிண்ணப்பம்)

இறைவனை அறியக்கூடிய அறிவை அளித்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே, உலகில் உள்ள உயர்ந்தோராகிய அறிஞர், சான்றோர் ஆகியோர் மட்டுமின்றி வானிலே இடம் பெற்றுள்ள பிரமர் முதலியோரும் என்னை வாழ்த்தும்படி எனக்கு அருள்புரிவீராக.

**சாமாறனைத்தும் தவிர்த்திங்கெனக்கே**
**ஆமாறருளிய அருட்பெருஞ்ஜோதி** (206)

மரணத்தை நோக்கி இழுத்துச் செல்லும் பாதைகள் அனைத்தினையும் அடியோடே நீக்கி (இங்கு) இந்த உலகிலேயே இந்தப் பிறப்பிலேயே என்றும் இறவாமல் வாழ்கின்ற வாழ்வை எனக்கே அருளிய அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : நெருநல் உளனொருவன் இன்றில்லை எனும்
பெருமை யுடைத்து இவ்வுலகு

என்பது குறள்.

நேற்றைய தினம் இருந்தான் - இன்றைய தினம் அவன் இல்லை எனும் பெருமை கொண்டது இவ்வுலகு எனத் திடீரென வரக்கூடிய மரணத்தைப் பற்றிய ஓர் எச்சரிக்கையை அளிக்கிறது இக்குறள். ஆனால் வள்ளலாரோ அதை மாற்றுகின்றார். எவ்வாறு எனில், நேற்று இருந்தான் இன்று இல்லை என்பதில் உள்ள இல்லை என்ற சொல்லை நீக்கி இன்று மட்டுமல்ல என்று கேட்டாலும் "ஆம்" இருக்கின்றார் என்றே கூறுமளவு சாவுக்குரிய வழிகளைத் தவிர்க்க வேண்டும் என்கிறார். என்று கேட்டாலும் அவரா - அவர் இல்லையே - இறந்து பட்டாரே என்று கூறாது - அவரா - ஆம் இருக்கின்றாரே என்றே கூற வேண்டுமாம். வள்ளலாரின் இந்த ஆசைக்கு ஆசீர்வாதத்திற்கு என்ன கைம்மாறு செய்ய இயலும்? இந்த அகவல் வரி வள்ளலார் பெற்ற அனுபவம் தான், ஏன் நாமும் அதனைப் பெற முயலக்கூடாது?

**சத்தியமாம் சிவ சத்தியை ஈந்தெனக்கு**
**அத்திறல் வளர்க்கும் அருட்பெருஞ்ஜோதி** (208)

முன்வரியில் என்று கேட்டாலும் இல்லை என்னாது ஆம் இருக்கின்றார் என்றே கூறுமளவு சாமாறைத் தவிர்த்த நிலை கூறப்பட்டது. தவத்தால் அந்நிலை சித்திக்கும் என்கிறது இந்த வரி.

சத்தியம் : உண்மை - என்றும் மாறாதது - அழியாதது.

சிவம் : மௌனம் - தவம்

சக்தி : ஆற்றல் திறல். வல்லபம்.

என்றும் அழியாமலும் மாறுபடாமலும் உண்மையாய் விளங்குகின்ற சக்தியை-வல்லபத்தை-ஆற்றலை தவத்தின் மூலமாக எனக்கு அளித்து அந்த ஆற்றலை மென்மேலும் வளர்க்கின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**சாவா நிலையிது தந்தனம் உனக்கே**
**ஆவா என அருள் அருட்பெருஞ்ஜோதி** (210)

தவத்தினால் பெற்ற ஆற்றல் முன் வரியில் கூறப்பட்டது.

சாகாத நிலை இது, என்று விளக்கி அப்படிப்பட்ட நிலையையும் உனக்கே தந்தேன் இது உனக்கே கைகூடும் என்று அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே எனக்கு அருள்புரிவீராக.

சாகாத கல்வியை ஆண்டவர் தெரிவித்தார் என்பதற்கு ஆதாரம் :

சாகாத தலையிது வேகாத காலாம்
தரமிது காண் எனத் தயவு செய்துரைத்தே
போகாத புனலையும் தெரிவித்தெனுளத்தே
பொற்புற அமர்ந்ததோர் அற்புதச் சுடரே
ஆகாத பேர்களுக்காகாத நினைவே
ஆகிய எனக்கென்றும் ஆகிய சுகமே
தாகாதல் எனத் தரும் தரும சத்திரமே
தனி நடராச என் சற்குரு மணியே (3691)

**சாதியும் மதமும் சமயமும் பொய்யென**
**ஆதியில் உணர்த்திய அருட்பெருஞ்ஜோதி** (212)

சாதி மதம் சமயம் முதலியனவெல்லாம் பொய்யென்றும் உண்மையல்லவென்றும் எனக்கு ஆரம்பத்திலேயே அறிவித்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**மயர்ந்திடேல் சிறிதும் மனந்தளர்ந்தஞ்சேல்**
**அயர்ந்திடேல் என்றருள் அருட்பெருஞ்ஜோதி** (214)

எதனாலும் திகைப்படையாதே - சிறிதுகூட மனம் தளர்வடையாதே எதைக் கண்டும் பயப்படாதே - எந்தச் செயலிலும் சோர்வடையாதே - என அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அருள்புரிவீராக.

குறிப்பு : முன் வரியில் சாவா நிலை இதுவென இறைவன் அறிவித்ததாக உணர்த்தப்பட்டது. அந்நிலையைப் பெறப்பாடுபடும்போது திகைப்படையவோ, சோர்ந்து தளர்ந்து போகவோ கூடாது என அறிவிக்கப் படுகின்றது.

**தேசுறத் திகழ்தரு திருநெறிப் பொருளியல்**
**ஆசறத் தெரித்த அருட்பெருஞ்ஜோதி** (216)

தேசு = ஒளி - பிரகாசம் - புகழ்

(ஊனுடம்பானது அழியாத) ஒளி நிலை பெற்று வாழ்கின்ற வாழ்வைத் தருகின்ற திருநெறியே நாம் அடைய வேண்டிய பொருள். அந்தப் பொருளின் தன்மை இதுவெனக் குற்றமற எனக்குத் தெரிவித்த அருட்பெருஞ்ஜோதி.

**காட்டிய உலகெலாம் கருணையால் சித்தியின்**
**ஆட்டியல் புரியும் அருட்பெருஞ்ஜோதி** (218)

அளவற்ற அண்டங்கள். அந்த அண்டங்களில் எண்ணற்ற உலகங்கள். ஈரேழு பதினான்கு லோகங்கள் என ஆன்மீகம் அறிவிக்கின்றது. எந்தெந்த உலகங்களில் உயிரினங்கள் வாழ்கின்றன என்பது ஆய்வுக்குரிய ஒன்றாக இருந்து வருகின்றது.

செவ்வாய்க் கிரகத்தில் உயிர்கள் வாழ வகை உள்ளது என ஆராய்ச்சியாளர்கள் கருத்து தெரிவிக்கின்றனர்.

எத்தனையோ உலகங்கள் இறைவனால் படைக்கப் பட்டிருந்தாலும் இன்னும் பல உலகங்கள் மனிதரால் காண முடியாத வகையில் உள்ளன. அந்த உலகங்கள் இறைவனால் மனிதருக்கு இன்னமும் காட்டப்படவில்லையாம். மனித உயிர்கள் வாழாத உலகங்களையும் காட்டப்படாத உலகங்களாகக் கருத இடம் உண்டு. மனித உயிர்கள் வாழ்கின்ற உலகங்களை மட்டும் காட்டிய உலகெலாம் எனக் கூறுகின்றார்.

சித்தியல் என்பது அக்கோள்களைச் சுழல வைத்து இரவு பகல் உண்டாக்குவது. காலந்தவறாது பருவ மழை பெய்விக்க வைப்பது - சூரிய வெப்பம் தோன்றுதலும் அதை இரவில் மறைய வைத்து வெப்பத்தைத் தணித்துக் குளிர வைப்பது - பருவ காலங்கள் கிரமமாக மாற்றமின்றித் தோற்றுவிப்பது - படைத்தல் முதல் ஐந்தொழில் புரிந்து அனைத்தினையும் செயல்பட வைத்திருத்தலையே சித்தியின் ஆட்டியல் என்கின்றார்.

காட்டப்பட்டுள்ள உலகங்களை அளவற்ற கருணையினாலே சித்துக்கள் புரிந்து அவற்றை இயக்குவித்து வருகின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**எங்குலம் எம்மினம் என்ப தொண்ணூற்றாறு**
**அங்குலம் என்றருள் அருட்பெருஞ்ஜோதி** (220)

என்னுடைய குலம் உயர்ந்தது என்னுடைய இனம் உயர்ந்தது என்றெல்லாம் ஜாதி, மத, இன, பேதம் பேசி இழிவோர்க்கு ஒரு பொது உண்மை இன்னதென இந்த வரியில் உணர்த்துகின்றார். யாவராயினும் (உயர்ந்தோர் அல்லது தாழ்ந்தோராகச் சொல்லப்படுவோர்) அவரவர் உடம்பு அவரவர் கைக்கு எட்டு ஜாண் (அதாவது தொண்ணூற்றாறு விரற்கடை அளவேயாகும்) (ஓர் அங்குலம் என்பது ஒரு விரற்கடை அளவே என முன்னோர் வகுத்துள்ளனர்) அளவே என்ற விவேகத்தை

உணர்த்தி அனைவரும் ஆண்டவன் படைப்பில் சமமே என்று உணரும்படி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அருள்புரிவீராக.

**எம்மதம் எம் இறை என்ப உயிர்த்திரள்**
**அம்மதம் என்றருள் அருட்பெருஞ்ஜோதி** (222)

இந்த உலகத்தைப் படைத்தவர் பிரும்மா என்று இந்துக்கள் கூறுகின்றார்கள். மகம்மதியர்கள் அல்லாதான் படைத்தார் என்று பேசுகின்றார்கள். கிறித்தவர்களோ பரமபிதா படைத்தார் என்கின்றார்கள். இருப்பதோ இந்த ஒரே ஓர் உலகம். ஒவ்வொரு மதத்தவரும் தங்கள் கடவுள்தான் இந்த உலகத்தைப் படைத்ததாகக் கூறுகின்றனர். இதைச் சற்று சிந்தித்தால் ஓர் உண்மை புரியும். இந்த உலகத்தை ஒருவர் படைத்தார். அந்த ஒருவரை இந்துக்கள் பிரம்மா என்றும், மகம்மதியர்கள் அல்லா என்றும், கிறித்தவர்கள் பரமபிதா என்றும் கூறுகிறார்கள். அதாவது எல்லாப் பெயர்களும் எவர் இந்த உலகத்தைப் படைத்தாரோ அந்த ஒருவரைத் தான் குறிக்கின்றன. இந்தப் பேருண்மையை ஒவ்வொரு மதத்தவரும் புரிந்து கொண்டால் ஜாதி மத இன பேதம் ஒழிந்து விடும். ஒவ்வொரு மதத்தவரும் நினைப்பது போல் தனித்தனியாகத் தெய்வங்கள் இல்லை. எல்லோருக்கும் பொதுவாக இருப்பது ஒரே ஒரு பரம்பொருள்தான். எல்லா இனத்தவரும் எல்லா மதத்தவரும் நம்புவதும், போற்றுவதும், வணங்குவதும் அந்த ஒரே ஒரு பரம்பொருளையே ஆகும்.

எந்தெந்த மதத்தைச் சார்ந்த மக்களும் எமது கடவுள் என்று எந்தக் கடவுளைச் சொல்கின்றார்களோ அந்தக் கடவுளாக அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே நான்தான் விளங்குகின்றேன் என்று விளக்கி அருள்புரிவீர்களாக.

எல்லாப் பெயர்களும் ஒரு கடவுளையே குறிக்கும் என்பதற்கு ஆதாரம் :

பெருகிய பேரருளுடையார் அம்பலத்தே நடிக்கும்
பெருந்தகை என் கணவர் திருப்பேர் புகல் என்கின்றாய்
அருகர் புத்தர் ஆதி என்பேன் அயன் என்பேன் நாரா
யணன் என்பேன் அரன் என்பேன் ஆதி சிவன் என்பேன்
பருகு சதாசிவம் என்பேன் சக்தி சிவம் என்பேன்
பரமமென்பேன் பிரமமென்பேன் பரப்பிரமமென்பேன்
துருவு சித்த பிரமமென்பேன் துரிய நிறைவென்பேன்
சுத்த சிவமென்பேன் இவை சித்து விளையாட்டே (5801)

இந்த உண்மை புரியாது பலப்பல தெய்வங்கள் உண்டென்று எண்ணுவோர் (அறிவு) அருள் விளக்கம் இல்லாதவர்கள் என்கிறது திருவருட்பா.

தெய்வங்கள் பலபல சிந்தை செய்வாரும்
சேர்கதி பலபல செப்புகின்றாரும்
பொய்வந்த கலை பல புகன்றிடுவாரும்
பொய்ச் சமயாதியை மெச்சுகின்றாரும்
மெய்வந்த திருவருள் விளக்கமொன்றில்லார்
மேல்விளைவறிகிலர் வீண் கழிக்கின்றார்
எய்வந்த துன்பொழித்து அவர்க்கறிவு அருள்வீர்
எனைப் பள்ளி எழுப்பி மெய்யின்பந்தந்தீரே (4726)

**கூறிய கருநிலை குலவிய கீழ்மேல்**
**ஆறியல் எனவுரை அருட்பெருஞ்ஜோதி** (224)

இறைவன் என்பவன் அனைவர்க்கும் பொதுவாக ஒருவனே உள்ளதால் எல்லா மக்களும் எந்தப் பெயரைச் சொல்லி வணங்கினாலும் அந்தத் தெய்வமாக அருட்பெருஞ்ஜோதி ஒன்றே விளங்குகின்றது என்று முன் வரியில் கூறப்பட்டது. இந்த வரியில் உயிர்த்திரள் எவ்வாறு விளங்குகின்றது என்று கூறப்படுகின்றது.

ஜீவன்கள் ஓரறிவுள்ள தாவரம் முதல் ஐந்தறிவுள்ள மிருகங்களாயும் ஆறறிவுள்ள மனிதராயும் பிறவி எடுக்கின்றன. இவற்றில் ஐந்தறிவுள்ள மிருகங்கள் வரை தாழ்ந்த பிறவி என்றும் ஆறாவது அறிவுள்ள மனிதப் பிறவியை மட்டும் உயர்ந்த பிறவி என்றும் வகுத்து வைத்துள்ளனர்.

ஜீவன்களின் நிலையானது தாழ்ந்த பிறவி என்றும் மேலான பிறவி என்றும் ஓரறிவுள்ளவை முதல் ஆறறிவு உள்ளவரை ஆறுவகையாக வகுத்துள்ள அருட்பெருஞ்ஜோதி.

**எண் தர முடியா திலங்கிய பற்பல**
**அண்டமும் நிறைந்தொளிர் அருட்பெருஞ்ஜோதி** (226)

இந்தப் பரந்த வெளியிலே எத்தனை அண்டங்கள் உள்ளன என்பதை யாராலும் கணக்கிட முடியாது. அவ்வாறு எண்ணிக்கைக்கு அடங்காததாய் உள்ள அண்டங்கள் அனைத்திலும் நிறைந்து ஒளிமயமாய் விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

அண்டங்கள் அனைத்திலும் நிறைந்துள்ளதற்கு மேலுமோர் ஆதாரம் :

அண்டவகை எவ்வளவோ அவ்வளவும் அவற்றில்
அமைந்த உயிர் எவ்வளவோ அவ்வளவும் அவைகள்
கண்ட பொருள் எவ்வளவோ அவ்வளவும் அவற்றில்
கலந்த கலப்பு எவ்வளவோ அவ்வளவும் நிறைந்தே
விண்டகுமோர் நாதவெளி சுத்த வெளி மோனவெளி
ஞானவெளி முதலாம் வெளிகளெல்லாம் நிரம்பிக்
கொண்டதுவாய் விளங்குகின்ற சுத்த சிவ மயமே
குலவு நடத்தரசே என் குற்றமும் கொண்டருளே.
(திருவருட்பா 4169)

**சாருயிர்க்கெல்லாம் தாரகமாம் பரை**
**ஆருயிர்க்குயிராம் அருட்பெருஞ்ஜோதி** (228)

முன் வரியில் இறைவன் அண்டங்கள் அனைத்திலும் நிறைந்து விளங்குவது குறிப்பிடப்பட்டது.

அப்படி நிறைந்து விளங்கும் இறைவனைச் சார்கின்ற உயிர்கள் அனைத்தினுக்கும் பரையாகிய மாயை ஆதாரமாக விளங்கும். பரை என்பது மனதிலே விளங்குவது. இறைவனைச் சாராத உயிர்களைப் பரை தன்வசம் வைத்துக் கொண்டு உலகாயதத்திலேயே உழலச் செய்யும் எனத் தோன்றுகின்றது.

ஆனால் இறைவனைச் சார்ந்த உயிர்களைப் பரையாகிய மாயை அசைக்க முடியாததால் அவர்கட்கு மாயையே ஆதாரமாய் விளங்கும். அப்படிப்பட்ட உயிர்கட்கு இறைவா அருட்பெருஞ்ஜோதியே நீயும் உயிர்க்குயிராய் விளங்குகின்றாய்.

குறிப்பு : பரை மனதை இடமாக் கொள்ளும் என்பதற்கு ஆதாரம்

பரை ஒளி என் மனப் பதியினில் விரித்தே
அரைசது இயற்றெனும் அருட்பெருஞ்ஜோதி

இறைவன் உயிர்க்குயிராய் விளங்குவதற்கு ஆதாரம்

என்னுயிர் நீ என் உயிர்க்கோர் உயிரும் நீ என்
இன்னுயிர்க்குத் துணைவன் நீ என்னை ஈன்ற
அன்னை நீ என்னுடைய அப்பன் நீ என்
அரும்பொருள் நீ என் இதயத்தன்பும் நீ என்
நன்னெறி நீ எனக்குரிய உறவு நீ என்
நற்குரு நீ எனைக் கலந்த நட்பு நீ என்
தன்னுடைய வாழ்வு நீ என்னைக் காக்கும்
தலைவன் நீ கண் மூன்று தழைத்த தேவே

(திருவருட்பா 2138)

**வாழி நீடூழி வாழி என்று ஓங்கு பேர்**
**ஆழியை அளித்த அருட்பெருஞ்ஜோதி** (230)

வாழி-ஊழி வந்தாலும் அழியாது மேலும் நீண்டு வாழ்வாயாக என வாழ்த்தி எனைச் சிறப்புற ஓங்குவிக்கும் ஒப்பற்ற மோதிரம் அளித்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு : ஆழி என்பதற்கு விரலில் அணிந்து கொள்ளும் மோதிரம் என்றும் கடல் என்றும் பொருள். திருமணம் செய்து கொள்கின்ற வகைகளில் காந்தருவ மணம் என்பதும் ஒன்று. அந்த வகைத் திருமணத்தில் தலைவியைத் தான் மணந்து கொண்டதற்கு அடையாளமாகப் பெண்ணின் விரலில் தலைவன்

மோதிரத்தை அணிவிப்பான். இந்தக் காந்தருவ விவாகமானது பலரறிய நடத்தப் பெறுவதல்ல. தலைவனும் தலைவியும் மட்டுமே இரகசியமாக நடத்திக்கொள்வது.

இறைவன் தன்னை அவ்வாறு இரகசியமாக மணந்து கொண்டான் என்பதை ஆழி அளித்தான் என்று நம் பெருமான் கூறுகின்றார்.

**மாய்ந்தவர் மீட்டும் வருநெறி தந்து இதை**
**ஆய்ந்திடு என்றுரைத்த அருட்பெருஞ்ஜோதி** (232)

இறந்தவர் மீள்வதில்லை என்பது ஒரு பொதுவான உண்மை. ஞானிகளால், அருள்பெற்ற சித்தர்களால் இறந்தோரை எழுப்ப இயலும். சைவ சமயத்தில் திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்தி நாயனார் ஆகிய மூவருமே இறந்தாரை எழுப்பியுள்ளனர் எனப் பெரிய புராண நூல் கூறுகின்றது. இறந்தோர் மீள வருவது எங்காயினும் உண்டா என்று முடிவெடுப்பது உலகியலார் இயல்பு. ஆனால் இறந்தவரை மீண்டும் உயிர் பெற்று வரவழைக்கக்கூடிய நெறி ஒன்று அளித்து இதன் உண்மையை ஆய்வு செய்திடு என்று உரைத்த அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : இறந்தாரை எழுப்பும் ஆற்றலை வள்ளலார் பெற்றதற்கு ஆதாரம்

துஞ்சாத நிலை ஒன்று சுத்த சன்மார்க்கச்
சூழலில் உண்டது சொல்லளவன்றே
எஞ்சாத அருளாலே யான் பெற்றுக் கொண்டேன்
இறந்தாரையெல்லாம் எழுப்புதல் வல்லேன்
விஞ்சாத அறிவாலே தோழி நீ இங்கே
வேதுசெய் மரணத்துக்கெது செய்வோமென்றே
அஞ்சாமல் என்னோடே ஆடேடி பந்து
அருட்பெருஞ்ஜோதி கண்டாடேடி பந்து (4959)

யான் புரிதல் வேண்டுங்கொல் இவ்வுலகில் செத்தாரை
ஊன் புரிந்து மீள உயிர்ப்பித்தல் - வான்புரிந்த
அம்பலத்தான் நல்லருளால் அந்தோ நான் மேற்போர்த்த
கம்பலத்தால் ஆகுங்களித்து.

(திருவருட்பா 5525)

**எச்சம் நினக்கிலை எல்லாம் பெறுக என்று**
**அச்சம் தவிர்த்த என் அருட்பெருஞ்ஜோதி** (234)

எச்சம் என்பதின் பொருள் மீதம். அதாவது பெற வேண்டியது இன்னமும் முழுமையடையவில்லை - சிறிது மீதம் இருக்கின்றது என்றில்லாமல் மீதம் ஏதும் இல்லை உனக்கு - அனைத்தினையும் குறைவின்றி முழுமையாகப் பெற்றுக் கொள் என்று கூறி எனது பயத்தையும் நீக்கிய என்னுடைய அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு : வள்ளலார் அனைத்தினையும் முழுமையாகப் பெற்று மன நிறைவு அடைந்ததற்கு ஆதாரம்

கட்டமும் கழன்றேன் கவலை விட்டொழித்தேன்
கலக்கமும் தீர்ந்தனன் பிறவிச்
சட்டமும் கிழித்தேன் தூக்கமுந் துறந்தேன்
சாவையும் நோவையும் தவிர்ந்தேன்
சிட்டமுமடைந்தேன் சிற்சபையுடையான்
செல்வ மெய்ப் பிள்ளை என்றொரு பேர்ப்
பட்டமும் தரித்தேன் எனக்கிது போதும்
பண்ணிய தவம் பலித்ததுவே.

(திருவருட்பா 4736)

**நீடுக நீயே நீளுலகனைத்தும் நின்று**
**ஆடுக என்ற என் அருட்பெருஞ்ஜோதி** (236)

காலமுள்ளளவும் அழியாது நீண்ட வாழ்வு பெறுவாயாக. நீண்ட காலம் உள்ள இந்த உலகனைத்திலும் மற்றவை எல்லாம் அழிந்தாலும் நீ மட்டும் அழியாது நின்று மனம்போல அருள் விளையாட்டு ஆடுவாயாக என்ற என்னுடைய அருட்பெருஞ்ஜோதி.

ஆதாரம் :

துதி செயும் முத்தரும் சித்தரும் காணச்
சுத்த சன்மார்க்கத்தில் உத்தம ஞானப்
பதி செயும் சித்திகள் பற்பலவாகப்
பாரிடை வானிடைப் பற்பல காலம்
விதி செயப் பெற்றனன் இன்று தொட்டென்றும்
மெய்யருட் ஜோதியால் விளைவிப்பன் நீ அவ்
வதிசயம் பார்க்கலாம் ஆடேடிபந்து
அருட்பெருஞ்ஜோதி கண்டாடேடிபந்து

(திருவருட்பா 4961)

**முத்திறல் வடிவமும் முன்னியாங்கெய்துறும்**
**அத்திறல் எனக்கருள் அருட்பெருஞ்ஜோதி** (238)

சுத்த தேகம், பிரணவ தேகம், ஞான தேகம் ஆகிய முத்தேக சித்திகளையும் முயற்சியின் பயனாக அவற்றை அடையக் கூடிய பேராற்றலை அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே எனக்கு அருள்வீராக.

குறிப்பு : முத்தேக சித்திகளையும் அவர் பெற்றார் என்பதற்கு ஆதாரம்

நானே தவம் புரிந்தேன் நம்பெருமான் நல்லருளால்
நானே அருட்சித்தி நாடடைந்தேன் - நானே
அழியா வடிவம் அவை மூன்றும் பெற்றேன்
இழியாமல் ஆடுகின்றேன் இங்கு.

(திருவருட்பா 5513)

சுத்தவடிவும் சுகவடிவாம் ஓங்கார
நித்த வடிவும் நிறைந்தோங்கு - சித்தெனுமோர்
ஞானவடிவுமிங்கே நான் பெற்றேன் எங்கெங்கும்
தான விளையாட்டியற்றத்தான்

(திருவருட்பா 5503)

**மூவகைச் சித்தியின் முடிபுகள் முழுவதும்**
**ஆவகை எனக்கருள் அருட்பெருஞ்ஜோதி** (240)

கரும சித்தி, யோக சித்தி, ஞான சித்தி ஆகிய மூன்று வகையான சித்திகளின் செயல்பாடுகள், விளைவுகள் எவ்வளவு உண்டோ அவைகள் அனைத்தினையும் முழுவதுமாக எனக்குக் கைவரும்படி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அருள்புரிவீராக.

சித்திகள் பெற்றதற்கு ஆதாரம்

அருட்பெருஞ்ஜோதி என் அகத்தில் ஓங்கின
மருட்பெருந்திரையெலாம் மடிந்து நீங்கின
இருட்பெருமலமுதல் யாவும் தீர்ந்தன
தெருட்பெருஞ்சித்திகள் சேர்ந்த என்னையே

(திருவருட்பா 5400)

**கரும சித்திகளின் கலை பல கோடியும்**
**அரசுற எனக்கு அருள் அருட்பெருஞ்ஜோதி** (242)

கருமசித்தி என்பது

1. அணிமா : துரும்பை மேருவாக்குகின்றது
2. மகிமா : மேருவைத் துரும்பாக்குகின்றது
3. கரிமா : மேருவை ஒன்றுமில்லாமல் செய்கின்றது
4. லகிமா : ஒன்றுமில்லாத இடத்தில் அனேகங்களாகச் செய்கிறது
5. பிராத்தி : வேண்டுவன அடைதல்
6. ஈசத்துவம் : குளிகை வல்லபத்தால் எங்கும் செல்லுகிறது
7. பிரகாமியம் : பரகாயப் பிரவேசம்
8. வசித்துவம் : எழுவகைத் தோற்றமாகிய தேவ, மனுஷ்ய, நரக, மிருக, பக்ஷி, ஊர்வன, விருக்ஷம் முதலியவற்றைத் தன் வசப்படுத்துகிறது

தேகத்தைக் கல்ப சித்தி செய்து கொள்ளுதல், அபரமார்க்கி, சதாசிவானந்த அனுபவம், சதாசிவ காலம் வரை பிரேதத்தை உயிர்ப்பித்தல். சித்தி காலம் 3¾ நாழிகை முதல் 3¾ வருஷத்திற்குள்.

கரும சித்திகளின் பல கோடிக்கணக்கான விரிவுகளும் என் வசமாக்கி அவற்றை நான் என் ஆணைப்படி நடத்துமாறு அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அருள்புரிவீராக.

குறிப்பு : கரும சித்தி விளக்கம் - திருவருட்பா உரைநடை. பக்கம் 514 (வர்த்தமானன் பதிப்பு 1997)

**யோக சித்திகள் வகையுறு பல கோடியும்**
**ஆக என்றெனக்கருள் அருட்பெருஞ்ஜோதி** (244)

யோக சித்தி : 64 சித்திகளையும் தன் சுதந்தரத்தில் நடத்துகின்றது. சங்கல்ப குளிகை, பிராண கல்பதேகி, பிரம காலம், பராபரமார்க்கி, சித்திகாலம் 12 ஆண்டு முதல் 108 வருஷத்திற்குள்; புதைத்த தேகத்தை நாசமடையா முன் உயிர்ப்பித்தல்.

இந்த யோக சித்தியின் வகை பல கோடி உள்ளன. அவையனைத்தும் யான் பெறும்படி என்னை ஆசீர்வதித்து அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே எனக்கு அருள்புரிவீராக.

**ஞான சித்தியின் வகை நல்விரிவனைத்தும்**
**ஆனியின்றெனக்கருள் அருட்பெருஞ்ஜோதி** (246)

ஞானசித்தி :- அறுபத்து நாலாயிரம் சித்திகளையும், தன் சுதந்தரத்தில் நடத்துகின்றது. 647 கோடியாகிய, 688 கோடி பேதமாகிய மகா சித்திகளையும், தன்னிஷ்டம் போல நடத்துகிறது. காலம் கடந்தது. அடி நிலை, முடி நிலை, சுத்த கர்ம, சுத்த யோக, சுத்த ஞான சித்தி வல்லபங்களைத் தன் சுதந்தரத்தால் நடத்துகிறது.

இந்த ஞான சித்தியின் விரிவுகளோ பலவாய் உள்ளன. அந்த விரிவுகளனைத்தினையும் சிறிதும் பழுதின்றி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே எனக்கு அருள்புரிவீராக.

**புடையுறு சித்தியின் பொருட்டே முத்தியை**
**அடைவது என்றருளிய அருட்பெருஞ்ஜோதி** (248)

இதுவரை ஆன்மீகத் துறையிலே முத்தி இன்பமே மனித குலம் அடைய வேண்டிய முடிவான பேறு என்ற கருத்து நிலவுகின்றது. ஆனால் நம் பெருமானாரோ சித்தி என்பதே முடிவான நிலை என்றும் அதற்கு முந்திய அனுபவ நிலையே முத்தி என்றும் வகுத்துத் தருகின்றார்.

மேலோங்கிய நிலையில் அடைய வேண்டிய சித்தி அனுபவ நிலை பற்றியே முத்தியை அடைவது என்று எனக்கு விளக்கி அருளிய அருட்பெருஞ்ஜோதி.

ஆதாரம் : முத்தியைப் பெற்றேனம் முத்தியினால் ஞான
சித்தியை யுற்றேனென்றுந்தீபற
சித்தனுமானேனென்றுந்தீபற

## முத்தி என்பது நிலை முன்னுறு சாதனம்
## அத்தக என்ற என் அருட்பெருஞ்ஜோதி (250)

முன் வரியில் சித்தி பெறும் பொருட்டு முத்தியை அடைய வேண்டும் என்று கூறப்பட்டது. இந்த வரியில் முத்தியின் நிலை கூறப்படுகின்றது.

முத்தி என்பது முடிந்த முடிபான சித்தி நிலை அனுபவத்தைப் பெறுவதற்கு முன் தோன்றும் அனுபவமாகும். சித்தி அனுபவத்தைப் பெறுவதற்கு அது ஒரு சாதனம் என்று எனக்கு உணர்த்திய என் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு : சித்தி என்பது நிலை என்றும்,முத்தி என்பது அந்த நிலையை அடைவதற்குரிய சாதனம் என்றும் இந்த வரியில் விளக்கப்பட்டுள்ளது. சாதனம் என்பது நாம் கொள்ள வேண்டிய நெறியாகும். சாதனையின்றிச் சாதிப்பாரில்லை என்பது ஆன்றோர் வாக்கு. நிலைக்கும் நெறிக்கும் வேறுபாடுண்டு.

இறைவனை நாம் விடாது பற்றுவது நெறி :
இறைவன் நம்மை விடாது காப்பது நிலை.

ஆதாரம் : தெய்வ மணி மாலையில் ஈயென்று நான் ஒருவரிடம் நின்று கேளாத இயல்பும் ............. என்ற திருஅருட்பா
நீ என்றும் எனைவிடா நிலையும்
நான் என்றும் உள் நினைவிடா நெறியும் . . . . . .

## சித்தி என்பது நிலை சேர்ந்த அனுபவம்
## அத்திறல் என்ற என் அருட்பெருஞ்ஜோதி (252)

இறைவன் நம்மைக் காக்கின்ற நிலையைச் சேர்ந்த அனுபவம் எதுவோ அதுவே சித்தி என்பது. பரலோகத்தில் இருக்கும் இறைவனுடன் இந்த உடம்பை விட்டுப் பிரிந்த ஜீவனானது கலப்பதே ஒரு மனிதன் அடைய வேண்டிய முடிவான பேறு என்றும் அதுவே மீண்டும் பிறவா நிலை என்றும் இதுவரை ஆன்மீகத்தில் கூறியதும், மக்கள் அறிந்ததும் ஆகும். ஆனால் திருவருட்பிரகாச வள்ளற் பெருமானாரோ இக்கருத்தை ஏற்காமல்

மறுப்பவரானார். உடம்பை விட்டால் ஜீவன் தனித்து இயங்காது என்றும், எந்தக் கல்பத்தில் உடம்பு நஷ்டமடைகின்றதோ (மரணம்) அந்தக் கற்பகாலம் வரை அந்த ஜீவனானது மண்ணில் மறைந்திருக்கும். பின்னர் மாயையின் சிருஷ்டியால் முன் செய்த கர்ம வினைக்கேற்பப் பிறவி எடுக்கும் என்கின்றார். இந்த உடம்பு உள்ளபோதே இறைவனை அறிந்து அடைவது தான் சன்மார்க்கம் காட்டும் வழி. அதாவது இகத்தே பரத்தைப் பெற்று மகிழ்வது. இந்த உடம்பில் இறைவன் வந்து கலப்பதால் இந்த உடம்பானது என்றும் அழியா நிலை பெற்று விளங்கும். இறைவனுக்குரிய அத்தனை ஆற்றல்களையும் இவர் பெறுவர். சுருங்கக் கூறின் கடவுளாகவே இவரும் விளங்குவர். இதுவே சித்தி.

இறைவன் கலந்து காக்கும் நிலையே சித்தி என்று கூறி அப்பெரும் பேறு வாய்க்கும் என்று அருளிய என் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

ஆதாரம் : முத்தியைப் பெற்றேன் அம் முத்தியினால் ஞான
சித்தியை யுற்றேன் என்றுந்தீ பற
சித்தனுமானேனென்றுந்தீ பற.

**ஏக சிற்சித்தியே இயலுற அனேகம்**
**ஆகியது என்ற என் அருட்பெருஞ்ஜோதி** (254)

சிற்சபையில் ஏற்படக் கூடிய இந்த ஒன்றேயாகிய சித்தி அனுபவமே செயல்படும்போது பேராற்றல் பெற்று அனேகமாக விளங்குகின்றது என்று விளக்கிய எனது அருட்பெருஞ்ஜோதி.

**இன்ப சித்தியின் இயல் ஏகம் அனேகம்**
**அன்பருக்கு என்ற என் அருட்பெருஞ்ஜோதி** (256)

அன்பர் என்பது பொருள் புகழாதியைக் குறித்துப் பயில்வோரை நீக்கிச் சிவானந்தம் எந்நாள் அடைதும் என்று இடைவிடாது அதனையே விரும்பிப் பயில்வோரைக் குறித்தது என்றுணர்க.

(பக் 217 - ஒழிவிலொடுக்கப் பாயிர விருத்தி)

தவமாகிய அகப்பணிபுரிந்து இறையருள் வல்லபத்தால் எதையும் புரியக்கூடிய ஆற்றல் பெற்றோர் பிறருக்கு இன்பம் தரக்கூடிய சித்திகள் மட்டுமே புரிவர். அந்த இன்ப சித்தி ஒன்றல்ல மிகப்பல என்ற என் அருட்பெருஞ்ஜோதி.

**எட்டிரண்டென்பன இயலுமுற்படி என**
**அட்ட நின்றருளிய அருட்பெருஞ்ஜோதி** (258)

முன் வரியில் தவம் புரிவோர் ஆற்றக் கூடிய சித்தி வல்லபம் பேசப்பட்டது. தவம் என்றாலே அந்த எட்டையும் இரண்டையும் மறக்க முடியுமா?

எட்டு என்பது தமிழில் " அ " என்ற எண்ணாகும். இரண்டு என்பது தமிழில் உ என்ற எண்ணாகும்.

எட்டு என்பது " அ " என்ற எழுத்தைக் குறிக்கும். "அ" என்பது " அகாரம் " எனப்படும். அகாரம் என்பது ஜீவனைக் குறிக்கும். இரண்டு என்பது "உ" என்ற எழுத்தைக் குறிக்கும் "உ" என்பது "உகாரம்" எனப்படும். "உகாரம்" என்பது "பரமாகிய" இறைவனைக் குறிக்கும் அகாரம் ஜீவன் என்பதற்கும் உகாரம் பரம் என்பதற்கும் ஆதாரம்.

அகாரம் உயிரே உகாரம் பரமே
மகாரம் மலமாய் வருமுப்பதத்தில்
சிகாரம் சிவமாய் வகாரம் வடிவமாய்
அகாரம் உயிரென்று அறையலுமாமே

(திருமந்திரம் - 4ம் தந்திரம் - பாடல் 12)

ஜீவனாகிய உயிரையும் இறைவனாகிய பரத்தையும் (முழுமையாக) அறிந்து கொள்வதே முதல்படி ஆகும் என ஞான நிலையிலேயே நின்று அருளிய அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**இப்படி கண்டனை இனியுறு படியெலாம்**
**அப்படியே எனும் அருட்பெருஞ்ஜோதி** (260)

ஆரம்பமாகிய எட்டையும் இரண்டையும் இன்னதென எப்படி அறிந்து கொண்டாயோ இனி வர வேண்டிய அனுபவ

நிலைகளெல்லாம் அவ்வாறே அறிந்துகொள் என்ற அருட்பெருஞ்ஜோதி.

**படி முடி கடந்தனை பாரிது பார் என**
**அடி முடி காட்டிய அருட்பெருஞ்ஜோதி.** (262)

| | | | |
|---|---|---|---|
| பிரும்மா | - | தொப்புளுக்கும் கீழே | பூத நிலை |
| விட்டுணு | - | தொப்புள் | |
| ருத்ரன் | - | இருதயம் | |
| மகேஸ்வரன் | - | கண்டம் | |
| சதாசிவன் | - | அண்ணா | |
| விந்து | - | புருவமத்தி | |

| | |
|---|---|
| நாதம் | ஆன்மானுபவ நிலை |
| பரவிந்து | |
| பரநாதம் | |
| திக்கிராந்தம் | |
| அதிக்கிராந்தம் | |
| சுத்தசிவம் | |
| அதீதம் | |

தவம் மனதை இழுத்துப் புருவ மத்தியில் நிற்கச் செய்வதில் தொடங்கி மேலே கூறப்பட்டுள்ள அனுபவப் படிகளில் ஏறி அதீத நிலைக்கு வர வேண்டும். அந்த அனுபவ நிலைப் படிகள் 43 என்று நம் பெருமானார் கூறுவார்.

ஆரம்பப் படியாகிய எட்டிரண்டில் தொடங்கிய நீ ஒவ்வொரு படியாகக் கடந்து முடிவான படியையும் (அதீதம்) கடந்து விட்டாய். இனி பார் நீ என உன்னுடைய அடி முடி அனைத்தினையும் காட்டிய அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு : இங்கே இறைவனின் அடி முடி என்ன என்பதைத் திருவருட்பாவின் துணை கொண்டு மட்டும் காண்போம்.

பிரும்மாவாலும் விட்டுணுவாலும் காண முடியாத அடி முடியை நம் பெருமானார் கண்டார். அவர்களால் ஏன் காண முடியவில்லை? புராணத்தில் கூறியுள்ளபடி அவர்கள் இறைவனைப் புறத்தே தேடினார்கள். பொதுவாகிய சிற்றம்பலத்தில் தேடாது புறத்தே தேடினால் தோன்றாது.

ஆதாரம் : பொதுவுணர் உணரும் போதலால் பிரித்தே
அது எனில் தோன்றா அருட்பெருஞ்ஜோதி (அகவல்)

அவ்வாறெனில் அகத்தே அடி முடி எவ்வாறு தோற்றமளிக்கும்?

தவத்தின் முடிவான அனுபவத்தை அனுபவ மாலைப் பாட்டு ஒன்றில் தெளிவாகத் தருகின்றார்.

பொறிகளும், புலன்களும் செயல்படாது அடங்கிய நிலையில் அசையாத சித்திரம் போல் தவம் செய்வோர்க்குப் பரநாத நிலை அனுபவத்தில் அண்ட பகிரண்டம் தோற்றறியாத பெருஞ்ஜோதி மலை ஒன்று தோன்றுமாம். பின்னர் அந்தப் பெருஞ்ஜோதியின் நடுவே பொன்னொளி காட்சியாகுமாம். முடிவாக அந்தப் பொன்னொளியின் நடுவே செவ்வொளி ஒன்று தோன்றுமாம். அந்தச் செவ்வொளிதான் கடவுள். அந்தச் செவ்வொளி இந்தத் தூல உடலுடன் கலப்பதைத்தான் இறைவனுடன் இரண்டறக் கலந்ததாகச் சொன்னது.

பெருஞ்ஜோதி காட்சிப் பொருளே அது சிற்சபை.
பொன்னொளியும் காட்சிப் பொருளே அது பொற்சபை

அதன் நடுவே தோன்றிய செவ்வொளியே கடவுள்.

இதை விளக்குவதற்காகவே இறைவனை ஜோதியுட் ஜோதியுட் ஜோதி என்றார் வள்ளலார்.

முச்சுடர் தோற்றத்திற்கு ஆதாரம்:-

ஈற்றறியேன் இருந்திருந்திங் கதி சயிப்பதென் நீ
என்கின்றாய் நீ எனைவிட்டேகுதொறும் நான் தான்
காற்றறியாத் தீபம் போல் இருந்திடும் அத்தருணம்
கண்ட பரிசென்புகல்வேன் அண்ட பகிரண்டம்
தோற்றறியாப் பெருஞ்ஜோதி மலை பரநாதத்தே
தோன்றியதாங்கதனடுவே தோன்றிய தொன்றதுதான்
மாற்றறியாப் பொன்னொளியோ அவ்வொளிக்குள்ளாடும்
வள்ளல் அருளொளியோ ஈததிசயிக்கும் வகையே (5767)

பெருஞ்ஜோதி காட்சிப் பொருளே என்பதற்கு ஆதாரம் :

திருக்கதவம் திறவாயோ திரைகளெல்லாம் தவிர்த்தே
திருவருளாம் பெருஞ்ஜோதித் திருவுருக் காட்டாயோ
(திருவருட்பா 3760)

பொன்னொளியும் காட்சிப் பொருளே என்பதற்கு ஆதாரம் :

மணிக்கதவம் திறவாயோ மறைப்பையெலாம் தவிர்த்தே
மாற்றறியாப் பொன்னே நின் வடிவது காட்டாயோ
(திருவருட்பா 3761)

மூன்றாவது ஒளியே கலக்கும் என்பதற்கு ஆதாரம்
உரை கடந்த திருவருட்பேர் ஒளிவடிவைக் கலந்தே.
(திருவருட்பா 3762)

அடி என்பது ஆரம்பம் - அதாவது பரநாதத்தே தோன்றிய பெருஞ்ஜோதி

நடு என்பது இடை - அதாவது பெருஞ்ஜோதி நடுவே தோன்றிய பொற்ஜோதி

முடி என்பது கடை - அதாவது பொற் ஜோதி நடுவே தோன்றிய செவ்வொளி

இறைவனின் அடி அதாவது ஜோதிக் காட்சியின் ஆரம்பம் பெருஞ்ஜோதி

இறைவனின் நடு என்பது பொன்னொளி
இறைவனின் முடி என்பது செவ்வொளி

இதன் தொடர்பான அடுத்த வரி இந்தக் கருத்தை நிரூபிப்பதைக் காணலாம்.

**ஜோதியுட் ஜோதியின் சொரூபமே அந்தம்**
**ஆதி என்றருளிய அருட்பெருஞ்ஜோதி** (264)

முன் வரியில் அடி முடி காட்டியது கூறப்பட்டது. அடி என்பது ஆரம்பம் - முடி என்பது முடிவு - ஆதி என்பது ஆரம்பம்

- அந்தம் என்பது முடிவு - எனவே அடி என்பது ஆதி - முடி என்பது அந்தம் - அடி பெருஞ்ஜோதி ஆனால் ஆதியும் பெருஞ்ஜோதி - முடி செஞ்ஜோதி ஆனால் அந்தமும் செஞ்ஜோதியே, பெருஞ்ஜோதி - பொற்ஜோதி - செஞ்ஜோதி ஆகிய மூன்றும் ஒன்றுக்குள் ஒன்றாக விளங்குவதால் ஜோதியுட் ஜோதியாகிறது.

ஜோதி = பெருஞ்ஜோதி
ஜோதியுட் ஜோதி = பொற்ஜோதி
ஜோதியுட் ஜோதியின் சொரூபமே = செஞ்ஜோதி

பெருஞ்ஜோதி ஆதி - செஞ்ஜோதியே அந்தம் என்று அருளிய அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**இந்த சிற்ஜோதியின் இயலுரு ஆதி**
**அந்தம் என்றருளிய அருட்பெருஞ்ஜோதி** (266)

இதுவரை தோன்றிய அருளாளர்கள் இறைவனைப் பற்பல உருவங்களில் இருப்பதாகக் காட்டினர். ஒவ்வொரு சமயத்திலும் பலப்பல தெய்வங்களைக் காட்டியுள்ளனர். உதாரணமாகச் சைவத்திலே விநாயகர் முதலில் வழிபாடு கடவுளாகவும் சிவபெருமான் முடிவான பரம்பொருளாகவும் வகுக்கப்பட்டுள்ளது. இந்தத் தெய்வ உருவங்கள் எல்லாம் முன்னால் தோன்றிய அருளாளர்களாலும் ஞானிகளாலும் எவ்வாறு தோற்றுவிக்கப்பட்டன என்ற உண்மையை வள்ளற் பெருமானார் கண்டறிந்தார். அந்த உண்மையானது என்னவெனில் திருச்சிற்றம்பலமாகிய நமது புருவ மத்தியில் ஒளியாகக் காட்சி தருவது எதுவோ அதைத்தான் புறத்தே ஒவ்வொரு சமயமும் தங்கள் தங்கள் தெய்வமாகக் காட்டினார்கள் என்பதே.

ஆதி அந்தம் என்று கூறுவதெல்லாம் இந்தச் சிற்றம்பல ஜோதியின் தன்மையான உருவங்களே என்று அருளிய அருட்பெருஞ்ஜோதி.

எல்லா வடிவங்களும் சிற்றம்பலத்தே தோன்றும் ஜோதியின் விளக்கமே என்பதற்கு ஆதாரம் :

சைவ முதலாக நாட்டும் பல
சமயங்களெல்லாம் தனித் தனிக் காட்டும்
தெய்வமிது வந்து பாரீர் திருச்
சிற்றம்பலத்தே திருநடஜோதி.
(திருவருட்பா 4605)

மற்றுமொரு ஆதாரம் :

எம்பொருள் எம்பொருள் என்றே சொல்லும்
எல்லாச் சமயத்துள் எல்லார்க்கும் ஒன்றே
செம்பொருள் என்பது பாரீர் - திருச்
சிற்றம்பலத்தே திருநட ஜோதி.
(திருவருட்பா 4604)

கொடியிடைப் பெண்பேதாய் நீ அம்பலத்தே நடிக்கும்
கூத்தாடி என்றெனது கொழுநர்தமைக் குறித்தாய்
படியிடத்தே வானிடத்தே பாதலத்தே அண்ட
பகிரண்ட கோடியிலே பதி விளக்கமெல்லாம்
அடிமலர் கொண்டு ஐயர் செய்யும் திருக்கூத்தின் விளக்கம்
ஆகுமிது சத்தியம் என்றருமறை ஆகமங்கள்
கெடியுறவே பறையடித்துத் திரிகின்ற அவற்றைக்
கேட்டறிந்து கொள்வாய் நின் வாட்டமெலாந்தவிர்ந்தே
(திருவருட்பா 5760)

**ஆதியும் அந்தமும் அறிந்தனை நீயே**
**ஆதி என்றருளிய அருட்பெருஞ்ஜோதி** (268)

பிரம விஷ்ணுக்கள் கூடக் கண்டறிய முடியாத இறைவனின் அடி முடியை வள்ளலார் கண்டு கொண்டார். இறைவனின் ஆதியும் அந்தமும் ஒவ்வொருவருடைய அக அனுபவத்தில் மட்டுமே கண்டறியக்கூடும்.

இறைவனின் ஆதி என்பது ஆரம்ப நிலை - அதாவது பரநாதத்தே தோன்றும் பேரொளி. இறைவனின் அந்தம் என்பது முடிவிலே தோன்றும் செவ்வொளி. இதுவரை இந்த உண்மையைக்

கண்டறியாது பலர் பல விதமாகக் குருடர்கள் யானையைக் கண்ட கதை போலே கூறிவந்துள்ளனர்.

ஆதியாகிய பெருஞ்ஜோதியையும் அந்தமாகிய செவ்வொளியையும் நீயே அறிந்தாய். இதை அறிந்த முதல் அருளாளனும் நீயே ஆனாய். எனவே இறைவனை அறிந்த உண்மை அறிவாளிகளில் நீயே ஆதி ஆகிறாய் என்று அருளிய அருட்பெருஞ்ஜோதி.

வள்ளலார் அடி முடி கண்டார் என்பதற்கு ஆதாரம் :

அந்தோ ஈததிசயம் ஈததிசயம் என் புகல்வேன்
அறிவறியாச் சிறியேனை அறிவறியச்செய்தே
இந்தோங்கு சடைமுடி நின் அடி முடியுங்காட்டி
இது காட்டி அது காட்டி என் நிலையுங் காட்டிச்
சந்தோட சித்தர்கள்தம் தனிச் சூதுங்காட்டிச்
சாகாத நிலை காட்டிச் சகஜ நிலை காட்டி
வந்தோடு நிகர் மனம் போய்க் கரைந்த இடங்காட்டி
மகிழ்வித்தாய் நின் அருளின் வண்மை எவர்க்குளதே
(திருவருட்பா 3038)

**நல்லமுது என் ஒரு நாவுளங்காட்டி என்**
**அல்லலை நீக்கிய அருட்பெருஞ்ஜோதி** (270)

மதி மண்டலத்தமுதம் என்று சொல்லக்கூடிய தெள்ளமுதம் நாவிலே இனிக்கக் கிடைத்தது. இறைவன் அந்த அமுதத்தைக் காட்டினான்.

திருஅருட்பா என்ற கவி அமுதமும் அவரது நாவிலே சுரந்தது. நல்ல அமுதமாகிய தெள்ளமுதையும் திருஅருட்பா என்ற (மற்றவர்களை வாழ்விக்கும்) அமுதையும் எனது நாவிலே காட்டி எனது பிறவியாகிய அல்லலை நீக்கிய அருட்பெருஞ்ஜோதி.

வள்ளலார் அமுதம் உண்டார் என்பதற்குரிய ஆதாரம் :

உள்ளிருள் நீங்கிற்று என் உள்ளொளி ஓங்கிற்று
தெள்ளமுதுண்டேனென்றுந்தீ பற
தித்திக்க வுண்டே னென்றுந் தீ பற

கள்ளுண்டாளெனப் புகன்றார் கனகசபை நடுவே
கண்டதுண்டு சிற்சபையில் உண்டதுமுண்டடி நான்
எள்ளுண்ட பலவிடயத்து இறக்குங்கள்ளன்றே
என்றும் இறவா நிலையில் இருத்துங்கள் உலகார்
உள்ளுண்டபோது மயக்குற்றிடும் கள் அலவே
உள்ள மயக்கனைத்தினையும் ஒழித்திடுங்கள் மடவாய்
அள்ளுண்ட பிறரும் எனை அடுத்தடுத்துக் கண்டால்
அறிவு தரும் அவர்க்கு மிங்கே யானுண்ட கள்ளே.

(திருவருட்பா 5725)

அம்மையைக் கண்டேன் அவளருள் கொண்டேன்
அமுதமும் உண்டேனடி அம்மா
அமுதமும் உண்டேனடி

வள்ளலார் நாவிலிருந்து வெளிப்பட்ட திருவருட்பா, அமுதம் என்பதற்குச் சான்று.

அண்டமெலாங் கடைந்தெடுத்த அமுதமென்கோ ஐயங்கரனார்க்கு அரனாரீந்த
மண்டு சுவைக் கனியென்கோ வள்ளிமுனம் வேட் களித்த மலைத்தேன் என்கோ
கண்டவர்கள் அதிசயிக்கக் கவி பொழியும் இராமலிங்கக் கடவுள் ஞானி
தண்டமிழாலுரைத்த திருவருட்பாவின் சுவையதனைச் சாற்றுங்காலே.

அமுதம் உண்டதால் வள்ளலார் தேகம்
பொன்னுடம்பாயிற்று என்பதற்கு ஆதாரம் :

விரைந்து விரைந்து படி கடந்தேன் மேற்பால் அமுதம் வியந்துண்டேன்
கரைந்து கரைந்து மனமுருகக் கண்ணீர் பெருகக் கருத்தலர்ந்தே
வரைந்து ஞான மணம் பொங்க மணிமன்றரசைக் கண்டு கொண்டேன்
திரைந்து நெகிழ்ந்த தோலுடம்பும் செழும்பொன் உடம்பாய்த் திகழ்ந்தேனே

(திருவருட்பா 5482)

**கற்பகம் என்னுளம் கைதனில் கொடுத்தே**
**அற்புதம் இயற்றெனும் அருட்பெருஞ்ஜோதி** (272)

கற்பகம் என்பது எதைக் கேட்டாலும் தரக்கூடிய தேவதரு என்று புராணங்கூறும்.

யார் எதைக் கேட்டாலும் இல்லை என்னாது தரக்கூடிய கற்பக தருவின் ஆற்றலை என் உள்ளங்கைதனில் அளித்துப் பல அற்புதங்களை நடத்திக் காட்டு என்ற அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : இல்லை என்னாது இடுகின்ற திறம் வள்ளலார் பெற்றதற்கு ஆதாரம்.

எல்லாமும் செய்ய வல்ல தனித் தலைவர் பொதுவில்
இருந்து நடம்புரிகின்ற அருட்பெருஞ்ஜோதியினார்
நல்லாய் நன்னாட்டார்கள் எல்லாரும் அறிய
நண்ணி எனை மணம் புரிந்தார் புண்ணியனாரதனால்
இல்லாமை எனக்கில்லை எல்லார்க்கும் தருவேன்
என்னுடைய பெருஞ்செல்வம் என் புகல்வேனம்மா
செல்லாத அண்டமட்டோ அப்புறத்தப்பாலும்
சிவஞானப் பெருஞ்செல்வம் சிறப்பது கண்டறியே
(திருவருட்பா 5740)

**கதிர் நலம் என் இரு கண்களில் கொடுத்தே**
**அதிசயம் இயற்றெனும் அருட்பெருஞ்ஜோதி** (274)

நன்மையே செய்கின்ற பிரகாசத்தை ஒளி வீச்சை என்னுடைய இரண்டு கண்களிலும் அளித்து அதிசயங்கள் பல இயற்றுக என்ற அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : அடையாறு பிரம்ம ஞான சங்கத்தார்க்கு தொ. வேலாயுதனார் அளித்த வாக்குமூலத்தில் கூறியிருப்பது.

அவரது (வள்ளலாரின்) பார்வை ஒன்றே மாமிசம் உண்ணும் பழக்கத்தை ஒழிக்கப் போதுமானதாய் இருந்தது.

"அவர் (வள்ளலார்) நீண்ட நாசியும் பொறி பறக்கும் கண்களும் உடையவர்.

தன்னைப் பற்றி வள்ளலாரே கூறியிருப்பது.

"என்னுடைய பார்வை அண்டாண்டங்களுக்கு
அப்பால் கடந்திருக்கிறது."

எவ்வுலகும் அண்டங்கள் எத்தனையும் நான் காண
இவ்வுலகில் எந்தை எனக்களித்தான் - எவ்வுயிரும்
சன்மார்க்க சங்கந்தனையடையச் செய்வித்தே
என் மார்க்கம் காண்பேன் இனி (திருவருட்பா 5514)

**அருள் ஒளி என் தனி அறிவினில் விரித்தே**
**அருள் நெறி விளக்கெனும் அருட்பெருஞ்ஜோதி** (276)

வள்ளலார் எந்தப் பள்ளியிலும் எந்த ஆசானிடத்தும் கல்வி பயிலவில்லை. ஆனால் அவரது அறிவாற்றலோ எல்லாத் துறைகளிலும் எல்லை கடந்திருப்பதை அனைவரும் அறிவர்.

இறைவனது அருள் ஒளியானது அவரது அறிவிலே பரந்து விரிந்ததாம் - அருள் ஒளியை அளித்தது மட்டுமின்றி இந்த உலகத்தே அருள் நெறியை விளக்குக என்றும் கூறிய அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு : வேதங்கள் ஆகமங்கள் முதலிய கலைகள் எதனையும் வள்ளலார் கற்கவில்லை. தவத்தை மேற்கொண்டு பூரண நிலை அனுபவம் அடைந்தால் எல்லாம் தானே தெரியும் என்கிறார் (ஆதாரம்).

காரணமிது புரிகாரியமிது மேல்
காரண காரியக் கருவிது பலவாம்
ஆரணம் ஆகமம் இவை விரித்துரைத்திடும்
நீ அவை அடைந்திடன் மகனே
பூரண நிலை அனுபவ முறில் கணமாம்
பொழுதினி லறிதி எப்பொருள் நிலைகளுமே
தாரணி தனிலென்ற தயவுடையரசே
தனி நடராச என் சற்குரு மணியே.

**பரையொளி என் மனப் பதியினில் விரித்தே**
**அரசது இயற்றெனும் அருட்பெருஞ்ஜோதி** (278)

மாயைக்கு என்றும் அடிமையாய் இருப்பது மனம். தனது சக்தியாகிய விளக்கத்தை அந்த மனதிற்கு அளித்து அந்த ஆற்றலுக்கு மனதையே இடமாக்கி அங்கேயே விளங்குமாறும் செய்து இனி மனதை அடக்கி அதனை ஆட்சி செய்வாயாக என்ற அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : மனமாகிய குரங்கு அனைவரையும் ஆட்சி செய்து ஆட்டி வைத்துக் கொண்டிருக்கிறது. திருவருள் வள்ளலாருக்குத் துணை செய்தது - பரை என்பது சக்தி - ஆற்றல் - வள்ளலாரின் மனதிலே இறை சக்தி - இறை ஆற்றல் படிந்தது - மனதை அவர் அடக்கித் தன் வசப்படுத்தினார். ஆதாரம்

மனமெனுமோர் பேய்க் குரங்கு மடைப்பயலே
மற்றவர்போல் எனை நினைத்து மருட்டாதே கண்டாய்
இனமுற என் சொல்வழியே இருத்தி எனில் சுகமாய்
இருந்திடு நீ என் சொல்வழி ஏற்றிலை யானாலோ
தினையளவுன் அதிகாரம் செல்லவொட்டேன் உலகம்
சிரிக்கவுனை அடக்கிடுவேன் திருவருளால் கணத்தே
நனவிலெனையறியாயோ யாரென இங்கிருந்தாய்
ஞானசபைத் தலைவனுக்கு நல்ல பிள்ளை நானே.

**வல்லப சக்திகள் வகையெலாம் அளித்து எனது**
**அல்லலை நீக்கிய அருட்பெருஞ்ஜோதி** (280)

முன் வரியில் மனம் அடங்கிய நிலை கூறப்பட்டது. மனம் அடங்கியதின் விளைவு என்ன?

ஆற்றல் மிக்க சக்திகள் எத்தனை வகை உண்டோ அவை அனைத்தினையும் அளித்து எனது துன்பங்களை அடியோடு விலக்கிய அருட்பெருஞ்ஜோதி

குறிப்பு : எல்லா ஆற்றலும் பெற்ற வள்ளலார் தான் பெற்ற மன நிறைவை எனக்கிது போதும் என்ற பெருமிதத்துடன் வெளிப்படுத்துகின்றார்.

நாடல் செய்கின்றேன் அருட்பெருஞ்ஜோதி நாதனை என்னுளே
கண்டு
கூடல் செய்கின்றேன் எண்ணிய எல்லாம் கூடிடக் குலவி
இன்புருவாய்
ஆடல் செய்கின்றேன் சித்தெல்லாம் வல்லான் அம்பலம்
தன்னையே குறித்துப்
பாடல் செய்கின்றேன் எனக்கிது போதும் பண்ணிய தவம்
பலித்ததுவே (திருவருட்பா 4732)

**ஆரியல் அகம் புறம் அகப்புறம் புறப்புறம்**
**ஆரமுது எனக்கருள் அருட்பெருஞ்ஜோதி** (282)

அகம் : ஆன்மா - ஆன்மா தனித்திருக்கும் - ஆன்மாகாசம் பொற்சபை - கனகசபையில் தோன்றும் காட்சி அக அமுதம்.

அகப்புறம் : ஜீவன் - ஜீவன் மனம் முதலிய அந்தக் கரணக்கூட்டத்தின் மத்தியிலிருக்கும். ஜீவாகாசம் சிற்சபை. சிற்சபையில் உண்ணும் தெள்ளமுதமே அகப்புற அமுதம்.

புறம் : கரணங்கள் - சாதனை பயிலுங்கால் நாக்கு நுனியில், மத்தியில், அடியில், மேலும் உள் நாக்கடியில் ஊறும் அமுதம் - இவை புற அமுதமாம்.

புறப்புறம் : இந்திரியங்கள் - வியர்வையே புறப்புற அமுதமாம்.

சிறப்பு வாய்ந்த அக அமுதம், அகப்புற அமுதம், புற அமுதம், புறப்புற அமுதம் ஆகிய நான்கையும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே எனக்கருள்வீராக.

**சூரிய சந்திர ஜோதியுட் ஜோதி என்று**
**ஆரியர் புகழ் தரும் அருட்பெருஞ்ஜோதி** (284)

சூரியன் ஒரு ஜோதி - சந்திரன் ஒரு ஜோதி . இந்த இரண்டு ஜோதிகளுக்குள்ளேயும் விளங்குகின்ற ஜோதி என்று வேதங்களை நன்கு கற்றோர் புகழ்ந்து பேசுமாறு விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி.

ஆதாரம்:

சந்திர சூரியர் ஒளி பெறவிளங்கும்
 தனி அருட் பெருவெளித் தலத்தெழுஞ்சுடரே
வந்திர விடை எனக்கருளமுதமளித்தே
 வாழ்க என்றருளிய வாழ்முதற் பொருளே
மந்திரமே எனை வளர்க்கின்ற மருந்தே
 மாநிலத்திடை எனை வருவித்த பதியே
தந்திரம் யாவையும் உடைய மெய்ப்பொருளே
 தனி நடராச என் சற்குருமணியே

(திருவருட்பா 3701)

**பிறிவே தினி உனைப் பிடித்தனம் உனக்கு நம்**
**அறிவே வடிவெனும் அருட்பெருஞ்ஜோதி** (286)

பிறிவு = என்பது பிரிவு என்ற சொல்லையே குறிக்கும்.

உன்னை விட்டு இனிப்பிரிய மாட்டேன் - உன்னை நான் நன்கு பற்றிக்கொண்டேன் - உனக்கு என் அறிவே வடிவமாக விளங்கும் என்ற அருட்பெருஞ்ஜோதி,

குறிப்பு : இனி உன்னைப் பிரிய மாட்டேன் என்றால் வள்ளலாரை விட்டு இதற்கு முன் பிரிந்திருந்தானா - ஆம் - ஆதாரம்,

தனித்த பரநாத முடித் தலத்தின் மிசைத் தலத்தே
தலைவரெல்லாம் வணங்க நின்ற தலைவன் நடராசன்
இனித்த சுகம் அறிந்து கொளா இளம் பருவந்தனிலே
என் புருவ நடு இருந்தான் பின்பு கண்டேனில்லை
அனித்த மிலா இச் சரிதம் ஆர்க்குரைப் பேனந்தோ
அவனறிவான் நானறிவேன் அயல் அறிவாருளரோ
துனித்த நிலை விடுத்தொருகால் சுத்த நிலை அதனில்
சுகங்கண்டும் விடுவேனோ சொல்லாயென் தோழி

(திருவருட்பா 3026)

பிரிவில்லாது கலந்துவிட்டதற்கு ஆதாரம்:

என்னுரைக்கேன் என்னுரைக்கேன் இந்த அதிசயந்தன்னை எம்மனோர்காள்
பொன்னுரைக்கும் மணிமன்றில் திருநடனம் புரிகின்ற புநிதன் என்னுள்
மின்னுரைக்கும்படிக் கலந்தான் பிரியாமல் விளங்குகின்றான் மெய்ம்மையான
தன்னுரைக்கும் என்னுரைக்கும் சமரசம் செய்
தருள்கின்றான் சகத்தின் மீதே

(திருவருட்பா 5444)

**எஞ்சேல் உலகினில் யாதொன்று பற்றியும்**
**அஞ்சேல் என்றருள் அருட்பெருஞ்ஜோதி** (288)

பிரிவு என்பதே இல்லாது இறைவன் தன்னுடன் கலந்ததை முன் வரியில் அறிவித்தார் தோன்றியது மறையும் - பிறந்தது இறக்கும் - எல்லாமே அழியக்கூடியவைதான். எதுவுமே

மிஞ்சுவதில்லை. இப்படிப்பட்ட உலகில் எதைப் பற்றியும் அஞ்ச வேண்டாம் என்று அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே எனக்கருள் செய்வீராக.

படமாட்டேன் துயர் சிறிதும் படமாட்டேன் இனி நான்
பயப்படவும் மாட்டேன் உன் பதத்துணையே பிடித்தேன்
விடமாட்டேன் ஏமாந்து விட மாட்டேன் கண்டீர்
மெய்ம்மையிது நும்மாணை விளம்பினனும்மடியேன்
கெடமாட்டேன் பிறர் மொழிகள் கேட்டிடவும் மாட்டேன்
கிளரொளி அம்பலத்தாடல் வளரொளி நும்மல்லால்
நடமாட்டேன் என்னுளத்தே நான் சாகமாட்டேன்
நல்ல திருவருளாலே நான் தான் ஆனேனே.

**மாண்டுழலா வகை வந்திளங்காலையே**
**ஆண்டு கொண்டருளிய அருட்பெருஞ்ஜோதி** (290)

எதற்கும் பயப்பட வேண்டாம் என்று முன் வரியில் கூறப்பட்டது. எதையும் அஞ்சாமல் எதிர்க்கலாம். மரணத்தை எதிர்த்து வெல்ல முடியுமா? அதற்கு அஞ்சாதவர் உண்டா? சிறு பிராயத்திலேயே அம் மரணம் தடுக்கப்பட்டதை இந்த வரியில் கூறுகின்றார்.

கேவலாதிகார மரணத்தை அடைந்து மறுபடி பிறவி எடுத்து இவ்வாறு தொடர்ந்து மாள்வதும் பிறப்பதுமாகச் சிக்கித் தவிக்க விடாமல் இளம் பிராயத்திலேயே ஆட்கொண்டு அருள் அளித்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு : இளம் பிராயமாகிய ஒன்பதாம் வயதிலேயே இறைவனால் வள்ளலார் ஆட்கொள்ளப்பட்டார் என்பதற்கு ஆதாரம்.

வேண்டாருளரோ நின்னருளை மேலோரன்றிக் கீழோரும்
ஈண்டார்வதற்கு வேண்டினரால் இன்று புதிதோ யான் வேண்டல்
தூண்டாவிளக்கே திருப்பொதுவில் ஜோதிமணியே ஆறொடு
மூன்றாண்டாவதிலேமுன் என்னை ஆண்டாய் கருணை அளித்தருளே
(திருவருட்பா 3597)

**பற்றுகள் அனைத்தையும் பற்றறத் தவிர்த்து எனது அற்றமும் நீக்கிய அருட்பெருஞ்ஜோதி** (292)

மனதிலே என்னென்ன ஆசைகள் எழுமோ அவ்வளவு ஆசைகளையும் சிறிதும் இல்லாதவாறு நீக்கியதுடன் எனது குற்றங்களையும் தவிர்த்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

சரியை ஓர் நான்கும் கிரியை ஓர் நான்கும் சாற்றிடும்
யோகமோர் நான்கும்
புரியவும் பதங்கள் பொருந்தவும் எனது புந்தியில் ஆசை
சற்றறியேன்
பெரியதோர் ஞானம் நான்கினும் ஆசை பெற்றிலேன் முத்தி
பெற்றிடவும்
உரியதோர் இச்சை எனக்கில்லை என்றன் உள்ளம் நீ
அறிந்ததே எந்தாய் (திருவருட்பா 3399)

இறக்கவும் ஆசை இல்லை இப்படி நான் இருக்கவும் ஆசை
இன்றி நான்
பிறக்கவும் ஆசை இலை உலகெல்லாம் பெரியவர் பெரியவர்
எனவே
சிறக்கவும் ஆசை இலை விசித்திரங்கள் செய்யவும் ஆசை
ஒன்றிலை
துறக்கவும் ஆசையிலை துயரடைந்து தூங்கவும் ஆசை
ஒன்றிலையே (திருவருட்பா 3400)

**சமயம் குல முதல் சார்பெலாம் விடுத்த அமயம் தோன்றிய அருட்பெருஞ்ஜோதி** (294)

மனித சமுதாயம் ஜாதி சமயம் மதம் முதலிய பலவேறு பாகுபாடுகளால் பிளவுபட்டே வாழ்ந்து கொண்டிருக்கின்றது. ஒவ்வொரு மனிதனும் ஏதாவது ஒரு சமயம் அல்லது குலம் முதலிய ஏதோ ஒன்றைச் சார்ந்து இருப்பதே உண்மை.

சமயம் குலம் முதலான சார்புகளை விட்டவுடன் தோன்றி அருளிய அருட்பெருஞ்ஜோதி.

ஜாதி சமயச் சழக்கை விட்டேன் அருள்
ஜோதியைக் கண்டேனடி அக்கச்சி
ஜோதியைக் கண்டேனடி.

**வாய்தற் குரித்தெனும் மறை ஆகமங்களால்**
**ஆய்தற் கரிய அருட்பெருஞ்ஜோதி** (296)

அடைவதற்குரியதுதான் என்று கூறுகின்ற வேதங்களும் ஆகமங்களும் கூட ஆராய்ந்து காண்பதற்கு முடியாததாய் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

**பா**யிர மாமறை அனந்தம் இன்னும்
பார்த்தளந்து காண்டும் எனப் பல்கால்மேவி
ஆயிரம் ஆயிரம் முகங்களாலும் பன்னாள்
அளந்து அளந்து ஓர் அணுத்துணையும் அளவு காணா
தேயிரங்கி அழுது சிவ சிவ என்றேங்கித்
திரும்ப அருட்பெருவெளி வாழ் சிவமே ஈன்ற
தாயிரங்கி வளர்ப்பது போல் எம்போல்வாரைத்
தண்ணருளால் வளர்த்தென்றும் தாங்கும் தேவே
(திருவருட்பா 2131)

**எல்லாம் வல்ல சித்து எனக்களித்து எனக்குனை**
**அல்லாதிலையெனும் அருட்பெருஞ்ஜோதி** (298)

நோவாது நோன்பு எனைப் போல் நோற்றவரும் எஞ்ஞான்றும்
சாவா வரம் எனைப் போல் சார்ந்தவரும் - தேவா நின்
பேரருளை என்போலப் பெற்றவரும் எவ்வுலகில்
யாருளர் நீ சற்றே அறை
(திருவருட்பா 5624)

இந்த வினாவை வள்ளலார் இறைவனிடம் கேட்டார். இறைவன் இந்த வினாவிற்கு அளித்த பதில்தான் இந்த அகவல் வரி.

எந்த உலகத்திலும் தேடிப் பார்த்தேன். உன்னைத் தவிர வேறு யாரும் எனக்குக் கிடைக்கவில்லை என்று கூறி எந்த ஒரு

சித்தி வல்லபத்தால் மற்ற எல்லாச் சித்துக்களையும் இயற்ற முடியுமோ அந்த மா வல்லபச் சித்தை எனக்கு அளித்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு : **வள்ளலாருக்கு ஈடு இணையாக எவ்வுலகிலும் யாரும் இல்லை என இறைவனே சான்று தருவது நம் பெருமானாரின் அளவற்ற பெருமைக்கு ஓர் எடுத்துக்காட்டு.**

**நவையிலா உளத்தில் நாடிய நாடிய**
**அவையெலாம் அளிக்கும் அருட்பெருஞ்ஜோதி** (300)

எந்த உள்ளமானது ஆசைகளை அடியோடே அறுத்து நிராசை எனும்படியில் நிற்கிறதோ அந்த உள்ளம் எதையெதை நாடுகின்றதோ அவற்றையெல்லாம் அளிக்கின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு: நிராசை கொண்டோர் உள்ளம் தனக்கென ஒன்றையும் விரும்பாது. அதாவது அகப்பற்று நீங்கியிருக்கும். அதே நேரத்தில் பிற ஜீவன்களின் துன்பங்கள் நீங்கவும் அவைகள் மகிழ்வுடன் வாழவும் விரும்பும், அது புறப்பற்று. அதாவது நிராசை கொண்டோர் மனதிலே அகப்பற்று (தனக்கென) இருக்காது. ஆனால் புறப்பற்று (மற்றவர்கட்காக) இருக்கும். அகப்பற்றறுத்தோர் பிற ஜீவன்களின் துயர் துடைக்க விரும்பினால் அந்த விருப்பம் இறையருளால் கைகூடும்.

நிராசை கொண்ட வள்ளலார் அகப்பற்றை அறுத்தார் புறப்பற்றை அறுக்கவில்லை என்பதற்கு ஆதாரம்.

மறப்பற்ற நெஞ்சிடை வாழ்கின்ற வள்ளல்
மலப்பற்றறுத்தவர் வாழ்த்தும் மணாளர்
சிறப்புற்ற மங்கையர் தம்மொடும் நான்தான்
சிற்றம்பலம் பாடிச் செல்கின்றபோது
புறப்பற்றகற்றத் தொடங்காத பெண்ணே
புலை அகப்பற்றை அறுத்தாய் நினக்கே
இறப்பற்ற தென்கின்றார் என்னடி அம்மா
என்கை பிடிக்கின்றார் என்னடி அம்மா. (5678)

**கூற்றுதைத்து என்பால் குற்றமும் குணங்கொண்டு**
**ஆற்றன் மிக்களித்த அருட்பெருஞ்ஜோதி** (302)

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே எனக்கு ஏற்படக் கூடிய மரணத்தை ஒழித்துவிட்டீர்கள். என்னிடமிருந்த குற்றங்கள் அனைத்தினையும் குணமாகக் கொண்டு அருளினீர்கள். சித்தி வல்லபங்கள் அனைத்தினையும் அதிகமாகவே எனக்கு அளித்து விட்டீர்கள்.

**நன்றறிவறியா நாயினேன் தனையும்**
**அன்று வந்தாண்ட அருட்பெருஞ்ஜோதி** (304)

நல்ல அறிவு இன்னதென அறியாது நாய்க்குச் சமமாக இருந்த என்னைச் சிறு வயதிலேயே மகிழ்வுடன் வந்து தடுத்து ஆட்கொண்ட அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**நாயினும் கடையேன் ஈயினும் இழிந்தேன்**
**ஆயினும் அருளிய அருட்பெருஞ்ஜோதி** (306)

நாயினுங் கடையேன் என்று நாயை ஏன் ஒப்பிட வேண்டும். ஒருவன் திறமையாக மாறுவேடம் அணிந்து கொண்டால் தன் மனைவி, மக்களைக் கூட ஏமாற்றி விடலாம். ஆனால் அவன் வளர்க்கும் நாயை மட்டும் ஏமாற்ற முடியாது. எந்த நிலையிலும் நாயானது தன் எஜமானனைக் கண்டு கொள்ளும். நம் எஜமானனாகிய இறைவனை நம்மால் கண்டு கொள்ள முடியவில்லையே. இதை மனதில் கொண்டுதான் நாயினும் கடையேன் என்றாரோ!

அடுத்தது ஈயினும் இழிந்தேன் என்றார். ஈயானது மலத்தின் மீதும் உட்காரும். அருகே உள்ள வேறு பண்டத்தின் மீதும் உட்காரும். உயர்ந்த பொருளென்றும் தாழ்ந்த பொருளென்றும் பாராது அனைத்தினையும் ஒன்றாகவே அதாவது சமமாகவே பாவிக்கும் உயர்ந்த குணம் உண்டு. நாம் அவ்வாறின்றி உயர்ந்தது என்றும் தாழ்ந்தது என்றும் பாகுபாடு காண்பதால்தான் ஈயினும் இழிந்தேன் என்றாரோ!

கீழ்ப்பட்ட நாயினும் கீழ்ப்பட்டவனாக மலத்திடை மொய்க்கும் ஈயைவிட இழிந்தவனாக இருந்தும் அருளளித்த அருட்பெருஞ்ஜோதி !

**தோத்திரம் புகலேன் பாத்திரமல்லேன்**
**ஆத்திரம் அளித்த அருட்பெருஞ்ஜோதி** (308)

உன்னைப் புகழ்ந்து தோத்திரம் செய்ததில்லை. உன் அருள் அடையப் பக்தியிலும் ஒழுக்கத்திலும் சிறந்து விளங்கக்கூடிய அருகதை உடையவனுமல்ல. ஆயினும் உன்னை அடைந்தே தீர வேண்டும் என்ற ஆசையை மிக மிக அதிகமாக அருட்பெருஞ்ஜோதி ஆண்டவராகிய தாங்களே எனக்கு அளித்தீரே.

ஆத்திரம் என்பது அதிக வேகத்தைக் குறிக்கும் சொல்லாக இங்கே பயன்படுத்தப்பட்டுள்ளது. உதாரணமாகப் பசியோடு உள்ள ஒருவனுக்கு உணவு படைக்கிறோம். சாம்பார் போடுவதற்குள் அவன் சாதத்தை எடுத்து வாயில் வைக்கிறான். அவனுக்கு எவ்வளவு ஆத்திரம் பாருங்க! சாம்பார் போடறதுக்குள்ளே சோற்றைத் தின்கிறான் என்பது பழக்கம். ஆத்திரம் என்ற சொல் அவசரம். அதிக வேகம் என்று பொருள்படும்.

**எச்சோதனைகளும் இயற்றாது எனக்கே**
**அச்சோ என்றருள் அருட்பெருஞ்ஜோதி** (310)

பக்தனைச் சோதிப்பது இறைவனது வழக்கமாம். அந்த விதத்தில் என்னை எந்தவிதச் சோதனைக்கும் ஆளாக்காமல் என் மீது மனமிரங்கி ஐயோ பாவம் என்று எண்ணி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே எனக்கு அருளைத் தருவீராக.

குறிப்பு : சோதிக்க வேண்டாம் என்று இறைவனை வேண்டுகின்ற திருஅருட்பா.

ஆதியே திரு அம்பலத்தாடல் செய்யரசே
நீதியே எல்லாம் வல்லவா நினைந்தே
ஓதியே உணர்தற்கரிதாகிய ஒருவான்
ஜோதியே எனைச் சோதியேல் சோதியேல் இனியே

**ஏறா நிலை நடு ஏற்றி என்றனை ஈண்டு**
**ஆறாறு கடத்திய அருட்பெருஞ்ஜோதி** (312)

முன் வரியிலே சோதிக்காமல் அருள்தர வேண்டும் என்று வேண்டப்பட்டது.

இதுவரை எந்த ஞானிகளும் சித்தர்களும் எட்ட முடியாத அனுபவ நிலையில் என்னை ஏற்றி அத்துடன் நில்லாது முப்பத்தாறு தத்துவங்களையும் நான் கடக்குமாறு அருளிய அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு : உருத்திரர்கள், நாரணர்கள், பிரம்மர்கள், முனிவர்கள் முதலியோர் யாவரும் காண முடியாத உள்ளொளியின் அசைவாகிய நடராச நடனத்தை வள்ளலார் கண்டார் என்பதற்கு ஆதாரம்.

உருத்திரர்கள் ஒரு கோடி நாரணர் பல்கோடி
உறுபிரமர் பல கோடி இந்திரர் பல்கோடி
பெருத்த மற்றைத் தேவர்களும் முனிவர்களும் பிறரும்
பேசில் அனந்தங்கோடி ஆங்காங்கே கூடித்
திருத்தமுறு திருச் சபையின் படிப்புறத்தே நின்று
தியங்குகின்றார் நடங்காணும் சிந்தை யராயந்தோ
வருத்தம் ஒன்றுங்காணாதே நான் ஒருத்தி யேறி
மாநடங்காண்கின்றேன் என் மாதவந்தான் பெரிதே
(திருவருட்பா 5776)

**தாபத் துயரம் தவிர்த்து உலகுறும் எல்லா**
**ஆபத்தும் நீக்கிய அருட்பெருஞ்ஜோதி** (314)

தாபம் என்பது ஏக்கம். அந்த ஏக்கத்தினால் வரும் துன்பமே தாபத்துயரம். ஏதாவது ஒன்றின் மீது ஆசை ஏற்பட்டு அது கிட்டும் வரை உண்டாகும் ஏக்கம் பெருந்துன்பமாகும். தாபத் துயரம் தவிர்த்து என்கிறார்.

எந்தப் பொருளின் மீதும் இச்சை கொள்வதில்லாமல் நிராசை கொண்ட மனதில் தாபம் ஏற்பட வழியில்லை. மனதை

நிராசை கொள்ளும்படிச் செய்துகொள்வோர்க்குத் தாபத் துயரம் நீங்கிவிடும்.

அருள் துணை பெற்றோர் மனதில் தோன்றும் ஆசைகள் அனைத்தும் நிறைவேறும். அப்படி ஆசைகள் உடனுக்குடன் நிறைவேறினாலும் தாபமோ அதனால் வரும் துயரமோ உண்டாவதில்லை.

நாகரிகமும் விஞ்ஞான வளர்ச்சியும் வசதிகளைப் பெருக்குவதோடு ஆபத்துக்களையும் பெருக்கி வருவதைக் கண்கூடாகக் காண்கிறோம். மின்சாரம் இன்றியமையாத ஒன்று. ஆபத்தும் அதில் இல்லாமலில்லை. மின்சாரம் தாக்கி எவ்வளவோ பேர் உயிரிழந்துள்ளனர். விமானம் வசதிதான். விமான விபத்தில் உயிரிழந்தோர் ஏராளம். இவ்வாறு ஆபத்துக்கள் நிறைந்த உலகில் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். ஆபத்துக்கள் நம்மை அணுகாவண்ணம் செய்து கொள்ள முடியும் என்கிறார் வள்ளலார். திருச்சிற்றம்பலத் தவம் செய்வோரை ஆபத்து அணுகாது என்கிறார்.

ஆபத்தை நீக்கி வளர்த்தே சற்றும்
அசையாமல் அவியாமல் அடியேனுளத்தே
தீபத்தை வைத்தது பாரீர் - திருச்
சிற்றம்பலத்தே திருநட ஜோதி

ஆண்டவனை அடைய வேண்டும் என்ற விருப்பம் உடையோர்க்கு அழுத கண்ணீர் மாறுமா! ஆகாரத்தில் இச்சை செல்லுமா என்கிறார். அப்படிப்பட்ட மனதில் உலகியல் இச்சை எதுவும் தோன்றாது. எனவே தாபமோ அதனால் உண்டாகும் துயரமோ ஏற்படவே வழியில்லை. அப்படிப்பட்டோர் மனதிலும் ஏதேனும் இச்சை எழும் என்றால் அந்த இச்சை பிற ஜீவர்கட்கு நன்மை உண்டாகச் செய்யவே உண்டாகுமேயொழிய அவர்கட்கென இருக்காது அப்படிப்பட்ட இச்சைகள் ஆண்டவன் அருளாலே அவ்வப்போது நிறைவேறி விடுவதாலும் தாபம் இல்லை.

ஏக்கத்தினால் ஏற்படும் துயரத்தைப் போக்கி உலக வாழ்வில் உண்டாகும் ஆபத்துக்களையும் நீக்கிய அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

## மருட்பகை தவிர்த்து எனை வாழ்வித்து எனக்கே அருட் குருவாகிய அருட்பெருஞ்ஜோதி (316)

மருள் என்பது பொய்யான ஒன்று உண்மையானது போல் தோற்றமளிப்பது ஆகும். உதாரணமாக அம்மன் பூசை நடக்குங் காலத்தில் ஒருவன் சாமியாடுகிறான். அங்கிருக்கும் மக்கள் அந்தச் சாமியாடும் ஆசாமி மீது அம்மனே வந்து அவன் பேசுவதையெல்லாம் அம்மனே அவன் மூலம் பேசுவதாக எண்ணுகின்றார்கள். சாமியாடும் நபர் மீது அம்மனா வந்து பேசுகிறது? இல்லை. அம்மன் அவன் மீது வந்துள்ளதாகவும் அம்மனே பேசுவதாகவும் எண்ணுகிறோமே அதுதான் மருள். அம்மன் வரவும் இல்லை. அது பேசுவதும் இல்லை. வராத ஒன்றை வந்ததாகச் சொல்வதே மருள். நமக்குப் பகை அந்த மருள்தான்.

வேதங்கள், ஆகமங்கள், புராணங்கள், இதிகாசங்கள் போன்றவை கூறுவதெல்லாம் உண்மையாக நடந்த வரலாறுகள் அல்ல. நமக்குப் பல நீதிகளைச் சொல்ல வந்த ஞானிகளால் கற்பனையாக எழுதி வைக்கப்பட்டவைதான் இவைகள். இவற்றில் கூறப்பட்டவைகளை அப்படியே கண் மூடித்தனமாக நம்பி விடாதீர்கள். அவற்றிலுள்ள உண்மைகளை ஆய்ந்து அறிந்து கொள்ளுங்கள் என்கின்றார் வள்ளலார். ஆன்மீகத்தில் நம்மைச் சூழ்ந்துள்ள சடங்குகள், சம்பிரதாயங்கள் அனைத்தும் உண்மையைக் கூறவந்த பொய்களே. இந்த மருள் தான் நமக்குப் பகை. மருள் எப்படிப் பகையாகும்?

ஆடி மாதம் - அங்காள பரமேஸ்வரி பூசை நடக்கிறது - ஒருவன் சாமியாடுகிறான். அங்காள பரமேஸ்வரியே அவன் மீது வந்துள்ளதாகவும் அவளே பேசுவதாகவும் அனைவரும் நம்புகிறார்கள். அங்காள பரமேஸ்வரி என்ற பெண் தெய்வம் உண்மையில் உள்ளதா என்றால் இல்லை. இல்லாத தெய்வம் எப்படி வந்து பேசும்? இந்த விளக்கம் துளிக்கூட இல்லாமல் உண்மையிலேயே அங்காள பரமேஸ்வரி பேசுவதாக எண்ணி அவளை வழிபட்டு ஆயிரக் கணக்கான ஆடுகள், மாடுகள், கோழிகள், பன்றிகள் முதலியன பலி என்ற பெயரால் கொல்லப்படுகின்றனவே. உண்மையை உணரவிடாமல் மூட

நம்பிக்கை மக்களை ஏமாற்றுகிறது. எனவே மருள் நமக்குப் பகையானதே ஆகும்.

மருளாகிய பகையை நீக்கி எனை நன்கு வாழ வைத்து எனக்கே அருட்குருவாக விளங்கி உண்மையை உணர்த்துகின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

வள்ளலாருக்கு இறைவனே குருவாக விளங்கினான் என்பதற்கு இன்னுமோர் ஆதாரம்.

சுற்றது மற்றவ்வழி மாசூதது என்றெண்ணாத்
தொண்டரெலாம் கற்கின்றார் பண்டுமின்றும் காணார்
எற்ற தும்பு மணி மன்றில் இன்ப நடம் புரியும்
என்னுடைய துரையே நான் நின்னுடைய அருளால்
கற்றது நின்னிடத்தே பின் கேட்டது நின்னிடத்தே
கண்டது நின்னிடத்தே உட்கொண்டது நின்னிடத்தே
பெற்றது நின்னிடத்தே இன்புற்றது நின்னிடத்தே
பெரிய தவம் புரிந்தேன் என் பெற்றி அதிசயமே
(திருவருட்பா 3044)

## உருவமும் அருவமும் உபய முமாகிய அருணிலை தெரித்த அருட்பெருஞ்ஜோதி (318)

இந்த உலகில் நிலவுகின்ற எல்லாச் சமயங்களும், எல்லா மதங்களும் கூறுகின்ற இறை விளக்கத்தை ஒட்டு மொத்தமாகச் சேர்த்துச் சுருங்கச் சொன்னால் உருவம், அருவம், உருவருவம் என்ற மூன்றினுள் இறை விளக்கம் அடங்கி விடும். அதாவது சில சமயங்கள் இறைவனை உருவமாக நமக்குக் காட்டுகின்றன. சில சமயங்களோ இறைவனுக்கு உருவம் கிடையாது - அவன் அருவமானவன் என்கின்றன. இன்னும் சில சமயங்கள் இறைவனை உருவருவன் என்கின்றன.

உதாரணம்
உருவம் - சைவம் கூறும் சிவபெருமான்
அருவம் - ஜைனர்கள் கூறும் அருகர்
உருவருவம் - சிவலிங்கம்

அருள் நிலையை விளக்கவே உருவமாகவும், அருவமாகவும், உருவருவமாகவும் விளங்கி அவ்வாறு விளங்குகின்ற

அருள்நிலையை எனக்குத் தெரிவித்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**இருளறுத்து என் உளத்து எண்ணியாங் கருளி**
**அருளமுதளித்த அருட்பெருஞ்ஜோதி** (320)

இருள் என்பது அறியாமை

என்னுடைய அறியாமையை நீக்கி நான் எண்ணிய அனைத்தினையும் எண்ணியவாறே எனக்கு அருளி அருள் அமுதத்தையும் அளித்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

இறை உண்மையைத் தெரிந்து கொள்ளாததே அறியாமை. முன் வரியில் இறைவனை உருவமாக அருவமாக, உருவருவமாகக் கூறப்பட்டது, இவற்றின் உண்மையை அறிந்து கொண்டதைத் தான் இருளறுத்து என்கிறார். உண்மை எது எனில் உருவம், அருவம், உருவருவம் இவை மூன்றுமே உண்மையான இறைவிளக்கமல்ல என்பதே.

உருவாய் அருவாய் உருவருவாய் இவை
ஒன்றுமல்லீர் வாரீர்
என்றும் நல்லீர் வாரீர் (திருவருட்பா 4396)

இறை உண்மையை உணர்ந்த நிலையையே இருளறுத்து என்றார்.

என் உளத்து எண்ணியாங்கருளி என்கிறார். அவர் என்ன எண்ணினார், எதை, இறைவன் அவர் எண்ணியவாறு அருளினான் என்பதை வேறொரு பாடலில் விளக்குகின்றார். அந்தப் பாடல்.

துன்பெலாம் தீர்ந்தன சுகம் பலித்தது நினைச்
சூழ்ந்ததருள் ஒளி நிறைந்தே
சுத்த சன்மார்க்க நிலை அனுபவம் நினக்கே
சுதந்தரமதானதுலகில்
வன்பெலாம் நீக்கி நல்வழியெலாமாக்கி மெய்
வாழ்வெலாம் பெற்று மிகவும்
மன்னுயிரெலாம் களித்திட நினைத்தனை உன்றன்

மனநினைப்பின் படிக்கே
அன்ப நீ பெறுக உலவாது நீடூழி விளை
யாடுக அருட்ஜோதியாம்
ஆட்சி தந்தோம் உனைக் கைவிடோம் கைவிடோம்
ஆணை நம்மாணை என்றே
இன்புறத் திருவாக் களித்தெனுள்ளே கலந்து
இசைவுடன் இருந்த குருவே
எல்லாம் செய் வல்ல சித்தாகி மணி மன்றினில்
இலங்கு நடராச பதியே

(திருவருட்பா 3676)

உயிர்களெல்லாம் களித்திட வள்ளலார் எண்ணினார். அவர் எண்ணியவாறே நீ பெறுவாயாக - உன்னை (வள்ளலாரை) என்றும் கைவிடோம் என்று இறைவன் ஆசீர்வதித்தார். நாம் இன்புற்று வாழவேண்டும் என்று வள்ளலார் எண்ணினால் அவர் எண்ணியவாறே நாம் இன்புற்று வாழ்வோம். நாம் இன்புற்று வாழ வேண்டும் என்று வள்ளலார் எண்ணவேண்டும். அவர் அவ்வாறு எண்ணுவதற்காக நாம் அவரைப் பிரார்த்தனை செய்வோம். அவர் காட்டிய வழி நடப்போமாக.

**தெருள் நிலை இதுவெனத் தெருட்டி என் உளத்திருந்து**
**அருள் நிலை காட்டிய அருட்பெருஞ்ஜோதி** (322)

பல நோக்கில் அலைந்து கொண்டிருந்த என்னுடைய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய கரணங்களைப் பல நோக்கிலிருந்தும் விடுவித்து அவற்றை ஒன்றுபடுத்தி உண்மைநிலை இதுதான் என்று நன்கு அறிவித்து என் உள்ளத்திலே அமர்ந்து அருள் நிலை எதுவென்றும் காட்டிய அருட்பெருஞ்ஜோதி.

வள்ளலார் உள்ளத்தே ஆண்டவன் புகுந்தான்
என்பதற்கு அகச் சான்று

வானிருக்கும் பிரமர்களும் நாரணரும் பிறரும்
மாதவம் பன்னாள் புரிந்து மணமாட நடுவே
தேனிருக்கும் மலரணை மேற் பளிக்கறையினூடே
திருவடி சேர்த்தருள்க எனச் செப்பி வருந்திடவும்
நானிருக்கும் குடிசையிலே வலிந்து நுழைந்தெனக்கே
நல்ல திரு அருளமுதம் நல்கிய தன்றியும் என்
ஊனிருக்கும் குடிசையிலும் உவந்து நுழைந்தடியேன்
உள்ள மெனும் சிறு குடிசையுள்ளும் நுழைந்தனையே

(திருவருட்பா 3984)

குறிப்பு : **இறைவன் எங்கிருக்கின்றான் என்று கேட்டால் வள்ளலார் உள்ளத்திலே இருக்கின்றான் என்று துணிவாகக் கூறலாம். எனவே இறைவன் வேறு வள்ளலார் வேறு என்ற நிலை மாறி வள்ளலாரே இறைவன் என்ற நிலை ஏற்பட்டுவிட்டது. எனவே இறைவனாகவே விளங்கும் வள்ளலாரை வணங்கிப் பெறவேண்டியதைப் பெற்றுக் கொள்ளலாம்.**

**பொருட்பதமெல்லாம் புரிந்து மேலோங்கிய**
**அருட்பதம் அளித்த அருட்பெருஞ்ஜோதி** (324)

நாம் அடைய வேண்டிய பொருள் பதம். பதம் என்பது அனுபவ நிலை, எட்டிரண்டு அதாவது அகார உகாரத்தை அனுபவ நிலைகளின் முதற்படி என்று அகவலில் கூறுகின்றார்.

எட்டிரண்டென்பன இயலு முற்படியென
அட்ட நின்றருளிய அருட்பெருஞ்ஜோதி

இந்த முதற்படி தொடங்கி பதங்கள் ஒவ்வொன்றாகக் கடந்து வந்தார்.

| | | | |
|---|---|---|---|
| பிரம பதம் . | நாபிக்குக் கீழ் | | |
| விட்டுணுபதம் . | நாபி | | |
| ருத்ரபதம் . | அதாவது கைலாயம் | = | இருதயம் |
| மகேசுரபதம் . | கண்டம் | | |

சதாசிவபதம் . அண்ணாக்கு
விந்து நிலை . புருவமத்தி

இவ்வாறு பதங்களைக் கடந்து பின்னர் நாதம், பரவிந்து, பரநாதம், திக்கிராந்தம், அதிக்கிராந்தம், சுத்தசிவம், அதீதம் ஆகிய பதின் மூன்று பதங்களையும் வள்ளலார் அடைந்ததையே பொருட்பதமெல்லாம் புரிந்து என்ற தொடர் விளக்குகின்றது,

இவ்வாறு அவர் கடந்தார் என்பதற்கு ஆதாரம்

கற்பூரம் கொணர்ந்திடுக தனித்தோழி எனது
கணவர் வருதருணமிது கண்ணாறு கழிப்பாம்
எற்பூத நிலை அவர்தம் திருவடித் தாமரைக் கீழ்
இருப்பது அடிக் கீழ் இருப்பதென்று நினையேல் காண்
பற்பூத நிலை கடந்து நாத நிலைக் கப்பால்
பரநாத நிலையதன் மேல் விளங்குகின்றதறி நீ
இற்பூவை அவ்வடிக்குக் கண்ணாறு கழித்தால்
எவ்வுலகத் தெவ்வுயிர்க்கும் இனிது நலம் தருமே
(திருவருட்பா 5728)

பொருளாகிய பத நிலைகளையெல்லாம் நான் அடையும்படிப் புரிந்து எல்லா நிலைகட்கும் மேலோங்கி நிற்கின்ற அருள் விளங்கும் அதீத நிலையை எனக்கு அளித்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

பதங்கடந்து அருள்பதம் அவருக்குச் சொந்தமாயிற்றாம். ஆதாரம்

பனிரெண்டாண்டு தொடங்கி இற்றைப் பகலின் வரையுமே
படியில் பட்ட பாட்டை நினைக்கில் மலையும் கரையுமே
துனியாதந்தப் பாடுமுழுதும் சுகமதாயிற்றே
துரையே நின்மெய்யருளிங்கெனக்குச் சொந்தமாயிற்றே

(திருவருட்பா 5041)

**உருள் சகடாகிய உளம் சலியாவகை**
**அருள் வழி நிறுத்திய அருட்பெருஞ்ஜோதி** (326)

உருண்டு ஓடுகின்ற சக்கரம் போன்ற தன்மையுடைய எனது உளமானது உலகமுகப்பட்ட ஆசைகளிலேயே பட்டு உழன்று களைத்துப் போகாமலும், சோர்ந்து போகாமலும், அலுத்துப் போகாமலும் அது எப்போதும் அருள் வழியிலேயே நிற்குமாறு நிலை நிறுத்திய அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

பங்கமடைந்தார் அவையைச் சாராது சாதுக்கள் நிறைந்த சன்மார்க்க சங்கத்தைச் சார்ந்து நம் பெருமானாரின் புகழை அவர்கள் பேசக் கேட்கின்ற நேரத்தில் நம்முடைய உள்ளமும் மகிழ்ச்சியில் பொங்கி இது தொடங்கியாவது சன்மார்க்க வழியில் நிற்க வேண்டும் என்று அவாவுறுகின்றது. அச் சங்கத்தைவிட்டு வெளியே வந்தவுடன் இந்த உலக முகப்பட்ட பராக்கில் சென்றுவிடுகிறது. இது நம்முடைய அனுபவம். இதனால்தான் உருள் சகடு என்று கூறினார். ஆனால் வள்ளலார் மட்டும் எந்த நிலைக்கு உயர்ந்தாரோ அந்த நிலையை விட்டுக் கீழே இறங்கினாரில்லை. அவர் படிகளில் ஏறினாரே ஒழிய இறங்கவில்லை. இறங்கும் படிகளை ஆண்டவன் எடுத்துவிட்டானாம் (ஆதாரம்)

ஏறாநிலையில் விரைந்து விரைந்து இங்கென்னை ஏற்றியே
இறங்காது இறங்கும்படிகள் முழுதும் எடுத்தாய் போற்றியே
மாறாக் கருணை என்பால் வைக்க வந்த தென்னையோ
மதியிலேனின்னருட்குச் செய்த தவந்தான் முன்னையோ
(திருவருட்பா 4981)

**வெருள் மனமாயை வினை இருள் நீக்கி உள்**
**அருள் விளக்கேற்றிய அருட்பெருஞ்ஜோதி** (328)

மனம், மாயை, வினை, இருள் என்ற நான்கு சொற்களின் வரிசை கூர்ந்து நோக்கத் தக்கது. மனதின் தன்மையோ திகைப்படைதலும், பயப்படுதலும் ஆகும். இதைத் தான் வெருள்

மனம் என்றார். அந்த மனம் மாயை வசப்பட்டு அது மாயைக்கு அடிமையாகச் செயல்படுதலால் மனதிற்கடுத்து மாயை கூறப்பட்டது. மாயை என்பது ஆசை, மனம் ஆசையின் வசப்பட்டவுடன் அந்த ஆசையை நிறைவேற்றிக் கொள்ளும் செயல்பாடு தோன்றுகிறது. அந்தச் செயல்பாடே கருமம். அதாவது வினையாகிறது. இதைக் குறிக்கவே மாயையை அடுத்து வினை எனப்பட்டது, அதனால் வரக்கூடிய பலனைத் துய்ப்பது. அனுபவிப்பது நான் என்கின்ற ஆணவம். இருள் என்றது ஆணவமே.

திகைப்புற்றும், அஞ்சியும் விளங்குகின்ற மனதையும், அதை வசப் படுத்துகின்ற மாயையையும் அதன் விளைவின் செயலாகிய வினையையும் கருமத்தைச் செய்து முடித்துவிட்ட களிப்பில் மிதக்கின்ற நான் என்ற ஆணவத்தினையும் நீக்கி எனக்குள்ளே அருளாகிய தீபத்தை ஏற்றிய அருட்பெருஞ்ஜோதி, ஆண்டவரே மாயைக்கு மனம் அடிமை என்பதற்கு ஆதாரம்

மாயை எனும் இரவில் விடயவாதனை யெனும்
கள்வர் தாம் வந்து மன அடிமையை எழுப்பி
அவனைத் தமது வசமாக உளவு கண்டு ................

(திருவருட்பா 2597)

இருள் என்பது ஆணவமே என்றதற்கு ஆதாரம்

நிலந்தெளிந்தது கண மழுங்கின சுவண நீடொளி
தோன்றிற்று கோடொலிக்கின்ற
அலர்ந்தது தாமரை <u>ஆணவ இருள்</u> போயழிந்தது
கழிந்தது மாயை மாலிரவு
புலர்ந்தது தொண்டரோடு அண்டரும் கூடிப்
போற்றியோ சிவ சிவ போற்றியென்கின்றார்
இலங்குருவளித்த என் அருட்பெருஞ்ஜோதி
என் குருவே பள்ளி எழுந்தருளாயே

(திருவருட்பா 4887)

மனம் நிராசையானால்

| | |
|---|---|
| மாயை | இல்லை |
| கருமம் | இல்லை |
| நான் | இல்லை |

அருள் ஒன்றே இருக்குமாம்.

**சுருள் விரிவுடைமனச் சுழலெலாம் அறுத்தே**
**அருள் ஒளி நிரப்பிய அருட்பெருஞ்ஜோதி** (330)

அருள் என்பது நீளமான ஒன்றைச் சுருட்டிவைப்பது. இரும்புத் தகடு சுருட்டிவைக்கப்பட்டிருக்கும். பிரித்தால் நீண்டு கொண்டே வரும். இந்த மனமானது சுருள்போல் விரிவுடையது, எனவே சுருள் விரிவுடைமனம் என்றார். ஆற்றிலே வெள்ளம் வரும் போது ஆங்காங்கே சுழல் உண்டாகும். வெள்ளத்திலே மிதந்து வரும் பொருள் சுழலிலே அகப்பட்டுவிடுமானால் அந்தப் பொருள் அந்தச் சுழலிலேயே சிக்கிக் கொள்ளும். இந்த மனமும் அந்தச் சுழல் போன்றது. ஏதாவது ஒரு விடயம் மனதிலே எழுமானால் அதிலேயே அழுந்திவிடும் இயல்புடையது. சுருள்போன்று நீண்டுகொண்டும் சுழல் போன்று சிக்கிக் கொண்டும் இருக்கின்ற மனதை அறுத்து அந்த இடத்திலே அருள் ஒளியை முழுவதுமாக நிரப்பிய அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே,

மனம் அடங்காத தன்மையே சுருள் எனப்பட்டது. ஏதாவது ஒன்றில் மனமானது எப்போதும் சுழன்றுகொண்டே இருப்பதால் மனச் சுழல் எனப்பட்டது.

விரிந்த எண்ணங்களும் சுழன்றுகொண்டே இருக்கின்ற நினைவுகளும் அறுபட்டால் அருள் ஒளி அவ்விடத்தே நிரம்பிவிடுமாம்

**விருப்போடிகலுறு வெறுப்பும் தவிர்த்தே**
**அருட் பேறளித்த அருட்பெருஞ்ஜோதி** (332)

சிலரைக் கண்டால் ஒருவித விருப்பமும் வேறு சிலரைக் கண்டால் ஒருவித வெறுப்பும் இயல்பாகவே எந்தவிதக் காரணமும் இல்லாமல் ஏற்படுவது உண்மை. அன்றாட வாழ்வில் பலரைச் சந்திக்கின்றோம். சில பல காரணங்களாலும் ஒருசிலர் மீது விருப்பமும், ஒரு சிலர் மீது வெறுப்பும் ஏற்படுகிறது. இது சாதாரண மக்களுக்குப் பொருந்தும், எல்லா ஜீவன்களையும் தன்னைப் போலவே நேசிக்கின்ற ஞானிகளுக்கு விருப்பு வெறுப்பு என்பதே இருக்காதாம்.

தனக்கு உபகாரம் செய்வோரிடம் விருப்பம் ஏற்படுவதும் தனக்கு இன்னல் தருவோர்மீது வெறுப்பு ஏற்படுவதும் மனித இயல்பு, ஆனால் ஞானிகட்கு இந்த நிலையிலும் விருப்பு வெறுப்பு உண்டாகாதாம். உதாரணத்திற்கு வள்ளலாரே ஒரு நிகழ்ச்சியைக் கூறுகிறார்.

முற்றும் துறந்த நிர்வாண சந்யாசி ஒருவர் சாலையில் வந்து கொண்டிருந்தார். பெண்கள் உலாவுகின்ற இந்தச் சாலையில் நிர்வாணமாக அந்தச் சந்யாசி வருவதைப் பார்த்த ஒருவன் அவர் மீது சினங்கொண்டு கல்லால் அடித்தான். அந்த வழியாக வந்து கொண்டிருந்த மற்றொருவன் இந்தக் காலத்திலும் எந்தப் பற்றும் இல்லாத சந்யாசி ஒருவர் இருக்கிறாரா என்று ஆச்சரியப்பட்டு அவருக்குச் சில பழங்களைக் கொடுத்தான். இந்த இரண்டையும் பார்த்துக் கொண்டிருந்த மூன்றாம் நபர், சந்யாசியையும் கல்லால் அடித்தவனையும் பழம் கொடுத்தவனையும் (மூன்று பேரையும்) அழைத்துக் கொண்டு நீதிபதியிடம் கொண்டு போய் யார் செய்தது சரி என்று கேட்டான். நீதிபதி சந்யாசியிடம் யார் கல்லால் அடித்தது என்று கேட்டார். சந்யாசியோ பழம் கொடுத்தவன் கல்லால் அடித்தான் என்று பதில் கூறினார். உடனே நீதிபதி, யார் பழம் கொடுத்தது என்று கேட்டார். கல்லால் அடித்தவன் பழம் கொடுத்தான் என்று சந்யாசி கூறினார். கல்லால் அடித்தவன் மீது வெறுப்பும், பழம் கொடுத்தவன் மீது விருப்பமும் கொள்ளாது எல்லாம் இறைவன் செயல். கல்லால் அடித்ததும் பழம் கொடுத்ததும் இறைவன் செயலே என்பது தான் சந்யாசி நிலை. இந்தச் சந்யாசியின் நிலையை நம் பெருமானார் பெற்றிருந்தார்.

ஓர் பால் விருப்பமும் மற்றோர் பால் இழிந்த குணமுடைய வெறுப்பும் ஏற்படாது தடுத்து அருளாகிய பெரும் பேற்றை அளித்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**அருட்பேர் தரித்து உலகனைத்தும் மலர்ந்திட**
**அருட் சீர் அளித்த அருட்பெருஞ்ஜோதி** (334)

இறைவன் வள்ளலாரைத் தன் மகன் என்று பலமுறை அழைத்தான். (ஆதாரம்)

பேருலகெல்லாம் மதிக்கத் தன் பிள்ளை
என்றென்னைப் பெயரிட்டழைத்தே
சீருறச் செய்தது பாரீர் - திருச்
சிற்றம்பலத்தே திருநட ஜோதி

(திருவருட்பா 4614)

நடராச பதிமாலை பேருற்ற உலகிலுறு சமய மத நெறியெலாம் என்று தொடங்கும் 3677ம் பாட்டில் நீ என் பிள்ளை ஆதலால் இவ்வேலை புரிக என்றிட்டனம், மனதில் வேறெண்ணற்க என்று இறைவன் கூறியிருக்கிறார். ஆண்டவனின் பிள்ளையாக வள்ளலார் இருந்த காரணத்தால் அவருக்குத் திருவருட் பிரகாச வள்ளலார் என்ற சிறப்புப் பெயர் அமைந்தது.

திரு அருட் பிரகாசர் என்ற அருட்பேர் தரித்து உலக உயிர்கள் அனைத்தும் மகிழ்ச்சியினாலும் இன்பத்தினாலும் அகம் முகம் இரண்டும் மலர்ந்தே விளங்கும்படி எல்லோரையும் வாழ்விக்கின்ற அருட்சீர் அளித்த அருட்பெருஞ்ஜோதி.

இந்த மண்ணுலகில் உயிர்கள்படும் துயரத்தைக் கண்ணால் கண்டோ காதால் கேட்டோ கணமும் நான் சகித்திடமாட்டேன். உன் அருளால் அவ்வுயிர்கள் படும் துன்பத்தைப் போக்கி அவைகள் இன்புறச் செய்ய வேண்டும் என்று தான் ஆண்டவனிடம் வள்ளலார் கோரினார். ஆதாரம்.

மண்ணுலகதிலே உயிர்கள் தாம் வருந்தும் வருத்தத்தை ஒரு
சிறிதெனினும்
கண்ணுறப் பார்த்தும் செவியுறக் கேட்டும் கணமும் நான்
சகித்திட மாட்டேன்
எண்ணுறும் எனக்கே நின்னருள் வலத்தால் இசைத்த
போதிசைத்த போதெலாம்
நண்ணுமவ்வருத்தம் தவிர்க்கும் நல் வரந்தான் நல்குதல்
எனக்கிச்சை எந்தாய்

(திருவருட்பா 3408)

**உலகெலாம் பரவ என் உள்ளத்திருந்தே**
**அலகிலா ஒளி செய் அருட்பெருஞ்ஜோதி** (336)

உன் அருள் நெறியானது உலக முழுவதிலும் பரவுமாறு என் உள்ளத்தினுள்ளே நீ வீற்றிருந்து என்னை உன் பணி செய்ய ஆளாக்கிக் குறையாத ஒளியை அதாவது பேரறிவு விளக்கத்தை எனக்களித்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

அப்பா நான் வேண்டுதல் கேட்டு அருள்புரிதல் வேண்டும் என்ற பாடலில்கூட எப்பாரும் எப்பதமும் எங்கணும் நான் சென்றே எந்தை நினது அருட்புகழை இயம்பியிடல் வேண்டும் என்று வேண்டுவார்.

தான் பெற்ற பேற்றை உலகமெலாம் பெற வேண்டும் என எண்ணியவர், சன்மார்க்கநெறி உலகெலாம் பரவ நீ குறையாத ஒளியைத் தர வேண்டும் என வேண்டுகின்றார் இறைவனிடம்.

## முன்னுரை 2ம் பகுதி

அருட்பெருஞ்ஜோதி அகவலில் முதலில் 336 வரிகள் முன்னுரையாக அமைந்துள்ளன எனக் கருத இடம் அளித்தன. 367 வரி முதல் மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய பஞ்சபூதங்களின் விரிவை ஒவ்வொன்றாக வரிசையாக விளக்குகின்றார். 337வது வரி முதல் 366வது வரி வரை இந்த பஞ்சபூத விரிவுகளின் முன்னுரையாக அமைத்திருக்கின்றார்.

விண்ணுக்குள் விண்ணாக, காற்றினுள் காற்றாக, நெருப்பினுள் நெருப்பாக, நீரினுள் நீராக, மண்ணினுள் மண்ணாக விளங்குவது அருட்பெருஞ்ஜோதியே என்கின்றார்.

இந்த முன்னுரையின் முடிவில் ஆகாயம் சிவத்தின் விரிந்த நிலை என்றும், காற்று சக்தியின் பெருகும் நிலை என்றும், நெருப்பு நடு நிலை வகிப்பது என்றும், அலை வளர் நிலை

நீருக்குண்டென்றும் சுத்தமான தங்கம் கிடைப்பதோ பூமியில் என்றும் விளக்குகின்றார்.

முன்னுரையின் விளக்கத்தை முதலில் காணலாம்.

பஞ்ச பூதங்களாகவும் இறைவனே விளங்குகின்றான்.

வானே அவ்வானுலவும் காற்றே காற்றின் வரு நெருப்பே நெருப்புறு
நீர்வடிவே நீரிற்
றானேயும் புவியே அப்புவியில் தங்கும் தாபரமே சங்கமமே
சாற்றுகின்ற
ஊனே நல்லுயிரே உள்ளொளியே உள்ளத்து உணர்வே அவ்வுணர்வு
கலந்து ஊறுகின்ற
தேனே முக்கனியே செங்கரும்பே பாகின் தீஞ்சுவையே சுவை
அனைத்தும் திரண்ட தேவே
(மகாதேவ மாலை 25)

| | | | |
|---|---|---|---|
| ஆகாயம் | - வெளி | - முடிநிலை | இந்த அமைப்பு நம் பெருமானாரின் அறிவாற்றலுக்கோர் உதாரணம் |
| காற்று | - இடைநடு | - கடைநடு | |
| நெருப்பு | - நடு | | |
| நீர் | - அடி நடு | | |
| மண் | - அடி | | |

**விண்ணினுள் விண்ணாய் விண்ணடு விண்ணாய்**
**அண்ணி நிறைந்த அருட்பெருஞ்ஜோதி** (338)

விண் என்பது ஆகாயம் - ஆகாயம் என்பதோ தோற்றப்படாத ஒரு பொருள் - இறைவனும் அதனுள்ளே தோற்றமில்லாமல் இருப்பதால் விண்ணினுள் விண்ணாய் விளங்குகின்றான். அதாவது விண்ணுள் வெளியாய் இறைவன் விளங்குகின்றான்.

எந்த ஒன்றையும் அந்தரிக்கக்கூடிய சக்தி, ஆற்றல் விண்ணுக்கு உள்ளது. அந்த ஆற்றலும் தோற்றமில்லாத ஒன்றே. எனவே அதனை, அந்த அந்தரிக்கும் ஆற்றலையே விண் நடு விண்ணாய் என்றார்.

விண்ணுக்குள்ளே வெளியாயும் அந்த விண்ணினுள் அந்தரிக்கும் ஆற்றலாயும் பிரிவற்று நிறைந்து விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

விண்ணினுள் வெளி என்பதற்கு ஆதாரம் :

**வி**ண்ணே விண்ணுருவே விண்முதலே
விண்ணுள் வெளியே அவ்வெளி விளங்கு வெளியே
(மகாதேவ மாலை 26)

**விண்ணுறு விண்ணாய் விண்ணிலை விண்ணாய்**
**அண்ணி வயங்கும் அருட்பெருஞ்ஜோதி** (340)

உறு = அடைகின்ற விண் என்பது ஆகாயம் - வெளி
வெளியே வெளியை அடைகின்றதாம்.

அண்டங்கள் விரிவடைந்து கொண்டே இருக்கின்றதாம். இந்த வெளியானது எங்கும் நீக்கமற நிறைந்து இருப்பதும் அறிந்ததே. எவ்வளவு அண்டங்கள் உள்ளனவோ அவ்வளவையும் தன்னுள் அடக்கிக் கொண்டுள்ள இந்த விண்ணானது இன்னும் தோன்றுகின்ற அண்டங்கள் அத்தனைக்கும் இடங்கொடுக்கின்ற தன்மையுடையதாய் உள்ளது. இந்த நிலையே விண்ணுறு விண்ணாய் எனப்பட்டது.

விண்ணின் நிலை காலத்தால் மாறுபடாது என்றும் விண்ணாகவே விளங்குகின்ற தன்மையே விண்ணிலை விண்ணாய் எனப்பட்டது.

தோன்றிக் கொண்டே இருக்கும் அண்டங்கட்கு இன்னமும் இடங் கொடுத்துக் கொண்டே இருப்பதால் விண்ணுறு விண்ணாகியும் என்றும் மாறாத ஒரே தன்மையுடையதாய் உள்ளதால் விண்ணிலை விண்ணாயும் இவ்வண்ணங்களில் நெருங்கியும் விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

<u>விண்ணுறு விண்ணாய் ஆதாரம் :</u>

அண்டமெலாம் பிண்டமெலாம் உயிர்களெலாம் பொருள்கள்
ஆனஎலாம் இடங்களெலாம் நீக்கமற நிறைந்தே
கொண்டவெலாம் கொண்டவெலாம் கொண்டு கொண்டு மேலும்
கொள்வதற்கே இடங்கொடுத்துக் கொண்டு சலிப்பின்றிக்
கண்டவெலாம் கடந்து நின்றே அகண்டமதாய் அதுவும்
கடந்தவெளியாய் அதுவும் கடந்த தனிவெளியாய்
ஒண்டகு சிற்றம்பலத்தே எல்லாம் வல்லவராய்
ஓங்குகின்ற தனிக் கடவுள் ஒருவர் உண்டே கண்டீர்

(திருவருட்பா 3276)

**காற்றினுள் காற்றாய்க் காற்றிடைக் காற்றாய்**
**ஆற்றலின் ஓங்கும் அருட்பெருஞ்ஜோதி** (342)

எல்லாப் பொருள்களிலேயும் இறைவன் கலந்திருக்கின்றான். எந்தப் பொருளில் அவன் விளங்கினாலும் அதே பொருளாய் அவனும் இருப்பதால் அந்தப் பொருளிலிருந்து இறைவனைத் தனித்து உணர முடிவதில்லை.

காற்றுக்குள்ளே காற்றாகவும், அந்தக் காற்று மையங்கொள்ளும் சமயம் அதன் நடுவே தோன்றும் காற்றின் ஆற்றலில் ஓங்கி நிற்கின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**காற்றுறு காற்றாய் கானிலைக் காற்றாய்**
**ஆற்ற விளங்கும் அருட்பெருஞ்ஜோதி** (344)

எல்லா ஜீவன்களும் காற்றினால் ஜீவிக்கின்றன. சுவாசிக்கின்ற ஜீவன்களின் செயலால் காற்றின் அளவு எப்போதேனும் குறைவுபட்டுள்ளதா? அது தன்னைத் தானே வளர்த்துக் கொள்கின்ற தன்மையைத்தான் காற்றுறு காற்று எனப்பட்டது.

கால் என்பதும் காற்றே ஆகும்.

கால் நிலை இலக்கண விதிப்படிக் கானிலை ஆயிற்று.

காற்றின் நிலையும் என்றும் மாறுபடாதது. காற்று என்றும் காற்று தான். அதன் மாறுபடாத இயற்கைத் தன்மையே கானிலைக் காற்று எனப்பட்டது.

எவ்வளவு பயன்படுத்தப்பட்டாலும் தன் அளவில் குறைவுபடாது மென்மேலும் தன்னைத்தானே பெருக்கிக் கொண்டும் தன் நிலை என்றும் மாறாது ஒரே தன்மையுடையதாயும் செயல்படுமாறு விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**அனலினுள் அனலாய் அனல் நடு அனலாய்**
**அனலுற விளங்கும் அருட்பெருஞ்ஜோதி** (346)

எங்கும் நீக்கமற நிறைந்துள்ள இறைவன் நெருப்பினுள் நெருப்பாய் விளங்குகின்றான். நம் கண்ணிற்குப் புலப்படும் பெரிய நெருப்பு சூரியன்தான். அந்தச் சூரியன் எரிந்து கொண்டிருக்கின்றது. அது என்றும் அணைவதில்லை. எந்தப் பொருள் அந்தச் சூரியனில் எரிந்து கொண்டிருக்கின்றதோ அந்தப் பொருளை எரிகின்ற நெருப்பே மேலும் மேலும் தோற்றிக் கொண்டே இருப்பதால் எரியும் சக்தி என்றும் குறையாமலுள்ளது.

நெருப்பினுள்ளே நெருப்பாயும், நெருப்புக்கு நடுவே நெருப்பாய் இருந்து தன்னைத்தானே பெருக்கிக் கொண்டு விளங்கும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**அனலுறும் அனலாய் அனல் நிலை அனலாய்**
**அனலுற வயங்கும் அருட்பெருஞ்ஜோதி** (348)

பஞ்ச பூதங்களில் ஒன்றாகிய அக்னி அதாவது நெருப்பு தன்னைத்தானே பெருக்கிக் கொண்டு தானே தன்னை அடைந்து கொண்டு விளங்குகின்றது. அப்படி அடையும் நெருப்பாக விளங்குபவனும் இறைவனே.

நெருப்பின் நிலை நெருப்பாய் என்றும் விளங்குவதுடன் அது வெப்பத்தைப் பெற்றும் விளங்குகிறது.

நெருப்பு அடைந்த நெருப்பாய், நெருப்பின் நிலை நெருப்பாகவே விளங்கும்படிச் செய்து அதிலே நிறைந்த வெப்பமாய் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**புனலினுள் புனலாய்ப் புனலிடைப் புனலாய்**
**அனையென வயங்கும் அருட்பெருஞ்ஜோதி** (350)

புனல் என்பது நீர். எந்தப் பொருளிலும் அந்தப் பொருளாகவே இறைவன் விளங்குகின்றான். அதாவது தண்ணீரிலே இறைவன் இருக்கின்றானா என்றால் இருக்கின்றான். அவன் இல்லாத பொருள் எங்கும் இல்லை. எப்படி இருக்கின்றான்? தண்ணீருக்குள் தண்ணீராகவே இருக்கின்றான்.

நீருக்கும் நடு அதாவது மையம் என்ற நிலை உண்டு. கடலில் அலையைக் காண்கின்றோம். கடலானது தரையை விடச் சற்று அதிகமான உயரத்தில் இருக்கின்றது என்றும், அதனால் நீரானது தரையை நோக்கி வருகின்றது என்றும் கடல் நீரின் மையம் அந்த நீரை உள்ளிழுப்பதால் எழுந்து வந்த அலையானது உருண்டு மீண்டும் கடலை நோக்கியே சென்று விடுவதாகவும் நன்கு கற்றோர் கூறுகின்றனர். அந்த நீரின் மையத்தைத் தான் புனலிடை என்கிறார்.

தண்ணீருக்குள் தண்ணீராகவும் தண்ணீரின் நடுவே அதன் மையமாக இருந்து அதனை இயக்கிக் கொண்டும் எல்லா ஜீவன்கட்கும் தாயைப் போல் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

நாம் உண்கின்ற உணவை வளர்ப்பது தண்ணீர். நீரின்றி எப்பயிரும் வளராது. எனவேதான் தண்ணீர் அன்னைக்கு ஒப்பாகச் சொல்லப்பட்டது.

**புனலுறு புனலாய்ப் புனல் நிலைப் புனலாய்**
**அனையெனப் பெருகும் அருட்பெருஞ்ஜோதி** (352)

நீரானது பல விதமாகப் பயன்படுத்தப்பட்டும், வெப்பத்தினாலும், மண்ணாலும், காற்றாலும் குறைவு பட்டாலும் மழை முதலியவற்றால் தன்னைத் தானே மேன்மேலும் பெருக்கிக் கொண்டு வளர்கின்ற நிலைதான் புனலுறு புனல் ஆகும்.

தண்ணீர் நிலைபெற்று விளங்குவதுடன் பெற்ற தாய் வளர்ப்பது போல எல்லா ஜீவன்களையும் வளர்த்துத் தன் நிலை மாறாது வளர்கின்றவாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**புவியினுட் புவியாய்ப் புவி நடுப்புவியாய்**
**அவை தர வயங்கும் அருட்பெருஞ்ஜோதி** (354)

புவி என்பது பூமி - அதாவது பஞ்சபூதங்களில் ஒன்றாகிய மண். எல்லாப் பொருள்களிலேயும் நிறைந்துள்ள இறைவன் இந்த மண்ணிலும் நிறைந்துள்ளானாம். அந்த இறைவன் இந்த மண்ணுள்ளே எப்படி இருக்கின்றான். அவனும் மண்ணோடு மண்ணாக இருக்கின்றான்.

இந்த மண்ணின் நடுவே இருப்பது அதன் மையம். இந்தப் பூமி தன்னைத்தானே மணிக்கு 1500 கிலோ மீட்டர் வேகத்தில் சுற்றிக் கொண்டிருப்பதுடன் சூரியனையும் சுற்றி வருகின்றதாம். அந்தச் சுழற்சிக்கு எது ஆதாரம்? அந்தப் பூமியின் மையம் தான். இந்த ஆற்றல் தனியாகவா உள்ளது. அங்கும் மண்தான். எனவே புவியினுள்ளே புவியாகவும் புவியின் நடுவிலேயும் புவியாகவும் இருந்து அந்தப் புவியானது ஜீவன்கட்கெல்லாம் இயங்குகின்ற சபையாகவும் இயக்கி வருகின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு : மண் எவ்வளவோ பொருட்களைத் தருகின்றது. பயிர்கள் வளர்வது முதல் இரும்பு தங்கம் போன்ற பொருட்கள் வரை எல்லாம் மண் தருவதால் அவை தர வயங்கும் அருட்பெருஞ்ஜோதி என்றார்.

**புவியுறு புவியாய்ப் புவி நிலைப் புவியாய்**
**அவை கொள விரிந்த அருட்பெருஞ்ஜோதி** (356)

பூமியிலே தோன்றும் அத்தனை பொருட்களும் மீண்டும் மண்ணிலே புதைபடும் போது மண்ணாகவே மாறிவிடுகின்றது. செடியிலே பூக்கள் அழகாகத் தோன்றுகின்றது. அவை உதிர்ந்து மண்ணிலே விழுந்தால் மண்ணாகி விடுகின்றது. எந்தப் பொருளையும் தன் வசமாக்கித் தானாக்கிக் கொண்டு தன்னையே அடைகிறது மண். புவியுறு புவி என்பது மண் எதையும் மண்ணாக்கித் தானே அடைவது தான்.

அந்த மண்ணின் நிலை என்றும் மாறாத இயற்கைக் குணமுடையதாய் மண்ணாகவே உள்ளது.

முன் வரியில் மண் தரக்கூடிய சக்தி வாய்ந்தது என்றார். இந்த வரியில் தான்தந்த எல்லாவற்றையும் தானே மீண்டும் எடுத்துக் கொள்ளும் சக்தியும் அதற்குண்டு என்பதை அவைகொள என்று எழுதுகின்றார்.

மண்ணானது தன்னைத் தானே உண்டாக்கி மென்மேலும் தன்னை அடைவதுடன், தன் மையத்தையும் தன்னைப் போலவே மண்ணாகவே காட்டி, தான் தந்த அத்தனைப் பொருட்களையும் தானே மீண்டும் கொள்ளுமாறு இயக்கும் அருட்பெருஞ்ஜோதி.

**விண்ணிலை சிவத்தின் வியனிலை அளவி**
**அண்ணுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (358)

விண் என்பது ஆகாயம் - வெளி - சூன்யம் சிவம் என்பது சும்மா இருக்கும் மௌன நிலை.

ஆகாயத்தின் நிலையை மோனத்தின் பரவிய நிலையாக அமைத்து இவை இரண்டும் நெருக்கமாக உள்ளவாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

சிவத்தின் மௌன நிலையே விண்ணிலை.

**வளி நிலை சக்தியின் வளர் நிலை அளவி**
**அளியுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (360)

வளி என்பது காற்று
சக்தி என்பது ஆற்றல்.

காற்றின் நிலையை ஆற்றலின் வளர்க்கும் நிலையாக அமைத்து அதையும் பழுத்த பக்குவ அனுபவத்தில் அடையுமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

முன் வரியிலே விண்ணின் நிலை
சிவத்தின் நிலை எனப்பட்டது.

சிவம் பாதி சக்தி பாதி
விண்ணிலே வெளி. அதில் காற்று
விண் நிலை. சிவத்தின் நிலை
வளி நிலை. சக்தியின் நிலை.

**நெருப்பது நிலை நடு நிலையெலாம் அளவி**
**அருப்பிட வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (362)

மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய பஞ்ச பூதங்களில் நடுநிலையாக விளங்கும் நெருப்பானது நல்ல பொருள் என்றும், தீய பொருள் என்றும், சுத்தமான பொருள் என்றும், அசுத்தமான பொருள் என்றும் பாராது எதனையும் தான் கொண்டு எரிக்கக்கூடிய பக்குவம் விளங்குமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**நீர் நிலை திரை வளர் நிலை தனை அளவி**
**ஆர்வுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (364)

கேணி, குட்டை, குளம், ஏரி முதலியவைகள் நீர் நிலை எனப்படும். கடலோ பெரியதோர் நிலை. முன்னால் கூறிய அனைத்திலும் நீர் வற்றிவிடும். ஆனால் கடலில் என்றும் நீர் வற்றுவதில்லை. அந்தக் கடல் நீரிலே அலைகள் ஓய்வின்றி எழுமாறு அமைந்துள்ளது. அந்தக் கடலுக்குள்ளே என்னென்ன பொருட்கள் உள்ளன என்பதையும் வெளிக்காட்டாது திரைபோல் மறைத்து வைக்கும் ஆற்றலுடனும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**புவி நிலை சுத்தமாம் பொற்பதி அளவி**
**அவையுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (366)

பூமியின் நிலையானது சுத்தமான பொன் கிடைக்கும் பூமியாகப் பக்குவமாக அமைத்து அவற்றை நாமடையுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி

(அல்லது)

மண்ணாலான இந்தத் தேகமானது மலம் நீங்கிச் சுத்த தேகமாக மாறினால் சுவர்ண தேகம் என்ற பக்குவ நிலை அடையும்படி வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

(ஆதாரம்)

பொத்திய மலப்பிணிப் புழுக்குரம்பைதான்
சித்தியல் சுத்த சன்மார்க்கச் சேர்ப்பினால்
நித்திய மாகியே நிகழும் என்பது
சத்தியம் சத்தியம் சகத்துளீர்களே

(திருவருட்பா 5402)

## முன்னுரை 3ம் பகுதி

பின்வரும் வரிகளிலே பஞ்ச பூதங்களாகிய மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்பனவற்றுள் அடி நிலை வகிக்கும் இந்த மண்ணின் தன்மை எவ்வாறெல்லாம் இறைவனால் வகுக்கப்பட்டுள்ளது என்ற உன்னதமான விளக்கங்களை வள்ளலார் தருகின்றார்.

இந்தப் பூமி திடப் பொருளாக இருப்பதால் ஓரறிவுள்ள தாவரம் முதல் ஆறறிவுள்ள மனிதர்கள் வரை அதன் மீது இருந்து வாழ வகை செய்கிறது. ஐந்து வகையான பொன் விளையும் பூமி இது எனச் சுட்டிக் காட்டுகின்றார். நிலத்தை ஐந்து வகையாக நம் முன்னோர் வகை செய்துள்ளதையும் விளக்கியுள்ளார். இந்த மண்ணிற்கு இயல்பான வாடையுண்டு என்பது மட்டுமின்றி இந்த மண்ணிலேயிருந்து விளையும் பூக்கள் போன்றவைகள் பலவிதமான மணங்களை வீசுமாறு செய்வதும் இந்த மண்ணேயாகும். நால்வகைப் பிறப்புகளில் பூமியிலிருந்து தோன்றும் பிறவிகள் ஒரு வகையாகும். மணம், சுவை, தோற்றம், ஸ்பரிசம் ஓசை ஆகிய ஐந்து இயல்புகளும் இந்த மண்ணிற்கு உள்ளனவாம். இந்தப் பூமி தரை மட்டமாகச் சம பூமியாக உள்ளது. உயர்ந்த மலையாகவும் உள்ளது. கடலுக்கடியில் தரை மறைந்தும் உள்ளது. மற்ற பூதங்களின் தன்மையும் இந்த மண்ணிற்கு உண்டு. மேலும் இரவு பகல் உண்டாகாவிட்டால் ஜீவர்கள் உயிர் வாழ இயலுமா? ஈர்ப்பு சக்தி பூமிக்கு இல்லாதிருக்குமானால் அதனுடைய சுழற்சி வேகத்தில் நாமெல்லாம் எங்கெங்கோ தூக்கி எறியப்பட்டிருப்போம். எந்தப் பூமி மிக வேகமாகச் சுற்றிக் கொண்டிருக்கிறதோ அதே பூமியின் மேல் நாமிருந்தும் அதன் சுழற்சியை உணர முடியவில்லை. சலவைக்கல் கிரானைட் போன்ற ஒளி வீசும் பாறைகளும் நமக்கு

மண்ணிலிருந்து கிடைக்கின்றது. இந்த மண் களி மண், செம்மண், வண்டல் மண், கரிசல் மண் போன்று பல வகையாக விளங்கிப் பெரும் பயன்களை நமக்கு அளிக்கின்றது. இன்றும் நாம் எண்ணிப் பாராத பல நிலைகளை நமது பெருமானார் சிந்தித்துப் பார்க்கின்றார்கள். அண்டாண்டங்கட்கும் அப்பால் கடந்த அறிவு கொண்ட நம் பெருமானாரின் சிந்தனைகளை அளவிட நம்மால் இயலுமா !

**மண்ணினில் திண்மையை வகுத்து அதில் கிடக்கை**
**அண்ணுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (368)

இந்தப் பூமியானது அழுத்தமான, பலமான, உறுதி வாய்ந்த கெட்டித் தன்மை பெற்று அதன் மீது அசையும் பொருள், அசையாப் பொருள் அனைத்தும் நெருங்கியே இருக்கும்படி அமைத்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

குறிப்பு : இந்தப் பூமியானது தன்னைத் தானே சுற்றிக் கொள்வதுடன் சூரியனையும் சுற்றி வருகின்றது. அந்தச் சுழற்சி வேகத்தினால் கூட எந்தப் பொருளும் எறியப்படாமல் பூமியின் மீதே பொருந்தி இருக்குமாறு அமைத்துள்ளது இந்த நிலையையே கிடக்கை என்று கூறுகின்றார்.

**மண்ணினில் பொன்மை வகுத்து அதில் ஐம்மையை**
**அண்ணுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (370)

பூமியில் சுரங்கம் தோண்டிப் பொன்னை எடுக்கின்றோம். கோலார் தங்க வயல் ஓர் உதாரணம்.

பிருதிவி என்கிற இந்தப் பூமியில் பொன்னையும் உண்டாக்கி அதில் 1. ஆணிப்பொன், 2. செம்பொன் 3. பசும்பொன் 4. ஐம்புநதம் 5. கிளிச்சரை என்ற ஐந்து வகையைக் காட்டி அவற்றை நாம் அடையும்படி வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**மண்ணினில் ஐம்பூ வகுத்து அதில் ஐந்திறம்**
**அண்ணுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (372)

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்து வித நிலங்கட்குரிய பூக்களை வகுத்து அந்த மலர்கட்கெனச் சில தனித் தன்மைகளை உண்டாக்கி அவை என்றும் மாறாது நிலைத்து நிற்கும்படி வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

உதாரணம் : குறிஞ்சி மலர் 12 ஆண்டுகட்கு ஒரு முறை பூக்கும் என்பது அதன் தனித்தன்மை.

**மண்ணினில் நாற்றம் வகுத்ததில் பல்வகை**
**அண்ணுறப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி** (374)

மண்ணில் மணம் உண்டு. மழை பெய்யும் போது வீசும் வாடையை மண்வாடை என்றே சொல்வது வழக்கம்.

எல்லாப் பூக்களும் மண்ணிலேயிருந்து வளரும் செடிகளில் பூத்தாலும் அவைகளின் மணமோ வெவ்வேறாக இருக்கின்றது.

அந்தப் பூக்களிலிருந்து வரும் வித விதமான மணத்தை நாம் அனுபவிக்கின்றோம்.

மண்ணிற்கு மணம் கொடுத்து அதிலே பலவகை மணங்கள் தோன்றும்படிச் செய்வித்து அவற்றை நாம் அனுபவிக்கும்படிப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**மண்ணினில் பற்பல வகை கருநிலை இயல்**
**அண்ணுறப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி** (376)

தாவரங்களும் உயிர் இனங்களே. தாவரங்கள் என்ற பொதுப் பெயரிலே எத்தனை விதமான தாவரங்கள்! பறவைகளில் - மிருகங்களில் ஒவ்வொன்றிலும் எத்தனையோ வகைகள். எல்லா ஜீவன்களின் நிலையும் பூமியிலே பொருந்தி வாழுமாறு அமைந்துள்ளது. மண்ணிலே பலப்பல வகையான உயிரினங்கள் பூமியை ஆதாரமாகக் கொண்டே வாழ்வடையப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி.

**மண்ணினில் ஐந்தியல் வகுத்து அதில் பல்பயன்**
**அண்ணுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (378)

ஐந்தியல் : மணம் சுவை தோற்றம் ஸ்பரிசம் ஒசை.

மண்ணினில் மணம் சுவை தோற்றம் ஸ்பரிசம் ஓசை ஆகிய ஐந்து இயல்புகளையும் அமைத்து அவற்றால் பலவிதப் பயன்கள் நாம் அடையும்படி அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**மண்ணிடை அடிநிலை வகுத்து அதில் பன்னிலை**
**அண்ணுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (380)

பஞ்ச பூதங்களை மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்பர். மண்ணை அடியாகவும் ஆகாயத்தை முடியாகவும் கொண்டுள்ளனர் நமது முன்னோர். இதையே நம் பெருமானாரும் மண்ணிடை அடிநிலை என்கின்றார்.

பூமியைப் பஞ்ச பூதங்களில் அடி நிலையாக அமைத்து அதில் சமமான பூமி - வளர்ந்த நிலை (மலை) மறைந்த நிலை (கடலுக்கடியில்) எனப் பல நிலைகளை அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**மண்ணில் ஐந்தைந்து வகையும் கலந்து கொண்டு**
**அண்ணுறப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி** (382)

ஐந்தைந்து = ஐம்பூதங்களும் அவற்றின் தொழில்களும்
மண் = தோற்றுவிக்கிறது
நீர் = வளர்க்கிறது
நெருப்பு = அழிக்கிறது
காற்று = அதுவே மறைந்திருந்து மறைக்கின்றது
ஆகாயம் = அருளல்
மண்ணிலே மண்ணுண்டு - நீருண்டு - நெருப்புண்டு - காற்றுண்டு - வெளியுமுண்டு.
மண்ணிலே மண் = மண்ணே மண்ணாக விளங்குவது
மண்ணிலே நீர் = மண்ணுக்கடியில் நீர் கேணி ஆதாரம்
மண்ணிலே நெருப்பு= மண்ணுக்கடியில் நெருப்பு எரிமலை ஆதாரம்

மண்ணிலே காற்று = சிலிகண்டை ஆக்ஸைடு என்று விஞ்ஞானத்தில் அதற்குப் பெயர்

மண்ணிலே ஆகாயம்= ஆகாயம் அந்தரிக்கும் - மண்ணும் எந்தப் பொருளையும் மண்ணாக்கி இல்லாமல் செய்து விடும்.

மண்ணிலே ஐம்பூதங்களும் அவற்றின் ஐந்து தொழில்களும் கலந்து நின்று என்றும் இணைந்தே செயல்படுமாறு புரிந்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**மண் இயல்சக்திகள் மண் செயற் சக்திகள்**
**அண்ணுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (384)

தன்னைத்தானே சுற்றிக் கொண்டு சூரியனையும் சுற்றி வருவது இந்த பூமிக்குள்ள இயல்பான ஒரு சக்தி - எந்த ஒன்றையும் தன்பால் ஈர்க்கின்ற புவிஈர்ப்புசக்தி (Gravitation Power) அதனுடைய இயல்பான சக்தி. இந்த இயல்பான சக்திகளால் இரவு பகல் ஏற்படுவதுடன் பருவ கால மாற்றங்களும் ஏற்படுகின்றன. எந்தப் பொருளையும் மக்கவைத்து மண்ணாகவே ஆக்கிவிடுவது மண்ணின் செயல்பாடு. தன் மீதுள்ள அசையும் அசையாப் பொருள் அனைத்தையும் தாங்குவதும் அதன் செயல்பாடே. இவ்வாறே மண்ணின் இயல்பான சக்திகளும் செயல்பாட்டுக்குரிய சக்திகளும் என்றும் விலகாது நிலவும்படி வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**மண் உருச் சத்திகள் மண்கலைச் சத்திகள்**
**அண்ணுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (386)

பானை, சட்டி, பொம்மைகள், பீங்கான் வகைகள் முதலானவையெல்லாம் மண்ணிலிருந்து உருவாகக் கூடியவை. இயற்கையின் வண்ண வண்ண அழகிய காட்சிகளும் உயர்ந்த பசுமையான மலைகளும், நீருற்றுகளும், நீர்வீழ்ச்சிகளும் மண்ணின் கலைச் சக்திகள் எனலாம் இவ்வாறு மண்ணுருச் சக்திகளும் மண்கலைச் சத்திகளும் விலகுறாது நிலைத்து விளங்குமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**மண் ஒளிச் சத்திகள் மண் கருச் சத்திகள்**
**அண்ணுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (388)

சலவைக்கல், கிரானைட் பாறைகள் போன்ற ஒளி வீசும் பாறைகளும் மண்ணால் ஆக்கப்பட்ட பாறைகளே ஆகும். இந்த மண்ணானது சூரிய ஒளியைக் கிரகித்துப் பின்னர் வெளியிடுவதால் வாயு மண்டலம் வெப்பமாகி அதனால் பல விளைவுகள் உண்டாகின்றன. மண்ணுக்கு அடியில் நீரும், அதனடியில் பலவித உலோகங்களும் மையத்தில் நெருப்புக் குழம்பும் இருந்து எரிமலை, நில நடுக்கம், பூகம்பம் போன்ற பல நிகழ்ச்சிகளை ஏற்படுத்துகின்றன. இவை மண்கருச் சக்திகளாகும். இவ்வாறு மண் ஒளிச் சக்திகளையும் மண்கருச் சக்திகளையும் பூமியை விட்டு அகலாது விளங்க வைத்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**மண்கணச் சத்திகள் வகை பல பலவும்**
**அண்கொள அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (390)

மண்ணிலேயிருந்து தாவரங்கள் தோன்றின. வித்துக்கள் இல்லாது தாவரங்கள் எப்படித் தோன்ற முடியும் என்ற வினா எழலாம். தாவரங்கள் இல்லாமல் வித்துக்கள் எப்படித் தோன்ற முடியும் என்ற வினாவும் எழ வாய்ப்பு உள்ளது. இந்த ஐயத்தைப் போக்க நம் பெருமானார் ஒரு காலத்தில் விருக்ஷம் அனாதி. ஒரு காலத்தில் வித்து அனாதி என்கிறார். எப்படியிருந்தாலும் ஆதியில் தோன்றியது வித்தோ, விருட்சமோ மண்ணிலிருந்து தான் தோன்றியிருக்க முடியும். பின்னர் தோன்றிய பறவைகள் மிருகங்கள் மனிதர்கள் முதலிய அனைத்து ஜீவராசிகளும் மண்ணிலேதான் நெருங்கி வாழ்கின்றன. கணம் என்றால் கூட்டம். ஜீவராசிகளில் எந்த ஒன்றை எடுத்துக் கொண்டாலும் அது பல்லாயிரக் கணக்கில் உள்ளதால் ஒவ்வொரு ஜீவராசியும் ஒரு கூட்டம். அதாவது ஒரு கணம். இதைத் தான் மண் கணச் சத்திகள் என்றும் அதன் வகை பலப்பலவாக உண்டாக்கி அவையனைத்தும் இந்த மண்ணை ஆதாரமாகக் கொண்டே வாழும்படி வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**மண்நிலைச் சத்தர்கள் வகை பல பலவும்**
**அண்ணுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (392)

சத்திகள் என்பது செயல்பாடு எனில்
சத்தர்கள் என்பது செயல்பாட்டிற்குக் காரணமாகும்.

மண்ணிலே தாவரங்கள் முதலியன தோன்றின என்றால் அவைகளின் தோற்றத்திற்கு மண்ணானது காரணமாயிற்று. (படைத்தல்)

தாவரங்கள் வளர்வதற்கும் மண்ணே காரணமாகின்றது (காத்தல்) தாவரங்கள் மட்டுமின்றிப் பறவைகள் விலங்குகள் ஏன் மனிதர்கள் உட்பட தாவரங்களின் இலைகள், காய்கள், கனிகள், வித்துக்கள் ஆகியவற்றைப் புசித்து உயிர்வாழ்வதால் அனைத்துயிர்களின் வாழ்வுக்கும் மண்ணே காரணமாகின்றது.

தோன்றிய அனைத்தும் அழிந்து அதே மண்ணில் மக்கி மண்ணாக மறைந்து விடுவதால் அழித்தல் தொழிலுக்கும் மறைத்தல் தொழிலுக்குங்கூட மண்ணே காரணமாகின்றது.

மீண்டும் அவைகளைத் தோற்றுவித்து அருளல் தொழிலுக்கும் மண் காரணமாகின்றது.

மண்ணின் நெருக்கத்தால் மலைகள் தோன்றின. மண்ணின் விரிவால் கடல்கள் தோன்றின. பூமிக்கடியிலுள்ள நெருப்பு வெளிப்படும்போது எரிமலையாக வெடிக்கின்றது. இவ்வாறு நிகழும் பலப்பல செயல்பாடுகளுக்குக் காரணமாயும் உள்ள பலப்பல சத்தர்களால் காலமுள்ளளவும் விலகாது உள்ளவாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**மண் கரு உயிர்த்தொகை வகை விரி பலவா**
**அண் கொள அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (394)

தாவரங்களிலும் எத்தனையோ வகை உள்ளன. மேலும் ஊர்வன, பறப்பன, நடப்பன என்ற படைப்புகளிலும் பல விதம் உள்ளன. அவைகள் வெவ்வேறு விதங்களாக உள்ளது மட்டுமல்லாமல் எண்ணிக்கையிலும் அளவுக் கடங்காது உள்ளன.

மண்ணிலே வாழ்கின்ற ஓரறிவு முதல் ஆறறிவு படைத்த ஜீவர்கள் வரை தேகங்களால் பலவித மாற்றங்களைக் கொண்டும், எண்ணிக்கையிலும் அளவு கடந்தும் விளங்கும்படி அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**மண்ணினிற் பொருள் பல வகை விரி வெவ்வேறு**
**அண்ணுறப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி** (396)

மண்ணிலே நிலக்கரி, இரும்பு, செம்பு, வெள்ளி, தங்கம், வைரம் போன்ற பலவகையான பொருட்கள் கிடைக்கின்றன. ஒவ்வொரு பொருளும் பல வகையாகவும் விளங்குகின்றன. எல்லாம் நமக்கே பயன்படுகின்றன.

மண்ணிலே பலவகையான பொருட்களும் அந்தப் பொருளிலும் பல்வேறு விதங்கள் கிடைக்கும்படியும் புரிந்த அருட்பெருஞ்ஜோதி.

**மண்ணுறு நிலைபல வகுத்திற் செயல்பல**
**அண்ணுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (398)

இந்தப் பூமியிலே நாம் காணும் மண் திட நிலையாக உள்ளது. எரிமலை வீசும் நெருப்புக் குழம்பிலே மண்ணானது திரவ நிலையில் உள்ளது. ஆற்று மணல் ஒட்டாது தனித் தனியாக உதிரியாக உள்ளது - களி மண்ணோ வழ வழவென்று அடர்த்தியாக உள்ளது.

இவ்வாறு மண் அடையக்கூடிய நிலைகள் பலப்பலவாக வகுத்து அதில் செயல்பாடுகளும் பலவாக அமையும்படி வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**மண்ணிடைப் பக்குவம் வகுத்ததிற் பயன்பல**
**அண்ணுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (400)

இந்த மண்ணுலகம் தன்னைத் தானே சுற்றுவதால் இரவு பகல் ஏற்படுகின்றது. பகலிலே தோன்றும் சூரிய வெப்பம் இரவில் தணிந்து பூமி குளிர்ந்துவிடுவது ஒரு பக்குவ நிலை. அவ்வாறு நிகழாவிட்டால் ஜீவன்கள் உயிர் வாழ முடியாது.

பூமியின் கெட்டித் தன்மையால் நாம் அதன் மீது இருக்க முடிகின்றது. நாம் இருக்கும் பூமி வெகு வேகமாகச் சுற்றுகின்றது. அதன் சுழற்சியை அதன் மீதே உள்ள நம்மால் அறிய முடியவில்லை. அதன் பக்குவத்திற்கு அதன் புவி ஈர்ப்பு சக்தி ஒரு நல்ல உதாரணம். அந்தச் சக்தி இல்லையேல் அதன் மீதுள்ள எந்தப் பொருளும் நிலைத்து இருக்க இயலாது.

வித்து முளையாகி பூமியை விட்டு வெளியே வரப் பூமி இடந்தருகின்றது. அதேபோல் கெட்டியான தரைகூட ஆலம்விழுது இறங்கிப் பூமியைத் தொட்டுப் பின் பூமிக்குள்ளேயே சென்று விடுகிறது. இவ்வாறு அளவற்ற பக்குவ நிலைகளால் நாம் பலவிதமான பயன்களை அடையுமாறு புரிந்த அருட்பெருஞ்ஜோதி.

**மண்ணியல் பல பல வகுத்ததிற் பிறவும்**
**அண்ணுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (402)

மண் இயல் அதாவது களி மண், செம்மண், வண்டல் மண், ஆற்று மண் முதலிய பலவாக வகுத்து அவை ஒவ்வொன்றினாலும் பலவிதமான விளைவுகள் ஏற்படும்படி வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

## (நீரியல்) - முன்னுரை 4ம் பாகம்

பஞ்ச பூதங்களில் ஒன்றான நீரின் தன்மைகளை விளக்குகின்றார். அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் தண்ணீரில் எவ்வாறு கலந்து விளங்குகின்றார் என்பதை அறிவிக்கின்றார்.

தண்ணீர் என்றாலே குளிர்ந்த தன்மையுடையது. உயர்ந்த இடத்திலிருந்து தாழ்ந்த இடம் நோக்கி ஊர்ந்து செல்வது, செடி கொடிகள் மரம் முதலானவை தண்ணீரிருந்தால் பசுமையாக இருக்கின்றன. தண்ணீரில்லையேல் அவை உலர்ந்து காய்ந்து விடும். செடிகளில் மலர்களை அதிக அளவில் மலரவைப்பதும் தண்ணீர்தான். கடல் நீரிலிருந்து கிடைக்கும் உப்புதான் எல்லாப் பண்டங்கட்கும் சுவை சேர்க்கின்றது. நீரினில் சுவை தோற்றம் ஸ்பரிசம் ஓசை ஆகிய நான்கையும் உணர முடிகின்றது. பஞ்ச பூத வரிசைகளில் நீரானது மண்ணுக்கு அடுத்தும் நெருப்புக்கு முன்னும் வருவதால் அதை அடிநடு என்கின்றார். தண்ணீரின்

ஒளிரும் தன்மையும் அதிலிருந்து ஒளி உண்டாவதையும், அதன் ஆற்றல் மிகு செயற்பாடுகளையும், பல செயற்பாடுகளுக்குத் தண்ணீர் காரணமாக உள்ளதையும் தண்ணீரினால்தான் ஜீவன்கள் உயிர் வாழ்கின்றன என்பதையும் அறியும் போது பேராச்சர்யம் உண்டாகின்றது. நாம் சாதாரணமாகப் பயன்படுத்தும் தண்ணீரைப் பற்றி எண்ணிப் பார்ப்பது இல்லை. நம் பெருமானார் நன்கு சிந்தித்திருக்கின்றார். தண்ணீர் உறைந்த நிலையில் பனிக்கட்டியாக, கொதிக்கும் நிலையில் ஆவியாக அது நிலைமாறுவதை, அந்தத் தண்ணீர் எவ்வாறெல்லாம் நமக்குப் பயன்படுகின்றது என்பதனை, அதன் பக்குவத் தன்மையை நம் பெருமானார் பின்வரும் வரிகளில் விளக்கி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரும் அவரது அருளாற்றலும் தண்ணீரில் எவ்வாறு விளங்கிச் செயல்படுகின்றன என்பதை விளக்குகின்றார். காண்போம்.

**நீரினில் தண்மையும் நிகழூரொழுக்கமும்**
**ஆருற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (404)

நீரிலே குளிர்ந்த தன்மைதான் அதன் இயல்பானது. மேட்டிலிருந்து பள்ளத்தை நோக்கிச் செல்லும் ஊர்கின்ற ஒழுக்கமும் தண்ணீருக்கு இயல்பாக உள்ளது. இந்தத் தன்மையால் ஆறுகள் உண்டாயின. அந்த ஆற்று நீரினால் ஏராளமான கிராமங்களில் பயிர்கள் செழித்து வளருகின்றன. நீரினில் ஊர்ந்து செல்லும் தன்மையால் எவ்வளவோ பயன்கள் சிறப்புற அமையுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**நீரினில் பசுமையை நிறுத்தி அதில் பல**
**ஆருற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (406)

பயிர்களும், செடி, கொடிகளும், தாவரங்களும் பசுமையாகவும் செழுமையாகவும் வளர்வதற்குத் தண்ணீரே முக்கிய காரணமாகும். பசுமைத் தன்மையை நீரின் வசமாக நிறுத்தி அதனால் இயற்கைக்குச் செழுமை உண்டாக்குகின்றது. எல்லா ஜீவன்களும் உயிர் வாழ்வதற்குத் தண்ணீரே ஆதாரமாக உள்ளது.

தண்ணீரில் செழுமை அளிக்கும் பசுமையை நிறுத்தி அதிற் பற்பல சிறப்புகள் பெறுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**நீரிடைப் பூவியில் நிகழுறு திறவியல்**
**ஆர்தர வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (408)

செடிகளுக்கு நீர்விட்டால் அதிக எண்ணிக்கையில் பூக்கள் பூப்பதைக் கண்கூடாகக் காண்கின்றோம். நீரினால் பூக்கள் மலர்வதையும், அந்தப் பூக்களில் மென்மையும், பலவித வண்ணங்களும் விதவிதமான மணங்களும் சிறப்புற விளங்குமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி..

**நீரினில் சுவை நிலை நிரைத்ததிற் பல்வகை**
**ஆருறப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி** (410)

நீரின் சுவை இன்னதென்று தனியாகக் கூற முடியாது. ஆனால் அது சேர்ந்து மற்ற பொருள்களுக்குச் சுவை சேர்க்கின்றது.

கடல் நீரில் உள்ள உப்பு சுவைக்கு முக்கிய காரணமாயுள்ளது. நாம் உண்ணும் உணவு அனைத்தினுக்கும் சுவை சேர்க்கும் தன்மையை நீருக்குள் அமைத்து அதில் சிறப்புகள் பல நிகழுமாறு புரிந்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**நீரினில் கருநிலை நிகழ்த்திய பற்பல**
**ஆருற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (412)

கரு = மையம்

கடல், தரை மட்டத்தை விட உயரமாக இருந்தாலும் பொங்கி வரும் அலையைக் கடல் நீரின் மைய நிலையானது மீண்டும் இழுத்துக் கொள்வதால் கடலானது பூமியை விழுங்காமல் கரையில்லாமலிருந்தும் கடல் நிலையாக உள்ளது.

கடலின் மைய நிலையின் ஆற்றலால் கடல் கரையில்லாமலே நிலை பெற்று விளங்குமாறும் கடலின் மையத்திலே அலைகள் இல்லாதிருப்பதினால் மீன்கள் போன்ற உயிரினங்கள் அழியாமலிருக்குமாறும் இன்னும் பலப்பல சிறப்புகளை வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

வித்துக்கள் ஜடப் பொருள்களாகும். அவைகளில் நீர் சேர்ந்தால் நீரிலுள்ள உயிரணுக்கள் சேர்ந்து விதைகள் முளைக்கின்றன. விதைகளைக் கருக் கொள்ளச் செய்து நீரானது முளைக்க வைப்பதால் நீரினில் கருநிலை எனக் கூறப்பட்டது.

**நீரிடை நான்கியல் நிலவுவித்ததிற் பல**
**ஆர்தர வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (414)

சுவை, தோற்றம், ஸ்பரிசம், ஓசை ஆகிய நான்கு இயல்புகளையும் நீரில் அமைத்துப் பல பயன்களைச் சிறப்பாக அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**நீரிடை அடி நடு நிலையுற வகுத்து அனல்**
**ஆர்தரப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி** (416)

நம் முன்னோர் பஞ்ச பூதங்களை அடியிற் குறித்துள்ளவாறு வகுத்துள்ளனர்.

ஆகாயம்
காற்று
நெருப்பு
நீர்
மண்

நீரானது அடிநிலையான மண்ணிற்கும் நடுநிலையான நெருப்புக்கும் இடையிலே உள்ளதால் அடிநடு எனப்பட்டது.

மண்ணிலே ஊறுகின்ற தண்ணீர் சாதாரணமாகக் குளிர்ச்சியாய் உள்ளதை நாம் அறிவோம். சில இடங்களில் அதாவது இமயமலை அடிவாரத்தில் பனி கொட்டுகின்ற இடத்தில் வெந்நீர் ஊற்று இருப்பதையும் அறிகிறோம். நெருப்பின் தன்மை நீரிலும் கலந்து வெந்நீர் ஊற்று ஏற்படுகிறது.

நீரிலே அடி நடு என்ற நிலை வகுத்து அதிலே நெருப்பின் தன்மையான அனலும் வெளிப்படுமாறு சிறப்புறப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**நீரிடை ஒளியியல் நிகழ் பல குணவியல்**
**ஆர்தர வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (418)

நீர் கொண்ட மேகம் மின்னலென ஒளி வீசுகின்றது. மலை மேலிருந்து கீழே கொட்டும் நீரிலிருந்து தயாரிக்கப்படும் மின்சாரமானது இருளைப் போக்கி ஒளி தருகின்றது. அடுப்பிலே நெருப்பாகிச் சமையலுக்கு உதவும். ஒளியினில் வேறு பல குணங்களும் உண்டு. நெருப்பாக உதவிய மின்சாரம் குளிர் சாதனப் பெட்டியில் குளுமைதரும். மின் விசிறியில் சுழன்று காற்றாக விளங்கும்.

இவ்வாறு நீரிலே ஒளிதரும் இயல்பினை வகுத்து அதில் பலவிதமான பண்புகளை மேற்கூறியவாறு சிறப்பாக அமைத்த அருட்பெருஞ்ஜோதி

**நீரிடைச் சத்திகள் நிகழ்வகை பல பல**
**ஆர்தர வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (420)

தண்ணீரில்லாமல் எந்த விதையும் முளைப்பதில்லை. தண்ணீர் விட்டால் விதைகள் முளைக்கின்றன. தண்ணீர் விடுவதால் முளைத்தவை செடிகளாகக் கொடிகளாக மரங்களாக வளர்கின்றன. நீர் அளவோடு இல்லாமல் பெரு வெள்ளமாக மாறும்போது பயிர்கள் முதலியவை அழிந்து நாசமாகின்றன.

இவ்வாறெல்லாம் நீரிலே பலப்பல சக்திகள் நிகழும் வகை புரிந்து அதன் விளைவுகளாகப் பலப்பல சிறப்புகளை நாமடையும்படிச் செய்த அருட்பெருஞ்ஜோதி.

**நீரினில் சத்தர்கள் நிறைவகை உறைவகை**
**ஆர்தரப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி.** (422)

எந்த ஒரு காரியத்திற்கும் ஒரு காரணம் இருக்கும். சத்திகளை இயக்குவது சத்தர்கள்.

நீரின் மூலமாக ஏற்படும் எல்லாச் செயல்பாட்டுக்குரிய ஆற்றல் தண்ணீரிலேயே நிறைந்துள்ளது. அது கண்ணிற்கும் தெரியாமல் மறைந்திருக்கின்றது. அந்த ஆற்றல் மிக மிகச் சிறப்பாகச் செயல்படப்புரிந்து விளங்கும் அருட்பெருஞ்ஜோதி.

**நீரிடை உயிர் பல நிகழுறு பொருள் பல**
**ஆருற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (424)

தாவரங்கள் முதல் ஆறறிவு பெற்ற மனிதர்கள் வரை உயிர் வாழ நீர் அவசியம். கடலிலே வாழ்கின்ற உயிர்களின் எண்ணிக்கையோ எண்ணிலடங்காது - அவைகளின் வகைகளும் அளவு கடந்தவை. அந்தக் கடலிலே ஏற்படும் அலைகள் - அலைகளற்ற ஆழ்ந்த கடலின் அமைதி கடல் பொங்குதல் முதலிய நிகழ்ச்சிகள், அந்தக் கடல் நீரில் தோன்றுபவை. இவ்வாறு நீரிலே உயிர்கள் வாழவும் அந் நீரின் மூலமாகப் பல அற்புதங்கள் நிகழவும் சிறப்புற அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**நீரிடை நிலைபல நிலையுறு செயல்பல**
**ஆர்கொள வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (426)

தண்ணீரானது குளிர்ந்த போது பனிக்கட்டியாக உறைந்து விடுகின்றது - பனிக் கட்டி உருகித் திரவ நிலையாகின்றது - கொதி நிலையில் ஆவியாகி விடுகின்றது.

லாப்லாந்து நாட்டு எஸ்கிமோக்கள் பனிக்கட்டியால் வீடு கட்டி வாழ்க்கையே நடத்துகின்றார்கள்.

தண்ணீரினால் ஏற்படும் நன்மைகளோ ஏட்டிலடங்காதவை.

நீராவியினால் உணவு தயாரிப்பது, ரெயில்கள் (தொடர் வண்டி) ஓடுவது போன்று எவ்வளவோ செயல்கள் நிகழுகின்றன.

பனிக்கட்டி வெய்யிற் காலத்தில் உருகி ஆறாய்ப் பெருக்கெடுத்து ஓடும்.

இவ்வாறு நீரில் பல நிலைகளும் அதன் ஒவ்வொரு நிலையிலும் பலப்பல செயல்கள் சிறப்புற இயங்குமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**நீருறு பக்குவ நிறைவுறு பயன்பல**
**ஆருற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (428)

அரிசியை நீரிலே ஊற வைத்துச் சூடேற்றினால் சாதமாகிறது. கடினமான பொருளை நீரிலே ஊறவைத்தால் அது மென்மையான தன்மை அடையும்.

விதைகள் நீரின் பக்குவத்தால் முளை விட்டு வளர்கின்றன.

புறந் தூய்மை நீரான் அமையும் என்றது போல அழுக்கைப் போக்கித் தூய்மைப் படுத்தும் பக்குவம் நீருக்கு உண்டு.

நீர் அடைந்த பக்குவத் தன்மையால் நிறைவான பலவித பயன்களைச் சிறப்புற அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**நீரியல் பலபல நிரைத்ததில் பிறவும்**
**ஆர்தரப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி** (430)

நீரின் தன்மை இதுவரை கூறியதுபோல பலப்பலவாக நிறைந்து விளங்குவதுடன் அதன் தன்மை விரிக்கிற் பெருகுமாறு சிறப்புற அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

## (தீயியல்) - முன்னுரை 5ம் பாகம்

பஞ்ச பூதங்களில் நடுவான தீயின் தன்மைகளையும் குணங்களையும் விவரிக்கின்றார்.

தீயானது எந்தப் பொருளுடன் சேர்ந்தாலும் தன்னிடமுள்ள அனலை அப்பொருட்குச் செலுத்தும். தீயானது பொருளை எரித்து அதன் அழுக்கைப் போக்கிச் சுத்தமாக்கும். சூரிய ஒளியில் தாமரை, சூரியகாந்தி போன்ற மலர்கள் மலரும். தீயிலே எப்போதும் ஒளி மட்டுமே இருக்கும் - தீ நெருப்பாக விளங்கும்போது தோன்றியும் - அனலாக விளங்கும்போது கண்ணுக்குத் தோன்றாது தொட்டு உணருமாறும் உள்ளது. தோற்றம் ஸ்பரிசம் ஓசை ஆகிய மூன்று இயல்புகள் தீயினுக்கு உண்டு. பஞ்ச பூதங்களில் நடுநிலை வகிப்பது தீயாகும். தீயானது சிறியதாக இருக்கும் காலத்தில் நமது கட்டுக்குள் இருந்து

நமக்குத் தேவையான பலநிலைகளில் பயன்படுகின்றது. அதுவே பெருந்தீயாக மாறும்போது எல்லாவற்றையும் எரித்து நாசமாக்கும் பேராற்றலை வெளிப்படுத்துகின்றது. ஆக்கல் அழித்தல் ஆகிய எல்லாச் செயல் பாடுகளும் தீயினால் விளைகின்றன. வெப்பம் இல்லாவிட்டால் உயிர்கள் வாழ இயலாது. தீயானது குறைந்தும் மிகுந்தும் பல நிலைகளில் பலவிதமாகப் பயன்படுகிறது. வெப்பத்தில் காயானது கனியாகும். தீயில் வேக வைத்தால் உணவைச் சுவைத்து உண்ண முடிகிறது. தீயானது இன்னும் எவ்வாறெல்லாம் செயல்படுகின்றது என்பதை நம் பெருமானார் சிந்திக்கின்றார். நாமும் அவரது சிந்தனையில் லயித்து மகிழ்ந்து பயனடைவோமாக.

**தீயினில் சூட்டியல் சேர் தரச் செலவியல்**
**ஆயுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (432)

தீயின் இயல்பே சுடும் தன்மைதான். தீயில் எந்தப் பொருள் சேர்ந்தாலும் தீயானது அந்தப் பொருளுக்கும் பரவும். ஒரு பாத்திரத்திலுள்ள மிகுந்த சூடுள்ள வெந்நீரில் குளிர்ந்த நீரைச் சேர்த்தால் குளிர்ந்த நீருக்கு வெந்நீரிலுள்ள சூடு பரவி அந்தக் குளிர்ந்த நீரின் தன்மை மாறி வெந்நீராகிறது. முன்பிருந்த வெந்நீரின் வெப்பம் குறைவுபட்டு விடுகிறது.

சூடேறிய ஓர் இரும்புத்துண்டை குளிர்ந்த நீருள்ள ஒரு பாத்திரத்தில் போட்டால் அந்தக் குளிர்ந்த நீர் சூடாகும். இரும்புத் துண்டில் முன்பிருந்த சூடு குறைந்து (செலவாகி) இருக்கக் காணலாம். குளிர்ந்த நீரின் சேர்க்கையால் இரும்புத் துண்டிலிருந்த சூடு செலவாகிவிட்டது.

தீயின் சுடும் தன்மையானது வேறொரு பொருளின் சேர்க்கையால் அதற்கும் பரவும் தன்மையால் செலவாகுமாறு அதாவது குறையுமாறு வகுத்துள்ள அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**தீயினில் வெண்மைத் திகழியல் பலவாய்**
**ஆயுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (434)

வெண்மை என்பது சுத்தம். எந்த ஒரு பொருளைத் தீயில் சுட்டாலும் அதிலுள்ள அழுக்கானது விலகி அது தூய்மையுறும். தீயானது அழுக்கை நீக்கிச் சுத்தமாக்கும் தன்மைகொண்டு திகழ்வதால் பலவகை நன்மைகள் ஏற்படும்படி வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

பொன்னானது தீயில் சுடச்சுட எப்படி பிரகாசம் அதிகமாகின்றதோ அவ்வாறே தவத்தினால் கனல் ஏற ஏற உடலானது ஒளி தேகமாக மாறும்.

**தீயிடைப் பூவெலாம் திகழுறு திறமெலாம்**
**ஆயுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (436)

சூரிய ஒளியினால் தாமரை மலர்வதும் சூரியனை நோக்கியே சூரியகாந்தி மலர்ந்து திரும்புவதும் நாமறிந்ததே. சூரிய ஒளியினால் மலர்களெல்லாம் வண்ணங்கள் நிறைந்து விளங்குமாறு ஆற்றலின் வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**தீயினில் ஒளியே திகழுற அமைத்ததில்**
**ஆய்பல வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (438)

தீயினில் (இருள் என்பதே இல்லாது) ஒளி மட்டுமே வீசும் படி அமைத்து அதனால் பல நன்மைகள் உண்டாகும்படி அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு: உலக இயக்கமே பகலில் தோன்றும் சூரிய ஒளியினால் நிகழுகின்றது. சந்திர ஒளி இரவிலே அமைதி தருகின்றது. சூரிய ஒளியினால் ஒளிச் சேர்க்கை மூலம் தாவரங்கள் வாயு மண்டலத்திலுள்ள கரியமில வாயுவைப் பிராணவாயுவாக மாற்றி உயிர்களை வாழச் செய்கிறது. சூரிய அடுப்பில் சூரிய ஒளியினால்

சமையல் செய்யப்படுகின்றது. இவ்வாறு எவ்வளவோ விதங்களில் ஒளியானது நமக்குப் பயன்படுகிறது.

**தீயிடை அருநிலை திருநிலை கருநிலை**
**ஆயுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (440)

தீயானது அக்கினியாய் உள்ள போது தோன்றாத அருவ நிலை கொண்டதாய் உள்ளது. (உதாரணம்: பாலைக் காய்ச்சிக் கீழே இறக்கி வைத்தால் சூடு ஆறுவதற்கு முன் அதைத் தொட்டால் அது சுடும். ஆனால் அதிலுள்ள தீயானது கண்ணுக்குத் தோன்றாது) கொழுந்துவிட்டு எரியும் நெருப்பு கண்ணிற்குத் தெரிகின்றது. பிறகு, கரி போன்ற பொருள்களில் உள்ள தீயினைக் கருநிலை என்று கூறலாம்.

இவ்வாறு தோற்றமில்லாத அருவ நிலையும், தோற்றமாகின்ற உருவ நிலையும், மையம் கொண்டுள்ள கரு நிலையும் கொண்டு தீயானது விளங்குமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**தீயிடை மூவியல் செறிவித்து அதிற்பல**
**ஆய்வகை அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (442)

தோற்றம், ஸ்பரிசம், ஓசை, ஆகிய மூன்று இயல்புகளைத் தீயினில் பொருந்த வைத்து அதில் பல விளைவுகள் ஏற்படுமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**தீயிடை நடுநிலை திகழ்நடு நடுநிலை**
**ஆயுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (444)

மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய பஞ்ச பூதங்களில் நெருப்பானது நடு நிலையில் விளங்குகின்றது. நல்ல பொருளோ கெட்ட பொருளோ எதுவானாலும் தீயிலிட்டால் எரிந்துவிடும். முடிவாக அப்பொருளைத் தன் மயமாகவே ஆக்கித் தன்னுள்ளேயே ஐக்கிய மாக்கிக் கொள்ளும் நடு நிலையையும் தீயினிலே சிறப்புற வகுத்த அருட்பெருஞ்ஜோதி,

**தீயிடைப் பெருந்திறல் சித்திகள் பல பல**
**ஆயுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (446)

வீடு கட்டுகின்ற செங்கல் முதல் வீட்டிற்குத் தேவையான பாத்திரங்களுடன் நாட்டிற்குத் தேவைப்படும் இயந்திரங்கள் வரை தயாரிக்க நெருப்பு தேவைப்படுகின்றது. அணிகலன்கள் செய்வதற்கும் நெருப்பு பயன்படுகிறது. பெருந்தீயினால் ஏற்படும் நாச விளைவுகள் மிகவும் கடுமையாக உள்ளன. எரிமலை வெடித்தால் அந்த நெருப்பை அணைக்கவோ, அடக்கவோ அது ஏற்படுத்தும் நாசத்தைத் தடுக்கவோ ஏதும் வழியே இல்லை.

இவ்வாறு தீயினில் அளவிட முடியா பேராற்றல்களை அமைத்து அதன் விளைவுகளையும் பயன்படுமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

(அ)

தவத்தால் வரும் அருட்கனலால் அளவற்ற ஆற்றல் பெற்ற சித்திகள், அஷ்டமா சித்திகள் உட்பட அனைத்தும் விளங்குமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**தீயிடைச் சித்துகள் செப்புறும் அனைத்தும்**
**ஆயுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (448)

பஞ்ச பூதங்களில் நமக்குத் தெரிந்த பெரிய நெருப்பு சூரியன். அந்தச் சூரிய ஒளி இல்லையேல் ஜீவன்கள் ஜீவிக்க முடியாது. சந்திரனின் குளிர்ந்த இதமான ஒளி சூரிய ஒளியின் பிரதி பலிப்பே ஆகும்.

தவம் செய்து தவக் கனல் உடையோர் ஆற்றும் சித்துகளோ ஏராளம்.

இவ்வாறு தீயினிடத்தில் சித்துகள் ஏற்படும்படியும் தவமுடையோர் சொல்லெல்லாம் பலிக்கும்படியும் அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

ஆதாரம் - அம்பலத்தில் எங்கள் ஐயர் ஆடிய நல்லாட்டம்
அன்பொடு துதித்தவர்க்கு ஆனது சொல்லாட்டம்.

**தீயிடைச் சத்திகள் செறிதரு சத்தர்கள்**
**ஆய்பல வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (450)

தீயினிடத்தே ஆக்கல், அளித்தல், அழித்தல் முதலிய செயல்பாடுகள் அனைத்தும் நிகழ்த்தக்கூடிய சக்திகளும், அதற்கு மூலகாரணமான சத்தர்களும் பல வகையில் விளங்குமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : சூரிய வெப்பத்தினால் தயாரிக்கப்படும் மின்சாரம் ஒரு பெரிய சக்தியாகும். எந்தச் சூரிய ஒளி ஜீவராசிகள் வாழ்வதற்கு ஆதாரமாக உள்ளதோ அதே சூரிய ஒளி எலும்பில்லாத புழு போன்ற ஜீவன்களை எரித்தும் விடும்.

**தீயிடை உயிர்பல திகழுறு பொருள் பல**
**ஆய்வகை அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (452)

வெப்பத்தினால் உயிர்கள் வாழுமாறு செய்ததன்றிப் பலவித ஜடப் பொருட்களுக்கும் ஆதாரமாக இருக்குமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

எல்லா ஜீவன்கட்கும் தேவையான பிராண வாயு முதலியன வாயு மண்டலத்திலே நிலையாக இருக்கவும் ஜடப் பொருட்கள் பதங்கெடாமல் இருப்பதற்கும் சூரிய ஒளியே காரணம்.

**தீயிடை நிலைபல திகழ் செயல் பல பயன்**
**ஆய்பல வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (454)

தீயானது மிகுந்தும் குறைந்தும் அளவோடு இருந்தும் பல நிலைகளில் விளங்கி அதனால் விளையக் கூடிய பயன்களும் பலப்பலவாக இருக்கும்படி அமைத்த அருட்பெருஞ்ஜோதி

வீட்டிலே விளக்கு எரிவது குறைந்த தீ அதுவே மிகுமானால் இரும்பையும் பொன்னையும் உருக்கும்.

**தீயினில் பக்குவம் சேர்குணம் இயற் குணம்**
**ஆய்பல வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (456)

எந்தப் பொருளுக்கும் பக்குவத்தைச் சேர்க்கக்கூடிய குணத்தை, இயல்பான தன்மையைத் தீயினிடம் வைத்து அதன் விளைவாகப் பலவிதப் பயன்களை அடையுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

மூட்டம் போட்ட வெப்பத்தில் காயானது கனியாகிறது. காயைக் கனியாக்கும் பக்குவம் அந்த வெப்பத்தில் இருக்கின்றது. அரிசியை நீரில் போட்டு வேகவைத்தால் அரிசியின் கெட்டித்தன்மை மாறி மென்மையான பக்குவமான சாதமாகிறது. மார்கழி மாதத்திலே சூரிய ஒளி குளிருக்கு இதமாகப் பக்குவமாக உள்ளது.

**தீயிடை உருக்கியல் சிறப்பியல் பொதுவியல்**
**ஆயுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (458)

எந்தப் பொருளையும் உருக்கும் சிறப்பான தன்மையைத் தீயினிடத்தில் பொதுவாக வைத்து அத்தன்மை மாறாது விளங்கும்படி வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

மண், இரும்பு, செம்பு, வெள்ளி, தங்கம் ஆகிய எல்லாப் பொருட்களும் தீயில் உருகும். தீயின் உருக்கும் ஆற்றலினால்தான் உலோகங்களிலிருந்து பல பொருட்களை உற்பத்தி செய்ய முடிகிறது.

(அ)

தவத்தினால் உண்டாகும் கனலானது கல்லான மனதையும் உருக்கிக் கனிவுறுமாறு செய்வதுடன் இதை ஆய்வு செய்து அறியுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

ஆதாரம்:

கற்றேன் சிற்றம்பலக் கல்வியைக் கற்றுக்கருணை நெறி
உற்றேன் எக்காலமும் அழியாமல் ஓங்கும் ஒளி வடிவம்
பெற்றேன் உலகில் பிற நிலையைப் பற்றேன் சிவானந்தப்
பற்றே என் பற்றெனப் பற்றினனே.

**தீயியல் பலபல செறித்ததில் பலவும்**
**ஆயுறப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி** (460)

தீயினின் தன்மைகள் இன்னும் பலப்பலவாக அமைத்து அதனால் பலப்பல விளைவுகளையும் நிகழும்படிப் புரிந்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

## (காற்றியல்) - முன்னுரை 6ம் பாகம்

காற்று இடம் விட்டு இடம் நகருவதால் வெப்பத்தினால் வரும் புழுக்கம் இல்லாமல் நம்மால் வாழ முடிகின்றது. காற்றிலே மென்மை வன்மை என்று பலவிதமுண்டு. புயலால் பல துன்பங்களும் உண்டாகின்றன. காற்று மையங்கொண்டு அழுத்தம் மிகுந்து புயலாக உருவாகி மழை பொழிய வைக்கின்றது - காற்று கண்ணுக்குத் தோன்றாததாயிருந்தாலும் ஸ்பரிச உணர்வால் அறிய முடிகின்றது - ஸ்பரிசம் தவிர ஓசையும் காற்றில் உண்டு. பஞ்ச பூதங்களில் காற்று நடுவாகிய நெருப்புக்கும் கடையாகிய வானத்திற்கும் இடையே இருப்பதால் இடை நடு அல்லது கடை நடு எனலாயிற்று. காற்றிலே பிராண வாயு, கரியமில வாயு, ஹைட்ரஜன், நைட்ரஜன் போன்ற பல வாயுக்கள் அண்டத்திலும் அபானன் உதானன் இயமானன் போன்ற பலவித வாயுக்கள் பிண்டத்திலும் உள்ளன. காற்று ஜீவர்கட்கு வாழவைக்கும் உயிர் மூச்சாக இருக்கின்றது. அது மென்மையாக வீசிச் சுகமுமளிக்கும் - சூறையாக வீசி உலகையும் அழிக்கும்.

நிலத்தில் வாழ்ந்தாலும் நீரில் வாழ்ந்தாலும் சுவாசிக்காமல் எந்த ஜீவனால் வாழ முடியும்? ஜீவர்களின் ஆயுட்கால வளர்ச்சியும், குறைவும் அவர்கள் விடும் மூச்சுக் காற்றின் விளைவேயாகும். புறத்திலே காற்றின் செயல்பாடுகளை விளக்கிய நம் பெருமானார் நமது உடம்பிலேயும் அதன் செயல்பாட்டை விளக்குகின்றார். மனம் புத்தி முதலிய கரணங்களின் இயக்கத்திற்கும் நம்முடைய சுவாசத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்கிறார். காற்றின் செயல்பாடுகளால் எவ்வளவோ பயன்களை நாம் துய்க்கின்றோம். ஆடிக் காற்றில் அம்மியும் பறக்கும் என்பார்கள். அதுபோல் வீசுகின்ற காற்றைக் கொண்டு காலத்தையும் அறிய முடியும்.

காற்றோடு காற்றாக இறைவன் கலந்து செயல்படுவதை நம் பெருமானார் விளக்குவதை ஊன்றி அறிவோமாக.

**காற்றிடை அசையியல் கலையியல் உயிரியல்**
**ஆற்றலின் அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (462)

ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு நகரக் கூடிய ஆற்றலைக் காற்றினில் அமைத்து, ஜீவர்களிடத்தே இடகலை பிங்கலை சுழும்னை என்ற பெயரில் இடதுநாசி, வலது நாசி, நடு நாடி ஆகிய மூன்று நிலைகளில் சுவாசம் இயங்கும்படிச் செய்து, ஜீவர்களின் உயிர் இயக்கமே காற்றினால் இருக்கும்படிப் பேராற்றலில் அமைத்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**காற்றிடைப் பூவியல் கருதுறு திறவியல்**
**ஆற்றலின் வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (464)

காற்று மென்மையாக வீசும்போது பூ எவ்வளவு மென்மையாக விளங்குகின்றதோ அந்த மென்மையைக் காற்றில் உணர்கின்றோம். கண்ணுக்குத் தோன்றாத காற்று ஸ்பரிச உணர்வினால் கருத்தினால் அறிந்து கொள்ளும் வகையில் ஆற்றலுடன் வகுத்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**காற்றினில் ஊறியல் காட்டுறு பலபல**
**ஆற்றலின் அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (466)

ஊறு = துன்பம்

மென்மையான தன்மை மட்டுமே காற்றுக்கு உண்டு என்பதில்லை.

அது பெருங்காற்றாகப் புயலாக வீசும் போது அந்தக் காற்றே பெருஞ்சேதத்தையும் பெருந் துன்பத்தையும் விளைவிக்கக் கூடிய பேராற்றலோடு விளங்குகின்றது. உயிர்ச் சேதம், பொருட் சேதம் முதலிய பெருந் தீங்குகளையும் உண்டாக்கும் ஆற்றலுடன் அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**காற்றினில் பெருநிலை கருநிலை அளவில**
**ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (468)

காற்றினிலே பெருங்காற்றாக வீசும் பெருநிலையும் அப்பெருங்காற்றால் பலப்பல விளைவுகளை ஏற்படுத்துமாறும் உள்ளது. அதே காற்று மையம் கொண்டுப் பின்னர் பெருங்காற்றாக, புயலாக உருவாகின்றது. பெருங்காற்று எனப் புயலாகவும், மையங்கொள்ளும் தன்மையைக் கருநிலை எனவும் இவைகளால் அளவற்ற ஆற்றலை வெளிப்படுத்துமாறும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**காற்றிடை ஈரியல் காட்டி அதிற்பல**
**ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (470)

காற்று வீசுகிறது என்பதை அது நம்மீது படும்போது ஏற்படும் ஸ்பரிச உணர்வினால் மட்டுமே அறிந்து கொள்ள முடிகிறது. காற்று வீசும் போது ஓசையும் உண்டாகிறது. காற்றிலே ஸ்பரிசம், ஓசை ஆகிய இரண்டு இயல்புகளை அமைத்து அதிலே பலவித செயல்களை நடத்தவும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**காற்றினில் இடை நடு கடை நடு அகம்புறம்**
**ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (472)

மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய பஞ்ச பூத வரிசையில் நடுவாகிய நெருப்பிற்கும் கடையாகிய ஆகாயத்திற்கும் இடையிலே காற்று கூறப்படுவதால் அது இடைநடு (அல்லது) கடைநடு என்ற நிலை பெற்றது.

ஆகாயம் - கடை
காற்று (இடைநடு - கடைநடு)
நெருப்பு (நடு)
நீர் (அடி நடு)
மண் (அடி)

மேலும் காற்றானது புறத்திலே இயங்குவதுடன் ஒவ்வொரு ஜீவராசியின் உடம்பிலே (அகத்திலே) இயங்குமாறும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**காற்றினில் குணம்பல கணம் பல வணம்பல**
**ஆற்றலின் அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (474)

காற்றானது மென்மையாக வீசிச் சுகத்தையும் தரும். புயலாக வீசித் துன்பத்தையும் விளைவிக்கும், எரியும் தீ மேலும் எரியக் காற்று உதவும். சிறு தீயானால் காற்று அந்தத் தீயை அணைக்கவும் செய்யும்.

காற்று என்று பொதுவாகச் சொன்னாலும் அறிவியல் நிபுணர்கள் அது ஒன்றல்ல பலவிதமான வாயுக்கள் சேர்ந்த ஒரு கூட்டமே என்கின்றனர். அதாவது காற்றிலே பிராணவாயு, கரியமிலவாயு, ஹைட்ரஜன் வாயு, நைட்ரஜன் வாயு போன்ற பல வாயுக்கள் வெளியிலும் அபானன் உதானன் போன்ற வாயுக்கள் பிண்டத்திலும் செயல்படுகின்றன. இந்த வாயுக் கூட்டங்களையே கணம்பல என்று கூறுகின்றார்.

ஒவ்வொரு வாயுவிற்கும் ஒவ்வொரு குணம் இருப்பதால் அந்தக் குணங்களை வண்ணங்கள் எனக் கூறப்பட்டுள்ளது.

காற்றிலே குணங்கள் பல, வகைகள் பல, தன்மைகள் பல வகுத்து இவை அனைத்திலும் ஆற்றலையும் அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**காற்றிடைச் சத்திகள் கணக்கில உலப்பில**
**ஆற்றவும் அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (476)

காற்றினால் ஏற்படும் விளைவுகளை அளவிட்டுக் கூற முடியாது. உயிர்களை வாழ்விக்கும் அதே காற்று சூறைக் காற்றாக மாறி உயிர்களை அழிக்கவும் செய்யும். அது மென்மையாக வீசிச் சுகத்தையும் தரும். வன்மையாக மாறி வருத்தவும் செய்யும். அந்தக் காற்றானது மின்சாரம் உற்பத்தி செய்யவும் பயன்படுகின்றது. இவ்வாறு அந்தக் காற்றின் சக்திகள் அளவற்றதாக உள்ளது மட்டுமின்றி அதன் ஆற்றல் எக்காலத்தும் குறைவுபடாமலும் விளங்குமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

இந்த பூ மண்டலத்தைச் சுற்றியுள்ள ஓசோன் என்ற காற்று வளையம் சூரியனிடமிருந்து வருகின்ற வெப்பத்தினால்

ஏற்படக்கூடிய பல தீயவைகளைப் பூமியை அணுகவொட்டாமல் தடை செய்து உயிர்களை வாழ வைத்துக் கொண்டிருக்கின்றது.

காற்றிலே உள்ள ஈரப்பசைதான் மழைக்கு காரணம்.

**காற்றிடைச் சத்தர்கள் கணிதங்கடந்தன**
**ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (478)

சத்தி என்பது செயல் - அந்தச் செயல் நிகழக் காரணமாயுள்ளது அல்லது அந்தச் சத்தியை இயக்கக்கூடிய ஆற்றல் உள்ளது எதுவோ அதுவே சத்தர் எனப்படுவது. காற்று மென்மையாக வீசுவதும் வன்மையாக வீசுவதும் புயலாக வீசுவதும் அதன் செயலாகும் - உயிர்களை வாழ வைப்பதும் அழிப்பதும் காற்றின் செயல்பாடே ஆகும். இச்செயல்கட்கெல்லாம் காரணமாக உள்ளது எதுவோ அதுவே சத்தர் எனப்பட்டது. காற்றின் சத்திகள் அதாவது செயல்பாடு கணக்கில்லாதவை. எனவே அச்சக்திகளுக்குக் காரணமாக உள்ள சத்தர்களும் கணக்கில்லாதவை ஆயின.

காற்றினில் செயல்பாடுகளைப் பலவாக வைத்து அதை இயக்குங் காரண கர்த்தாக்களாகிய சத்தர்களையும் கணக்கில் அடங்காதவாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

உயிரற்ற ஜடப்பொருள்களைப் பக்குவம் அபக்குவம் பக்குவா பக்குவம் என மூன்று வகையாகப் பிரித்தது வாயுவின் செயலேயாகும். பொருள்கள் மூன்று வகையாகப் பிரிக்கக் காற்று காரணம் அதாவது சத்தர் என அமைந்தது.

**காற்றிடை உயிர்பல கதி பல கலை பல**
**ஆற்றலின் அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (480)

எந்த ஜீவனும் காற்றில்லாமல் உயிர் வாழ இயலாது. காற்று மண்டலம் எங்கு இல்லையோ அங்கே உயிர்கள் எதுவும் வாழ்வதில்லை. (சந்திர மண்டலத்திலே காற்றே இல்லாததால் அங்கே எந்த உயிரும் வாழவில்லை) எல்லா உயிர்களும் காற்றைச் சுவாசித்தே வாழ்கின்றன.

கதி என்பது காற்று வீசும் தன்மையைக் குறிப்பது. அதுவும் பலவாக இருப்பதைக் காண்கிறோம். மனிதர்களாகிய நாம் ஒரு நிமிடத்திற்குச் சராசரி 15 முறை சுவாசிக்கின்றோம். ஆனால் ஆமையோ ஒரு நிமிடத்திற்கு ஒரே ஒரு முறைதான் சுவாசிக்கின்றது. கதி என்பது போக்கு. சுவாசமானது எல்லா ஜீவன்கட்கும் ஒரே மாதிரி இருப்பதில்லை. எனவே கதிபல என நம் பெருமானார் கூறுகின்றார். சித்த வித்யார்த்திகள் எனப்படுவோர் அசுவகதி, சிம்மகதி என்றெல்லாம் கதியை வகுத்துப் பெயரிட்டுள்ளனர்.

புறத்திலேயும் வீசுகின்ற காற்றின் போக்கு ஒரே மாதிரியாக இருப்பதில்லை. எனவே கதிகள் பல என்பது புறத்திற்கும் பொருந்தும்.

நாம் சுவாசிக்கின்ற காற்றானது இடது நாசியில் நடப்பதைச் சந்திர கலை என்றும், வலது நாசியில் நடப்பதைச் சூரியகலை என்றும், நடு நாடியைச் சுழும்னை எனவும் பெயரிட்டிருக்கின்றனர்.

காற்றினால் எல்லா உயிர்களும் வாழும்படியும், சுவாசிக்கின்ற தன்மை பலவாகவும், இடது, வலது, நடு என்ற அளவில் கலைகள் பலவாகவும் மிகுந்த ஆற்றலுடன் காற்றினை அமைத்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**காற்றிடை நானிலைக் கருவிகள் அனைத்தினையும்**
**ஆற்றுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (482)

மனம் செயல்படும்போது அதன் தொடர்பாகப் புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய மூன்றும் செயல்படும். மனம் செயல்படும் வரை சுவாசமும் இயங்கும். எனவே சுவாசம் தடைபடுமானால் மனமும் தடைபடும். சுவாசமாகிய காற்று, மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய நான்கு கருவிகளையும் இயங்க வைக்கிறது. இவ்வாறு இயங்க வைத்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

நானிலைக் கருவிகள் மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்பதற்கு ஆதாரம்.

மனமுதற் கருவிகள் மன்னுயிர் வெளியிடை
அனமுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி (அகவல் 574)

மனம் இயங்கச் சுவாசம் இயங்கும் என்பதற்கு ஆதாரம்:

மன் மனம் எங்குண்டு வாயுவங்குண்டு
மன் மனம் எங்கில்லை வாயுவுமங்கில்லை
மன் மனத்துளே மகிழ்ந்திருப்பார்க்கு
மன் மனத்துளே மனோலயமாமே (திருமந்திரம்)

**காற்றிடை உணரியல் கருதியல் ஆதிய**
**ஆற்றுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (484)

மரம், செடி, கொடிகளின் அசைவைக் கொண்டும், நம் உடம்பின் மீது படுகின்ற ஸ்பரிச உணர்வைக் கொண்டும் வீசுகின்ற காற்றை அறிய முடிகின்றது. காற்று என்பது கண்ணிற்குத் தெரியாத பொருளானாலும் ஸ்பரிச உணர்வினால் அறிய முடிகின்றது.

கண்ணுக்குத் தோற்றாத காற்றை ஸ்பரிச உணர்வைக் கொண்டு கருத்தால் அறியக் கூடிய அளவில் செயல்பாடுகள் நிகழும்வகை அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**காற்றிடைச் செயலெலாம் கருதிய பயனெலாம்**
**ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (486)

துணிகளில் உள்ள ஈரத்தைக் காற்று உறிஞ்சித் துணிகளை உலர்த்துகின்றது. கடலிலே படகானது பாய்மரம் விரிக்கப்பட்டவுடன் காற்றினால் உந்தப்பட்டுத் தானாகவே செல்கிறது. விவசாயிகள் நெல்லில் உள்ள பதர்களைத் தூற்றிக்கொள்ள வீசும் காற்றே உதவுகின்றது. அடுப்பு எரிவது முதல் மின்சாரம் உற்பத்தி செய்வதுவரை பலவிதமான செயல்கள் காற்றினால் நிகழ்கின்றன. அச் செயல்களினால் என்னென்ன பயன்களை அடைய எண்ணுகின்றோமோ அவற்றையெலாம் அடையுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**காற்றினில் பக்குவக் கதியெலாம் விளைவித்து**
**ஆற்றலின் வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (488)

காற்றின் வீசும் தன்மையே கதி எனப்படுவதாம். காற்று மென்மையாகவும் வீசலாம். வன்மையாகவும் வீசலாம். கோடைகாலத்தில் வெய்யிலின் வெப்பம் மிகுதியாக உள்ள நேரத்தில் கடல் காற்று நகரை நோக்கி வீசும்போது பக்குவமான ஒரு சுகத்தை அளிக்கிறது. அதே போலத் தென்றல் காற்றும் சுகம் தருவதாகும். காற்றிலே இவ்வாறு பலவித பக்குவமான கதிகளை ஏற்படுத்தி அவை அவை அவைகட்குரிய காலங்களில் நிகழுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**காற்றினில் காலம் கருதுறு வகையெலாம்**
**ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (490)

கோடை காலத்திலே அனல் காற்று வீசும். குளிர் காலத்திலே வாடைக் காற்று வீசும். வசந்த காலத்திலே தென்றல் காற்று வீசும். ஆடிக் காற்றில் அம்மியும் பறக்கும் என்பது பழமொழி. பலத்த காற்று ஆடி மாதத்திலே வீசும். இவ்வாறு காலத்திற் கேற்றவாறு காற்றை வீசும்படிச் செய்து அக்காற்றின் வீசும் தன்மையைக் கொண்டே காலத்தை (கோடை - குளிர் - வசந்தம்) அறியுமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**காற்றியல் பலபல கணித்ததிற் பிறவும்**
**ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (492)

காற்றின் தன்மைகள் பலவாகவும் அதனால் செயல்பாடுகள் பலப்பல நிகழுமாறும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி - பிறவும் என்பது இதுவரை கூறியதுபோகக் கூறாமல் விடுபட்டுள்ள செயல்களைக் குறிப்பதாகும்.

**(வெளியியல்) - முன்னுரை 7ம் பாகம்**

’பஞ்சபூதங்களில் கடைசியாக உள்ள ஆகாயத்தைப் பற்றிய விரிவுகள் இனி வரும் வரிகளில் கூறப்படுகின்றன. இந்தப் பரந்த

வெளியிலே அண்டங்கள் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. தோன்றும் அண்டங்கள் அத்தனைக்கும் இடம் கொடுத்து இந்த வெளி விரிந்து கொண்டே வருகின்றதாம். ஓசை ஒன்று மட்டும் வெளியிலே நிறைந்து எல்லா அண்டங்களும் அந்த வெளிக்குள்ளே பக்குவமாக அமையுமாறு ஆண்டவர் வகுத்துள்ளார். சூரியன் சந்திரன் முதலிய அத்தனை கோள்களும் வெளியிலிருந்தே தோன்றியவை ஆகும். பஞ்ச பூதங்களில் அடிநிலை மண் எனில் முடிநிலை வெளியாக உள்ளது. வெளியிலிருந்து தோன்றிய அத்தனை பொருட்களும் வெளியிலேயே அடங்கிவிடுவன ஆகும். வெளிக்கு எந்தப் பொருளையும் அந்தரிக்கும் ஆற்றலுண்டு. அருவமாக உள்ள வெளியிலே மண் நீர் நெருப்பு காற்று போன்ற பூத தத்துவங்கள் பலவும் விளங்குகின்றன. சந்தான விருத்தி செய்யும் அத்தனை உயிரணுக்களும் வெளியிலே நிறைந்துள்ளன. வெளியின் ஆற்றல்களை இன்னும் விரிக்கில் பெருகும் என நம் பெருமானார் தெரிவிக்கின்றார்.

**வெளியிடைப் பகுதியின் விரிவியல் அணைவியல்**
**அளியுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (494)

ஆரம்பம், முடிவு என்ற இரண்டும் இல்லாததே இந்தப் பரந்த வெளியாகும். இப்படிப்பட்ட பரந்த வெளியிலே பூமி என்பது ஒரு கிரகம். செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன், சனி என்பன போன்ற பலப்பல கோள்களைக் கொண்டதே ஓர் அண்டமாகும். ஓர் அண்டம் என்பது வெளியின் ஒரு பகுதியே ஆகும். இவ்வாறு பலப்பல பகுதிகளைக் கொண்டதே வெளியாகும். அண்டங்களோ புதிது புதிதாகத் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. தோன்றிய அண்டங்களையும் தோன்றிக் கொண்டிருக்கின்ற அண்டங்களையும் தன்னுள்ளே அடக்கிக் கொண்டு வெளியானது விளங்குகின்றது. விரிந்துகொண்டே வருகின்ற வெளியின் பகுதிகளான அண்டங்களையும் அவ்வண்டங்களைத் தன்னுள்ளேயே அணைத்துக் கொண்டு விளங்குகின்ற பரிபக்குவ நிலையையும் வெளி என்கிற விண்ணிலே அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

தோன்றிய அண்டங்களையும் புதிது புதிதாகத் தோன்றும் அண்டங்களையும் தன்னுளே கொள்கிறது என்பதற்கு ஆதாரம்.

அண்டமெலாம் பிண்டமெலாம் உயிர்களெலாம் பொருள்கள்
ஆனவெலாம் இடங்களெலாம் நீக்கமற நிறைந்தே
கொண்டவெலாம் கொண்டவெலாம் கொண்டு கொண்டுமேலும்
கொள்வதற்கே இடங்கொடுத்துக் கொண்டு சலிப்பின்றிக்
கண்டமெலாம் கடந்து நின்றே அகண்ட மதாய் அதுவும்
கடந்த வெளியாய் அதுவுங் கடந்த தனிவெளியாய்
ஒண்டகு சிற்றம்பலத்தே எல்லாம் வல்லவராய்
ஓங்குகின்ற தனிக் கடவுள் ஒருவருண்டே கண்டீர்.
(திருவருட்பா 3276)

**வெளியிடைப் பூவெலாம் வியப்புறு திறனெலாம்**
**அளியுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (496)

வெளி என்பது கடினமானதல்ல. உணர்வதற்கும் அரிய மென்மையுடையது. ஆனால் அந்த வெளியிலே, நடைபெறும் பலப்பல நிகழ்ச்சிகளை அறியும்போது பேராச்சரியம் ஏற்படுகிறது. சூரியன் கிழக்கிலிருந்து மேற்கு நோக்கிச் செல்வதுபோல் தோற்றமளிக்கிறது, உண்மையில் சூரியன் நகர்வதில்லை. வெளியில் ஒன்றுமில்லை என எண்ணுகின்றோம். பிறவிக்குக் காரணமாயுள்ள சந்தான அணுக்கள் ஆகாயத்தில் நிரம்பியுள்ளன,

வெளியிலே உள்ள அண்டங்கள் எத்தனையென்று கணக்கிட முடியுமா? அதிலே அன்றாடம் நடைபெற்றுக் கொண்டிருக்கின்ற நிகழ்ச்சிகளை அறிய முடியுமா. இந்த வெளி எங்கே ஆரம்பிக்கிறது, எங்கே முடிகிறது என்பதை யாரால் விளக்க முடியும்? வெளியை ஆய்வதற்கு முற்பட்டால் வியப்புகள் தோன்றுமேயொழிய அதன் ஆற்றலை அளவிடமுடியுமா?

இவ்வாறு வெளியிடை பூமி போன்ற எல்லாக் கோள்களையும் உலவ விட்டு, அவற்றையெல்லாம் அந்த வெளியானது தாங்கிக் கொண்டிருக்கும்படி அமைத்து அதிலே வியப்புறும் வகையில் பலப்பல ஆற்றல்களைப் பக்குவமாக அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**வெளியினில் ஒலி நிறை வியனிலை அனைத்தும்**
**அளியுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (498)

வெளியிலே ஓசை நிறைந்து இயல்பாக உள்ளது. வெளி என்பது எங்கும் பரவியுள்ளது. எல்லாக் கோள்களும் எல்லா அண்டங்களும் இந்த வெளிக்குள்ளேயே அடங்கியும் மேலும் இடம் சூன்யமாய் உள்ளவாறு விரிந்துள்ளது வெளியாகும். எங்குமாய் விரிந்து பரந்து நிறைந்துள்ள வெளியில் எல்லாவற்றையும் பக்குவமுறுமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**வெளியிடைக் கருநிலை விரிநிலை அருநிலை**
**அளிகொள வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (500)

நாம் காணுகின்ற அத்தனைப் பொருட்களும் விண்ணிலிருந்தே தோன்றியதால் விண்ணானது கருநிலை எனக் கூறப்பட்டது வெளி என்கின்ற விண்ணானது முடிவே இல்லாது எங்கும் பரவி இருப்பதால் விரிநிலை ஆயிற்று. மண், நீர், நெருப்பு போன்று காணக்கூடியவாறு இல்லாமல் இருப்பதால் அருநிலை எனப்பட்டது. இவ்வாறு கருநிலை, விரிநிலை, அருநிலை ஆகிய மூன்று நிலைகளை மிகப் பக்குவமாகக் கொண்டுள்ளவாறு விண்ணை வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**வெளியிடை முடி நிலை விளங்குற வகுத்தே**
**அளிபெற விளக்கும் அருட்பெருஞ்ஜோதி** (502)

மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய ஐந்து பூதங்களில் மண் அடி என்றால் அந்த வரிசையில் விண்ணானது முடியாக விளங்குகின்றது. புறத்தில் மட்டுமல்லாது அகத்தேயும் இந்திரியங்கள் கரணங்கள் ஆகியவை கரைந்து வெளியான அனுபவ நிலையே முடிவானதாக விளங்குகின்றது.

இவ்வாறு அகத்தும் புறத்தும் வெளியே முடிவான ஒன்றாக விளங்கும்படிப் பக்குவமாக அமைத்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**வெளியினில் சத்திகள் வியப்புறு சத்தர்கள்**
**அளியுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (504)

வெளியிலேயிருந்து தோன்றிய நெருப்பு நீர் மண் போன்ற பூதங்களும் மற்றைய கோள்களும் மற்ற எல்லாமும் காலப்போக்கில் ஒடுங்கப் போவது வெளியிலேயாம். வெளியானது தன்னுள் இருக்கின்ற எந்தப் பொருளையும் இல்லாமல் அழிக்கின்ற அந்தரிக்கும் சக்தி கொண்டுள்ளது. விண்ணிலே நடைபெறும் ஆச்சர்யப்படும்படியான நிகழ்ச்சிகளுக்கும் விண்ணே காரணமாய் அமைந்துள்ளது. இவ்வாறு பல விளைவுகளை உண்டாக்கும் சக்திகளும் அந்தச் சத்திகளை இயக்குவிக்கும் சத்தர்களும் மிகமிகப் பக்குவமாக இயங்கும்படி வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

(அ)

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய கரணங்கள் செயல்பாடற்ற வெளி அனுபவம் அகத்தே தோன்றினால் செயல்பாடுகளாகிய சித்துக்களும் அதற்குரிய உரிமைகளும் பக்குவமாக அடையுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**வெளியிடை ஒன்றே விரித்ததிற் பற்பல**
**அளியுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (506)

வெளியினில் சூன்யம் என்கிற அருவ நிலை ஒன்றையே எங்கும் பரப்பி அதிலே பலப் பல பக்குவமான விளைவுகள் ஏற்படும்படி வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**வெளியிடைப் பலவே விரித்ததிற் பற்பல**
**அளிதர அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (508)

பரந்த வெளியிலே அண்டங்கள் - கோள்கள் - உலகங்கள் . மண் - நீர் - நெருப்பு - காற்று போன்ற பல பூதத் தத்துவங்கள் மட்டுமின்றி இன்னும் பலவற்றைப் பரவலாக விரித்து அதிலே பற்பல விளைவுகளை அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

(அ)

கரணங்கள் முதலியன கரைந்த வெளி அனுபவம் அகத்தின் கண்ணே தோன்றுங்கால் அதிலே எண்ணற்ற சித்துக்களைத் தோற்றுவித்து அவை பலப்பல என்ற அளவில் விரித்துப் பக்குவமான அனுபவங்களை அடையும்படி அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**வெளியிடை உயிரியல் வித்தியல் சித்தியல்**
**அளிபெற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (510)

இந்தப் பரந்த வெளியிலே சந்தானத்தை விருத்தி செய்யும் ஜீவ அணுக்கள் நிறைந்துள்ளன. பக்குவம் அபக்குவம் பக்குவா பக்குவம் என இவை மூன்று வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. ஜீவ அணுக்களைக் காரியப்படவைக்கும் பரமான்ம அணுக்களின் இயக்கத்தால் ஏற்படுகின்ற சித்தி விளைவுகளும் முற்கூறிய பக்குவ நிலைகட்கேற்ப அடையுமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

(அல்லது)

அனுபவ வெளி தோன்றுங்கால் ஜீவான்மாவாகிய உயிரணு பரமான்மாவுடன் ஐக்கியப்பட்டுப் பலப்பல சித்தி அனுபவங்களையும் சித்து விளைவுகளையும் பக்குவமாகப் பெறும்படி அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**வெளியின் அனைத்தையும் விரித்து அதிற் பிறவும்**
**அளியுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (512)

பரந்த விண்வெளியானது சூரியன் சந்திரன் விண் மீன்கள், கோள்கள் முதலியவற்றுடன் இன்னும் என்னென்ன உள்ளனவோ அவை அனைத்தினையும் தன்னுள்ளே கொண்டுள்ளது. இவையெல்லாம் ஓரிடத்திலேயே அமைந்துவிடாமல் அறிவின் எல்லைக்கு அப்பாற்பட்டுப் பரவலாக விரியும்படிச் செய்து அதிற்பல பக்குவ நிலைகளை அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

(அ)

உயிர்வெளி, கலைவெளி, பரவெளி, பரம்பாவெளி, பராபரவெளி, பெருவெளி போன்ற பலப்பல அனுபவ வெளிகளை அமைத்து அவற்றின் அனுபவங்களைப் பெறுங்கால் பலப் பக்குவங்கள் விளங்க அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

## <u>முன்னுரை அகப்புறவிரி.</u> (பாகம் 8)

இதுவரை பஞ்சபூதங்களின் விரிவை விளக்கி வந்த நம்பெருமானார் அடுத்த வரி தொடங்கி பிண்டத்தினுள்ளே இறைவன் எப்படிக் காரியப்படுகின்றான் என விளக்குகின்றார். இனிவரும் வரிகளில் அகநடு, அகக்கடை, அகப்புறநடு, அகப்புறக்கடை, புறநடு, புறக்கடை புறப்புறநடு, புறப்புறக்கடை போன்ற வார்த்தைகளை நம் பெருமானார் கையாளுகின்றார். இந்த வார்த்தைகளை இதுவரை வந்த அருளாளர்கள் பாடிவைத்த தேவாரம், திருவாசகம், திருமந்திரம், திருப்புகழ் போன்ற எதனிலும் கையாளப்பட்டதாகத் தெரியவில்லை. எனவே இவ்வார்த்தைகட்கு உரை இன்னதென்று காண இயலவில்லை. எனினும் உரைநடையில், நம் பெருமானார், சில கருத்துக்களை அடியிற் குறித்துள்ளவாறு கூறியுள்ளார்.

" கடவுள் காரியப்படுமிடம்

| | அண்டத்தில் | பிண்டத்தில் |
|---|---|---|
| அகம் | அக்கினி | ஆன்மா |
| அகப்புறம் | சூரியன் | ஜீவன் |
| புறம் | சந்திரன் | கரணங்கள் |
| புறப்புறம் | நட்சத்திரங்கள் | இந்திரியங்கள் |

இதுவரை வந்தோர் கரணங்கள் நான்கு என வரையறை செய்திருக்க நம் பெருமானாரோ ஐந்து எனக் கூறுகின்றார். (தத்துவங்கள் 96 காண்க)

1. மனம்
2. புத்தி
3. சித்தம்
4. அகங்காரம்
5. உள்ளம்

இந்திரியங்களும் மெய், வாய், கண், மூக்கு, செவி என ஐந்தாகும். இவற்றை ஆதாரமாக வைத்தே கூடியவரை உரைகாண முயற்சி செய்யப்பட்டுள்ளது. இந்த விளக்கம் ஒருவாறு கூறப்படுவதேயொழிய நம் பெருமானார் என்ன கருதி எழுதினாரோ யார் அறிவார்?

**புறநடுவொடு கடை புணர்ப்பித்து ஒரு முதல்**
**அறமுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (514)

புறம் என்பது கரணங்கள் அதாவது

1. மனம்
2. புத்தி
3. சித்தம்
4. அகங்காரம்
5. உள்ளம்

புறநடு = சித்தம்

கடை = உள்ளம் = அறிவு

ஒருமுதல் = மனம் நல்ல மனம் கெட்ட மனம் என இரு கூறாக உள்ளது = ஒரு முதல் நல்ல மனம். கரணங்களின் தொழிற்பாடு :

மனம் = நினைத்தல்
புத்தி = விசாரித்தல்
சித்தம் = நிச்சயித்தல்
அகங்காரம் = செயல்படுதல்
உள்ளம் = அறிவு மயமாதல்

எந்தச் செயலையும் தீர்மானிக்கின்ற சித்தத்துடன் கடை எனப்படும் உள்ளமாகிய அறிவு கூடி நிச்சயிக்குமேயானால் ஒரு முதலாகிய நல்ல மனம் தரும வழி - நேர்மை வழி - நீதி வழி அடையுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**புறந்தலை நடுவொடு புணர்ப்பித்து ஒரு கடை**
**அறம் பெற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (516)

உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும் என்று தெய்வ மணிமாலையில் பாடுகின்றார்.

ஐயா நான் வேண்டுதல் கேட்டு அருள் புரிதல் வேண்டும் எனத் தொடங்கும் திரு அருட்பாவில் பொய்யாத வாய்மைகளே புகன்றிடுதல் வேண்டும் புகன்றபடி புகன்றபடி புரிந்திடுதல் வேண்டும் என்கின்றார். முன் வரியிலே நல்ல மனம் தரும வழிக்கு வருகின்ற மார்க்கத்தைக் கூறினார். மனம் மட்டும் தரும வழி வந்தால் போதுமா? அது செயல்பாட்டில் வெளிப்பட வேண்டுமே - இந்த வரியில் அதன் விளக்கம் :

புறந்தலை = முன்வரிப்படி அறவழிவந்த மனம்
நடு = திரிகரணம் என்கின்ற மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றில் நடுவாகிய வாக்கு
கடை = திரிகரணத்தில் கடையாகிய செயல் - நல்ல செயல், தீய செயல் = ஒரு கடை = நல்ல செயல்.

அறவழி உற்ற நல்ல மனதின் தூய எண்ணங்கள் வாக்கின் மூலம் வெளிப்படும்படிச் செய்தால் ஒரு கடையாகிய நற்செயல்கள் அறவழியிலே அமையுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**அகப்புற நடுக்கடை அணைவால் புறமுதல்**
**அகப்பட வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (518)

| | | |
|---|---|---|
| அகப்புறம் | = | ஜீவன் |
| நடு | = | சபை. ஆதாரம் நடு நாடி நடு நாடி நடமாடும் பதியே |
| கடை | = | ஜாக்ரத் - சொப்னம் - சுழுத்தி - துரியம் என்ற அவத்தைகளில் கடையானதாகிய துரியம் |
| புறமுதல் | = | மனம் |

ஜீவகாசமாகிய சிற்சபையில் துரியநிலை அனுபவம் ஏற்படும்போது மனமானது நம் வசம் அகப்படும்படி வகுத்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**அகப்புற நடு முதல் அணைவால் புறக்கடை**
**அகப்பட அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (520)

| | | |
|---|---|---|
| அகப்புறநடு | = | முன் வரியில் கூறப்பட்டதுபோல ஜீவாகாசமாகிய சிற்சபை |
| முதல் | = | மனம் |
| புறக்கடை | = | கரணங்களின் கடைசியாகிய உள்ளம். (புறம் என்பது கரணங்கள் என முன்னரே விளக்கப்பட்டுள்ளது) |

ஜீவாகாசமாகிய சிற்சபையில் மனம் சேர்ந்து விடும் சமயம் புறக் கடையாகிய உள்ளம் எனும் அறிவு நம் வசம் அகப்படுமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**கருதக நடுவொடு கடை அணைந்து அகமுதல்**
**அருளுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (522)

| | | |
|---|---|---|
| அகம் | = | ஆன்மா |

நடு = சபை
அகநடு = ஆன்மாகாசம்
கடை = துரியாதீதம்
(ஜீவாகாசத்தில் துரியம் அனுபவமாவதால் ஆன்மாகாசத்தில் துரியாதீதம் கடை எனப்பட்டது)

ஆன்மாகாசத்தில் துரியா தீத நிலை அனுபவம் சேரும்போது அக முதலாகிய ஆன்மா அருள் அடையுமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**தணியக நடுவொடு தலை அணைந்து அகக்கடை**
**அணியுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (524)

தணி அக நடு = சாந்தம் நிறைந்த ஆன்மாகாசம்

தலை = ஆன்மா (முன்வரிசையில் கூறியவாறு அருள் பெற்ற ஆன்மா)

அகக் கடை = ஆன்ம அறிவு

சாந்தம் நிறைந்த உள்ளமெனும் ஆன்மாகாசமாகிய பொற்சபையில் அருள்பெற்ற ஆன்மாவானது சேர்ந்தவுடன் ஆன்ம அறிவு தரிக்குமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**அகநடு புறக்கடை அணைந்து அகப்புறமுதல்**
**அகமுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (526)

அகம் என்கின்ற ஆன்மாவானது நடு எனும் சபையாகிய ஆன்மாகாசத்தில் புறக்கடை என்னும் உள்ளத்துடன் இணையும் சமயம் அகப்புற முதலாகிய ஜீவன் நம் முள் அதாவது அகத்திலேயே அடையும்படி வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு ஜீவனானது நம் உடம்பினுள்ளே இருந்தாலும் நுரையீரல், கல்லீரல், இருதயம், சிறுநீரகம் போன்று உடலின் உள்ளுறுப்பாக இல்லாத காரணத்தால் அந்த ஜீவனானது இந்த உடலில் கலகம் நேரிட்ட

காலத்தில் தயவின்றி வெளியேறி விடுகின்றது. எனவே அதை உள்ளூறுப்பாக மாற்றிவிட்டால் அந்த ஜீவனானது உடலை விட்டு வெளியேறாது - மரணமும் சம்பவிக்காது, எந்த அனுபவத்தில் ஜீவனானது உள்ளூறுப்பாக மாறும் என இந்த வரியில் விளக்கப்பட்டுள்ளது - மேலும் அகவல் வரி 688 காண்க)

அகம் - ஆன்மா
நடு - சபை
புறக்கடை - புறமாகிய கரணங்களில் கடையாகிய உள்ளம்,
அகப்புறமுதல் ஜீவன்

**அகநடு புறத்தலை அணைந்து அகப்புறக்கடை**
**அகலிடை வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (528)

அகம் எனும் ஆன்மாவானது நடு எனும் சபையில் புறத்தலை எனும் நல்ல மனதுடன் இணையும்போது அகப்புறக்கடை எனும் ஜீவ அறிவு விரிவடையுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே

அகம் - ஆன்மா
நடு - சபை
புறத்தலை - புறமாகிய கரணங்களில் தலையானதாகிய மனம்
அகப்புறக் கடை ஜீவ அறிவு

**அகநடு அதனால் அகப்புற நடுவை**
**அகமற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (530)

அகநடு - ஆன்மாகாசம் அல்லது ஆன்ம ஒளி
அகப்புறநடு - ஜீவ ஒளி - பரையொளி

ஆன்ம ஒளியதனால் ஜீவ ஒளியாகிய பரையொளி அதாவது மன ஒளி அகத்திலே அற்றுப் போகுமாறு அமைத்துள்ள அருட்பெருஞ்ஜோதி

மனதிலே பரஒளி என்பதற்கு ஆதாரம்:

பரையொளி என் மனப் பதியினில் விரித்தே
அரைசது இயற்றெனும் அருட்பெருஞ்ஜோதி

மனப்பதி - மனம் இருக்குமிடம் ஜீவாகாசம், மனதிலே தோன்றுவது பரையொளி

அது ஜீவாகாசத்திலே தோன்றுதலால் பரையொளி

ஜீவ ஒளி எனப்பட்டது
இதை விட ஆன்ம ஒளி ஆற்றல் மிக்கது - எனவே
ஆன்ம ஒளி விளங்கும்போது பரையொளி
அற்றுப் போனது

(அ)

அகப்புறநடு - அகத்திலே செயல்படும் புற நடுவாகிய சித்தம்

ஆன்ம ஒளி தோன்றும் போது அதனால் அகத்திலே
இதுவரை ஆதிக்கம் செலுத்தி வந்த சித்தமானது
அகத்தைவிட்டு அற்றுப் போகும்படி அமைத்த
அருட்பெருஞ்ஜோதி

**அகப்புற நடுவால் அணிபுற நடுவை**
**அகப்பட அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (532)

அகப்புற நடு - ஜீவ ஒளி
புறநடு - சித்தம்

ஜீவ ஒளியினால் நாமே அணிந்து கொண்டிருந்த சித்தமானது நம் வசம் அகப்படும்படி அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு - ஜீவ ஒளியினால் நம் வசம் அகப்பட்ட சித்தமானது ஆன்ம ஒளியினால் நம் அகத்தைவிட்டு அகன்ற நிலை முன் வரியில் கூறப்பட்டுள்ளது காண்க

**புறநடு அதனால் புறப்புற நடுவை**
**அறமுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (534)

புறநடு - கரணங்களின் நடுவாகிய சித்தம்
புறப்புறநடு - மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய பஞ்ஜேந்திரியங்களில் நடுவாகிய கண் அதாவது நமது பார்வை.

முன் வரியில் ஜீவ ஒளியினால் சித்தமானது நம் வசம் அகப்பட்டது கூறப்பட்டது.

நம்முடைய கண் பார்வையானது காமம் கலந்த பார்வையா, குரோதமான பார்வையா, கனிவான பார்வையா என்பது அகத்திலே உள்ள சித்தத்தின் செயல்பாடாகும். எனவே நம்வசம் அகப்பட்ட சித்தத்தின் விளைவு என்னவெனில் நம்முடைய கண்பார்வையானது தீயன அற்று தரும-நீதி உறுமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**புகலரும் அகண்ட பூரண நடுவால்**
**அகநடு வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (536)

சொல்வதற்கரிதாகிய, எங்கும் வியாபகமாய் விரிந்துள்ள, குறைவென்பதே இல்லாத நிறைவான, பாரபட்சமற்ற நடு என்னும் நிலை கொண்டு ஆன்ம ஒளியை வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு: ஆன்மாவிற்கு இயற்கைக் குணம் ஜீவகாருண்யமே என்று நம்பெருமானார் கூறியுள்ளார். இயற்கைக் குணமாகிய ஜீவகாருண்யமே சொல்வதற்கரியது - எந்த எல்லைக்கும் உட்படாதது - குறைவற்ற பரி பூரணமானது - பாரபட்சமற்று அனைவர்க்கும் பொதுவானது - அப்பபடிப்பட்ட நடு பூரணநடு இறைவனின் கருணையே ஆகும். அந்தக் கருணைதான் தன் கூறாக அகநடு எனும் ஆன்ம ஒளியை வகுத்தது என்கின்றார் இந்த வரியில்,

**புறப்புறக் கடை முதல் புணர்ப்பாற் புறப்புற**
**அறக்கணம் வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (538)

புறப்புறக்கடை - இந்திரியங்கள் - மெய்வாய்கண், மூக்கு, செவி - கடை - செவி அதாவது கேள்விஞானம்,

முதல் - மனம்

கேள்வி ஞானம் மனதிலே ஒன்றுவதால் புறப்புற உறுப்புகளாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய பஞ்சேந்திரியங்களும் தரும வழியில், அறவழியில், நேர்மை வழியில் நிற்கும் கூட்டமாக விளங்குமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : மெய்ஞ்ஞான விருப்பமுடையோர்க்குக் கேள்வி ஞானமே முதல் என்பது நம் பெருமானார் மகாதேவ மாலையில் கூறியுள்ள கருத்தாகும் ஆதாரம்:

<u>மெய்ஞ்ஞான விருப்பத்தலேறிக் கேள்வி மீதேறித் தெளிந்து</u>

இச்சை விடுதலேறி
அஞ்ஞானம் அற்ற படியேறி உண்மை அறிந்தபடி நிலையேறி
அது நான் என்னும்
கைஞ்ஞானம் கழன்றேறி மற்றவெல்லாம் கடந்தேறி
மௌன இயற்கதியிலேறி
எஞ்ஞானம் அறத் தெளிந்தோர் கண்டும் காணேம்
என்கின்ற அனுபவமே இன்பத் தேவே.

**புறத்தியல் கடை முதற் புணர்ப்பால் புறத்துறும்**
**அறக்கணம் வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (540)

புறத்தே எதனையும் வெளிப்படுத்துவதற்கு முன்பாக மனதுடன் அறிவைச் சேர்ப்பித்து இயக்கினால் வெளிப்படும் வாக்கு, செயல் அனைத்தும் தரும வழியில் விளங்கும் வண்ணம் வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : மனதில் தோன்றும் அனைத்தையும் சரியாகச் சிந்தியாமல் அப்படியே வாக்காலும் செயலாலும் வெளிப்படுத்தாமல், அறிவுடன் கலந்து சிந்தித்து வெளிப்படுத்தினால் தருமம் நிலை பெறும் எனக் கூறுகின்றார்.

**அகப்புறக் கடை முதல் அணைவால் அக்கணம்**
**அகத்துற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (542)

தந்தேகம் எனக்களித்தார் தம் அருளும் பொருளும்
தம்மையுமிங்கெனக் களித்தார் எம்மையினும் பிரியார்
எந்தேக மதிற் புகுந்தார் என்னுளத்தேயிருந்தார்
என்னுயிரிற் கலந்த நடத்திறையவர் காலையிலே
வந்தேயிங்கமர்நதருள்வார் ஆதலினால் விரைந்தே
மாளிகையை அலங்கரித்து வைத்திடுதி யிதற்குச்
சந்தேகமில்லை யென்றன் தனித் தலைவர் வார்த்தை
சத்தியம் சத்தியம் மாதே சத்தியம் சத்தியமே. (5704)

இந்தப் பாடலைக் கூர்ந்து நோக்கினால் இறைவன் முதலில் அருளைக் கொடுத்தான், அடுத்து பொருளைக் கொடுத்தான், பின்னர் தன்னையே கொடுத்தான் என்பது தெளிவாகும். எனவே முதலில் வருவது அருள்தான். இதை வைத்தே இந்த அகவல் வரிக்கு உரைகாணப்படுகிறது.

| | | |
|---|---|---|
| அகப்புறக் கடை | = | ஜீவ அறிவு |
| முதல் | = | அருள் |

அகப் புறக்கடையாகிய ஜீவ அறிவுடன் முதலாகிய அருள் சேரும்போது அந்தக் கணத்திலேயே ஜீவன், ஜீவ ஒளி, ஜீவ அறிவு முதலியன அகத்திலே அடையும்படி வகுத்த அருட்பெருஞ்ஜோதி..

**அகக்கடை முதற் புணர்ப்பதனால் அகக்கணம்**
**அகத்திடை வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (544)

அகக்கடை என்கிற ஆன்ம அறிவுடன் முதலாகிய அருள் கலந்துவிட ஆன்மா, ஆன்ம ஒளி, ஆன்ம விளக்கம் முதலியன அனைத்தும் அகத்திலே விளங்கும்படி வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**வானிடைக் காற்றும் காற்றிடை நெருப்பும்**
**ஆனற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (546)

வானாகிய வெளியிலே காற்றும், அந்தக் காற்றிலே நெருப்பும் நீக்கமற நிறைந்து விளங்குமாறு அமைத்துள்ள அருட்பெருஞ்ஜோதி.

<u>குறிப்பு</u> : வானாகிய ஆகாயம் அனாதி. அஃதேபோல் காற்றும் அனாதி என்கிறார் வள்ளலார். வானத்திலிருந்து காற்று தோன்றியது என்று எண்ணக்கூடாது. காற்றும் வானத்தைப் போல் அனாதி என்பதை உணர வேண்டும். (ஆதாரம் : உரைநடை சிருட்டி நியாயம் தலைப்பு பக்கம் 254)

**நெருப்பிடை நீரும் நீரிடைப் புவியும்**
**அருப்பிட வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (548)

பஞ்ச பூதங்களில் வானமும் காற்றும் அனாதியானாலும் அந்தக் காற்றிலே உள்ள நெருப்பிலிருந்து நீர் தோன்றுமாறும் அந்த நீரிலிருந்து இந்தப் பூமியானது தோன்றுமாறும் அமைத்த அருட்பெருஞ்ஜோதி (அருப்பிட என்பது அரும்பிட அதாவது தோன்றிட என்பது அறியத்தக்கது)

**நீர்மேல் நெருப்பும் நெருப்பின்மேல் உயிர்ப்பும்**
**ஆர்வுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (550)

நீர் சாதாரணமாகக் குளிர்ந்த தன்மையுடையதாய் இருந்தாலும் அதிலே வெப்பம் உள்ளது. அந்த வெப்பம் ஜீவன்கள் வாழக் கூடிய உயிர்ப்புச் சக்தியைக் கொண்டுள்ளது. இவ்வாறு நீரின்மேல் நெருப்பும் அந்த நெருப்பின் மீது உயிர்ப்புச் சக்தியும் சிறப்புற விளங்குமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**புனன்மேல் புவியும் புவிமேல்புடைப்பும்**
**அனன்மேல் வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (552)

பூமிக்கடியில் நெருப்பு உள்ளது என்று நாம் அறிவோம். அந்த நெருப்புதான் எரிமலை மூலம் சில இடங்களில் வெளிவருகின்றது. அந்த நெருப்பிற்கு மேலே பூமிக்கடியில் நீர் இருப்பதையும் அறிவோம். நீருக்கு மேலே பூமியுள்ளது. பூமியின் மேற் பரப்பில் மலைகள் உள்ளன. (இதைத்தான்) நீருக்கு (புனல்) மேலே பூமியும், பூமியின்மேல் மலைகளும் (புடைப்பும்) நெருப்பின் (அனல்) மேல் அமைத்துள்ள அருட்பெருஞ்ஜோதி..

**பகுதிவான் வெளியில் படர்ந்த மாபூத**
**அகல் வெளி வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (554)

வான் வெளியோ எல்லையற்றது. அப்படிப்பட்ட வான் வெளியின் ஒரு பகுதியிலே மண், நீர், நெருப்பு, காற்று ஆகிய பெரும் பூதங்கள் என்பவையும் பல கோளங்களைக் கொண்ட பலப்பல அண்டங்களையும் அமைத்துள்ள அருட்பெருஞ்ஜோதி.

**உயிர் வெளியிடையே உரைக் கரும்பகுதி**
**அயவெளி வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (556)

உயிர்வெளி என்பது ஜீவன் இருக்கின்ற ஸ்தானம். அதாவது ஜீவாகாசம் என்ற சிற்சபை. அந்தச் சிற்சபையிலே சொல்லுக்கடங்காத அருமையான பல அனுபவ வெளிகளை அடையுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**உயிர்வெளியதனை உணர்கலை வெளியில்**
**அயலற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (558)

உயிர்வெளி எனப்படும் ஜீவாகாசமாகிய சிற்சபையானது நமக்குத் தற்போது சொந்தமாக இல்லாமல் அயலாக உள்ளது. எந்த அறிவை நாமறிய வேண்டுமோ அந்த அறிவை (கலை) நாம் அறிந்து அவ்வெளி அதாவது அதன் எல்லையைக் கண்டால் சிற்சபையானது அயல் என்ற நிலைமாறிச் சொந்தமானதாக விளங்குமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : சிற்சபை சொந்தமாகிறது என்பதற்கு ஆதாரம்.

சிற்சபையும் பொற்சபையும் சொந்தமெனதாச்சு
தேவர்களும் மூவர்களும் பேசுவதென்பேச்சு
இச்சமய வாழ்வில் எனக்கென்னயினியேச்சு
என் பிறப்புத் துன்பமெலாமின்றோடே போச்சு.
(திருவருட்பா 5259)

**கலை வெளி யதனைக் கலப்பறு சுத்த**
**அலர் வெளி வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (560)

முன்வரியில் உயிர் வெளியைக் கலை வெளியினால் அறியலாம் எனக் கூறப்பட்டது.

கலைவெளி என்பதை வேறு எந்த நினைவும் கலக்காத தூய நல் வெளியிலே விளங்குமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : மனம் புத்தி சித்தம், அகங்காரம் ஆகிய கரணங்கள் கலவாத, சுத்தம் மலர்கின்ற வெளியிலே, கலை வெளி விளங்குகின்றதாம். எல்லாக் கலைகளையும் ஓதிதான் அறியவேண்டும் என்பதில்லை. பூரண நிலை அனுபவம் தோன்றினால் அத்தனை கலைகளையும் கணத்தில் அறிந்து கொள்ளலாம். இதைத்தான் சுத்த அலர்வெளி எனப்பட்டது. ஆதாரம்

காரணமிது புரி காரிய மிது மேல் காரணக் காரியக் கருயிது பலவாய்
ஆரணம் ஆகமம் இவை விரித்துரைத்திடும் நீ அவை அடந்திடன் மகனே
பூரணநிலை அனுபவமுறில் கணமாம் பொழுதினில் அறிதி எப்பொருள் நிலைகளுமே
தாரணிதனில் என்ற தயவுடை அரசே சத்தியச் சபைத் தனிப் பெரும்பதியே.

**சுத்த நல்வெளியைத் துரிசறு பரவெளி**
**அத்திடை வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (562)

முன்வரியில் கூறப்பட்ட சுத்த வெளி எங்கே உள்ளது என்பது இந்த வரியில் விளக்கப்படுகின்றது.

துரிசு : குற்றம்.

குற்றங்களை அகற்றுகின்ற பரவெளியிலே சுத்த வெளி விளங்குமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : துரிசு என்பது நான்கு வகை.

1. அண்டத்துரிசு
2. அகிலத்துரிசு
3. பிண்டத்துரிசு
4. பேருயிர்த்துரிசு

இந்த எல்லாத் துரிசுகளும் பரவெளி அனுபவம் தோன்றுங்கால் நீங்கிவிடும்.

**பரவெளி யதனைப் பரம்பர வெளியில்**
**அரசுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (564)

முன்வரியில் கூறப்பட்ட பரவெளி எங்குள்ளது என்பது இந்த வரியில் கூறப்படுகிறது.

பரம் . மேலானது
பரம்பரம் . ஆகாயம்

தனக்குள்ளே மேலானதாக விளங்குகின்ற ஆகாயம் என்னும் சூன்யமான மோன வெளியிலே பரவெளியாகிய இறைவன் இருக்குமிடமானது பூரண ஆதிக்கத்துடன் விளங்குமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**பரம்பரவெளியைப் பராபரவெளியில்**
**அரந்தெற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (566)

பரம் . சாஸ்திர ஞானம்

அபரம் . அனுபவ ஞானம்

பரம்பரவெளியிலே பரவெளி உள்ளது என முன்னர் கூறப்பட்டது. அந்தப் பரம்பர வெளி எங்கே உள்ளது? சாஸ்திர ஞானம் அனுபவ ஞானமாகும், வெளியிலே பரம்பர வெளியை குற்றமற வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**பராபர வெளியைப் பகர் பெருவெளியில்**
**அராவற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (568)

பரம்பர வெளியானது பராபர வெளியில் அறியுமாறு அமைக்கப்பட்டதென முன்னர் தெரிவிக்கப்பட்டது,

அந்தப் பராபர வெளியானது ஞானிகளால் பகரப்பட்ட அதாவது கூறப்பட்ட பெருவெளி எதுவோ அதனுள் உள்ளவாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : எதையாவது நினைத்துக் கொண்டே இருக்கும் மனமானது செயலற்ற நிலைக்கு எப்போது வருகின்றதோ அதுவே பெருவெளி எனப்படுவது,

ஆதாரம் . உரை மனங்கடந்த ஒரு பெருவெளிமேல் அரைசு செய்து ஓங்கும் அருட்பெருஞ்ஜோதி.

அகவல் 12 வரிக்கான விளக்கம் காண்க.

**பெருவெளியதனைப் பெருஞ்சுக வெளியில்**
**அருளுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (570)

இந்திரியங்களும் கரணங்களும் தருகின்ற சுகமே சுகமென எண்ணுகிறோம். அதனால் அவை செயல்படாத நிலையில் தோன்றும் சுகமே பெருஞ்சுகமாம். அந்தப் பெருஞ்சுக வெளியில் பராபர வெளியை அருள் அடையும் வகையில் ஏற்படுத்தியுள்ள அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு . சுகம்

இன்று வருமோ நாளைக்கே வருமோ அல்லது மற்
றென்று வருமோ யறியேன் எங்கோவே - துன்றுமல
வெம் மாயை யற்று <u>வெளிக்குள் வெளி கடந்து</u>
சும்மாயிருக்கும் சுகம்,

**குணமுதற் கருவிகள் கூடிய பகுதியில்**
**அணைவுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (572)

கொல்லாமை, பொறுமை, சாந்தம், அடக்கம், இந்திரிய நிக்கிரகம், ஆன்ம இயற்கைக் குணமாகிய ஜீவகாருண்யம் போன்ற சாத்வீக குணங்களும் சிதறிக்கிடக்கின்ற மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய கருவிகளும் ஒன்றுகூடும் இடம் எதுவோ அங்கே இறைவனுடன் கலக்கப் பெறுமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

<u>குறிப்பு</u> : கருவிகள் என்பவை மனம் முதலானவையே என்பதற்கு அடுத்த வரியே ஆதாரம். அகவல் வரி 574 காண்க.

**மனமுதற் கருவிகள் மன்னுயிர் வெளியிடை**
**அனமுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (574)

வெளி என்பது ஆகாசம், உயிர் இருக்குமிடம் உயிர் வெளி ஆகும். அந்த உயிர் வெளியிலே மனம் புத்தி சித்தம் அகங்காரம் ஆகிய நான்கு அந்தக் கரணங்களை அழகுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

<u>குறிப்பு</u> : ஜீவன் மனம் முதலாகிய அந்தக் கரணங்களின் கூட்டத்தின் மத்தியில் இருக்கும்.

ஆதாரம் . ஜீவன் இருக்கின்ற ஸ்தானம் (உரைநடை)

**காலமே முதலிய கருவிகள் கலைவெளி**
**ஆலுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி,** (576)

காலங்களால் அறிவானது தழைத்து விளங்குமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி. எவ்வாறெனில் கடந்த கால அனுபவங்களை அறிவாலே ஆய்ந்து பார்த்து எதிர்கால வாழ்வு வளம் பெற அமைய நிகழ்காலத்தை வரையறை செய்யக்கூடிய அளவில் காலமாகிய கருவிகளால் அறிவானது தழைத்து விளங்குமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு இளமை - முதுமை ஆகியவையும் பருவகாலங்களாகும். இளவேனில், கோடை, பனி, மழை முதலியனவும் காலங்களே, நிகழ்காலம் எதிர்காலம் இறந்த காலம் ஆகியவையும் காலங்கள்.

**துரிசறு கருவிகள் சுத்த நல்வெளியிடை**
**அரசுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (578)

காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சர்யம் போன்ற தீமைகளாகிய துரிசுகள் நீங்கப் பெற்ற நல்ல தூய்மையான மனம் முதலாகிய கருவிகள் செயல்பாடற்ற நிலைக்கு வருங்கால் தோன்றும் அனுபவமே சுத்த நல்வெளியாகும். அத்தருணத்தே இறைவனின் அருளாட்சியை நாம் அடையுமாறு ஏற்படுத்தியுள்ள அருட்பெருஞ்ஜோதி.

ஆதாரம்

தங்கோலளவது தந்து அருட்ஜோதிச்
செங்கோல் செலுத்தெனச் செப்பிய தந்தையே

**இவ்வெளி யெல்லாம் இலங்க அண்டங்கள்**
**அவ்வயின் அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (580)

இதுவரை கூறப்பட்ட வெளிகள் எல்லாம் பிண்டத்திலே விளங்குவனவாம். எவ்வாறு பிண்டத்திலே பலவிதமான வெளிகள் உள்ளனவோ அவ்வாறே அண்டங்களிலும் அமைத்துள்ள அருட்பெருஞ்ஜோதி.

அண்டவகை எவ்வளவோ அவ்வளவும் அவற்றில்
அமைந்த உயிர் எவ்வளவோ அவ்வளவும் அவைகள்
கண்ட பொருள் எவ்வளவோ அவ்வளவும் அவற்றில் கலந்த
கலப்பு எவ்வளவோ அவ்வளவும் நிறைந்தே
விண்டகுமோர் நாதவெளி சுத்தவெளி மோனவெளி
ஞானவெளி முதலாம் வெளிகளெல்லாம் நிரம்பிக்
கொண்டதுவாய் விளங்குகின்ற சுத்த சிவமயமே
குலவு நடத்தரசே என்குற்றமுங்கொண்டருளே.

**ஓங்கிய அண்டம் ஒளிபெற முச்சுடர்**
**ஆங்கிடை வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (582)

உயர்ந்த நிலையில் விளங்குகின்ற அண்டமானது ஒளி பெற்று விளங்குவதற்கு வேண்டி சூரியன் சந்திரன் உடுக்கள் (நட்சத்திரங்கள்) ஆகிய மூன்று பிரகாசிகளை ஏற்படுத்திய அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : சந்திரன் சுயம்பிரகாசியாய் இல்லாது போனாலும் பிரகாசி என்பதுதானே உண்மை.

**சிருட்டித் தலைவரைச் சிருட்டி அண்டங்களை**
**அருட்டிறல் வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (584)

முதல் அனுபவம் பெற்றவரே பிரும்மா ஆகிறார். அவர் ஆற்றலோ எதையும் உண்டாக்க வல்லது. அதாவது சிருட்டித் தொழில் இப்படிச் சிருட்டித் தொழில் செய்யக்கூடிய பிரும்மாக்கள் பலரை முதலில் உருவாக்கிப் பின்னர் தன்னருளாற்றல்.

வெளிப்படும் வகையில் அண்டங்களையும் ஏற்படுத்திய அருட்பெருஞ்ஜோதி.

ஒருமுடிப் பிரமனண்டங்கள்
அடிமுடிப் பெருமையே உன்ன முடியா
......... ......... ......... ......... ......... ......... .........

நல்ல எண்ணங்களும் (சிருட்டி) ஒரு தனிமனித வாழ்வில் (பிரும்ம நிலையே)

**காவல் செய்தலைவரைக் காவலண்டங்களை**
**ஆவகை யமைத்த அருட்பெருஞ்ஜோதி** (586)

படைத்த பொருட்களைக் காப்பாற்றும் ஆற்றல் பெற்றவர் இரண்டாவது அனுபவ நிலை பெற்ற விஷ்ணு ஆவார். இவ்வனுபவம் பெற்ற தலைவர்களையும் அவர்களால் காக்கப்படுகின்ற அண்டங்கள் பலவும் அவ்வாறே விளங்குமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.
(நல்ல எண்ணங்கள் உடைந்து போகாமல் காத்தலும் தனிமனிதனின் விட்டுணு நிலை)

**அழித்தல் செய்தலைவரை அவரண்டங்களை**
**அழுக்கற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (588)

மூன்றாவது அனுபவமாகிய எதிரிகளை அழிக்கும் ஆற்றல் பெற்றவர் ருத்திரர் ஆவர். (படைத்ததை அழித்தல் அல்ல) (சிவபெருமான் முப்புரத்தை எரித்தார் என்பது கூட ஆணவம் மாயை, கன்மம் ஆகிய மும்மலங்களை எரித்தது பற்றியே கற்பனையாகக் கூறப்பட்டது) எதிர்ப்படும் மற்ற குற்றங்களை அழிக்கும் ஆற்றல் (அதாவது மன உறுதி தளராமை - விடாமுயற்சி - லட்சிய ஆர்வம் ஆகியவற்றால் எதிர்ப்புகளை எதிர்ப்பது) பெற்ற ருத்திரர்கள் எனப்படுவோரையும் அவரது ஆளுகைக்குட்பட்ட அண்டங்களையும் குற்றமற ் அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

(குறிப்பு : நல்ல எண்ணங்களை அழிக்க வரும் துரிசுகளை அழித்தலே தனி மனிதனின் ருத்ர நிலை . இதுவே துரிசு நீக்குவித்தல்)

**மறைத்திடு தலைவரை மற்றுமண்டங்களை**
**அறத்தொடு வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (590)

மனதிலே ஏற்பட்ட பழைய நினைவுகள் காலப் போக்கில் மறந்துவிடுகின்றன. இதுவரை நடந்த அத்தனை நிகழ்ச்சிகளும் சம்பவங்களும் எல்லாமே கவனத்தில் நின்று விடுமானால் பைத்தியம் பிடித்துவிடும், மறப்பு என்பது மனிதனுக்கு அளிக்க்பபட்ட ஒரு வரப்பிரசாதம் ஆகும். அந்த மறப்பு நிலையே ஒரு தனி மனிதனின் மகேசுர அனுபவமாகும்.

மறைத்தல் எனப்படுவது பழையன கழிந்த பின்னர் புதியதொன்று உருவாக்கப்படு முன்னர் உள்ள அனுபவமே யாகும். இந்த மகேசுர அனுபவம் பெற்ற சத்தர்களையும் அவரது அண்டங்களையும் தருமநெறி தவறாது இயங்குமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**தெளிவு செய் தலைவரைத் திகழும் அண்டங்களை**
**அளிபெற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (592)

பழையன கழிந்த பின்னர் உருவாகும் புதிய நிலையே அருளல் எனப்படும் ஐந்தாவது அனுபவநிலை. இச்சதாசிவ அனுபவத்தைப் பெற்ற தலைவர்களையும் அவர்கள் திகழும் அண்டங்களையும் பக்குவம் அடையுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

(தீயவை அனைத்தும் கழிந்து புனிதராகிப் புதியனவாக நல்லவை எல்லாம் தோன்றி விளங்க விளக்கம் செய்வித்தலே தனி மனிதனின் சதாசிவ அனுபவ நிலையாகும்)

**விந்துவாம் சக்தியை விந்தின் அண்டங்களை**
**அந்திறல் வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (594)

இதுவரை மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி என்ற ஐந்து ஆதாரங்கள் பற்றியும், அதனதன் அனுபவ நிலை பெற்றதாகக் கருதப்படும் பிரும்மா விஷ்ணு, ருத்ரன், மகேசுரன், சதாசிவன் ஆகிய தத்துவ அனுபவங்களையும் விளக்கப்பட்டது. இப்போது ஆக்ஞா எனப்படும் ஆறாவது ஆதாரமாகிய விந்து நிலை கூறப்படுகிறது. விந்து என்பதன் சரியான பொருளைச் சற்று சிந்தித்து வள்ளலார் கண்ணோட்டத்தில் காண்போமாக. நாம் உண்ணும் உணவில் 2½ வராகனெடைச் சுக்கிலம் உருவாகி ஒரு வராகனெடைச் சுக்கிலம் கோசத்தடியிலும், மற்றுமொரு வராகனெடை நாபியிலும் மீதமுள்ள ½ வராகனெடை நமது புருவமத்தியிலுமாக விளங்குகின்றது. கோசத்தடியில் இருப்பது புணர்ச்சிக் காலத்தில் வெளியேறிவிடும் நாபியிலுள்ளது உடல் வளர்ச்சியடைய உதவுகின்றது. மீதமுள்ள ½ வராகனெடை நமது புருவமத்தியில் ஆக்ஞா பீடத்தின் ஒளியாக விளங்குகின்றது. இதைப்பாதுகாக்க வேண்டும். இதை விட்டவன்தான் நொந்துகெட்டான் என்பது பழமொழி. விந்து என்பது புருவமத்தியில் விளங்கும் ஒளி நிலை என்று தெளிவாக அறிதல் வேண்டும். விந்துவாகிய ஒளியே ஆற்றல், அதுவே சக்தி எனப்பட்டது. அதைப் பாதுகாக்க வேண்டும் என்பது நம் பெருமானாரின் தீர்க்கமான கருத்தாகும்.

விந்து எனப்படும் ஆற்றல் மிக்க ஒளி அனுபவம் பெற்றவர்களையும் அன்னாரின் அனுபவ நிலை அண்டங்களையும் அதே ஆற்றல் விளங்க அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**ஓங்கார சக்திகள் உற்ற அண்டங்களை**
**ஆங்காக அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (596)

விந்து நிலை அனுபவத்திற்கு அடுத்த அனுபவம் நாத நிலை அனுபவம் என்பதால் முன் வரியில் விந்து நிலை கூறி இந்த வரியில் நாத அனுபவத்தையே ஓங்காரம் எனும் சொல்லால் குறிக்கப்பட்டது.

இறைவனின் காட்சி அனுபவத்திற்கு அடையாளமே நாத அனுபவம். யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே என்று இந்த அனுபவத்தைக் கூறினார்கள். மன்னர் நாதர் அம்பலவர் வந்தார் வந்தார் என்று திருச்சின்ன நாதம் என்னிரண்டு செவிகளினில் சொல்கின்றதே என்று நம் தந்தையார் பாடுகின்றார்.

நாத அனுபவ ஆற்றல் மிக்க அண்டங்கள் பலவற்றை நிலைபெற்று என்றும் மாறாது விளங்குமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

பிரும்மா, விஷ்ணு, ருத்திரன், மகேசன், விந்து ஆகிய ஆறையும் மனித தேகத்தில் பூத நிலை என்றும் இவற்றிற்கு இடம், வண்ணம் முதலியவை உண்டென்றும் வள்ளற் பெருந்தகை அறிவித்து நாதம் தொட்டுச் சுத்த சிவஸ்தானம் வரை ஆன்மானுபவம் என்றும் இவை அவ்வனுபவத்தில் அருகித் தோன்றும் என்றும் அறிவிப்பதை நினைவில் கொள்வோமாக.

**சத்தத் தலைவரைச் சாற்றும் அண்டங்களை**
**அத்தகை வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (598)

சத்துப் பொருளாக விளங்கும் உண்மையான தலைவரை விளக்கும் அண்டங்களை அவ்வாறே உண்மை ஆற்றலுடன் விளங்குமாறு உண்டாக்கிய அருட்பெருஞ்ஜோதி.

**நாதமாம் பிரமமும் நாத அண்டங்களும்**
**ஆதரம் வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (600)

பிரம்ம என்பது நாதமே. நாதமாகிய பிரமமும் நாத அனுபவங்களும் ஒன்றுக்கொன்று ஆதாரமாகப் பொருந்தி அருளுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : பிரம ஞானத்தால் என்றும் அழியாத சுவர்ண தேகத்தைப் பெறலாம். (உரைநடை)

**பகர் பராசக்தியைப் பதியும் அண்டங்களை**
**அகமற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (602)

பராசக்தி என்பது மாயை. மாயை பதிந்து விளையக்கூடிய அத்தனை செயல்பாடுகளும் அண்டங்களாகக் கண்டு அவை உள்ளத்திலே ஒட்டாது நீங்குமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**பரசிவ பதியைப் பரசிவ அண்டங்களை**
**அரசுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி.** (604)

பராசக்திக்கு அடுத்தது பரசிவம். மனம் என்பதேபரை - அதுவே அகம். அந்த அகம் அற (மேலே உள்ளவர்)ப் பரசிவ பதியாகிய இறைவெளி தோன்றுகின்றது. அந்நிலையில் இறைவெளியும் அவ்விறை அனுபவமும் தன்னாட்சியுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**எண்ணில் பல் சத்தியை எண்ணிலண்டங்களை**
**அண்ணுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (606)

பரசிவ நிலைகண்டோர் அடையும் சக்திகள் எண்ணில் அடங்கா . அவ்வாறு எண்ணில் அடங்காத ஆற்றலையும் அதனால் விளைந்த அனுபவங்களையும் விரைவாக அடையுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

(சித்தி எனும் பெண்ணரசி எத்தி என் கை பிடித்தாள்)

**அளவில் பல் சத்தரை அளவில் அண்டங்களை**
**அளவற வகுத்த அருட்பெருஞ்ஜோதி,** (608)

முன்வரியில் சக்திகளைப் பற்றிக் கூறப்பட்டது. அச் சக்திகளை ஆட்டுவிப்போர் அல்லது அச் சக்திகளை உடையோரே சத்தர்கள் ஆவர். சக்திகள் எண்ணிலடங்காதனவாதலால் சத்தர்களும் அளவற்றவராயினர். அவர்களது அனுபவ அண்டங்களும்

அளவில்லாததாயின. இவ்வாறு எல்லாவற்றையும் அளவற்றதாகப் படைத்த அருட்பெருஞ்ஜோதி.

**உயிர்வகை அண்டம் உலப்பில எண்ணில**
**அயர்வற வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (610)

உயிர்வகையோ அனந்தம்.அவைகட்குரிய அண்டங்களோ குறைவில்லாதன. எண்ணுக்கு அடங்காதவை. சோர்வே இல்லாவகை அதாவது இயக்கம் என்றுமே உள்ளவாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**களவில கடல்வகை கங்கில கரையில**
**அளவில வகுத்த அருட்பெருஞ்ஜோதி,** (612)

தன்னுள்ளே இருக்கின்ற அனைத்தினையும் யார் வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாம். வஞ்சனையில்லாத கடல். அந்த நிலையைக் களவில என்ற சொல் விளக்குகிறது. கடல் வகையோ வரம்பில்லாதது மட்டுமல்ல. அதன் நீரைத் தேக்கி நிறுத்தும் கரை என்பதும் இல்லாது விளங்குகின்றது. கடல்களில் உள்ள நீரிலே முத்துக்கள் போன்ற பல பொருட்களையும் பல்வகை உயிரினங்களையும் அளவற்று அமைத்துள்ள அருட்பெருஞ்ஜோதி.

**கடலவை யனைத்தும் கரையின்றி நிலையுற**
**அடலனல் அமைத்த அருட்பெருஞ்ஜோதி,** (614)

இந்தப் பூமியில் எத்தனை கடல்கள் உண்டோ அவையனைத்தும் கரையின்றியும் நிலை பெற்றும் விளங்குவதுடன் வடவா முகாக்கினி என்பது போன்ற அக்னி குறைவுபடாது விளங்குமாறும் அமைத்த அருட்பெருஞ்ஜோதி..

**கடல்களும் மலைகளும் கதிகளும் நதிகளும்**
**அடலுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (616)

ஆழம் மிகுந்த கடல்களையும், உயர்ந்து விளங்கும் மலைகளையும், வீசுகின்ற காற்றையும், ஓடுகின்ற நதிகளையும் தத்தம் நிலையில் குற்றமற்று விளங்குமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி..

**கடலிடைப் பல்வளம் கணித்தததிற் பல்லுயிர்**
**அடலுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (618)

கடலிலே சாதாரண உப்பு முதல் மிக அரிதாகிய முத்துக்கள் பவளங்கள் வரை பல வளங்களைத் தோற்றுவித்து மேலும் மீன் முதலாகத் திமிங்கலம் வரை பல்லாயிரக்கணக்கான உயிர்கள் வாழும்படி அமைத்த அருட்பெருஞ்ஜோதி..

**மலையிடைப் பல்வளம் வகுத்து அதிற் பல்லுயிர்**
**அலைவற வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (620)

மலைமீது பல்லாயிரக்கணக்கான மருத்துவ மூலிகைகள் உள்ளன. பல அரிய தாதுப் பொருள்களும், சலவைக்கல் போன்ற படிவங்களும்கூட மலையிலிருந்து வெட்டி எடுக்கப்படுகின்றன. நாட்டிற்குள் வராமல் பல உயிரினங்கள் மலை மீதுள்ள புதர்களிலும் மனித சஞ்சாரமற்ற உயர்ந்த அல்லது அடர்ந்த மரங்கள் உள்ள மலைகளிலும் வாழ்ந்து கொண்டுள்ளன. இவ்வாறு மலையிடையே பலவகை வளமான பொருட்களையும் பலவகை உயிரினங்களையும் அமைதியாகவும் ஆனந்தமாயும் அலைச்சலின்றியும் வாழுமாறு ஏற்படுத்தியுள்ள அருட்பெருஞ்ஜோதி..

**ஒன்றினில் ஒன்றே ஒன்றிடை ஆயிரம்**
**அன்றற வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (622)

சரியை கிரியை என்பன புறவழிபாடு, யோகம், ஞானம் என்பன அகவழிபாடு.

தவத்தை மேற்கொண்டு இறைவனைக் காண முயலும் தவச் சீலர்களுக்கு மன முதலாகிய கருவிகரணங்கள் ஒன்று சேர அவ்வனுபவத்தின் முடிவாகத் தோன்றுவது செவ்வொளி ஒன்றேயாம். எந்த ஜாதியினராயினும், எச் சமயத்தவராயினும், எம் மதத்தவராயினும் மேற்கூறிய அனுபவ நிலைக்குச் செல்லுவார் எனில் அவ்வனுபவம் ஒன்றே. கருவிகள் ஒன்றினில் அனுபவமாகும் இறைவனும் ஒன்றே. அந்த ஒன்றான இறைவனைத்தான் ஒவ்வொரு சமயத்தவரும் மதத்தவரும் தங்கள் தங்கள் மனம்போனபடியெல்லாம் பல்வேறு வடிவங்களிலும், பல்வேறு பெயர்களிலும் இருப்பதாகக் காட்டியுள்ளனர். இதைத்தான் ஒன்றிடை ஆயிரம் என்றது.

மனம் முதலிய கரணங்கள் ஒன்றுபடுமானால் அவர்கட்கு இறை அனுபவமும் ஒன்றேயாகவும், அவ்வாறு இல்லாதவர்க்கு அந்த ஒன்றே பல்லாயிரக் கடவுளர்களாகவும் ஆதியிலே நிலைபெறத் தீர்க்கமாக வகுத்த அருட்பெருஞ்ஜோதி..

இறைவன் ஒருவனே என்பதற்கு ஓர் ஆதாரம் :

ஒன்றும் அலார் இரண்டும் அலார் ஒன்றிரண்டும் ஆனார்
உருவும் அலார் அருவும் அலார் உருஅருவும் ஆனார்
அன்றும் உளார் இன்றும் உளார் என்றும் உளார் தமக்கோர்
ஆதியிலார் அந்தமிலார் அருட்பெருஞ்ஜோதியினார்
என்று கனல் மதி அகத்தும் புறத்தும் விளங்கிடுவார்
யாவும் இலார் யாவும் உளார் யாவும் அலார் யாவும்
ஒன்றுறு தாமாகி நின்றார் திருச்சிற்றம்பலத்தே
ஓங்குகின்ற தனிக் கடவுள் ஒருவருண்டே கண்டீர்
(திருவருட்பா 3282)

ஒன்றையே ஆயிரமாக வகுத்தனர் என்பதற்கு ஆதாரம்:

சைவ முதலாக நாட்டும் - பல
சமயங்கள் எல்லாம் தனித்தனிக்காட்டும்
தெய்வம் இது வந்து பாரீர் - திருச்
சிற்றம்பலத்தே திரு நட ஜோதி (4605)

கொடி இடைப் பெண் பேதாய் நீ அம்பலத்தே நடிக்கும்
கூத்தாடி என்றெனது கொழுநர் தமைக் குறித்தாய்
படி இடத்தே வானிடத்தே பாதலத்தே அண்ட
பகிர் அண்ட கோடியிலே பதிவிளக்கம் எலாம்
அடிமலர் கொண்டு ஐயர் செய்யும் திருக்கூத்தின் விளக்கம்
ஆகும் இது சத்தியம் என்று அருமறை ஆகமங்கள்
கெடியுறவே பறையடித்துத் திரிகின்ற அவற்றைக்
கேட்டறிந்து கொள்வாய் நின் வாட்டமெலாம் தவிர்ந்தே. (5760)

**பத்திடை ஆயிரம் பகரதிற் கோடி**
**அத்துற வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (624)

முன் வரியில் இறைவன் நிலை விரிக்கப்பட்டது. இவ் வரியில் ஜீவன் நிலை கூறப்படுகின்றதோ??

நம்மைப் பற்றுகின்ற பந்தமோ ஆயிரம் ஆயிரமாக இருக்கிறது. அதனை விரித்துக் கூறப் புகுந்தால் அதன் வகையோ கோடி கோடியாக அல்லவோ உள்ளது.

பற்றும் பந்தம் ஆயிரம் என்றால் அதன் விரிவோ கோடியாக உள்ளவாறு எல்லையிட்ட அருட்பெருஞ்ஜோதி..

குறிப்பு : பத்திடை என்பதைப் பற்றிடை என்று கொண்டதற்கு ஆதாரம்:

(காயத்ரி விளக்கம் - உரைநடை பக் 287)

காயத்ரி மந்திரத்திற்குப் பாதம் மூன்று - பாதம் ஒன்றிற்கு வருணம் எட்டு - ஆக மூன்று பாதத்திற்கும் வர்ணம் இருபத்து நான்கு. பாதம் மூன்றென்பதன்

குறிப்பு: ஜீவர்கட்கு மலம் மூன்று - வர்ணம் இருபத்து நான்கு என்பதன் குறிப்பு:

இரு : இரண்டாகிய ஜீவகாருண்யம் சத்விசாரம் ஆகிய இரண்டையும்

பத்து : (பற்று) பிடி - பற்றினால் :

நான்கு : நாலாகிய ஜீவகாருண்யம், ஈசுர பக்தி, பாசவைராக்யம், பிரமஞானம் ஆகிய இவற்றை அடையலாம்.

இங்கே பத்து (10) என்பதைப் பற்று என நம் பெருமானார் கொண்டதைக் கவனிக்கவும்.

**நூற்றிடை இலக்கம் நுவலதில் அனந்தம்**
**ஆற்றிடை வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (626)

முதலில் இறைவனின் நிலையும், முன் வரியில் ஜீவனின் நிலையும் எடுத்துரைக்கப்பட்டது. இவ் வரியில் ஜீவனானது இறைவனுடன் கலக்க ஆற்றும் நோன்புகளைக் கூறுவதாகக் கொள்வதே பொருந்துகிறது.

நோன்பு நோற்றல் என்பர். நோற்றல் என்பது எண் வகையாகக் கூற வேண்டி நூற்றல் என்று கொள்ளப்பட்டிருக்கலாம்.

ஜீவன் இறைவனை அடைய ஆற்றும் நோன்புகளோ எண்ணிக்கையில் சொல்லப் புகுந்தால் பலவாகத் தோற்றமளித்து

அவ்வவ்வகைகளில் அவற்றை ஆற்றுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி..

**கோடியில் அனந்த கோடி பல்கோடி**
**ஆடுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (628)

முன் வரியில் இறைவனையடைய ஜீவன் கொள்ளும் நோன்புகள் எடுத்துக் காட்டப்பட்டன. அந் நோன்புகளின் பயனாய் ஜீவன் அடைகின்ற சித்து வகைகளோ கோடிக் கணக்கானவையாகப் பல கோடிக் கணக்காகச் சுமார் 647 கோடியாக வகுத்த அருட்பெருஞ்ஜோதி..

<u>சித்துக்கள் 647 கோடி என்பதற்கு ஆதாரம் :</u>

ஆடுறு சித்திகள் அறுபத்து நான்கெழு
கோடியும் விளங்கக் குலவு மெய்ப் பொருளே

(அகவல் வரி 912)

கோடி என்ற சொல் ஓர் எண்ணைக் குறிப்பதாயிருந்தும் சித்திகள் என்ற பொருள் கொள்ளப்பட்டது, ஏன் எனில் இரண்டாவது வரியில் ஆடுற என்ற சொல்லைக் கவனித்து 912 வரியில் ஆடுறு சித்திகள் என்று கூறினமையாலும் அது 647 கோடியாக உள்ளது என்றதாலும் இவ்வுரை இவ்வாறு கொள்ளப்பட்டது. மேலும் முதலில் இறைவனின் நிலை, அடுத்து ஜீவனின் நிலை, அதற்கடுத்து ஜீவன் மேற்கொள்ளும் நோன்பு முடிவாக அடையும் பேறாகிய சித்து - இந்தப் பொருத்தம் கருதியும் இவ்வுரை கொள்ளப்பட்டது.

**வித்தியல் ஒன்றாய் விளைவியல் பலவாய்**
**அத்தகை அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (630)

ஒரு நெல்லைப் பூமியில் விதைத்தால், நெற்பயிர் கதிர்விடும்போது பலவாய் நெல் விளைகிறது. இது எல்லாத் தாவரங்களுக்கும் பொதுவானது. ஆக வித்து ஒன்றேயானாலும் விளைவோ பலவாக விளையும்படி எல்லாவற்றிலும் அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**விளைவியல் அனைத்தும் வித்திடை அடங்க**
**அளவு செய்து அமைத்த அருட்பெருஞ்ஜோதி.** (632)

விளைவுகள் எல்லாம் வித்திலேயிருந்து அந்தத் தாவரத்தின் வித்தையே மூலமாகக் கொண்டு எந்தத் தாவரத்தின் விதையோ அந்த விதையிலிருந்து அந்தத் தாவரம் மட்டுமே விளையுமாறு வரையறை செய்து வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : ஓர் ஆலமரத்தின் விதையோ மிகச் சிறிது. அதை விதைத்தால் அது முளைவிட்டுச் செடியாகி மரமாகிறது. அம்மரத்தின் கண் கிளைகள், இலைகள், கனிகள், விழுதுகள் அனைத்தும் விளைகின்றன. இவ்விளைவுகள் அனைத்தும் அந்த ஒரு விதையில் அடங்கியுள்ளது. ஆலமரத்தின் விதையிலிருந்து ஆலமரம் மட்டுமே தோன்றும். இது அளவு, இது ஒரு உதாரணம் மட்டுமே. இவ்வாறே எல்லா வற்றினுக்கும் காணலாம்.

**வித்தும் பதமும் விளையுபகரிப்பும்**
**அத்திறல் அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (634)

எல்லா வித்துக்களும் விதைப்பதால் மட்டுமே விளைந்து விடுவதில்லை. பல வித்துக்கள் விளையாமல் அழிந்து விடுகின்றன. பல வித்துக்கள் விளைந்தாலும் அதிக பலன் தருவதில்லை. அதாவது செழுமையாக வளர்வதில்லை. சில வித்துக்கள் செழுமையாக வளர்ந்து நல்ல விளைச்சலைத் தருகின்றன. இவற்றிற்குக் காரணம் அந்த வித்தின் பக்குவ நிலையேயாகும். இவ்வாறு

வித்தையும் அந்த வித்திலே பதம் என்னும் பக்குவத்தையும் அந்த வித்தின் மூலம் விளைவு அதிக எண்ணிக்கையிலும் விளங்குமாறு ஆற்றலை அந்த வித்திலே வகுத்து நிற்கும் அருட்பெருஞ்ஜோதி.

**வித்திடை முளையும் முளையிடை விளைவும்**
**அத்தக அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (636)

ஒரு வித்து விதைக்கப்பட்டால் அது முளைவிட்டு வளர்கிறது. அந்த முளையிலிருந்து விளைச்சல் ஏற்படுகின்றது. இவ்வாறு நிகழ்வது மாற்றம் இல்லாதவாறு வித்திலேயிருந்து முளையும் அந்த முளையிலேயிருந்து விளைவும் ஏற்படுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**வித்தினுள் வித்தும் வித்ததில் வித்தும்**
**அத்திறம் வகுத்த அருட்பெருஞ்ஜோதி,** (638)

வித்து முளையாகி, வளர்ந்து பூத்துக் காய்த்துக் கனியாகி மீண்டும் வித்தாகிறது. ஆரம்பமான வித்து முடிவிலும் வித்தாகவே நிற்கும் நிலை வித்தினுள் வித்தாயிற்று,

அந்த வித்திலேயிருந்து வேறு வித்து தோன்றாது அதே வித்துதான் தோன்றும். அதுவே வித்ததில் வித்து.

(உதாரணம் : ஆலமரத்துவிதை ஆலவித்தையே தரும்)

இந்த நிலை என்றும் மாறாதவாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**விளைவினுள் விளைவும் விளைவதில் விளைவும்**
**அளையுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (640)

ஒரு வித்து முளைத்து அதில் பல விளைவுகள் தரக்கூடியவாறு விளைகிறது. (ஒரு நெல் விளைந்து கதிர் விட்டு பல நெற்களைத் தருகிறது). இது விளைவினுள் விளைவு. அந்த விளைவு வேறொன்றாய் விளையாது. உதாரணமாக அவரையிலிருந்து அவரையும் துவரையிலிருந்து துவரையும் தான் விளையுமே தவிர வேறொன்று விளையாது. இந்நிலையே விளைவதின் விளைவு. மிக மிகப் பக்குவமாக இந்நிலை வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**முளையதின் முளையும் முளையினுள் முளையும்**
**அளைதர அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (642)

எந்த வித்து விதைக்கப்பட்டதோ அது முளையும்போது வேறு ஒன்றாய் முளைக்காமல் விதைக்கப்பட்ட வித்தின் முளைதான் முளையும். இது முளையதின் முளை. அந்த முளை அதே நிலையில் நின்றுவிடாது மேலும் அதிலேயிருந்து இலைகள், கிளைகள், பூக்கள், காய்கள், கனிகள் முதலியன முளைக்கின்றன. இது முளையினுள் முளை. இவ்வாறு பக்குவம் செய்து அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**வித்திடைப் பதமும் பதத்திடை வித்தும்**
**அத்துற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (644)

எல்லா வித்துக்களையும் விதைப்பதில்லை. வித்திலே பதம் பார்த்துத் தேர்ந்தெடுத்து நன்கு முற்றின செழுமையான வித்தே விதைக்கப்படுகிறது. வித்து என்பது விதைத்த பின் முளைய வேண்டியது. பதமான வித்துதான் முளைக்கும்.

வித்திலே பதத்தையும் அந்தப் பதத்திலே விளைவையும் மீறாமல் இருக்குமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**பதமதிற் பதமும் பதத்தினுட்பதமும்**
**அதிர்வற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (646)

பதம் என்பது பக்குவம் (ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்) ஒன்றைப் பதம் பார்த்தால் மற்றவைகளின் நிலையை அறியலாம். ஒன்றைப் பக்குவம் பார்த்து அதே நிலையிலுள்ள மற்றவைகளின் பக்குவத்தை உணர்வது பதமதிற் பதம். பதம் பார்க்கப்பட்ட வித்தினுள்ளே இருக்கும் விளையும் பக்குவமே பதத்தினுட் பதம். இந்த நிலை மாறாது வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**ஒற்றுமை வேற்றுமை உரிமைகள் அனைத்தும்**
**அற்றென வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (648)

விரும்பி இணைவது ஒற்றுமை. மாறுபாடு கருதி விலகுவது வேற்றுமை. தனதெனச் சொந்தம் கொண்டாடுவது உரிமை. (ஞானமடைய விரும்புவோர்) இம் மூன்றையும் அகற்றுவாயாக என அறிவு தந்த அருட்பெருஞ்ஜோதி.

**பொருள்நிலை உறுப்பியல் பொதுவகை முதலிய**
**அருளுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (650)

நாமடைய வேண்டிய பொருள் சிவமேயாகும். அதை அடைவதற்கு அகத்திலே தவமாகிய சாதனை செய்ய நம் உடலிலே அதற்குத் தகுந்த உறுப்புகளும் புறத்திலே எல்லா உயிர்களையும் பொதுவாகப் பார்க்கின்ற தன்மையும் தரப்பட்டுள்ளன.

(தவத்தினாலே) சிவ நிலை அடையத்தக்க உறுப்புக்களையும், எல்லா உயிர்களையும் பொதுவாகப் பார்க்கும் குணத்தையும் அருள் அடைவதற்கென்றே அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

<u>குறிப்பு</u> : பரோபகாரம், சத்விசாரம் ஆகிய இரண்டைக் கொண்டே அருள் அடைய வேண்டும் என்கிறது உரைநடை. சத்விசாரமாகிய ஆன்ம விசார விளைவே தவம் என இங்கு குறிக்கப்பட்டது.

**உறவினில் உறவும் உறவினில் பகையும்**
**அறனுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (652)

நேர்மையான வழி நின்று நன்கு ஆய்ந்து நமக்கு நல்ல பலன் தரக் கூடிய நல்ல குணமுள்ள மக்களோடு, நல்ல குணங்களோடு உறவு கொள்ளலாம். உறவு கொள்ளக் கூடாத தீய குணங்களைப் பகைக்க வேண்டும்.

உறவு கொள்ளத்தக்க நல்ல குணங்களோடு உறவு கொள்ளவும், உறவு கொள்ளத்தகாத தீய குணங்கள் நம்பால்

அணுகாமல் அந்தத் தீய குண உறவில் பகையும் கொண்டு நேர் வழி, தரும வழி, அடையுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**பகையினில் பகையும் பகையினில் உறவும்**
**அகைவுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (654)

Two Negatives make One Positive.

பகை X பகை = உறவு, அதாவது மாயைக்கு அடிமையான மனம் நல்லோர் நட்பையும், நல்ல குணங்களையும், நல்ல பழக்க வழக்கங்களையும் முதலில் நாடுவது இல்லை. அவற்றைப் பகைக்கிறது. அதே நேரத்தில் தீயோர் நட்பு, தீய குணங்கள், தீய பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை உடனே ஏற்றுக் கொள்கிறது. இது மனதின் இயல்பு, உதாரணமாகக் கோயிலுக்குப் போகலாமா, சினிமா பார்க்கலாமா என்றால் பொதுவாகச் சினிமா பார்க்கும் ஆவலே கோயிலுக்குப் போவதை விட மேலோங்கி நிற்கும். (இது எல்லோருக்கும் விதித்ததல்ல - சாதாரணப் பொது மக்கள் நிலை)

நல்லோர் நட்பு, நல்ல குணச் சேர்க்கை இவை நேரும் போது மனம் பகைகொண்டு அவற்றை நாடாமல் இருக்குமானால் அந்தப் பகையை அறிவினால் பகைத்து அந்த நல்ல உறவைக் கொள்வதே பகையினில் பகை. அதே நேரத்தில் தீயோர் நட்பு, தீய குணச் சேர்க்கை நேரும்போது (நல்ல மனமானது) அதைப் பகைக்குமானால், அப்படிப் பகைக்கும் மனதுடன் உறவு கொள்வதே பகையினில் உறவு. இவ்வாறு நலமுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**பாதியும் முழுதும் பதி செயும் அந்தமும்**
**ஆதியும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (656)

பாதி என்பது சந்திரன். முழுதும் என்பது சூரியன். இடம்: சந்திரன். வலம் - சூரியன் ஆரம்பத்தில் அனுபவ நிலையைத் தொடங்குவது சிற்சபை. முடிவான அனுபவத்தைக் காட்டுவது பொற்சபை.

இடமாகிய சந்திர கலையை நிறுத்தி வலமாகிய சூரிய கலையில் தியானம், தவம் முதலியன செய்தால் ஆதியும் அந்தமும் ஆகிய சிற்சபையும் பொற்சபையும் பதியாக நின்று கடவுளைக் காட்டச் செய்யும்படி வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**துணையும் நிமித்தமும் துலங்கதின் அதுவும்**
**அணைவுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (658)

துணையாகிய ஜீவகாருண்யமும் நிமித்தம் எனும் காரணமாகிய சாதனையும் விளங்க அதிலே அதுவாகிய (அருட்பெருஞ்ஜோதி) இறைநிலை அணையும்படி ஏற்படுத்திய அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : குணமுதற் கருவிகள் கூடிய பகுதியில் அணைவுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி 572வது வரி காண்க.

அது என்பது அருட்பெருஞ்ஜோதி என்பதற்கு ஆதாரம்:

ஊன உடம்பே ஒளி உடம்பாய் ஓங்கி நிற்க
ஞான அமுதெனக்கு நல்கியதே - வானப்
பொருட்பெருஞ்ஜோதிப் பொதுவில் விளங்கும்
அருட்பெருஞ்ஜோதி அது

(திருவருட்பா 4823)

**உருவதின் உருவும் உருவினுள் உருவும்**
**அருளுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (660)

உருவமாக வணங்குவோர்க்கு ஆண்டவன் உருவமாகவும் அந்த உருவத்தினுள்ளே அந்த உருவாகவும் இருந்து அருள் (நாம்) அடையும்படி வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

உருவமாக வணங்குவோர் எவ்வாறு அருள் பெறுவர்?

ஆதாரம்: பிரம்மானுபவம் விக்கிரக ஆராதனை செய்தாலல்லது வாராதென்றும், விக்கிரகம் என்பது விசேஷ இடம் என்று பொருள்படும் என்றும், ஆன்மா இருப்பதற்குக் கிரகம், மனிதர் முதலிய ஜீவ தேகங்கள் என்றும், பிரும்மப் பிரகாசம் இருந்து வெளிப்படுவதற்கு விக்கிரகம் தேவ தேகங்கள் என்றும், அந்தத் தேவ தேகங்களாகிய விக்கிரகங்களில் விதிப்படி உபாசிக்கின் பிரம்மப் பிரகாசம் எளிதில் வெளிப்பட்டு அனுக்கிரகிக்கும் என்றும் அவ்வாறு விசேட இடமென்று சொல்லப்படுகின்ற விக்கிரகங்களில்

பிரம்மப்பிரகாசம் வெளிப்பட்டு அனுக்கிரகித்ததற்கு அடையாளம் சில காலத்திற்கு முன் விக்கிரக ஆராதனை செய்த பக்தர்கள், குஷ்டம், குன்மம் முதலான தீராத வியாதிகளைத் தீர்த்தும், இறந்தவர்களை எழுப்பியும், அசாத்தியமான அநேக மகத்துவங்களை நடத்தியும் இருந்ததே போதுமானது என்றும், இப்போதும் விக்கிரக ஆராதனை செய்கின்ற பக்தர்கள் சில மகத்துவங்களைச் செய்து வருகின்றார்கள் என்றும், நாமெல்லாம் நமது பக்குவத்திற்குத் தகுந்தபடி விக்கிரக ஆராதனை செய்து, அதனால் அருளைப் பெற்று, அதனால் அறிவு விளங்கி, அதனால் பிரம்ம சுகத்தை அனுபவிக்கலாம் என்றும் (இராமலிங்க) சுவாமிகள் சொல்லிக் கொண்டே எழுந்தனர். (நடந்த வண்ணம் உரைத்தல்)

**அருவினுள் அருவும் அருவதின் அருவும்**
**அருளியல் அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (662)

பரம்பொருள் என்பது எங்கும் நிறைந்தது. அதாவது அது இல்லாத இடமே இல்லை என்னுமளவிற்குப் பரிபூரணமாக நிறைந்துள்ள பொருளே இறைவன். முன் வரியில் இறைவனை உருவமாகக் கூறப்பட்டது. இந்த வரியில் இறைவனை அருவமாகக் காண்போருக்கு அவனும் அருவமாக விளங்குகின்றான். அருவம், என்பது புலன்களுக்குப் புலப்படாத பொருளாகும். அப்படிப்பட்ட பொருளில் அவனும் புலப்படாத பொருளாக அரூபியாக இருக்கிறான். இதுவே அருவினுள் அருவம். அருவமாக உள்ள இறைவன்பால் வெளிப்படும் அருளியலும் அருவமாகவே அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**கரணமும் இடமும் கலை முதல் அணையுமோர்**
**அரணிலை வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (664)

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய கரணங்களும், புருவ மத்தியாகிய சிற்சபையும், சுவாசமும் ஒன்றுபடும் ஓர் பாதுகாப்பான நிலையாக வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

இடம் என்பதற்குப் புருவ மத்தி என்று பொருள் கொண்டதற்கு ஆதாரம்:

சீரிடம் பெறுமோர் திருச்சிற்றம்பலத்தே
திகழ் தனித்தந்தையே நின்பால்
சேரிட மறிந்தே சேர்ந்தனன் கருணை
செய்தருள் செய்திடத் தாழ்க்கில்
யாரிடம் புகுவேன் யார் துணை என்பேன்
யார்க் கெடுத்தென் குறை இசைப்பேன்
போரிட முடியாதினித் துயரொடு நான் பொறுக்கலேன்
அருள்க இப்போதே.

**உருவதில் அருவும் அருவதில் உருவும்**
**அருளுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (666)

நம்முள்ளே இறைவன் இருப்பது நமக்குத் தெரிவதில்லை. எல்லா ஜீவன்கட்குள்ளும் இறைவன் இருக்கின்றான். அந்த இறைவன் இருப்பதை யாரும் அறிந்தாரில்லை. இதுவே உருவதில் அரு.

அருவ வழிபாடு எனப்படும் ஞான அனுபவத்தின் கண் இறை அனுபவம் உருவாகி அருள் நாமடையும்படி உள்ளது. மனம் முதலிய கரணங்கள் செயல்பாடின்றி நிற்பதை வெளி என்பர். அது அருவம். அந்த நிலையில் பரநாத அனுபவத்தில் பெருஞ்ஜோதியும் பின்னர் அந்தப் பெருஞ்ஜோதி நடுவே பொன்னொளியும் அவ்வொளி நடுவே செவ்வொளியும் தோன்றும். இதுவே அகத்தில் தோன்றும் முடிவான இறை அனுபவம். இதையே அருவதில் உருவும் எனக் கூறப்பட்டது.

இவ்வாறு உருவத்திலே அருவாகவும் அருவத்திலே உருவாகவும் விளங்கி நாம் அருள் பெறுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**வண்ணமும் வடிவும் மயங்கிய வகைபல**
**அண்ணுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (668)

அந்தி வண்ணன், படிக வண்ணன் என்றெல்லாம் பலவேறு வண்ணங்களில் இறைவன் காட்டப்பட்டுள்ளான். பலப்பல வடிவங்களும் - கண்டவுடன் மயங்கும் வகையில், ஞானிகளின் அறிவின் தராதரத்திற்கேற்பக் கற்பனையாகக் கூறப்பட்டுள்ளது.

பலவேறு வண்ணங்களிலும் பலவேறு வடிவங்களிலும் இறைவனைக் காட்டியதால் உண்மையறியாது மயங்கிய வகை பலவாய் உள்ளது. ஆயினும் அவையெல்லாம் இறைவனை நெருங்கி அடைவதற்கென்றே என வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**சிறுமையில் சிறுமையும் சிறுமையில் பெருமையும்**
**அறிதர வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (670)

தீய குணங்கள் நமக்கு இழிவை உண்டாக்கும். எனவே அத் தீய குணங்கள் நம்மிடம் பெருகியிராது சிறுத்து இருத்தல் வேண்டும். சிறுமை தரும் தீயனவற்றில் நாம் சிறுமை காட்டுவதே சிறுமையில் சிறுமை. அச்சிறுமை நமக்குப் பெருமை சேர்ப்பதால் அது சிறுமையில் பெருமை எனப்பட்டது. இதுவே அறிவு தரும் விளக்கமாக வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**பெருமையில் பெருமையும் பெருமையில் சிறுமையும்**
**அருணிலை வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (672)

ஒரு பெருமையிலே நமக்குப் பெருமை ஏற்படுகிறது. ஒரு பெருமையிலே நமக்குச் சிறுமை ஏற்படுகிறது. அதாவது எப்போதும் இறைவனின் பெருமையைப் பேசும் ஒருவன் மேன்மேலும் மற்றவர்களால் மதிக்கப்பட்டுப் பெருமை அடைகிறான். இறைவன் பெருமையைப் பேசாது தற்பெருமையே பேசும் ஒருவன் மக்களால் இகழப்பட்டுச் சிறுமை அடைகிறான். ஒரு பெருமையிலே பெருமையும் ஒரு பெருமையிலே சிறுமையும் உண்டாகுமாறு அருளால் வகுக்கும் அருட்பெருஞ்ஜோதி.

**திண்மையில் திண்மையும் திண்மையில் நேர்மையும்**
**அண்மையின் வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (674)

திண்மை என்பது நல்ல கொள்கைகளைப் பின்பற்றி வாழும் மன உறுதி. அந்த மன உறுதியானது சந்தர்ப்பம், சூழ்நிலை காரணமாகவோ அல்லது வேறு எக்காரணங்கொண்டும் சிறிதும் தளரவிடக் கூடாது. இதுவே திண்மையில் திண்மை. அந்த உறுதியானது நேர்மை வழியில், அறவழியில், நீதி வழியில் தளராது

நடப்பது திண்மையில் நேர்மை. இவை ஒன்றுக்கொன்று நெருங்கி விளங்குமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**மென்மையில் மென்மையும் மென்மையில் வன்மையும்**
**அன்மையற்றமைத்த அருட்பெருஞ்ஜோதி.** (676)

மென்மையாகவும், சாதுவாகவும், இனிமையாகவும், சுமுகமாகவும் மற்றவர்கள் நம்மிடம் பழகும்போது அவர்களைவிட நாம் மிகமிக மென்மையாக அவர்களிடம் நடந்து கொள்வது மென்மையில் மென்மை. அந்த மென்மையான குணம் சந்தர்ப்பம், சூழ்நிலை முதலிய எக்காரணங்கொண்டும் விலகாமல் உறுதியாக இருப்பது மென்மையில் வன்மை.

எச்சரிக்கையாக விழிப்புணர்வுடன் இருப்பவர்களுக்கு மென்மையில் வன்மையும் முடியாத காரியமாக இல்லாமல் அடைவதற்கு நெருக்கமாய் அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

**அடியினுள் அடியும் அடியிடை அடியும்**
**அடியுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி.** (678)

இறைவனின் திருவடியாகிய இரு கண்களுக்குள்ளே ஆரம்ப நிலையையும் அந்த ஆரம்ப நிலையில் இறைவனின் திருவடியும் விளங்க, திருவடி அடையுமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

சாத்திரங்களெல்லாம் தடுமாற்றம் சொல்வதன்றி
நேத்திரங்கள் போல் காட்ட நேராகவே - நேத்திரங்கள் திருச்
சிற்றம்பலவன் திருவருட் சீர் வண்ணமென்று
உற்றிங்கறிந்தேன் உவந்து.

இந்தப் பாடலில் நேத்திரங்கள் திருச்சிற்றம்பலவன் சீர் வண்ணம் அதாவது பாதங்கள் என்று கூறுகின்றார். நேத்திரங்களுக்குள்ளே விளங்குவதோ நெற்றிக் கண் - அதாவது புருவமத்தி - அதாவது சிற்சபை.

அந்தச் சிற்சபையிலே பரநாத நிலையில் ஆரம்பநிலையாகத் தோன்றும் பேரொளியே இறைவனின் திருவடி.

அந்தத் திருவடியை அடையுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

(அடுத்த வரி விளக்கம் காண்க)

**நடுவினுள் நடுவும் நடுவதில் நடுவும்**
**அடர்வுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (680)

தீவினை நல்வினை எனும் வன் கயிற்றால் பாரபட்சமின்றி நடுநோக்குடன் ஆட்டி வைக்கும் நடுவே இறைவன் ஆகும். விருப்பு வெறுப்பற்று எல்லா உயிர்களையும் பொதுவாகப் பார்க்கும் நடு நோக்குடையோரிடம் நடுவான இறைவன் குடி அமர்கிறான். இது நடுவினுள் நடு. நடுவாகிய புருவமத்தியிலே முன் வரியில் அடியாகிய சிற்சபை அனுபவமாகிய பெருஞ்ஜோதி கூறப்பட்டது. இந்த வரியில் நடுவாகிய பொற்ஜோதி கூறப்படுகிறது.

எல்லோரையும் பொது நோக்கில் காணும் நடு நோக்குடையார் நடுவில் விளங்கும் இறைதன்மையானது பொற்சபையிலே பொன்னொளியாகத் தோன்றி நெருங்கினோர் அடையும்படி அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

(அடுத்த வரி விளக்கம் காண்க)

இறைவன் பொது என்பதற்கு ஆதாரம்

கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பே
காணார்க்கும் கண்டவர்க்கும் கண்ணளிக்கும் கண்ணே
வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரமளிக்கும் வரமே
மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதி கொடுக்கும் மதியே
நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே
நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலம் கொடுக்கும் நலமே
எல்லார்க்கும் பொதுவில் நடமிடுகின்ற சிவமே
என்னரசே யான் புகலும் இசையும் அணிந்தருளே.

**முடியினின் முடியும் முடியினுள் முடியும்**
**அடர்தர அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (682)

எந்த ஒன்றுக்கும் புறத்தே முடிவு என்ற ஒன்று உண்டு. அந்த முடிவிற்குப் பின்னும் ஒன்று இருக்குமானால் அது அந்த

பரம்பொருளாய்த்தான் இருக்க முடியும். ஏனெனில் அது ஒன்று தான் முடிவு இல்லாதது.

முன் வரிகளில் கூறப்பட்ட சிற்சபையும் பொற்சபையும் முறையே பேரொளியும் பொன்னொளியும் தோன்றும் இடமாகக் காட்டப்பட்டது. முடிவான அனுபவம் உள்ளொளியாகிய செவ்வொளியைக் காண்பதே. அனுபவத்தின் முடிவே இதுவாகி நிறைவை ஏற்படுத்துவதால் முடிவினுள் முடியாகிறது. இவ்வனுபவத்தால் எல்லாச் சிறப்புகளும் அமைய வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : சிற்றம்பலத்திலே நடங்கண்டு முடிவிலே இறைவனைக் காண்பது என்பதற்கு ஆதாரம் :

பண்ணிய பூஜை நிறைந்தது சிற்றம்பல நடங்கண்டு
எண்ணிய எண்ணம் பலித்தன மெய்யின்ப மெய்தியதோர்
தண்ணியலாரமுதுண்டனன் கண்டனன் சாமியை நான்
நண்ணிய புண்ணியம் என்னுரைக்கேனிந்த நானிலத்தே.
(திருவருட்பா 5398)

**அகப் பூ அகவுறுப்பாக்க அதற்கவை**
**அகத்தே வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (684)

அகம் என்பது ஆன்மா. பூ அசைச்சொல்.

ஆன்மா உடலினுள்ளேயிருந்தாலும் அது தனியே இருப்பதால் என்றாவது ஒரு நாள் உடலை விட்டுப் பிரிந்து விடுகிறது. அதே சமயம் உள் உறுப்புகளாகிய இருதயம், நுரையீரல் போன்றவை உடலை விட்டுப் பிரிவதில்லை. ஆன்மாவையும் மேற்கூறிய உறுப்புகள் போல் ஓர் உள்ளுறுப்பாக மாற்றி விட்டால் அது உடலை விட்டுப் பிரியாது. இந் நிலை கைகூடினால் மரணமே வராது. அந்த ஆன்மாவை உள்ளுறுப்பாக்குவது எவ்வாறு? ஆன்மாவை உள்ளுறுப்பாக்குவதற்கென்றே அவை எனப்படும் சிற்சபை பொற்சபை என்பவற்றை அகத்தே அதாவது நம் உடலுக்குள்ளே அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

திரண்ட கருத்து: நம் அகத்திலே உள்ள சிற்சபை பொற்சபை அறிந்து அந்தச் சபையினது அனுபவத்தைச்

சொந்தமாக்கிக் கொண்டால் ஆன்மாவையும் ஓர் உள்ளுறுப்பாக மாற்றி மரணத்தை வெல்லலாம்.

**புறப்பூ புறத்தில் புனையுருவாக்கிட**
**அறத்துடன் வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (686)

புறம் என்பது கரணம் அதாவது மனம், புத்தி, சித்தம் அகங்காரம் என்பவை. இவை அகத்திலே இருந்தாலும் புறத்தே கற்பனையை உருவாக்கும் தன்மையுடைவையாகும். கரணங்கட்குக் கற்பனையை புறத்தே அமையுமாறு கருணையுடன் வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**அகப் புறப்பூ அகப்புற உறுப்பியற்றிட**
**அகத்திடை வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (688)

அகப்புறமாகிய ஜீவன் அகத்திலே தனித்து இருக்கும் நிலை மாறி அகப்புற உறுப்பாக நின்று செயல்படுமாறு உடம்பினுள்ளே அகத்திலே ஜீவனை அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : ஜீவன் உள்ளே இருந்தால். மட்டுமே அந்த ஜீவனால் செயல்பட முடியும். உடலைச் செயல்பட வைப்பது உள்ளிருக்கும் ஜீவனே என்பது முக்கிய கருத்து.

**புறப்புறப்பூ வதில் புறப்புற உறுப்புற**
**அறத்திடை வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (690)

மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய புறப்புற உறுப்புகளாகிய இந்திரியங்கள் வெளிப்புற உறுப்புகளாக நெறியோடு விளங்குமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**பாரிடை வேர்வினிற் பையிடை முட்டையில்**
**ஆருயிர் அமைக்கும் அருட்பெருஞ்ஜோதி** (692)

தாவரங்கள் முதலியன பூமியிலும், உணி, பேன் முதலியன வேர்வையிலும், பறவைகளும், பல்லி முதலிய ஊர்வன வகைகள் முட்டையிலும், மிருகங்கள் மனிதர்கள் முதலியன கருப்பையிலும்

பிறவி உருவாகி எடுக்குமாறு உயிர்களை அமைத்துள்ள அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு. உலகிலுள்ள அத்தனை ஜீவன்களும் பிறவியெடுப்பது இந்நான்கு வகைக்குள் அடங்கும். இந் நான்கு வகைகளில் ஏதாவது ஒருவகையில் மட்டுமே பிறவி எடுக்க முடியும்.

**ஊர்வன பறப்பன உறுவன நடப்பன**
**ஆர்வுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி.** (694)

ஜீவன்கள் பிறவி எடுப்பது நான்கு வழிகளில் என முன்வரியில் கூறப்பட்டது. அவ்வாறு தோன்றிய ஜீவன்களின் வகை நான்காக இந்த வரியில் வகுத்துக் காட்டப்பட்டுள்ளது.

பாம்பு, பல்லி, ஓணான் முதலிய ஊர்வன இனமாகவும், பறவைகள் எல்லாம் பறப்பன இனமாகவும், தாவரங்கள் முதலியன அசைய முடியாத நிலையினதாய் உறுவன இனமாகவும், மனிதர்கள் மிருகங்கள் முதலியன நடப்பன எனவும் நான்கு வகைகளாக ஜீவன்களை அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

(தோற்றம் எவ்வாறு நான்கு வகையோ அவ்வாறே ஜீவன்களின் வகைகளும் நான்காக அமைந்திருக்கிறது.)

**அசைவில அசைவுள ஆருயிர்த் திரள் பல**
**அசலற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (696)

தாவரங்கள் முதிலியன அசையா உயிரினங்கள், அசையா உயிரினங்கள் என்றால் இடம் விட்டு வேறிடம் நகர முடியாதவை என்று பொருள். மற்ற ஜீவர்களால் இடம் விட்டு இடம் பெயர முடியுமாகையால் அசையும் உயிரினங்கள். உறவினர் அல்லாத ஒருவரை அயலார் என்கிறோம். அயல் என்பதே அசல் எனக் குறிக்கப்பட்டுள்ளது. ஆன்ம நேய ஒருமைப்பாட்டுரிமை கொண்டு அசையக் கூடிய உயிரினங்களையும் அசையா உயிரினங்களையும் அயல் என்று இல்லாமல் உறவினமாகவே அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

<u>குறிப்பு:</u> எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணுதலையே இங்கு அசலற எனக் கூறப்பட்டது.

நான்கு வகைத் தோற்றங்கள்
நான்கு வகைப் பிறவிகள்
இரண்டு வகையாக இங்கு பிரிக்கப்பட்டுள்ளது.

**அறிவொரு வகை முதல் ஐவகை அறுவகை**
**அறிதர வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (698)

தோற்றத்தைக் கொண்டும் பிறவியைக் கொண்டும் நான்கு வகைகளாக, இரண்டு வகைகளாகப் பிரிக்கப்பட்ட ஜீவன்களை அறிவைக் கொண்டு இங்கு பிரிக்கப்படுகிறது.

ஓரறிவுள்ள தாவரம் முதல் ஐயறிவுள்ள மிருகங்கள்வரை அஃறிணையாகவும் ஆறறிவுள்ள மனிதப் பிறவியை உயர்திணையாகவும் அறிவின் உயர்ச்சி தாழ்ச்சியைக் கொண்டு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**வெவ்வேறு இயலொடு வெவ்வேறு பயனுற**
**அவ்வாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி**. (700)

மாறுபட்ட இயல்பு கொண்டு விளங்குகின்ற ஒவ்வொரு உயிர் வகையாலும் பலவேறு பயன்களை நாம் துய்க்குமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

<u>குறிப்பு:</u> எல்லா உயிர் வகைகளைக் கொண்டு நாம் துய்க்கின்ற பயனை எழுத ஏட்டிலடங்கா எனினும் ஒரு சில காணலாம்.

தாவரங்கள் - உணவு, கனி, நிழல் முதலியவற்றைத் தருகின்றன. மிருகங்கள் - பால் தர, வண்டி இழுக்க, சவாரிசெய்ய.

**சித்திர விசித்திர சிருட்டிகள் பலபல**
**அத்தகை வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (702)

தோற்றங்கள் நான்கு வகையானாலும் ஒவ்வொன்றிலும் அழகழகாகவும் பல விசித்திரங்கள் கொண்டதாகவும் வெவ்வேறு விதமான பிறவிகளை ஏற்படுத்திய அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : விசித்ர என்பது அழகற்ற சில பிறவிகளை அசிங்கம், அழகற்ற என்று கூறாமல் விசித்ர என்று குறிப்பிட்டுள்ளது நம் பெருமானாரின் கருணை நிறைந்த மனதிற்குச் சான்றாக உள்ளது.

**பெண்ணினுள் ஆணும் ஆணினுள் பெண்ணும்**
**அண்ணுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (704)

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், பிரகிருதி, ஆன்மா என்ற ஏழு தாதுக்களும் கூடி, சுக்கிலச் சுரோணித சம்பந்த சப்த தாதுவாய் சிருஷ்டிக்குக் காரணமாயின. இந்த ஏழு தாதுக்களில் பிருதிவி, அப்பு, தேயு, வாயு ஆகிய நான்கும் பெண் பாகம். ஆகாசம், பிரகிருதி, ஆன்மா ஆகிய மூன்றும் ஆண் பாகம், ஆண் பாகம் சேராது பெண் உருவப்படாது. பெண் பாகம் சேராது ஆண் உருவப்படாது. ஆணுக்குள் இவ்வாறு பெண் பாகம் சேர்ந்துள்ளதால் ஆணுக்குள் பெண் உள்ளவாறும், பெண்ணிற்குள் ஆண் பாகமும் சேர்ந்திருப்பதால், பெண்ணினுள் ஆணும் என்றது. இவை ஏழும் ஒன்று கூடி ஒரு குழந்தை ஆனதால் நெருங்கியுற (அண்ணுற) என்றது. இவ்வாறு பெண்ணுக்குள் ஆணும் ஆணுக்குள் பெண்ணும் நெருங்கியுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

ஆதாரம்: உரைநடை பக் 259.
தலைப்பு ஆண் - பெண் - பெண்ணாண்

மன அறிவைப் பெண்ணியல் என்றும் ஆன்ம அறிவை ஆணியல் என்றும் கூறுகின்றார். பெண்ணியல்பாகிய மன அறிவு ஆணிடத்திலும், ஆண் இயல்பாகிய ஆன்ம அறிவு பெண்ணிடத்திலும் விளங்கக் கூடுமாதலால் பெண்ணினுள் ஆணும் ஆணினுள் பெண்ணும் வகுத்தவாறு அறிக.

**பெண்ணினுள் மூன்றும் ஆணினுள் இரண்டும்**
**அண்ணுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (706)

மன அறிவு, பேதமைத் தன்மை, வெளித் தோற்ற வசீகரம் ஆகிய மூன்றைப் பெண்ணிடமும், ஆன்ம அறிவு, சலனம் ஆகிய இரண்டை ஆணிடமும் விலகாது உள்ளவாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**பெண்ணிடை நான்கும் ஆணிடை மூன்றும்**
**அண்ணுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (708)

பிருதிவி, அப்பு, தேயு, வாயு அதாவது மண், நீர், நெருப்பு, இயமானன் என்னும் காற்று ஆக நான்கும் பெண்ணிடத்தில் உள்ளபடியும், ஆகாசம், பிரதிகிருதி, ஆன்ம உணர்ச்சி ஆகிய மூன்றும் ஆணிடத்தில் உள்ளபடியும் இவையனைத்தும் ஒன்று சேருமாறும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

(ஆதாரம்: பக் 261 - தலைப்பு சப்த தாதுக்கள் - உரைநடை)

**பெண்ணியல் ஆணும் ஆணியல் பெண்ணும்**
**அண்ணுற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (710)

பெண்ணின் தன்மை ஆணை நாடுதலும், ஆணின் தன்மை பெண்ணை நாடுதலும் எப்பொழுதும் மாறாமல் உள்ளவாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு: இத்தன்மையால் ஜீவ இயக்கம் தடைபடாது நடைபெற்று வருகிறது.

**பெண்திறல் புறத்தும் ஆண் திறல் அகத்தும்**
**அண்டுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (712)

பெண்ணின் ஆற்றல் புறத்தே அழகாகவும், வசீகரிக்கும் வகையில் தோன்றுமாறும், ஆணின் ஆற்றலோ உள்ளடக்கி ஆற்றல், அறிவு, வீரம் முதலிய சந்தர்ப்பம் நேரும்போது விளங்குமாறு அகத்தில் மறைவுபடுத்தி வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு: மனித இனம் தவிர மற்ற ஜீவன்களை நோக்கும்போது ஆணே அழகாகவும் வசீகரம் உடையதாகவும் உள்ளது - உதாரணமாக சேவல், ஆண் மயில், ஆண் கிளி, ஆண் சிங்கம் முதலியவற்றை அதன் பெண் இனத்தோடு ஒப்பிட்டால் ஆணே அழகானது - வசீகரமுடையது என்பது தெளிவாகும். ஆனால் மனித இனத்தில் மட்டும் பெண்ணின் புறத்தோற்றமே

வசீகரமாக, அழகாக அமைந்து ஆணை மயங்க வைக்கிறது. ஆனால் பெண்ணோ ஆணின் புறத்தோற்றத்தில் மட்டுமல்லாது அவனது அகத்தே விளங்கும் அறிவு, ஆற்றல், வீரம் முதலியவற்றைக் கண்டே நாடுமாறு வகுத்துள்ளதாம்.

**பெண்ணியல் மனமும் ஆணியல் அறிவும்**
**அண்ணுற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (714)

மனம் மாயைக்கு அடிமை. மாயை உலகியலை விட்டு மேலேற விடாது அழுத்தும். அப்படிப்பட்ட மன அறிவைப் பெண்ணியலாகக் கொள்ள வேண்டும். உலகியலை உணர்ந்து அருளியலில் உள்ள நல்ல நன்மைகளை உணர்த்தும் அறிவை ஆண் இயல் என்றும் கொள்ள வேண்டும்.

பெண்ணியலை மனமாகவும் ஆணியலை அறிவாகவும் ஒன்றையொன்று நெருங்கி அடையுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**தனித்தனி வடிவினும் தக்க ஆண் பெண்ணியல்**
**அனைத்துற வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (716)

ஓரறிவுள்ள தாவரங்கள் முதலாக, பறவைகள், விலங்குகள், மனிதர்கள் வரை எல்லா ஜீவன்களிலும் ஊர்வன, பறப்பன, உறுவன, நடப்பன ஆகிய நால்வகைத் தோற்ற உருவங்களிலும், ஒவ்வொருவகை ஜீவ வடிவத்திலும் அது அதற்கொத்தவாறு ஆண் என்றும் பெண் என்றும் தனித்தனியே வடிவத்தை அளித்து அதனதன் இயல்புகள் அனைத்தினையும் அடையுமாறு வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**உனற்கரும் உயிருள உடலுள உலகுள**
**அனைத்தையும் வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (718)

எண்ணிப் பார்க்க இயலாத அளவில் உயிருள்ள பல ஜீவன்களையும், உடலோடு வாழக்கூடிய பல உயிரினங்களையும்

மற்றும் ஜடப் பொருளாகவும் உலகில் விளங்குகின்ற அனைத்துப் பொருள்களையும் உண்டாக்கிய அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு. உயிருள, உடலுள என்று தனித் தனியே கூறப்பட்டுள்ளது என்ன காரணம் பற்றி என்று சிந்திக்கவும். உயிருள்ள ஜீவன்களில் பல கண்ணுக்குத் தோற்றமில்லாமல் உள்ளன. அதாவது உயிரணுக்கள், பாக்டீரியாக்கள், கிருமிகள் முதலியன - கண்ணுக்குத் தோற்றமில்லாமல் உள்ளன - உடலோடு கண்ணுக்குத் தோற்றமான ஜீவன்களை உடலுள என்றும், கண்ணுக்குத் தோற்றமாகாத உயிரினங்களை உயிருள என்றும் பிரிக்கின்றாரோ எனத் தோன்றுகிறது.

**ஓவுறா எழுவகை உயிர் முதல் அனைத்தும்**
**ஆவகை வகுத்த அருட்பெருஞ்ஜோதி** (720)

(1) தாவரங்கள் (2) பாம்பு, பல்லி முதலிய ஊர்வன, (3) பறவைகள், (4) மிருகங்கள், (5) நரர்கள், (6) மனிதர்கள், (7) தேவர்கள் ஆகிய ஏழு வகை உயிரினங்கள் அனைத்தும் ஒரு பக்கம் இறப்பினால் அழிந்து கொண்டே இருந்தாலும் மறு பக்கம் தோன்றிக் கொண்டே இருப்பதால் இடைவெளியே இல்லாதவாறு அனைத்து வகை உயிரினங்களும் வாழ்கின்ற நிலை வகுத்த அருட்பெருஞ்ஜோதி.

**பைகளின் முட்டையில் பாரினில் வேர்வினில்**
**ஐபெற அமைத்த அருட்பெருஞ்ஜோதி** (722)

கருப்பப்பை மூலமாகவும், முட்டையிலிருந்தும், பூமியினின்றும், வியர்வை மூலமாகவும் உயிரினங்கள் பிறவி எடுக்குமாறு அமைத்த அருட்பெருஞ்ஜோதி.

| | | |
|---|---|---|
| கருப்பப்பை மூலம் | = | மிருகங்கள், மனிதர்கள் முதலியன |
| முட்டையினின்று | = | பல்லி, காகம் முதலிய பறவைகள் |
| பூமியிலிருந்து | = | தாவரங்கள் |
| வியர்வையிலிருந்து | = | உணி, பேன் முதலியன |

**தாய் கருப்பையினுள் தங்கிய உயிர்களை**
**ஆய்வுறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (724)

தாயினுடைய கருப்பையில் தங்கிய உயிர்கள் அழிவுறாதவாறு அவற்றை விளக்கிப் பிறவியுடன் உலகில் தோன்றுமாறு அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

**முட்டைவாய்ப் பயிலும் முழு உயிர்திரள்களை**
**அட்டமே காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (726)

முட்டையிலே தங்கி வளரும் உயிரானது அந்த ஜீவனின் முழு உருவமாகும். அப்படிப்பட்ட உயிரினங்கள் அனைத்தினையும் திடமாக வெளி வரும்படி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

குறிப்பு : ஒரு முட்டை அதாவது ஒரு கோழி முட்டை என்று மிகச் சாதாரணமாக எண்ணிவிடக்கூடாது. அந்த முட்டையினுள் இருப்பது ஒரு முழுக் கோழி என்பதை உணர்த்தவே முட்டைவாய்ப் பயிலும் முழு உயிர்த் திரள் என்று கூறினார்.

**நிலம் பெறும் உயிர் வகை நீள் குழு அனைத்தும்**
**அலம் பெறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (728)

பூமியானது பெற்றெடுக்கின்ற தாவர வகையின் பெயர்களோ அளவிட முடியாதது - எண்ணிலடங்காதனவாகும். அவை அனைத்தும் வாடாமல் வளர்ந்து விளங்கும்படி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

**வேர்வுற உதித்த மிகும் உயிர்த்திரள்களை**
**ஆர்வுறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (730)

தலையிலே வியர்வையிலிருந்துதான் பேன் தோன்றுகின்றது. நாயின் உடம்பில் அதன் வியர்வையிலிருந்தே உணி தோன்றுகிறது.

இவ்வாறு வியர்வையிலிருந்து உதிக்கின்ற உயிரினங்களையும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே சிறப்புறக் காத்தருள்வீராக.

**உடல் உறு பிணியால் உயிர் உடல் கெடாவகை**
**அடலுறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (732)

உடல் அடைகின்ற நோயின் காரணமாக உயிர் தங்கியிருக்கின்ற அந்த உடலானது கெட்டுப் போகின்றது. அதாவது மரணம் என்ற ஒன்றால் அழிவது மட்டுமல்ல. இது பேரிழப்பு. பலவகையில் உடல் கெடுகிறது.

கண் குருடாகிறது - காது செவிடுபடுகிறது - கை, கால் விரல்கள் குன்மத்தால் அழுகிக் குறுகி விடுகின்றன - பக்க வாத நோயால், கை, கால்கள் செயலிழந்து விடுகின்றன. இவ்வாறு பல விதங்களில் பிணியால் உடலும், உடல் உறுப்புகளும் கெட வாய்ப்புள்ளது. எனவே உடல் அடையும் நோயினால் உடலானது கெட்டுப் போகாமல் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

**சிசு முதற் பருவச் செயல்களின் உயிர்களை**
**அசைவறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (734)

குழந்தை முதல் பருவ மாற்றங்களால் ஏற்படும் விளைவுகளால் உடலிலே இருந்து உயிரானது பிரியாமல் கடைசி வரை உலகிலே வாழும்படி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

குறிப்பு : சிசுப் பருவம் முதல் விருத்தாப்பியம் வரையில் எந்தப் பருவத்திலும் மரணம் வரலாம். அவ்வாறு நேராமல் காத்தருளப் பிரார்த்தனை செய்கின்றார். இங்கு அசைவு என்பது மரணத்தைக் குறிக்கின்றது.

**உயிருறும் உடலையும் உடலுறும் உயிரையும்**
**அயர்வறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (736)

ஆகாயத்திலே நிரம்பியிருக்கின்ற உயிரணுக்கள் நீரின் வழியாகத் தந்தையின் உடலில் தங்கிப் பின்னர் தாயின்

கருப்பையில் சேருகின்றது. அந்த உயிரணுக்களை நுண் கருவி (Microscope) மூலம் காண முடிகிறது. அந்த உயிரணுக்களைப் பூதப் பேரணுவுரு என்கிறார். உயிர் ஒளியே யாகும். பூதப் பேரணு உருவிலுள்ள அணுக்களுக்குள் உயிர் இருக்கிறது. பூதப் பேரணு உருவே உயிர் எடுத்த உடலாகும். அந்தப் பூதப் பேரணு வுருவானது தாயின் கருப்பையிலுள்ள கரு முட்டையினுள் நுழைந்து தங்கிவிடுமானால் அந்தக் கரு முட்டையானது பவுதிக உடம்பாக வளர்கிறது. பவுதிக உடம்பாகிய நாம் காணும் ஸ்தூல உடம்பெடுத்துக் கொண்டது பூதப் பேரணு வடிவிலிருந்த உயிர். அந்த உயிர் எடுத்தது பூதப் பேரணு உரு. இப்படி உயிர் அடைந்த உடலையும் (பூதப் பேரணுவுரு) உடல் (பவுதிக உடல்) எடுத்த உயிரையும் தளர்வடையாது அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

**பாடுறும் அவத்தைகள் பலவினும் உயிர்களை**
**ஆடுறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (738)

பல துன்பங்கள் வாழ்க்கையில் தோன்றி உயிர்களை வாட்டுகின்றன. இந்த உயிர்கள் அனைத்தினையும் அத்துன்பங்களிலேயிருந்து அவதிப்படாமல் இன்பமாக வாழும்படி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

**முச்சுடராதியால் எச்சக உயிரையும்**
**அச்சறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (740)

சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய மூன்று சுடர்களைக் கொண்டு எந்த உலகத்திலே வாழ்கின்ற உயிராயினும் அவற்றின் பயம் நீங்கி வாழும்படி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

**வான் முகிற் சத்தியால் மழை பொழிவித்துயிர்**
**ஆனறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (742)

வானத்திலே தோன்றும் மேகத்தின் ஆற்றலால் மழை பொழிவித்து உயிர்களின் வாட்டம் நீங்குமாறு அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

**இன்புறு சத்தியால் எழின் மழை பொழிவித்து**
**அன்புறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (744)

இன்பத்தை அளிக்கின்ற தங்களின் அருள்மிகு ஆற்றலைக் கொண்டு அழிவைத் தருகின்ற பெரு மழை இல்லாது ஆனந்தத்தை அளிக்கும் வகையில் மிக அழகாகத் தேவையான அளவு மழை பொழியும்படிச் செய்து உயிர்களை அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அன்புடன் காத்தருள்வீராக.

**எண்ணியற் சத்தியால் எல்லா உலகினும்**
**அண்ணுயிர் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (746)

அளவற்ற எண்ணுக் கடங்காத தங்களது பேராற்றலால் எல்லா உலகிலும் உள்ள அனைத்து உயிரினங்களையும் நன்கு வாழும்படி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

**அண்டப் புறப்புற அமுதம் பொழிந்துயிர்**
**அண்டுறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (748)

அண்ட வெளியிலே புறப்புற அமுதமாக விளங்கும் மழை பொழிவித்து உயிர்கள் அனைத்தும் இணைந்து வாழும்படி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

**தேவரையெல்லாம் திகழ் புற அமுதளித்து**
**ஆவகை காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (750)

தயவும் இரக்கமுமுடைய புண்ணியர்கட்கெல்லாம் விளங்குகின்ற மதி மண்டலத்து அமுதத்தை வாயார உண்ணும்படித் தந்து அவர்கள் விளங்கும் வகை அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

**அகப்புற அமுதளித்து ஐவராதிகளை**
**அகப்படக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (752)

சிற்சபை அமுதளித்து மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய இந்திரியங்கள் ஐந்தும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம்,

உள்ளம் ஆகிய கரணங்கள் ஐந்தும் கைவசம் ஆகும்படி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

அகப்புறம் என்பது ஜீவன். ஜீவன் இருக்குமிடம் சிற்சபை எனவே அகப்புற அமுதம் சிற்சபை அமுதமாயிற்று சிற்சபை அமுதத்திற்கு ஆதாரம்.

கள்ளுண்டாளெனப் புகன்றார் கனகசபை நடுவே
கண்டதுண்டு சிற்சபையில் உண்டது முண்டடி நான்
எள்ளுண்ட பலவிடயத் திறக்குங்கள் அன்றே
என்றும் இறவா நிலையில் இருத்தும் கள்
உள்ளுண்ட போது மயக்குற்றிடுங்கள் அலவே
உள்ள மயக்கனைத்தினையும் ஒழித்திடுங் கள் மடவாய்
அள்ளுண்ட பிறரும் எனை அடுத்தடுத்துக் கண்டால்
அவர்க்கு மிங்கு அறிவு தரும் யானுண்ட கள்ளே.
(அனுபவமாலை) (திருவருட்பா 5725)

**தரும் அக அமுதால் சத்தி சத்தர்களை**
**அருளினில் காக்கும் அருட்பெருஞ்ஜோதி** (754)

அருள்தருகின்ற பொற்சபைக் காட்சி அமுதத்தால் எல்லாச் சத்திகளையும் அச்சத்திகளை நடத்துவிக்கும் எல்லாச் சத்தர்களையும் தங்களின் அருளினால் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

குறிப்பு : அகம் என்பது ஆன்மா ஆன்மாவின் இருப்பிடம் ஆன்மாகாசமான பொற்சபை. எனவே அக அமுதம் பொற்சபை அமுதம் ஆயிற்று. பொற்சபையில் காட்சி தான் உண்டு. அந்தக் காட்சியே பொற்சபை அமுதம் எனப்பட்டது. முன் வரியில் குறிப்பிடப்பட்டுள்ள அனுபவமாலைப் பாடலைக் கவனிக்க.

**காலமும் நியதியும் காட்டி எவ்வுயிரையும்**
**ஆலுறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (756)

கோடை காலத்தில் வெய்யிலும் மாரிக் காலத்தில் மழையும் ஆண்டவன் படைத்த நியதி. காலங்களையும் அக் காலங்களில்

நிகழ வேண்டிய பருவ மாற்றங்களையும் கிரமப்படி நிகழச் செய்து எவ்வுயிர்களையும் வளமாக வாழும்படி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

**விச்சையை இச்சையை விளைவித்துயிர்களை**
**அச்சறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (758)

விச்சை என்பது வித்தை. இச்சை என்பது ஆசை அல்லது விருப்பம். உயிர்களிடத்தில் ஆற்றல் மிக்க செயல்பாடுகளையும் அதற்குரிய ஆசைகளையும் மேலும் மேலும் பெருகச் செய்து உயிர்களைப் பயமின்றி வாழும்படி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

**போகமும் களிப்பும் பொருந்து வித்துயிர்களை**
**ஆகமுட்காக்கும் அருட்பெருஞ்ஜோதி** (760)

அனுபவிக்க வேண்டிய எல்லா இன்ப சுகங்களையும் மகிழ்ச்சியையும் உயிர்கள் அடையுமாறு செய்துவித்து அவ்வுயிர்களின் உள்ளிருந்து அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

**கலை அறிவளித்துக் களிப்பினில் உயிரெலாம்**
**அலைவறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (762)

ஞான அறிவை அளித்து உலகினில் உள்ள உயிர்களெல்லாம் எதற்கும் அலைந்து ஏங்கித் திரியாது அனுபவிக்கும்படி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

**விடய நிகழ்ச்சியான் மிகுமுயிர் அனைத்தையும்**
**அடைவுறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (764)

உலக விவகாரங்களில் ஏற்படும் சில சம்பவங்களினால் சில தவறுகளை இழைத்துவிடும் உயிர்களையும் விலக்கி விடாமல் தங்கள் அருள் பார்வையிலேயே வைத்து அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

**துன்பளித்தாங்கே சுகமளித்துயிர்களை**
**அன்புறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (766)

உயிர்கள் தாம் பெற்ற அற்ப சுதந்திரத்தைப் பயன்படுத்திச் செய்த வினைகட்கேற்பப் பயனைத் துய்ப்பது எல்லோர்க்கும் பொதுவானது. இறைவனின் இந்த நியதியின்படித் தீவினை செய்தோர் அதற்குரிய தண்டனையையும் நல்வினை செய்தோர் நற்பயனையும் அடைவர். இந்த நியதியின்படித் தீவினை செய்தோர் முன் செய்த தீவினையின் பயனாகத் துன்பம் அடையுமாறு விதித்தாலும் அத்துன்பத்தினால் வருத்தமடையாத அளவில் துன்பளித்த அப்போதே அவ்வுயிர்கட்குச் சுகமளித்து அவ்வுயிர்களை அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அன்புடன் காத்தருள்வீராக.

குறிப்பு : ஆண்டவன் சிலருக்குக் காயாகவும் சிலருக்குப் பழமாகவும் இருக்கின்றான் என்று வாயாகி வாயிறந்த மௌனமாகி என்று தொடங்கும் மகாதேவமாலைப் பாட்டில் காயாகிக் கனியாகி என்கின்றார். தீவினையாளர்க்கு அவன் காயாகிறான். நல்வினையாளர்கட்கு அவனே பழமாகிறான். இந்த அகவல் வரி உரைக்கு இந்த மகாதேவ மாலைப் பாடல் ஓர் ஆதாரம்.

**கரணேந்தியத்தால் களிப்புற உயிர்களை**
**அரணேர்ந்தளித்தருள் அருட்பெருஞ்ஜோதி** (768)

மனம், புத்தி, சித்தம், அகங்காரம், ஆகிய கரணங்களாலும், மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய இந்திரியங்களாலும் இன்பமே அடையும்படி அவ்வுயிர்களுக்குத் தாங்கள் பாதுகாவலாக இருந்து அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

**எத்தகை எவ்வுயிர் எண்ணின அவ்வுயிர்க்கு**
**அத்தகை அளித்தருள் அருட்பெருஞ்ஜோதி** (770)

எந்தவிதமாக அனுபவிக்க எந்த ஜீவன் ஆசைப்படுகிறதோ அந்த ஜீவனுக்கு அது ஆசைப்பட்ட விதமாகவே அளித்து அதன்

ஆசையை நிறைவேற்றி என் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

குறிப்பு : எவ்வண்ணம் வேண்டுகினும் அவ்வண்ணம் அன்றே இரங்கி ஈந்தருளும் பதம் என்கிறது திருவடிப்புகழ்ச்சி.

**எப்படி எவ்வுயிர் எண்ணின அவ்வுயிர்க்கு**
**அப்படி அளித்தருள் அருட்பெருஞ்ஜோதி** (772)

எந்த உயிர் எப்படியெல்லாம் விருப்பப்படுகின்றதோ அந்த உயிர்க்கு அப்படியே அது பெற்று வாழ்கின்றவாறு அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அருள் அளித்தருள்வீராக.

**ஏங்காதுயிர்த்திரள் எங்கெங்கிருந்தன**
**ஆங்காங்கு அளித்தருள் அருட்பெருஞ்ஜோதி** (774)

பக்தி பலவிதம். சிலர் தங்கட்கு என்னென்ன தேவையோ அவற்றையெல்லாம் அருளும்படி ஆண்டவனை வேண்டுவார்கள். சிலர் நமக்கு என்ன தேவையோ அது ஆண்டவனுக்குத் தெரியாதா! அவன் தந்தால் தரட்டும். நாமாக ஒன்றும் கேட்க வேண்டாம் என்று இருப்பார்கள்.

எதையும் வேண்டாது எதற்கும் ஏங்காத நிராசை என்னும் பக்குவத்திலுள்ள உயிரினங்கள் எந்தெந்த இடத்தில் தத்தம் கொள்கைப்படி எதையும் வேண்டாது நின்றனவோ அந்த ஜீவர்கட்கும் அந்தந்த இடத்திலேயே அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அருள் தருவீர்களாக.

**சொல்லுறும் அசுத்தத் தொல்லுயிர்க்கவ்வகை**
**அல்லலில் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (776)

தவறு செய்யும் ஜீவர்கள் பழிச் சொல்லுக்கு என்றும் ஆளாவார்கள். தீய குணமுடையவர்களே தவறு செய்வார்கள். அவ்வாறு தவறு செய்யக்கூடிய ஜீவர்களையும் பழிச் சொல்லால் ஏற்படக் கூடிய அல்லலிருந்து அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

குறிப்பு : தீய குணமுடையோர் பழிச் சொல்லுக்கு ஆளாகியே தீருவர். இதையே சொல்லுறும் என்ற வார்த்தை விளக்குகின்றது. ஆன்மாக்களைப் பிறவி எடுக்கு முன்பே பக்குவம், அபக்குவம், பக்குவா பக்குவம் என மூன்றாகக் கடவுளின் அருட் சக்தி பிரித்து விட்டது என உரைநடையில் நம் பெருமானார் கூறுகின்றார். இந்த வரியில் அபக்குவ ஆன்மாக்களின் நிலை கூறி வேண்டப்பட்டது.

**சுத்தமும் அசுத்தமும் தோயுயிர்க் கிருமையின்**
**அத்தகை காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (778)

முன் வரியில் தவறு செய்கின்ற அடிநிலை ஜீவர்களைக் காப்பாற்ற வேண்டப்பட்டது. அவ்வாறு தவறே செய்கின்ற அடிநிலையிலிருந்து சற்று திருந்தி நல்ல சில குணங்களை வளர்த்த ஜீவர்கள் தீயவை நல்லவை ஆகிய இரண்டும் கலந்து காணப்படுவார்கள். இதைத்தான் சுத்தமும் அசுத்தமும் தோய்ந்த உயிர் என இந்த வரியில் கூறப்பட்டது. அவைகள் செய்கின்ற நல்வினை தீவினைக்கேற்ப இம்மை மறுமை இன்பங்களை அவ்வாறே அளித்து அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

குறிப்பு : முன் வரிக் குறிப்பைக் காண்க. பக்குவா பக்குவ ஆன்மாக்களின் நிலை இந்த வரியில் விளக்கி வேண்டப்பட்டது.

**வாய்ந்திடும் சுத்த வகை உயிர்க்கு ஒருமையின்**
**ஆய்ந்துறக் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (780)

முன்வரியில் சற்று திருந்தி நல்லவை தீயவை ஆகிய இரண்டும் கலந்த ஜீவர்கள் வாழ வேண்டப்பட்டது. முதலில் அசுத்த நிலையிலிருந்து சுத்தமும் அசுத்தமும் தோய்ந்த நிலைக்கு மாறிப் பின்னர் தீயவை அனைத்தும் நீங்கிய, நல்லன மட்டுமே விளங்குகின்ற ஜீவர்களைப் பற்றி இந்த வரியில் கூறப்படுகிறது.

தூய குணங்களே வாய்க்கப்பெற்ற நல்ல ஆன்மாக்களுக்கு ஞான அறிவினால் ஒன்றிய மனம் கூடுமளவிற்கு ஆராய்ச்சியும் கூடி அடையுமாறு அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

<u>குறிப்பு</u> : முன் வரிகளின் குறிப்பினைக் காண்க. பக்குவ ஆன்மாக்களின் நிலை பற்றிக் கூறி வேண்டப்பட்டது.

**எவையெலாம் எவையெலாம் ஈண்டின ஈண்டின**
**அவையெலாம் காத்தருள் அருட்பெருஞ்ஜோதி** (782)

எந்தெந்த உயிர்கள் இறைவனே உன்னை நெருங்கினவோ அவ்வுயிர்களை எல்லாம் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

<u>குறிப்பு</u> : இறைவனை அண்டிய உயிர்களைக் காத்தருள் என்றதனால் இறைவனை அண்டாத உயிர்கள் தங்கள் தங்கள் பூர்வ ஜன்ம வினைக்கேற்ப அதனதன் பயனை அடைந்தே தீரும் என்பது விளங்குகின்றது. இறைவனை அண்டிய உயிர்களோ வினை ஒரு பக்கம் துன்பந் தந்தாலும், அத்துன்பத்தினின்றும் இறைவனால் காப்பாற்றப்படுகின்றன. பக்தியால் இறைவனை அணுகி அடைந்தால் ஊழையும் அறுக்க முடியும்.

ஆதாரம்:

ஊழை அறுக்க உளவறியாப் பொய்யனிவன் மனம்
பீழை மனம் நம்மைப் பெறாத மனம் கொடிய
தாழை யென எண்ணி என்னைத் தள்ளிவிட்டால் என் செய்வேன்
ஏழை நான் ஒற்றி எழுத்தறியும் பெருமானே. (746)

**அண்டத் துரிசையும் அகிலத்துரிசையும்**
**அண்டற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி** (784)

அண்டப் பெருவெளியிலே உள்ள குற்றங்களும் அகிலமாம் இவ்வுலகிலே உள்ள குற்றங்களும் நெருங்காதவாறு அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அடக்கி அருள்வீர்களாக!

அண்டப் பெருவெளியிலே நம்மைப் பாதிக்கக் கூடிய அத்தனையுமே அண்டத் துரிசுகள்.

பூமியிலே தோன்றும் பூகம்பம். நீரிலே தோன்றும் அளவிற்கு மீறிய பெரு வெள்ளம், பேய் மழை, காற்றினால் ஏற்படும் நாசகாரப் புயல் முதலியன அகிலத்துரிசு.

**பிண்டத் துரிசையும் பேருயிர்த் துரிசையும்**
**அண்டற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி** (786)

உடலில் ஏற்படுகின்ற ஊனங்கள் அதாவது குருடு, செவிடு, ஊமை போன்றவை பிண்டத் துரிசு. தீவினையால் வரும் உடற்பிணியற்ற துன்பங்களெல்லாம் பேருயிர்த் துரிசு. பிண்டத்திலும் பேருயிரிலும் துரிசுகள் அதாவது குற்றங்கள் எதுவும் நெருங்காதவாறு அடக்கி அருள் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**உயிருறு மாயையின் உறுவிரி அனைத்தும்**
**அயிரற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி** (788)

மாயையாகிய உலக ஆசையை உயிர் அடையும். உயிர் அடைந்த மாயையின் விரிவோ அனந்தம், அதாவது மாயை என்பது உலக ஆசை. அந்த ஆசையின் அளவைக் கூறப்புகின் எண்ணில் அடங்கா. அந்த ஆசைகள் அனைத்தினையும் தயக்கமில்லாமல் அடக்கி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே ஆள்வீராக.

**உயிருறும் இருவினை உறுவிரிவனைத்தும்**
**அயர்வற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி** (790)

மனித உயிரினம் மட்டும் நல்வினை தீவினை இரண்டையும் அடைகிறது. இவ்வினைகள் இரண்டும் மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றினாலும் அடையும். அந்த வினைகள் வினாடிக்கு விநாடி பெருகிக் கொண்டே வருவதால் அதன் பெருக்கத்தின் அளவோ சொல்ல முடியாது. அப் பெருக்கத்தினைச் சோர்வடையாது அடக்கி என் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அருள் தருவீராக.

குறிப்பு : மனித இனத்திற்கு மட்டும் அற்ப சுதந்தரம் இறைவனால் தரப்பட்டுள்ளது. அந்த அற்ப சுதந்தரத்தால் மனித இனம் நல்வினையோ தீவினையோ செய்து கொண்டே இருப்பதால் பாவ புண்ணியங்களும், வினைகளும், வினைகட்கேற்பப் பயன்களும் மனித இனத்தைச் சார்கின்றன. மற்ற ஜீவர்கட்கு அற்ப சுதந்தரம் தரப்படாததால் அவைகளின் செயல்கட்குப் பாவ புண்ணியங்களோ வினையோ கிடையாது.

**காமப் புடைப்பு உயிர் கண் தொடரா வகை**
**ஆமற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி** (792)

புடைப்பு என்பது மேலோங்குவது. காமத்தின் புடைப்பாகிய மோகமோ உயிரினத்தைத் தொடராத வகையில் அவை இருந்தன என்ற சொல்லுக்கே இடமில்லாதவாறு அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அடக்கி அருள்தருவீராக.

குறிப்பு : வினையைப் பற்றி முன் வரியில் கூறப்பட்டது. அந்த வினைக்குக் காரணம் ஆசை. மேலோங்கிய ஆசை என்பதையே காமப்புடைப்பு என இந்த வரியில் கூறப்பட்டது. ஆசை அறுந்து விட்டால் வினையே அறுபட்டு விடும்.

**பொங்குறு வெகுளிப் புடைப்புகளெல்லாம்**
**அங்கற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி** (794)

சினம் என்பது உள்வேக்காடு, வெகுளி என்பது கண் சிவத்தல் மீசை துடித்தல் போன்ற வெளிப்படு செயல்கள். இவை ஆயுளை நஷ்டமடையச் செய்யும். வெகுளியின் அளவு மீறல்கள் எப்போதெல்லாம் எழுகின்றதோ அப்போதே அங்கேயே சிறிதும் இல்லாது அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அடக்கி ஆள்வீராக.

குறிப்பு : செயல்பாடுகட்கு ஆசை மட்டும் காரணமல்ல. கோபமும் காரணமாதலால் அதன் உட்பிரிவுகளாகிய வெகுளி சினம் முதலியவற்றில் இந்த வரியில் வெகுளி

கூறப்பட்டது. காமத்துடன் வெகுளியும் அடக்கப்பட வேண்டும்.

**மதம் புரை மோகமும் மற்றவும் ஆங்காங்கு**
**அதம் பெற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி** (796)

அகங்காரமும், எப்பாடுபட்டாவது எவ்வகையாயிலும் தான் விரும்பியதை அடைந்தே தீருவது என்கிற மோகமும் இவை இரண்டையும் சார்ந்த மற்ற தீமைகளும் எங்கெங்கு தொடங்குகின்றனவோ அங்கங்கேயே நாசமடையுமாறு அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அடக்கி அருள் தருவீர்களாக.

குறிப்பு : இந்த வரியிலும் வினைக்குக் காரணமாக உள்ள மோகம், மதம் முதலியன எடுத்துக் காட்டப்பட்டன. இவை அனைத்தும் நீக்கப்பட வேண்டியவையே.

**வடுவுறும் அசுத்த வாதனை அனைத்தையும்**
**அடர்பற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி** (798)

தீய குணங்கள் கொண்ட ஒருவன் ஒருமுறை திருடிவிட்டுச் சிறைக்குப் போனான். சிலகாலம் கழித்து அவன் திருந்தி ஒரு பெரிய மகானாக வளர்ந்துவிட்டான். பல காலம் கழித்து மகானாக இருந்த அவர் தன் சொந்த ஊருக்கு வந்தார். மக்களில் பலர் அவர் பெரிய மகான் என்று அவர் காலில் விழுந்து வணங்கினர். சிறு வயதில் அவரைத் தெரிந்த ஒருவர் யார் அது மகானா அன்று திருடிவிட்டுச் சிறைக்குப் போனானே அவன் தானே என்று கேட்டாராம். தற்போது திருந்தி ஒரு மகான் என்ற பெயர் பெற்ற பிறகும், முன்பு எடுத்த அந்தக் கெட்ட பெயர் மாறாது. அடிபட்ட இடத்தில் புண் ஆறினாலும் அடையாளமாக வடு இருக்கும். அது போல் வாழ்வில் நாம் செய்கின்ற தவறுகள் என்றைக்கும் நம்மை அடையாளம் காட்டிக் கொண்டே இருக்கும். இதைத் தான் வடு என்று கூறுகின்றார்.

என்றைக்கும் அடையாளம் காட்டுகின்ற தீய குணங்கள் அனைத்தையும் சிறிதும் இருக்கவொட்டாது அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அடக்கி என்னை ஆட்கொள்வீராக.

**சுத்தமும் அசுத்தமும் தோய்ந்த வாதனைகளை**
**அத்தகை அடக்கும் அருட்பெருஞ்ஜோதி** (800)

நல்வினை தீவினை ஆகிய இரண்டின் மூலமாக வரக்கூடிய இன்ப துன்ப அனுபவங்கள் அனைத்தினையும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அடக்கி இருவினை ஒப்புமல பரிபாகம் அருள்வீராக.

குறிப்பு : நல்வினை, தீவினை ஆகிய இரண்டும் பிறவியைக் கொடுக்கும். இரண்டும் அற்றுப் போனால் பிறவியை அறுக்கலாம். இதனால் தான் இவ்விரண்டையும் அடக்குமாறு இறைவனை வேண்டுகின்றார்.

**நால்வயிற்றுரிசும் நண்ணுயிர் ஆதியில்**
**ஆலற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி** (802)

துரிசுகள் அதாவது குற்றங்கள் நான்கு வகை. யாவை? பிணி, மூப்பு, பயம், துன்பம். பிணி, மூப்பு இரண்டும் உடலுக்கு வருவது. பயம், துன்பம் ஆகிய இரண்டும் அகத்தே மனதில் தோன்றுவது. இந் நான்கு துரிசுகளையும் தொடங்கும்போதே இவை அற்றும்போகும்படி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அடக்கி அருள்புரிவீர்களாக.

**நால்வயிற் படைப்பும் நால் வயிற் காப்பும்**
**ஆலற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி** (804)

ஜீவன்கள் நான்கு வகைகளாக அதாவது ஊர்வன, பறப்பன, உறுவன, நடப்பன என்றவாறு படைக்கப்பட்டுள்ளன. ஆன்மா, ஜீவன், கரணங்கள், இந்திரியங்கள் ஆகிய நான்கும் ஒவ்வொரு ஜீவனுக்கும் உண்டு. முன் வரியில் கூறப்பட்ட பிணி, மூப்பு, பயம், துன்பம் ஆகிய நான்கும்கூட ஜீவன்கட்குப் பொதுவாகவே உள்ளது. நான்கு குற்றங்களாலும் இந்த ஜீவன்கட்கு ஆபத்து நேராவண்ணம் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

**மூவிடத் திருமையின் முன்னிய தொழிற்கரில்**
**ஆவிடத் தடக்கும் அருட்பெருஞ்ஜோதி** (806)

மூவிடம் = நான் - நீ - அது, அவள், அவன்.

இருமை = இம்மை, மறுமை.

தன்மை, முன்னிலை, படர்க்கை என இலக்கணம் மூவிடத்தைக் குறிக்கிறது. தன்மை என்பது நான் - முன்னிலை என்பது நீ. படர்க்கை என்பது அவன், அவள், அது ஆகும். நான், நீ என்பது உயர்திணை, அது என்பது அஃறிணை. ஆறறிவுள்ள ஜீவர்கள் முதல், ஐந்தறிவு தொடங்கி ஓரறிவுள்ள தாவரம் வரை அனைத்து ஜீவன்களையும் படைத்தல், காத்தல், துரிசு நீக்குவித்தல், பக்குவம் வருவித்தல் ஆகிய ஐந்து தொழில்கள் மூலம் இம்மை மறுமை இன்பங்களை அளித்துத் தன் அருள் வெளிக்குள்ளேயே அடக்கி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்வீராக.

**மூவிட மும்மையின் முன்னிய தொழிற்கரில்**
**ஆவிடம் அடக்கும் அருட்பெருஞ்ஜோதி** (808)

ஓரறிவு முதல் ஆறு அறிவு வரை உள்ள உயர்திணை அஃறிணை ஆகிய எல்லா ஜீவன்களையும் மனம் வாக்கு காயம் ஆகிய மூன்றினால் ஆற்றப்படும் செயல்பாடுகளில் அமையுமாறு அடக்கி ஆள்கின்ற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே.

**தத்துவச் சேட்டையும் தத்துவத் துரிசும்**
**அத்தகை அடக்கும் அருட்பெருஞ்ஜோதி** (810)

தத்துவங்கள் மொத்தம் 96 என வகுக்கப்பட்டுள்ளன.

கருமேந்திரியங்கள், ஞானேந்திரியங்கள் அவைகளின் தொழிற்பாடுகள், ஜீவன், ஆன்மா, ஆணவம், மாயை, கன்மம், மாமாயை, திரோதை, பசி, பிணி, பயம், துன்பம் முதலிய தொண்ணுற்றாறு தத்துவங்களினால் ஏற்படக்கூடிய சில விரும்பத்தகாத நிகழ்வுகளையும் (சேட்டைகள்) அவைகளினால் ஏற்படும் குற்றங்களும் (துரிசு) மிகாமல் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அடக்கி அருள்தருவீராக.

**சுத்தமா நிலையில் சூழுறு விரிவை**
**அத்தகை அடக்கும் அருட்பெருஞ்ஜோதி** (812)

தீய குணங்கள் விலகி, மனம் தூய்மையடைந்து அனுபவிக்கும் அந்தச் சமயத்தில் நிகழும் பரந்த அனுபவ நிலைகளில் அந்த மனதை நன்கு அடக்கி அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அருள் அளிப்பீர்களாக.

**கரைவின் மா மாயைக் கரும்பெருந்திரையால்**
**அரைசது மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி** (814)

எல்லையே இல்லாத மாமாயை எனும் மாயா சக்தியினால் உலக ஆசையை ஜீவர்கட்கு மேலும் மேலும் உண்டாக்கி இறைவனின் அரசாட்சி இன்னவாறு உள்ளது என அறியா வண்ணம் மறைப்பைக் கரிய பெரிய திரையாக ஏற்படுத்தியுள்ள அருட்பெருஞ்ஜோதி.

**பேருறு நீலப் பெருந்திரை அதனால்**
**ஆருயிர் மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி** (816)

உடலை இயக்குகின்ற சிறப்புடைய உயிரானது உடலுக்குள் எப்படி வந்தது, எங்கே இருக்கின்றது என்றெல்லாம் அறியா வண்ணம் கிரியா சக்தி என்ற நீலத் திரையால் மறைக்கின்ற அருட்பெருஞ்ஜோதி.

**பச்சைத் திரையால் பரவெளியதனை**
**அச்சுற மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி** (818)

பச்சைத் திரை என்கிற பராசக்தியால் மாயையை ஜீவனுக்குத் தந்து இறைவன் விளங்கும் பரவெளியை மிக அழுத்தமாகவே மறைக்கின்ற அருட்பெருஞ்ஜோதி.

**செம்மைத் திரையால் சித்துறு வெளியை**
**அம்மையின் மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி** (820)

சிவப்புத் திரையாகிய இச்சா சக்தி என்ற ஒன்றைக் கொண்டு ஜீவன்களானது சித்துக்கள் விளங்குகின்ற அனுபவ

வெளியை அடைய வொட்டாது வெகுதொலைவில் நிறுத்தி மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி.

**பொன்மைத் திரையால் பொருளுறு வெளியை**
**அன்மையின் மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி** (822)

மஞ்சள் வண்ணமுடைய பொன்மைத் திரையாகிய ஞான சக்தி எனும் திரையால் சிவமாகிய பொருளை அடையக்கூடிய வெளியை நெருங்கா வண்ணம் தூரத்திலேயே நிறுத்தி மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி.

**வெண்மைத் திரையால் மெய்ப்பதி வெளியை**
**அண்மையின் மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி** (824)

வெண்மைத் திரையாகிய ஆதிசக்தி எனும் திரையால் உண்மையான இறைவனின் இருப்பிடத்தை அடையும் வெளியை மிக அருகிலேயே வைத்தும் மறைக்கின்ற அருட்பெருஞ்ஜோதி.

**கலப்புத் திரையால் கருதனுபவங்களை**
**அலப்புற மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி** (826)

ஆன்மீகத் துறையில் இருந்த ஒரு கருத்து என்னவெனில் ஞானிகள், புண்ணியர்கள் ஆகியவர்களின் ஜீவனானது முடிவில் இறைவனுடன் கலந்து விட முடியும் என்றும், இந்த உடம்பு அதற்குத் தடை என்றும் கருதிப் பலர் வலுக் கட்டாயமாகத் தானாகவே உடம்பை விட்டிருக்கின்றார்கள். வள்ளலார் கருத்தோ யாராயிருந்தாலும், எவ்வளவு பெரிய ஞானியாய் இருந்தாலும், அன்னாரது தேகம் மண்ணிற்கோ நெருப்புக்கோ இரையாகுமானால் அவரது உயிர் அந்தப் பிறப்பில் செய்த நன்மை தீமைகட்கேற்பப் பிறவி எடுத்தே தீரும் என்பதாகும். ஜீவனானது தனித்து இயங்காது என்றும் திட்டவட்டமாக அறிவிக்கின்றார். கலப்பு என்பதும் ஒரு திரையாகும்.

சிற்சத்தி என்கின்ற கலப்புத் திரையால் இதுவரை ஏற்பட்ட அனுபவங்களை அடியோடு தோன்றாதவாறு மறைக்கின்ற அருட்பெருஞ்ஜோதி.

**விடய நிலைகளை வெவ்வேறு திரைகளால்**
**அடர்புற மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி** (828)

உலகியலிலே உள்ள பல்வேறு விடயங்கள், பலவேறு நிகழ்வுகள், ஒவ்வொன்றும் ஒவ்வொரு மறைப்பாகப் பலவேறு மறைப்புகளை உண்டாக்கி அந்த மறைப்பானது எளிதில் விலகாதவாறு அடர்ந்து நெருங்கி உள்ளவாறு மறைக்கின்ற அருட்பெருஞ்ஜோதி.

**தத்துவ நிலைகளைத் தனித் தனித் திரையால்**
**அத்திற மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி** (830)

பிண்டத்திலே தத்துவங்களை இந்திரியங்கள், கரணங்கள், அவைகள் செயற்பாடுகள் முதலியவாகக் கணக்கிட்டு 96 என வகுத்துள்ளார்கள்.

அண்டத்திலே பிரும்மா, விஷ்ணு, ருத்ரன், மகேசுவரன், சதாசிவன் முதலாகப் பல அனுபவங்களைத் தத்துவங்களாகக் காட்டியுள்ளார்கள். அந்தத் தத்துவங்கள் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு திரையாக நிறுத்தித் தன் வல்லபத்தால் மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி.

**திரை மறைப்பெல்லாம் தீர்த்தாங்காங்கே**
**அரசுறக்காட்டும் அருட்பெருஞ்ஜோதி** (832)

திரைகளினால் ஏற்பட்ட அத்துணை மறைப்புகளையும் நீக்கி ஒவ்வோர் அனுபவத்தையும் தன் வசமாக்கி ஆங்காங்கே தன்னாட்சி செலுத்துமாறு காட்டுகின்ற அருட்பெருஞ்ஜோதி.

(எந்த அருட்பெருஞ்ஜோதி இதுவரை திரையிட்டு மறைத்ததோ அதுவே அத்திரைகளை விலக்கிக் காட்டுமாம்)

**தோற்ற மாமாயைத் தொடர்பறுத்தருளின்**
**ஆற்றலைக் காட்டும் அருட்பெருஞ்ஜோதி** (834)

தோன்றுகின்ற பெரும் பேராசையின் தொடர்பை அறுத்து இறையருளின் வல்லபத்தைப் பேராற்றலைக் காட்டும் அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு: மாமாயை என்பது பெரும் பேராசை என்னில் அந்த ஆசையின் தொடர்பே இல்லாது நிராசை நிலை ஏற்படுமானால் இறை அருளின் ஆற்றலை நாம் காண முடியும்

**சுத்த மாமாயைத் தொடர்பறுத்தருளை**
**அத்தகை காட்டும் அருட்பெருஞ்ஜோதி** (836)

முன் வரியில் கூறப்பட்ட தோற்ற மாமாயை என்பது உலகியல் வாழ்வில் தோன்றுகின்ற பெரும் பேராசைகளைப் பற்றியது என்றால் இந்த வரியில் சுத்த மாமாயை என்பது அருளியலிலே, ஆன்மீகத் துறையிலே தோன்றக்கூடிய பெரும் பேராசைகளைக் கண்டிக்கிறது.

அருளியலிலே, ஞானத்திலே, தவத்திலே ஈடுபடும்பொழுது பல சித்துக்கள் தானாகக் கை வரும் அல்லது பல சித்துக்களை நாமே அடைய ஆசை கொண்டு அடைய முயற்சிப்பது. அருள்வாக்கு, சித்து விளையாட்டு போன்ற அற்ப ஆசைகளின் தொடர்பை அறுத்து அவற்றை அடைய விரும்பாமல் இறைவனை அடைதலே குறிக்கோளாகக் கொண்டு வாழ்கின்ற வகை அருளை அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அளித்தருள்வீராக.

**எனைத் தாணவ முதல் எல்லாம் தவிர்த்தே**
**அனுக்கிரகம் புரி அருட்பெருஞ்ஜோதி** (838)

கல்வி, செல்வம், குலம், புகழ், தொழில் முதலிய பல காரணங்களால் ஒரு மனிதனுக்கு ஆணவம் ஏற்பட வழியுண்டு. இதைத் தான் எனைத்து ஆணவம் எனக் கூறப்பட்டது.

இவ்வாறு எக் காரணங் கொண்டும் எந்த விதத்தாலும் வரக் கூடியது ஆணவம். ஆணவத்தைத் தொடர்ந்து வரக்கூடிய மாயை கன்மம் முதலியவற்றையும் தவிர்த்து அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அருள்புரிவீராக.

**விடய மறைப்பெலாம் விடுவித்துயிர்களை**
**அடையுறத் தெருட்டும் அருட்பெருஞ்ஜோதி** (840)

ஜாதி, மதம், சமயம், குலம், கோத்திரம், மொழி, தேசம், உயர்வு, தாழ்வு, ஏழை, பணக்காரன், முதலாளி, தொழிலாளி, போன்ற பல்வேறு விடயங்களால் சகோதர உரிமை, இறைநாட்டம், முதலியன ஜீவர்களிடம் அழுத்தமாக மறைக்கப்பட்டுள்ளது. அவ்வித மறைப்புகளிலிருந்து ஜீவர்களை விடுவித்து தங்கள் அருள் வல்லபத்தால் ஒன்று சேர்த்து அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே வாழ்வளிப்பீர்களாக.

**சொரூப மறைப்பெலாம் தொலைப்பித்துயிர்களை**
**அருளினில் தெருட்டும் அருட்பெருஞ்ஜோதி** (842)

இறைவன் அனைவர்க்கும் பொதுவாக ஒருவனே உள்ளான் என்பதறியாது உருவ பேதங்களினால் ஏற்பட்டுள்ள மறைப்பையெலாம் போக்கி உயிர்களை அருளின் ஆற்றலினால் ஒன்று சேரச் செய்து அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே வாழ்விப்பீர்களாக.

(அல்லது)

மாற்ற இயலாத பிறவிக் குணக்கேடுகளால் இறைவனை மறைக்கின்ற மறைப்பு ஏற்படும். அந்த மறைப்பையும் போக்கடித்து உயிர்களை உனது அருள் வல்லபத்தால் ஒன்று சேர்த்து அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே வாழ்விப்பீர்களாக

<u>குறிப்பு</u> : ஒருவன் மிக மிகக் கோபமுடையவன் என்றால் அவனைப் பற்றிச் சொல்லும்போது அவனுடைய சொரூபம் தெரியாதா என்கிறோம். கோபமாகிய குணம் அவனது சொரூபமாயிற்று. நம் பெருமானாரும் சமய சன்மார்க்கம் பற்றி விளக்கும்போது சத்துவ குணங்கள் வாச்சியானுபவமாகிச் சொரூபானுபவம் ஆக வேண்டும் என்பதை ஆய்க.

**மறைப்பின் மறந்தன வருவித்தாங்கே**
**அறத்தொடு தெருட்டும் அருட்பெருஞ்ஜோதி** (844)

பலவேறு மறைப்புகளினால் ஜீவர்கள் இறைவனை மறந்து வாழ்ந்து கொண்டிருக்கின்றார்கள். அவ்வுயிர்களுக்கு இறை உணர்வை வருவித்து அவைகளை அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே அறவழி நிற்குமாறு சேர்த்தருள்வீராக.

குறிப்பு : இவ்வுலகில் நிகழும் தீய செயல்கள் அனைத்தினுக்கும் காரணம் இறைவனைப் பற்றி அஞ்சாத தீயவர்களே. இறைவனுக்குப் பயந்தவர்கள் தீயவை செய்யத் துணியார். இறைவனை மறந்து வாழ்பவர்கள் அனேகமாகத் தீய குணங்களை உடையவராகவே இருப்பார்கள் எனலாம்.

**எவ்வகை உயிர்களும் இன்புற ஆங்கே**
**அவ்வகை தெருட்டும் அருட்பெருஞ்ஜோதி** (846)

தாவரங்கள், பறவைகள், மிருகங்கள், மனிதர்கள் அனைத்து ஜீவர்களும் இன்புற்று வாழ்கின்ற நிலையில் அவ்வுயிர்கள் அனைத்தினையும் ஒன்று சேர்த்து அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே வாழ்விப்பீர்களாக.

**கடவுளர் மறைப்பைக் கடிந்தவர்க்கின்பம்**
**அடையுறத் தெருட்டும் அருட்பெருஞ்ஜோதி** (848)

கடவுளை அறியவொட்டாது மறைப்பது எதுவோ அதை அறிந்து அம் மறைப்பைக் கண்டித்து நீக்குபவர்க்கு அவ்வுயிர்கள் இன்பத்தைப் பூரணமாக அடையுமாறு அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே சேர்த்தருள்வீராக.

**சத்திகள் மறைப்பைத் தவிர்த்தவர்க்கின்பம்**
**அத்துறத் தெருட்டும் அருட்பெருஞ்ஜோதி** (850)

எந்தச் சத்திகள் இறைவனை மறைக்கின்றனவோ (திரை விளக்கம் காண்க) அந்தச் சத்திகளைத் தவிர்த்து மறைப்பை

நீக்கியவர்கட்கு அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே இன்பத்தைத் தொடர்ந்து அளிப்பீராக.

குறிப்பு : மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை, புகழாசை முதலிய ஆசைகளில் ஏதாவது ஒன்றை மிகுதியாக அளித்து ஜீவர்களை அருள் நிலைக்கு வரவொட்டாது மயங்கச் செய்வது சக்தி, ஆதாரம்

பொற்றம்பம் கண்டேறும்போது நான் கண்ட
புதுமை என் சொல்வேனடி - அம்மா
புதுமை என் சொல்வேனடி
ஆங்காங்கே சத்திகள் ஆயிரம் ஆயிரமாக
வந்தார்களடி - அம்மா
ஆயிரமாயிரமாக வந்தார்களடி.
வந்து மயக்க மயங்காமல் அருள்
வல்லபம் பெற்றேனடி - அம்மா
வல்லபம் பெற்றேனடி.

**சத்தர்கள் மறைப்பைத் தவிர்த்தவர்க்கின்பம்**
**அத்தகை தெருட்டும் அருட்பெருஞ்ஜோதி** (852)

சத்திகள் செயல் என்றால் சத்தர்கள் காரணம் சத்திகளினால் மயங்கும்படிச் செய்ய எது காரணமோ அந்தச் சத்தர்கள் தரும் மறைப்பையும் தவிர்த்தவர்கட்கு இன்பம் ஒன்று சேரக் கிட்டுமாறு செய்யும் அருட்பெருஞ்ஜோதி.

**படைக்கும் தலைவர்கள் பற்பல கோடியை**
**அடைப்புறப் படைக்கும் அருட்பெருஞ்ஜோதி** (854)

மனிதர்களில் தவம் செய்து முதல் நிலை அனுபவத்தைப் பெற்றுக் கொண்டவர்க்குப் பிரும்மா என்று பெயர். அவர்கள் ஆயுள் 4,32,000 ஆண்டுகள். இவர்கள் சிருட்டித் தொழில் செய்யும் ஆற்றல் பெற்றவர்கள். இவ்வாறு உள்ளவர்கள் எண்ணிக்கையில் பல கோடி.

சிருட்டித் தொழிலை நடத்துகின்ற பல கோடி பிரும்மாக்களை ஒன்று சேரச் சிருட்டிக்கும் அருட்பெருஞ்ஜோதி.

**காக்கும் தலைவர்கள் கணக்கில் பல்கோடியை**
**ஆக்குறக் காக்கும் அருட்பெருஞ்ஜோதி** (856)

இரண்டாவது அனுபவ நிலையைப் பெற்று 8,64,000 ஆண்டுகள் வாழக் கூடிய நிலை பெற்ற நாரணர்கள் காக்கும் தொழிலை ஆற்றுபவர்கள். இப்படிப்பட்ட நாரணர்கள் கோடிக் கணக்காக உள்ளனர். அவர்கள் சிறப்புற அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே காத்தருள்கின்றீரே.

**அடக்கும் தலைவர்கள் அளவிலர் தம்மையும்**
**அடர்ப்பற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி** (858)

மூன்றாவது அனுபவத்தைப் பெற்றவர்கள் ருத்திரர்கள். 12,96,000 ஆண்டுகள் வாழும் நிலை பெற்றவர்கள். குற்றங்கள் மிகாது அவற்றை அடக்கும் தொழில் நடத்தும் அளவற்ற தலைவர்களை அடக்கும் அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : படைத்தல், காத்தல், அழித்தல் என்று முத்தொழிலை முன்னோர் குறித்தனர். அதில் மூன்றாவது தொழில் அழித்தல். மூன்றாவது தொழிலை அழித்தல் என்னாது அடக்குதல் என்று கூறியுள்ளது கருணை உள்ளம்.

மூன்றாவது தொழிலைத் துரிசு நீக்குவித்தல் என்று கூறுவதும் கவனிக்கத்தக்கது.

**மறைக்கும் தலைவர்கள் வகை பல கோடியை**
**அறத்தொடு மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி** (860)

படைத்தல் முதல் உள்ள ஐந்தொழில்களில் நான்காவது மறைத்தல் தொழிலாகும் இதை நடத்தும் வல்லபம் பெற்ற மனித தேகிகளை மகேசுரர் என்பர். 17,28,000 ஆண்டுகள்வரை வாழக் கூடியவர்கள். மறைத்தல் தொழில் நடத்தும் கோடிக்கணக்கான

மகேசுரர் போன்றோரை அறவழி நின்று மறைக்கும் அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : மறைத்தல் என்பதைப் பக்குவம் வருவித்தல் என்று கூறியுள்ளதை நோக்குக.

**தெருட்டும் தலைவர்கள் சேர்பல கோடியை**
**அருட்டிறம் தெருட்டும் அருட்பெருஞ்ஜோதி** (862)

அருளல் என்பது ஐந்தாவது தொழில் இதைச்செய்வோர் சதாசிவர் எனப்படுவர். இவரது ஆயுள் காலம் 43,20,000 ஆண்டுகள். தெருட்டும் தொழில் நடத்தும் கோடிக்கணக்கான சதாசிவ அனுபவம் பெற்றோரை அருள்கூர்ந்து தெருட்டும் அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : அருளல் தொழில் விளக்கம் செய்வித்தல் என நம் பெருமானார் கூறுகின்றார்.

**ஐந்தொழில் ஆதி செய் ஐவராதிகளை**
**ஐந்தொழில் ஆதி செய் அருட்பெருஞ்ஜோதி** (864)

படைத்தல், காத்தல், துரிசு நீக்குவித்தல், பக்குவம் வருவித்தல், விளக்கம் செய்வித்தல் ஆகிய ஐந்து தொழில்களை இயற்றும் ஐவர்களைப் படைத்துக் காத்து, துரிசு நீக்குவித்து பக்குவம் வருவித்து விளக்கம் செய்விக்கும் அருட்பெருஞ்ஜோதி.

**இறந்தவர் எல்லாம் எழுந்திட உலகில்**
**அறந்தலை அளித்த அருட்பெருஞ்ஜோதி** (866)

தருமம் என்ற சொல் தோன்றாது போயிருந்தால் ஆதரவற்ற ஏழைகள் இறந்து போயிருப்பர். இறந்தவர்கள் எழுந்து வரும்படி இந்த உலகில் தருமத்தைத் தலையானதாக்கிய அருட்பெருஞ்ஜோதி.

**செத்தவர் எல்லாம் சிரித்தாங்கெழுதிறல்**
**அத்தகை காட்டிய அருட்பெருஞ்ஜோதி** (868)

எந்த உண்மையையும் அறியாது நடைப் பிணமாக வாழ்வோரே செத்தவர் எனப்படுகின்றனர். அப்படிப்பட்டவர்கள்

உண்மையைப் பிறர் மூலமாக உணர்ந்து கொள்ளும்போது பெரு மகிழ்வடைவர். பெருநிலை அடைய முயற்சி செய்வர். இந்நிலைதான் சிரித்தாங்கெழுதிறல் எனப்பட்டது. நடைப் பிணமாக வாழ்வோர் உண்மை உணர்ந்து மகிழ்வோடு நல்வாழ்வு பெறுமாறு நல் வழி காட்டிய அருட்பெருஞ்ஜோதி.

**இறந்தவர் எழுக வென்று எண்ணியாங்கெழுப்பிட**
**அறந்துணை எனக்கருள் அருட்பெருஞ்ஜோதி** (870)

இறந்தவர்களை எழ வேண்டும் என்று எண்ணிய மாத்திரத்தில் அவர்களை எழச் செய்யும் ஆற்றலை எனக்கருள் அருட்பெருஞ்ஜோதி.

குறிப்பு : இறந்தாரையெல்லாம் எழுப்புதல் வல்லேன் என்று தான் பெற்ற ஆற்றலைப் பெருமானார் விளக்கியுள்ளார்.

**செத்தவர் எழுகெனச் செப்பியாங் கெழுப்பிட**
**அத்திறல் எனக்கருள் அருட்பெருஞ்ஜோதி** (872)

செத்தவர்களை எழுக எனச் சொன்னவுடன் அக்கணமே அவர்களை எழுப்பக்கூடிய அருள் ஆற்றலை அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே எனக்கு அருள்வீராக.

(உலகியலில் மூழ்கிக் கிடக்கும் சாதாரண மக்களுக்கு ஞானத்தை அளிப்பதேயாகும்)

**சித்தெலாம் வல்ல திறல் அளித்தெனக்கே**
**அத்தன் என்றோங்கும் அருட்பெருஞ்ஜோதி** (874)

சித்துக்கள் எல்லாவற்றையும் இயற்றவல்ல ஆற்றலை எனக்களித்து என்தனக்கே இறைவன் என ஓங்கும், அருட்பெருஞ்ஜோதி..

**ஒன்றது இரண்டது ஒன்றினில் இரண்டது**
**ஒன்றினுள் ஒன்றது ஒன்றெனும் ஒன்றே** (876)

எல்லாவற்றையும் தன்னுள் கொண்டு விடுவதால் இருப்பது இறைவன் ஒன்றே. நான் நீ எனத் (துவைதமாக) இரண்டாகவும்

விளங்குவது. இரண்டிற்கும் பொதுவான விசிஉஷ்டாத்வைதப் பொருளும் அதுவே. இந்த மூன்று நிலைகளிலும் ஒன்றினுள் ஒன்றாக இருப்பதும் அந்த ஒன்று எனும் ஒரு பரம்பொருளே.

(அல்லது)

ஒன்றே என்று கூறும்படி விளங்கும் பரம்பொருளானது ஆணாக விளங்குவது. அது ஆண் பெண் என இரண்டாகவும் விளங்குவது. இரண்டும் தனித் தனியாக இல்லாமல் ஒன்றிலேயே இரண்டாக (அர்த்தநாரி போல்) விளங்குவது. அது ஒன்றினில் ஒன்றாகவே விளங்குவது. அது ஒன்று என்பதாகிய ஒரே ஒரு பரம்பொருளே.

(அல்லது)

ஒன்று = உருவமாய் விளங்குவது
அது இரண்டு = அது அருவமாய் விளங்குவது
அது ஒன்றினில் இரண்டு = அது உருவருவாய் விளங்குவது
அது ஒன்றினுள் ஒன்று = அது உருவில் உருவாய் அருவினுள்
அருவாய் விளங்குவது

ஒன்று என்று கூறும்படி விளங்கும் ஒன்றான பரம்பொருள் எல்லோர்க்கும் ஒன்றே.

**ஒன்றல இரண்டல ஒன்றினில் இரண்டல**
**ஒன்றினுள் ஒன்றல ஒன்றெனும் ஒன்றே** (878)

இறைவன் ஒன்றான ஆணல்ல. இரண்டாக விளங்கும் ஆண் பெண்ணல்ல. ஒன்றாகவே விளங்கும் ஆணும் பெண்ணுமல்ல, ஒன்றுக்குள் ஒன்றாய் இருப்பதுமல்ல. எல்லாவற்றினுக்கும் மேலாய் ஒன்றென விளங்கும் அந்த ஒன்றே இறைவன். அது இதுவெனச் சுட்டவொண்ணாது.

(அல்லது)

முன் வரியில் கூறியவாறு

ஒன்று அல = உருவம் அல்ல
இரண்டு அல = அருவமும் அல்ல
ஒன்றினில் இரண்டல = உருவருவமும் அல்ல

ஒன்றினுள் ஒன்றல = ஒன்றினுள் ஒன்றாய் இணைந்திருப்பதும் அல்ல

**ஒன்றினில் ஒன்றுள ஒன்றினில் ஒன்றில**
**ஒன்றற ஒன்றிய ஒன்றெனும் ஒன்றே** (880)

மனம் அலைபாய்தலை விட்டு ஒன்றுபட்டால் அந்த ஒன்றாகிய இறை அனுபவம் ஏற்படும். ஆதாரம் :

அறங்காதல் செய்தேனை ஆண்டு கொண்டிங்கே
அருட்பெருஞ்ஜோதியாய் ஆடும் அழகர்
உறங்காத வண்ணம் சிற்றம்பலம்பாடி
உதிக்கின்ற ஒண்மையில் துதிக்கின்றபோது
புறங்காதல் செய்வார் போல் செய்யாதே பெண்ணே
பொற்கம்பமேறினை சொர்க்கமங்கப்பால்
இறங்காதே என்கின்றார் என்னடி அம்மா
என்கை பிடிக்கின்றார் என்னடியம்மா.

(திருவருட்பா 5672)

மனம் ஒன்றுதல் ஏற்படவில்லையானால் இறை அனுபவமும் (ஏற்பட வாய்ப்பே) இல்லை.

ஜீவன் ஒன்று இறைவன் ஒன்று என்ற நிலை மாறி அந்த ஒன்று என்ற சொல் அற அத்வைத அனுபவத்தில் ஜீவனும் இறைவனும் ஒன்றே என விளங்குவதாகிய ஒன்றெனும் ஒன்றே.

**களங்கம் நீத்து உலகம் களிப்புற மெய்நெறி**
**விளங்க என்னுள்ளே விளங்கு மெய்ப்பொருளே** (882)

நம்மிடத்திலுள்ள குறைகளே நமக்குக் களங்கம். எல்லாக் குறைகளையும் தவிர்த்து உலக மக்கள் எல்லாரும் மகிழ்வுடன் வாழ உண்மை நெறி விளங்கும் பொருட்டாய் என்னுள்ளே விளங்கும் உண்மைப் பொருளே.

**மூவிரு நிலையின் முடிநடு முடிமேல்**
**ஓவற விளங்கும் ஒருமை மெய்ப் பொருளே** (884)

மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞா என்ற ஆறு அனுபவ நிலைகளின் பொதுவான முடிவிற்கு மேல் சத்தமின்றி அதாவது மகா மௌனத்தில் ஒருமை விளங்க விளங்கும் உண்மைப் பொருளே.

**எழுநிலை மிசையே இன்புருவாகி**
**வழுநிலை நீக்கி வயங்கு மெய்ப்பொருளே** (886)

ஆன்ம தரிசனம், அருள் தரிசனம், பரை தரிசனம், பரையோகம், பரையோக நீக்கம், போத ஒழிவு, இன்பப்பேறு ஆகிய ஏழு நிலைகளின் அனுபவத்திலே அன்புருவம் அருளுருவம், இன்புருவம் ஆகிய மூவுருவில் முடிபானதாகிய இன்புருவம் அடைந்து குற்றம் என்ற நிலை நீங்கி தவறுகின்ற நிலையும் நீக்கி விளங்கும் உண்மையான பொருளே.

**நவநிலை மிசையே நடுவுறு நடுவே**
**சிவ மயமாகித் திகழ்ந்த மெய்ப் பொருளே** (888)

விந்து, நாதம், பரவிந்து, பரநாதம், திக்கிராந்தம், அதிக்கிராந்தம், சம்மேளனம், சுத்தம், அதீதம் என்று சொல்லப்பட்ட ஒன்பது நிலைகளில் அதீத நிலை நடுவே அடையக் கூடியதாய், பொதுநோக்கம் உடையோர்கட்கு ஒளியாய், எங்கும் நிறைந்துள்ளதாய் எல்லாம் வல்லதுவாய் விளங்கும் உண்மைப் பொருளே.

<u>குறிப்பு</u> : பொது என்பதற்கு ஞான பூரணாகாயம் என்ற சிற்சபையும் பொருந்தும். நடுவுறு நடுவே என்பது சிற்சபையில் அடையப்படும் அனுபவமே என்பதும் சாலப் பொருந்தும்.

**ஏகாதச நிலை யாத தினடுவே**
**ஏகாதன மிசை யிருந்த மெய்ப்பொருளே** (890)

1. மயக்கம், 2. ஐயம், 3. காமம், 4. குரோதம், 5. தூல தேகப்பற்று (இகலோக இச்சை), 7. ஆணவம், 8. அழற்சி, 9. அவித்தை (அஞ்ஞானம்), 10. உலகாசார சமயாச்சார சங்கற்ப விகற்பங்கள் ஆகிய பத்தையும் கடந்து பதினோராம் நிலையாகிய பற்றற்ற நிலை எதுவோ அதன் நடுவே இருப்பதாயும் அடைதற்கரிய பெரும் பொருளின் நடுவே வீற்றிருக்கும் உண்மைப் பொருளே.

**திரையோதச நிலை சிவ வெளி நடுவே**
**வரையோ தரு சுக வாழ்க்கை மெய்ப்பொருளே** (892)

பூத நிலை, கரண நிலை, பிரகிருதி நிலை, மோகினி நிலை, அசுத்த மாயா நிலை, அசுத்த மகா மாயா நிலை, சுத்த மாயா நிலை, சுத்த மகா மாயா நிலை, சர்வ மகா மாயா நிலை, குண்டலி நிலை, பிரணவ நிலை, பரிக்கிரசு நிலை, திருவருள் நிலை ஆகிய பதின்மூன்று நிலைகளில் அதீதமாய் விளங்கும் திருவருள் நிலையாகிய சிவ வெளி நடுவே எல்லையற்ற சுக வாழ்வை அளிக்கவல்ல உண்மைப் பொருளே.

**ஈரெண்ணிலையென இயம்பும் மேல் நிலையில்**
**பூரண சுகமாய்ப் பொருந்து மெய்ப்பொருளே** (894)

ஈரெண்ணிலை ⁚ பதினாறு நிலை

சரியையில் சரியை, சரியையில் கிரியை, சரியையில் யோகம், சரியையில் ஞானம், கிரியையில் சரியை, கிரியையில் கிரியை, கிரியையில் யோகம் கிரியையில் ஞானம், யோகத்தில் சரியை, யோகத்தில் கிரியை, யோகத்தில் யோகம், யோகத்தில் ஞானம், ஞானத்தில் சரியை, ஞானத்தில் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் ஆகிய பதினாறு நிலைகட்கும் மேலான நிலையில் குறைவற்ற பூரண சுகந்தருவதாய்ப் பொருந்தி விளங்கும் உண்மைப் பொருளே.

(ஆதாரம் : நன்னாலுங் கடந்தே ஒளிர் ஞான சபாபதியே எனும் பாட்டைக் கவனிக்க)

**எல்லா நிலைகளும் இசைந்தாங்காங்கே**
**எல்லாமாகி இலங்கு மெய்ப்பொருளே** (896)

எல்லா அனுபவ நிலைகட்கும் வேறுபடாததாய் உட்பட்டதாகி அவ்வவ்வனுபவங்கள் எல்லாமாகி விளங்குகின்ற உண்மைப் பொருளே.

**மனாதிகள் பொருந்தா வானடு வானாய்**
**அனாதி உண்மையதாய் அமர்ந்த மெய்ப்பொருளே** (898)

மனம், புத்தி, சித்தம் அகங்காரம் எனும் கருவிகள் கடந்து உணர மாட்டாதாய் உள்ள ஒரு வெளி நடுவே விளங்கும் வெளியாய் ஆரம்பம் என்பதும் முடிவு என்பதும் இல்லாத உண்மை உடையதாய் விளங்கும் உண்மைப் பொருளே.

**தானொரு தானாய்த் தானே தானாய்**
**ஊன் உயிர் விளக்கும் ஒரு தனிப் பொருளே** (900)

தானே தனக்கு நிகராய்த் தான் எந்தக் கலப்புமின்றித் தூய்மையுடைய ஒன்றாய்த் துலங்குவதாய் உடம்பையும் உயிரையும் என்றும் நிலைபெறச் செய்வதாய் விளங்கும் ஈடு இணையற்ற ஒப்பற்ற பொருளே.

**அதுவினில் அதுவாய் அதுவே அதுவாய்ப்**
**பொதுவினில் நடிக்கும் பூரணப் பொருளே** (902)

அது எனக் கூறப்படும் ஜடப் பொருளிலே அதே ஜடப்பொருளாய், (அவனாய் அவளாய் மட்டுமின்றி) அது என்பது எப்பொருளோ அப்பொருளே தானாய் ஞான பூரண ஆகாயமெனும் புருவமத்தியாகிய சிற்சபையிலே ஆடுகின்ற குறைவில்லாத பூரணப்பொருளே.

**இயல்பினுள் இயல்பாய் இயல்பே இயல்பாய்**
**உயலுற விளங்கும் ஒரு தனிப் பொருளே** (904)

ஒவ்வொரு பொருளுக்கும் ஓர் இயல்பு உண்டு - உதாரணமாக நீர் குளிர்ந்தும் மேட்டிலிருந்து பள்ளத்தை நோக்கிப் பாயும் இயல்பு கொண்டது. நெருப்போ சுடும் தன்மையும் கீழிருந்து மேல் நோக்கும் இயல்பும் உடையது. இவ்வாறு ஒவ்வொரு பொருளின் இயல்பு எதுவோ அதனுள் அதன் இயல்பாய் அந்த இயல்பே தானாயும் மாறாது விளங்க வைத்த ஒப்பற்ற பொருளே.

**அருவினுள் அருவாய் அருவரு அருவாய்**
**உருவினுள் விளங்கும் ஒரு பரம்பொருளே** (906)

இயல்பு என்று முன்வரியில் கூறப்பட்டது அருவ நிலை. அருவம் என்பது உருவமற்றது. உதாரணமாக சுவை உருவமற்றது. ஆகாயம் அருவம். இவ்வாறு அருவமாக விளங்கும் பொருளினுள்ளே தானும் அருவமாயும் அந்த அருவம் ஆகிய உருவமற்ற பொருள் தானே ஆகியும் எந்த உருவத்தினுள்ளும் தான் தனித்துத் தோன்றுதலில்லாதவாறு அருவமாய் விளங்கும் ஒரு மேலான பொருளே.

**அலகிலாச் சித்தாய் அது நிலை அதுவாய்**
**உலகெலாம் விளங்கும் ஒரு தனிப் பொருளே** (908)

அளவற்ற சித்துக்கள் உடையதாய் அதன் தன்மை என்றும் மாறுபடாது அதுவாகவே இருப்பதாய் உலக முழுவதிலும் விளங்குகின்ற ஓர் ஒப்பற்ற பொருளே.

(குறிப்பு : வானிலே சூரியன் சந்திரன் முதல் பூமியில் தாவரம் முதல் மனிதன் வரை தோற்றம் - இயக்கம் - பூமியின் சுழற்சி எல்லாம் இறைவனுடைய அளவற்ற சித்துக்களின் அடையாளம்) அலகு = அளவு.

**பொருளினுள் பொருளாய்ப் பொருளது பொருளாய்**
**ஒருமையின் விளங்கும் ஒருதனிப்பொருளே** (910)

நாம் காணும் எந்தப் பொருளானாலும் அதனுள் உள்ள ஒரு பொருளாய், பொருள் என்பது எதுவோ அப்பொருளே தானாய்ப் பிரிவு அதாவது இரண்டென்பதற்ற நிலையில் விளங்கும் ஓர் இணையற்ற பொருளே.

**ஆடுறு சித்திகள் அறுபத்து நான்கெழு**
**கோடியும் விளங்கக் குலவு மெய்ப்பொருளே** (912)

சித்துக்களை வகைப்படுத்திக் கணக்கிட்டுப் பெரியோர் வரையறை செய்து பார்த்ததில் அது அறுநூற்று நாற்பத்தேழு கோடியாய் நின்றது. அவ்வளவு சித்துக்களும் விளங்க அவற்றிலே இணைந்து விளங்கும் உண்மைப் பொருளே.

**கூட்டுறு சித்திகள் கோடி பல் கோடியும்**
**ஆட்டுற விளங்கும் அரும்பெரும்பொருளே** (914)

அறுநூற்று நாற்பத்தேழு கோடிச் சித்துக்களுக்கு மேலும் அடைதற்குரிய சித்திகள் கோடிக்கணக்காக, பல கோடிக் கணக்காக செயல்பாட்டில் விளங்கும் அரிய பெரிய பொருளே.

**அறிவுறு சித்திகள் அனந்த கோடிகளும்**
**பிறிவற விளக்கும் பெருந் தனிப் பொருளே** (916)

மனம் முதலாய கரணங்கள் நீங்கி அறிவானுபவத்திலே அறிகின்ற சித்திகள் பல கோடிக் கணக்கில் இருப்பினும் என்றும் பிரிவற்று அவ்வளவும் தன்னுளே கொண்டு விளங்கும் பெரிய ஒப்பற்ற பொருளே.

**வீடுகள் எல்லாம் விதி நெறி விளங்க**
**ஆடல் செய்தருளும் அரும்பெரும் பொருளே** (918)

வீடு = மோட்சம், சொர்க்கம் = இன்பம்.

மோட்சம் என்று கூறப்படுவது தொடங்கி அனைத்து அனுபவ இன்பங்களும் அவரவர் கைக் கொண்டு ஒழுகும் நெறிமுறைக் கேற்ப அளவு செய்து அது மாறாது விளங்குமாறு ஆட்டி வைக்கும் அருளாற்றல் உடைய அரிய பெரிய பொருளே.

குறிப்பு : பயிர்ப்புறு - கரணப் பரிசுகள் பற்பல
உயிர்த்திரள் ஒன்றென உரைத்த மெய்ச் சிவமே

**பற்றுகள் எல்லாம் பதிநெறி விளங்க**
**உற்றருள் ஆடல் செய் ஒருதனிப் பொருளே** (920)

எல்லா ஆசைகளும் இறைவனை அடைவிக்கும் நெறியிலேயே நிற்குமாறு நிறுத்தி எதற்கும் மேலானதாய் விளங்கும் ஒப்பற்ற ஒரு தனிப் பொருளே நீ அருள் ஆடல் செய்வாயாக.

குறிப்பு : உலகாசைகளை அறவே நீக்கி இறைவனை அடைவிக்கும் நெறியிலே மனம் பற்ற வேண்டும்.

பற்றற்றான் பற்றினையே பற்றியிடல் வேண்டும்.

பற்றுகளெல்லாம் பற்றறவிட்டு அருளம் பலப்
பற்றே பற்றுமினோ என்றும் இறவீரே

இச்சை நின்மேலன்றி எனக்கெள்ளளவும் வேறுமொன்றில்
இச்சையிலை நின்னாணை என்னருமை ஐயாவே

**பரத்தினிற் பரமே பரத்தின் மேற்பரமே**
**பரத்தினுள் பரமே பரம் பரம் பரமே** (922)

உயர்ந்த பொருள் எதுவோ அதனில் உயர்ந்த பொருளே, அந்த உயர்ந்த பொருளுக்கு மேலான உயர்ந்த பொருளே. உயர்ந்த பொருளின் உள்ளே விளங்கும் உயர்ந்த பொருளே. மேன்மையான பொருளின் மேன்மையாய் விளங்கும் மேன்மைப் பொருளே.

இரும்பு, செம்பு, பித்தளை, ஈயம், வெள்ளி ஆகிய பொருட்கள் உள்ளன என்றால் கிடைத்த இப் பொருட்களில் மேலானது வெள்ளி. இது பரத்தினிற்பரம் இந்த வெள்ளிக்கும் மேலான பொருள் தங்கம். இது பரத்தின் மேற்பரம். அந்தத்

தங்கத்தினுள்ளேயும் விளங்குவது பரத்தினுள் பரம். ஆக மேலானதற்கும் மேலானது - அதற்கும் மேலானது - அதனுள் விளங்குவது - நடுவேயும் வெளியேயும், உள்ளேயும் எங்கும் பரம் - பரம் - பரமே.

**பரம்பெறும் பரமே பரம் தரும் பரமே**
**பரம் பதம்பரமே பரம் சிதம்பரமே** (924)

மேலான உயர்ந்த நெறியுடையோர் அடைகின்ற மேன்மையான பொருளே.
உயர்வை, மேன்மையை மட்டும் தருகின்ற உயர்ந்த பொருளே.
மேலான பதத்தை (இடத்தை) அளிக்கின்ற மேன்மையான பொருளே.
எதற்கும் மேலானதாக விளங்கும் ஆகாயமே - விண்ணே - வெளியே.

சிதம்பரம் - ஆகாயத் தலம்.

**பரம் புகழ் பரமே பரம் பகர் பரமே**
**பரம் சுக பரமே பரம் சிவ பரமே** (926)

பண்பிலும், அறிவிலும், பக்தியிலும் உயர்ந்தோர் புகழ்கின்ற மேன்மைப் பொருளே.
அந் நெறி நின்ற உயர்ந்தோர் பேசிக் களிக்கின்ற மேலான பொருளே.
பேரின்ப சுகம் அளிக்கும் பெரிய பொருளே.
மேலான பொருளே சிவமான மேன்மையாளனே.

**பரங்கொள் சிற்பரமே பரம் செய்தற்பரமே**
**தரங்கொள் பொற்பரமே தனிப் பெரும்பரமே** (928)

உயர்ந்த நெறி நின்றோர் அடைகின்ற மேலான சிற்சபைப் பொருளே.

உயர்ந்த செயலால் தானே உயர்ந்து நிற்கும் மேலான பொருளே.

உயர்ந்த தகுதியான தரம் உடையோர் அடைகின்ற பொன்னம்பல வாணனே.

ஒப்பற்ற பெரும்பதியான உயர்வுடையோனே.

**வரம் பரா பரமே வணம் பராபரமே**
**பரம் பராபரமே பதம் பராபரமே** (930)

பரம் என்பது சாத்திர ஞானம்
அபரம் என்பது அனுபவ ஞானம்

எவ்வுயிரும் அடைய வேண்டியது சாஸ்திர ஞானமும் அனுபவ ஞானமுமே ஆகும்.

இவ்விரண்டும் அழகுடையது. இவ்விரண்டு ஞானங்கள் மட்டுமே மேன்மையுடையன - உயர்ந்தன.

அடைய வேண்டிய பதத்தை அளிக்க வல்லதும் இவ்விரண்டு ஞானங்களே.

**சத்திய பதமே சத்துவ பதமே**
**நித்திய பதமே நிற் குண பதமே** (932)

என்றும் மாறாது விளங்கும் திருவடியே.(பதம் = பாதம் = திருவடி)
உண்மைப் பொருளாய் என்றும் விளங்கும் திருவடியே.
நித்தியமாய் என்றும் அழியாது விளங்கும் திருவடியே.
எந்தப் பற்றும் அற்ற குணங்கட்கப்பாற்பட்ட திருவடியே.

**தத்துவ பதமே தற்பத பதமே**
**சித்துறுபதமே சிற் சுக பதமே** (934)

பிரம்மா விஷ்ணு ருத்திரன் மகேசுரன் சதாசிவன் போன்ற தத்துவங்களாய் விளங்கும் பதம் தத்துவ பதம்.

தனக்குத் தானாய் விளங்கும் தன்னிகரற்ற பதம் தற்பத பதம்.

எல்லாச் சித்துக்களையும் நடத்துவிக்கும் பதம் சித்துக்களை உற்ற சித்துறு பதம்.

அறிவு மயமாய் விளங்கும் தூய சுகந்தரும் பதமே சிற்சுகபதம்.

**தம்பரம் பதமே தனிச் சுகம் பதமே**
**அம்பரம் பதமே அருட் பரம் பதமே** (936)

தன்னை விட உயர்ந்தது, மேலானது, வேறொன்றில்லாததாக விளங்குவதே தம்பரம் பதம்.

ஒப்பற்ற, ஈடு இணையற்ற சுகத்தைத் தருவதே தனிச் சுகம் பதம்.

அழகிய மேலான பதமே அம் பரம் பதம்.

அருளே நிறைந்த மேன்மையுடைய பதமே அருட்பரம்பதம்.

**தந்திர பதமே சந்திர பதமே**
**மந்திர பதமே மந்தண பதமே** (938)

உளவினால் மட்டுமே அறியக் கூடியது தந்திர பதம்.
வெம்மை செய்யாத குளிர்ந்த தண்ணமுதம் அளிக்கும் பதமே சந்திர பதம்.
நிறைமொழி மாந்தர் உரை கொண்ட பதமே மந்திர பதம்.
மறை பொருளாய் இரகசியமாய் உள்ள பதமே மந்தண பதம்.

குறிப்பு : மந்திரம் என்பது சிவ, சிவ, நமசிவய சரவணபவ என்பது போன்ற நிறைமொழி மாந்தர் சொல். நம் பெருமானார் தந்ததோ மகா மந்திரம்.

ஐந்தென, எட்டென, ஆறென, நான்கென முந்துறு மறை முறை மொழியும் மந்திரமே.

**நவந்தரு பதமே நடந்தரு பதமே**
**சிவந்தரு பதமே சிவ சிவ பதமே** (940)

புதியதோர் நிலையை அளிக்கின்ற பதம். (மரணமிலாப் பெரு வாழ்வு)

சிற்சபையிலும், பொற்சபையிலும், வெள்ளொளியும் பொன்னொளியுங் காட்டி ஞான சபையில் உள்ளொளியின் அசைவைத் தருகின்ற பதம்.

எங்கும் நிறைகின்ற வல்லபமும், எல்லாம் செய்ய வல்ல ஆற்றலும், அமுதத்தையும் அளிக்க வல்லதே சிவந்தரு பதம்.

சிவத்தை அளிக்கின்றதும் சிவ பதமே.

**பிரமமெய்க் கதியே பிரம மெய்ப் பதியே**
**பிரம நிர்க் குணமே பிரம சிற்குணமே** (942)

பிரமம் என்பது நாதம்:

நாத அனுபவத்தின் உண்மை அனுபவ நிலையே.
நாத அனுபவத்தில் காணும் உண்மைப் பரம் பொருளே.
நாத அனுபவத்தில் தோன்றும் நிராசையுடைய நிலையே.
நாத அனுபவத்தில் விளங்கும் நல்லறிவாம் பெருங் குணமே.

ஆதாரம்: நாதமாம் பிரமமும் (அகவல் வரி 600)

**பிரமமே பிரமப் பெரு நிலை மிசையுறும்**
**பரமமே பரம பதந்தரும் சிவமே** (944)

பிரம்மம் என்பது நாதம். பிரும்மப் பெருநிலை என்பது நாதத்தின் பெருநிலை அதாவது பரநாத நிலை. அப்பரநாத நிலை நடுவே தோன்றும் பேரொளியே பரமம் ஆகும். அப்பேரொளியின் பக்குவநிலை அமுதம் உண்ணும் சிவானுபவத்தைத் தரும். அப்படி அளிக்கின்ற சிவமே. பரநாதத்தே பேரொளி தோன்றும் என்பதற்கு ஆதாரம் :

ஈற்றறியேன் இருந்திருந்திங்கதிசயிப்பதென் நீ
என்கின்றாய் நீதான் எனைவிட்டேகுதொறும் நான் தான்
காற்றறியாத் தீபம் போல் இருந்திடும் அத்தருணத்தே
கண்ட பரிசென் புகல்வேன் அண்ட பகிரண்டம்
தோற்றறியாப் பெருஞ்ஜோதி மலை பரநாதத்தே
தோன்றியது ஆங்கதனடுவே தோன்றியது ஒன்றது தான்
மாற்றறியாப் பொன்னொளியோ அவ்வொளிக்குள்
ஆடும் வள்ளலருளொளியோ ஈததிசயிக்கும் வகையே
(திருவருட்பா 5767)

சிவ நிலையில் அமுதம் கிடைக்கும் என்பதற்கு ஆதாரம்:

நவநிலை தரும் ஓர் நல்ல தெள்ளமுதே
சிவ நிலை தனிலே திரண்ட உள்ளமுதே (அகவல் வரி 1282)

நாதம்தான் பிரமம் என்பதற்கு ஆதாரம்:

நாதமாம் பிரமமும் நாத அண்டங்களும்
ஆதரம் வகுத்த அருட்பெருஞ்ஜோதி. (அகவல் வரி 600)

**அவனோடு அவளாய் அதுவாய் அலவாய்**
**நவ மா நிலை மிசை நண்ணிய சிவமே** (946)

இறைவன் ஆணா, பெண்ணா, அதுவா அல்லது இவை ஒன்றும் அல்லாததா புறத்திலே எவ்வாறாயினும் அக அனுபவத்திலே ஒன்பதாம் அனுபவ நிலையிலே அடையப் பெறுகின்ற சிவமே.

(நவ நிலை விளக்கம் அகவல் வரி 888 காண்க)

**எம்பொருளாகி எமக்கருள் புரியும்**
**செம்பொருளாகிய சிவமே சிவமே** (948)

எங்களது அனுபவத்திற்கு உட்பட்ட எங்களது பொருளாகி நின்று எங்கட்கு அருள் புரிகின்ற செம்மையான பொருளாகிய சிவமே சிவமே.

**ஒரு நிலை இதுவே உயர்நிலை எனும் ஒரு**
**திருநிலை மேவிய சிவமே சிவமே** (950)

மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய இந்திரியங்களும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய கரணங்களும், அடங்கி அவற்றைக் கடந்து அதன்மேல் தோன்றுகின்ற காட்சியெலாங் கடந்து அதன் பிறகு காணாது கடந்து விளங்கும் ஒரு நிலை என்ற அனுபவ நிலை - இதுவே உயர்ந்த நிலை என்று உணர்கின்ற ஒரு திருநிலையில் அடைகின்ற சிவமே சிவமே.

திரு நிலை என்பது முகத்திலே உள்ள இரு கண்களுக்கும் நெற்றிக் கண்ணிற்கும் இடைப்பட்ட இடமேயாகும்.

(அகவல் வரி 28ன் விளக்கம் காண்க)

**மெய்வைத் தழியா வெறு வெளி நடுவுறு**
**தெய்வப் பதியாம் சிவமே சிவமே** (952)

தேகத்தைப் பொன்போலப் பாதுகாத்து அழியாமல் அமுதம் உண்டு நிலைக்க வைத்து கரணங்கள் கடந்த வெறு வெளி எனும் மா மாவுன நிலை தோன்றுங்கால் அதன் நடுவே தெய்வமாய்ப் பதியாய் விளங்குகின்ற சிவமே சிவமே.

உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேன் என்கிறது திருமந்திரம். சிற்சபையில் உண்கின்ற அமுதமானது இறவா நிலையில் மனிதரை வைக்கும் என்பதற்கு ஆதாரம்.

கள்ளுண்டாளெனப் புகன்றார் கனக சபை நடுவே
கண்டதுண்டு சிற்சபையில் உண்டது முண்டடி நான்
எள்ளுண்ட பல விடயத்து இறக்கும் கள் அன்றே
என்றும் இறவா நிலையில் இருத்தும் கள் உலகர்
உள்ளுண்டபோது மயக்குற்றிடும் கள் அலவே
உள்ள மயக்கனைத் தினையும் ஒழித்திடும் கள் மடவாய்
அள்ளுண்ட பிறரும் எனை அடுத்தடுத்துக் கண்டால்
அறிவு தரும் அவர்க்கும் இங்கே யானுண்ட கள்ளே
(திரவருட்பா 5725)

**புரை தவிர்த்தெனக்கே பொன் முடி சூட்டிச்**
**சிரமுற நாட்டிய சிவமே சிவமே** (954)

மனதில் எழும் ஆசைகளை வளர்த்தால், உள்ளேயே வளர்ந்து, அதை நிறைவேற்றிக் கொள்வதற்கு என்னென்ன செய்யலாம் என்ற எண்ணங்கள் வளர்ந்து கொண்டே வரும். முடிவாகப் பல தீமைகள் விளைய ஏதுவாகின்றது. எனவே அவை மனதில் ஓடிய புரை எனப்பட்டது. அகங்காரமாகிய மதமும் மோகமுமே மனதின் புரையாகும். இவற்றை நீக்கிப் பொற்சபை அனுபவத்தை எனக்களித்து என்னுடைய சிரசிற்குள்ளேயே இறைவனை அடையும்படிப் பொருந்த வைத்த சிவமே சிவமே.

மனதின் புரை மதமும் மோகமும் என்பதற்கு ஆதாரம் :-

மதம் புரை மோகமும் மற்றவும் ஆங்காங்கு
அதம் பெற அடக்கும் அருட்பெருஞ்ஜோதி
(அகவல் வரி 795)

**கல்வியும் சாகாக் கல்வியும் அழியாச்**
**செல்வமும் அளித்த சிவமே சிவமே** (956)

கல்வி என்று அடைமொழி ஏதுமின்றிக் கூறப்பட்டது உலகியல் வாழ்விற்கு ஏற்ற, தேவையான படிப்பாகும்.

சாகாத்தலை, வேகாக்கால், போகாப் புனல் என்ற மூன்று பெரும் பிரிவுகளைக் கொண்டது சாகாக் கல்வி ஆகும்.

பொருட்செல்வம் அழிந்து விடும். அருட்செல்வமோ என்றும் அழியாது.

இவையனைத்தினையும் எனக்கு அளித்த சிவமே சிவமே.

**அருளமுது எனக்கே அளித்தருள் நெறிவாய்த்**
**தெருளுற வளர்க்கும் சிவமே சிவமே** (958)

சாகாமல் வாழ வைக்கின்ற இறைவனின் அருளமுதத்தை எனக்கே அளித்து உலகியலின் சிறு நெறி செல்லவொட்டாது அருள் நெறியானது எனக்கு வாய்க்கும்படிச் செய்து உண்மை நிலை உண்மை அனுபவம் நானடைய எனை வளர்க்கின்ற சிவமே சிவமே.

அருளமுதம் சாகாமல் வாழ வைக்கும் என்பதற்கு ஆதாரம்:

சாகா அருளமுதம் தானருந்தி நான் களிக்க
நாகாதிபர் சூழ் நடராசா - ஏகா
பவனே பரனே பராபரனே எங்கள்
சிவனே கதவைத் திற

(திருவருட்பா 3834)

**சத்தெலாமாகியும் தானொரு தானாம்**
**சித்தெலாம் வல்லதோர் திருவருட் சிவமே** (960)

எல்லா உண்மைகளும் தானேயாகியும் தான் ஒரு நிகரற்ற ஒன்றாய் விளங்குவதாயும் எல்லாச் சித்துக்களும் வல்லதோர் திருவருள் நிறை சிவமே.

**எங்கே கருணை இயற்கையில் உள்ளன**
**அங்கே விளங்கிய அருட்பெருஞ்சிவமே** (962)

பசி, பிணி, தாகம், இச்சை, எளிமை, பயம், கொலை ஆகிய இவ்வேழு துன்பங்களால் ஜீவர்கள் வருந்துவார்கள் என்று அறிந்தபோதே விரைந்து சென்று அவற்றை முடிந்தவரை நீக்குவதே ஜீவகாருண்யம். ஆன்ம இயற்கைக் குணம் இந்த ஜீவகாருண்யமாகும். கருணை, தயவு, ஈரம், இரக்கம், பரிவு, பாசம் என்பன யாரிடத்தில் இயற்கையாகவே, சுபாவமாகவே விளங்குகின்றதோ அங்கே அன்னாரது உள்ளத்திலே விளங்கிய அருள் நிறைந்த உயர்ந்ததாகிய சிவமே.

**யாரே என்னினும் இரங்குகின்ருர்க்குச்**
**சீரே அளிக்கும் சிதம்பர சிவமே** (964)

துன்பப்படுவோர் யாராயினும் ஜாதி, மதம், சமயம், இனம், மொழி, முதலிய எந்த வித மாறுபாடும் கருதாது மனம் இரங்கி உதவுகின்றார்களோ அவர்கட்கு அருள்வாழ்வளிக்கும் சிதம்பர சிவமே.

**பொய்ந் நெறி அனைத்தினும் புகுத்தாது எனையருட்**
**செந்நெறி செலுத்திய சிற்சபைச் சிவமே** (966)

அழிந்து விடக்கூடிய பொய்யான உலகநெறி எதனினும் எனைச் செல்லவொட்டாது அருள் அடையக் கூடிய செம்மையான அருள்நெறியில் செலுத்திய சிற்சபையில் வாழ் சிவமே.

**கொல்லா நெறியே குருவருள் நெறி எனப்**
**பல்கால் எனக்குப் பகர்ந்த மெய்ச் சிவமே** (968)

எந்த ஜீவனையும் (தன் ஜீவன் உட்பட) உயிர்வதை செய்யாது, அதாவது எந்த ஜீவனுக்கும் எந்த விதத் தீங்கும் செய்யாமல் வாழ்கின்ற நெறியே ஒரு குருவானவர் அருள்கின்ற நெறி எனப் பலமுறை எனக்கு விளக்கிய மெய்ச் சிவமே.

**உயிரெலாம் பொதுவின் உளம்பட நோக்குக**
**செயிரெலாம் விடுகெனச் செப்பிய சிவமே** (970)

எல்லா ஜீவன்களையும் அதாவது ஈ, எறும்பு முதல் யானை வரை, ஓரறிவு முதல் ஆறறிவு வரை உள்ள அனைத்து உயிர்களையும் பாரபட்சமின்றி உற்றார், உறவினர், அயலார் என்ற பேதமுமின்றி எல்லாவற்றையும் தன்னுயிர் போலவே எண்ணி வாழ்க என்றும், எக்காரணங் கொண்டும் எந்த ஜீவன் மீதும் மனக் கிலேசம் துளியும் கொள்ள வேண்டாம் என்றும் அவ்வாறு ஏதேனும் இருந்தால் அந்த வயிரத்தை (விரோதத்தை) விட்டு விடு என்றும் போதித்த சிவமே.

**பயிர்ப்புறு கரணப் பரிசுகள் பற்பல**
**உயிர்த்திரள் ஒன்றென உரைத்த மெய்ச் சிவமே** (972)

மனிதர்கட்கு மட்டும் இறைவனால் தன் விருப்பம்போல நடந்து கொள்ள ஓர் அற்ப சுதந்தரம் அளிக்கப்பட்டுள்ளது. மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய கருவிகளைக் கொண்டு மனிதன் செயல்படுகின்றான். அவன் செயல்களில் சில மற்றவர்கட்கு நன்மை பயப்பனவாகவும் சில தீமை பயப்பனவாகவும் உள்ளன. நன்மை தரும் செயல்கள் எல்லாம் புண்ணியக் காரியங்கள் எனவும், தீமைகள் அல்லது துன்பம் விளைவிக்கும் செயல்கள் எல்லாம் பாவ காரியங்கள் எனவும் வகுத்துள்ளனர். அவரவர் ஆற்றக் கூடிய புண்ணிய பாவங்கட்கேற்பப் பலனை அனுபவிக்கும்படி இறையருள் வகுத்துள்ளது. உதாரணமாக முன் பிறவியில் பிறர் பசி கண்டு இரக்கமின்றி உணவளிக்க

மறுத்தவர்கள் இந்தப் பிறவியில் உண்ண உணவில்லாமல் பசியால் வருந்திப் பிச்சை எடுக்கிறார்கள்.

முன் ஜென்மத்தில் தான தர்மம் செய்தவர்கள் இந்தப் பிறவியில் செல்வந்தர்களாக ஆனந்தமான வாழ்க்கை வாழ்கின்றார்கள்.

உயிர்க் கூட்டம் ஒன்றானாலும் அவரவர் கரணங்களாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகியவை எவ்வாறு செயல்பட்டனவோ அவைகட்கு ஏற்ப அச் செயல்கட்குரிய பரிசாக இகலோக வாழ்க்கை அளிக்கபட்டுள்ளது என விளக்கியருளிய சிவமே.

நல்வினை தீவினைகட்கேற்ப இறைவன் ஆட்டுவிக்கின்றான் என்பதற்கு ஆதாரம்:

தீவினை நல்வினை எனும் வன் கயிற்றால்
இந்த ஜீவர்களை ஆட்டுகின்ற தேவே நாயேன்
ஏவினை நேர்கண் மடவார் மையற்பேயால்
இடருழந்தும் சலிப்பின்றி என்னே இன்னும்
நாயினை என்பாற் வருந்திக் கரண்டுகின்ற
நாய்க்கு நகை தோன்ற நின்று நயக்கின்றேன் நான்
ஆவினை விட்டு எருது கறந்திடுவான் செல்லும்
அறிவிலிக்கும் அறிவிலியேன் ஆனவாறே
(திருவருட்பா 2156)

**உயிருள் யாம் எம்முள் உயிர் இவை உணர்ந்தே**
**உயிர் நலம் பரவுக என்றுரைத்த மெய்ச் சிவமே** (974)

எல்லா ஜீவர்கட்குள்ளும் யான் இருக்கிறேன். அதே நேரத்தில் எனக்குள்ளேதான் எல்லா ஜீவராசிகளும் உள்ளன. இந்த உண்மையை உணர்ந்து பிற உயிர்கட்கு நன்மையான செயல்களையே செய்வாயாக என்று கூறிய சிவமே.

குறிப்பு : பிற உயிர்கட்கு ஏன் நன்மை செய்ய வேண்டும் என்றால் அந்த உயிரில் இறைவன் இருப்பதால்

என்கிறார். அதனால்தான் பிற உயிர்கள் பால் காட்டும் இரக்கமே தெய்வத்திற்கு ஆற்றும் தொண்டாகிறது. எனவே ஜீவகாருண்யச் செயல்கள் அனைத்தும் தெய்வ வழிபாடாக இறை தொண்டாக அமைகிறது.

**இயல் அருள் ஒளி ஓர் ஏகதேசத்தினாம்**
**உயிரொளி காண்க என்றுரைத்த மெய்ச் சிவமே** (976)

முன் வரியில் உயிரில் இறைவன் இருக்கின்றான் என்றவுடன் அந்த உயிரைக் காண முடியுமா என்ற வினா எழுந்தது போலும் அதற்கு இங்கே விடை தரப்படுகின்றது.

உயிர் ஒளி வடிவமானது. இறைவனின் அருள் ஒளியானது ஓர் அணுவளவு நாம் கிடைக்கப் பெற்றோமேயானால் நம்மால் உயிரொளியை அவ்வருள் ஒளியைக் கொண்டு காண முடியும் என்று அருளிய மெய்ச் சிவமே.

குறிப்பு : உரைநடைப் பகுதியில் வள்ளலார் கூறியுள்ளது வருமாறு

"நான் ஆன்மா - சிற்றணு வடிவினன் -
கோடி சூரியப் பிரகாசம் உடையது -
இருப்பிடம் லலாடஸ்தானம் - கால் பங்கு
பொன்மை முக்கால் பங்கு வெண்மை கலந்த நிறம்."

உயிரொளி கண்டவர் நம் திருவருட் பிரகாசர் ஆவார்.

**அருளலாது அணுவும் அசைந்திடாததனால்**
**அருள் நலம் பரவுக என்றறைந்த மெய்ச் சிவமே** (978)

அருள் துணை இல்லாது ஓர் அணுவைக்கூட அசைக்க இயலாது. இந்நிலையை உணர்ந்து அருளை அடைவதற்கு என்னென்ன நன்மையான காரியங்களை ஆற்ற இயலுமோ அவற்றை அறிந்து, அச் செயல்களை மட்டுமே செய்து, அருள் அடைவாயாக என்று அருளிய உண்மைச் சிவமே.

**அருளூறின் எல்லாம் ஆகும் ஈதுண்மை**
**அருளூற முயலுக என்று அருளிய சிவமே** (980)

இறையருள் பெற்றோர்க்கு ஆகாத காரியம் ஒன்றில்லை. இறையருள் கிட்டுமாயின் நினைத்த அத்தனை காரியங்களும் கை கூடும். இது சத்தியமான வார்த்தை. இதனை அறிந்து அருள் பெற முயற்சி செய்வாயாக என்று அருளிய சிவமே.

குறிப்பு : எல்லாம் செயல்கூடும் என் ஆணை
அம்பலத்தே எல்லாம் வல்லான்றாளையேத்து

நன்னாலுங் கடந்தே ஒளிர் ஞான சபாபதியே
பொன்னாருஞ் சபையாய் அருட்பூரணபுண்ணியனே
என்னாலாவ தொன்றும் உனக்கில்லையெனினும் எந்தாய்
உன்னால் வாழுகின்றேன் எனக்கு உண்மை உரைத்தருளே

(திருவருட்பா 4262)

**அருள்நெறி ஒன்றே தெருள் நெறி மற்றெலாம்**
**இருள் நெறி என எனக்கியம்பிய சிவமே.** (982)

நெறி என்பது மனிதர்கள் கடைப்பிடிக்க வேண்டிய கொள்கைகளும் ஒழுக்கங்களுமாம். நெறி பலவாக இருந்தாலும் அருளைப் பெற்றுத்தரக் கூடிய நெறி எதுவோ அதுவே உண்மையான நெறியாகும். மற்ற நெறிகளெல்லாம் இருள் எனப்படும் அறியாமையிலே கொண்டு சேர்க்கும் என்று எனக்குக் கூறிய சிவமே.

**அருள் பெறில் துரும்புமோர் ஐந்தொழில் புரியும்**
**தெருளிது எனவே செப்பிய சிவமே** (984)

இறை அருளை ஒரு துரும்பு பெற்றுவிடுமேயானால் படைத்தல் காத்தல், துரிசு நீக்குவித்தல், பக்குவம் வருவித்தல், விளக்கம் செய்வித்தல் ஆகிய ஐந்து தொழில்களையும் அந்தத்

துரும்பினால் செய்ய முடியும் என்பதே உண்மை எனக் கூறிய சிவமே.

**அருளறிவு ஒன்றே அறிவு மற்றெலாம்**
**மருளறிவு என்றே வகுத்த மெய்ச்சிவமே** (986)

அறிவு என்றால் இறை அருளை அறியக் கூடியதும் அறிந்து அதனைப் பெறக் கூடியது மட்டுமே. மற்ற அறிவெல்லாம் பொய்யான ஒன்றை உண்மையெனக் காட்டும் மருளறிவு என்றே வகுத்த உண்மைச் சிவமே.

<u>ஆதாரம்</u> : சாகாத கல்வியே கல்வி., ஒன்றே சிவம் தான் என அறிந்த அறிவே தருமறிவு

**அருட்சுகம் ஒன்றே அரும் பெறல் பெருஞ்சுகம்**
**மருட்சுகம் பிற என வகுத்த மெய்ச் சிவமே** (988)

இறையருளைப் பெறுவது பிற உயிர்கட்கு உறும் துன்பங்களைப் போக்குவதற்கே ஆகும். அவ்வாறு துன்பங்கள் நீங்கிய ஜீவர்கள் ஆனந்தம் அடைகின்ற போது அதனைக் கண்டு ஆனந்திப்பதே உண்மையான சுகமாகும் - இன்பமாகும். இந்தச் சுகம் ஒன்றே அரும்பாடுபட்டுப் பெற்ற பெருஞ்சுகமாகும்.

<u>ஆதாரம்</u> :

உலகினில் உயிர்கட்குறும் இடையூறெலாம்
விலக நீயடைந்து விலக்குக மகிழ்க
சுத்த சன்மார்க்க சுக நிலை பெறுக
உத்தமனாகுக ஓங்குக என்றனை.

நாம் எண்ணுகின்ற மற்ற சுகங்கள் எல்லாம் பொய்யான ஒன்றை மெய்யாக எண்ணுகின்ற மருட்சுகம் என உறுதியாக வகுத்த உண்மைச் சிவமே.

**அருட்பேர் அதுவே அரும் பெறற் பெரும்பேர்**
**இருட்பேறறுக்கும் என்று இயம்பிய சிவமே** (990)

நாம் அடைய வேண்டிய பெரும் பேறு அருள் ஒன்றே. அதுவே எளிதில் அடைய முடியாத, பெறுதற்கு அரிய பெரும் பேறு. அது ஒன்றுதான் அறியாமை என்ற இருளில் சேரவிடாது தடுக்கும் என்று கூறிய சிவமே.

துரியமேல் பரவெளியிலே சுகநடம்புரியும்
பெரியதோர் அருட்பெருஞ்ஜோதியைப் பெறுதலே எவைக்கும்
அரிய பேறு மற்றவை யெலாம் எளியவே அறிமின்
உரிய இம்மொழி மறை மொழி சத்தியம் உலகீர்
(திருவருட்பா 5548)

**அருள் தனி வல்லபம் அதுவே எலாம் செய்**
**பொருள் தனிச் சித்தெனப் புகன்ற மெய்ச் சிவமே.**
(992)

இறைவன் அருள் ஈடு இணையற்ற ஆற்றல் கொண்டது ஆகும். அந்த அருளால் ஆகாத காரியம் ஒன்றில்லை. அதனைக் கொண்டு எதனையும் புரிய முடியும். சித்துக்களிலே ஒப்பற்ற சித்து இந்த அருளைக் கொண்டு ஆக்கக் கூடியதுதான் என்று கூறிய உண்மைச் சிவமே.

**அருளறியார் தமையறியார் எம்மையும்**
**பொருளறியார் எனப் புகன்ற மெய்ச் சிவமே** (994)

ஆன்மீகத் துறைக்கு வராது உலகியலிலேயே மூழ்கிக் கண்டதே காட்சி கொண்டதே கோலமெனவும் அருள் என்றால் இன்னது என்றே அறியாது வாழ்ந்து கொண்டிருப்போர், தம்மையும் யார் என்று அறிந்துகொள்ளமாட்டார்கள், எம்மையும் இறைவன் என்றும் தாமடைய வேண்டிய பொருள்யாமே என்றும் அறிந்து கொள்ள மாட்டார்கள் என்று கூறிய உண்மைச் சிவமே.

**அருள் நிலை ஒன்றே அனைத்தும் பெறு நிலை**
**பொருள் நிலை காண்கெனப் புகன்றமெய்ச் சிவமே**
(996)

அருள் நிலை எதுவோ அது ஒன்றுதான் அனைத்தையும் பெற்றுத் தரக் கூடியது. அருள் நிலை பெற்றுவிட்டால் அனைத்தினையும் பெற்றதாகும். சிவமாகிய பொருள் நிலையும் அந்த அருள் நிலையே. அருள் நிலையிலேயே சிவமாகிய பொருள் நிலை காண்க எனக் கூறிய உண்மைச் சிவமே.

சிவமே பொருளென்று தேற்றி என்னைச்
சிவ வெளிக் கேறும் சிகரத்திலேற்றிச்
சிவமாக்கிக் கொண்டது பாரீர் - திருச்
சிற்றம்பலத்தே திரு நட ஜோதி
(திருவருட்பா 4586)

சிவமே பொருள் என்று அறிவால் அறிந்தேன்
(திருவருட்பா 4958)

**அருள் வடிவதுவே அழியாத் தனிவடிவு**
**அருள் பெற முயலுக என்றருளிய சிவமே** (998)

இந்தத் தூலதேகமானது நாம் கொள்ளும் ஒழுக்கத்தினாலும், பக்தியினாலும், தவத்தினாலும் முத்தேக சித்தி பெறக் கூடும். சாகாக் கலானுபவ சொரூப சித்தித் தேகங்கள் சுத்த தேகம், பிரணவ தேகம், ஞான தேகம் என்பார். சுத்த தேகம் வந்துவிட்டாலே தேகத்திற்கு அழிவில்லை. இம் முத்தேக சித்தியை அருள் உருவம், அன்புருவம், இன்புருவம் என்றும் கூறுவார். அருள் உருவம் என்பது சுத்த தேகம். இந்த அருள் வடிவமானது என்றும் எதனாலும் அழிக்க முடியாத ஒப்பற்ற வடிவமாகும். எனவே அத் தேகத்தை அடைவதற்குரிய இறையருளைப் பெற முயற்சி செய்வாயாக என்று அருளிய சிவமே.

**அருளே நம் இயல் அருளே நம் உரு**
**அருளே நம் வடிவாம் என்ற சிவமே** (1000)

இரங்கி அருள் தருதலே எம் இயல்பு - அருளே நம் தோற்றம். அருளே நம் வடிவம் என்று கூறிய சிவமே.

குறிப்பு : சிவம் என்ற சொல்லுக்கு உரை நடையிலே உள்ள பொருள் எதுவாயினும் இந்த அகவலிலே நம் திருவருட்பிரகாச வள்ளலார் தரும் பொருள் சிவமே அருள் என்பதாம். என் இயல்பு - என் உரு - என் வடிவம். எல்லாம் அருளே என்று சிவமே கூறியதாம். எனவே சிவம் என்பது அருளே - அருள் என்பது சிவமே.

**அருளே நம் அடி அருளே நம் முடி**
**அருளே நம் நடுவாம் என்ற சிவமே** (1002)

தன்னுடைய திருப்பாதங்களாக உள்ளது அருளே -

ஒரு பொருளை அடி, நடு, முடி என்ற மூன்றாகப் பிரித்தால் அடியும் அருளே - நடுவும் அருளே - முடியும் அருளே. ஆக சிவம் என்பது அருள் - அருள், அருளே எனக் கூறிய சிவமே.

**அருளே நம் அறிவு அருளே நம் மனம்**
**அருளே நம் குணமாம் என்ற சிவமே** (1004)

அகத்திலே அறிவாய் இருப்பதும் மனமாய் இருப்பதும், நம்முடைய குணமும் அருளே என்று கூறிய சிவமே.

**அருளே நம் பதி அருளே நம் பதம்**
**அருளே நம் இடமாம் என்ற சிவமே** (1006)

நாம் இருக்கும் ஊர் - அருள் நாம் அளிக்கும் கதி - அருள். நம்மிடத்தில் உள்ளதும் அருளே என்று கூறிய சிவமே.

**அருளே நம் துணை அருளே நம் தொழில்**
**அருளே நம் விருப்பாம் என்ற சிவமே** (1008)

நமக்குத் துணையாய் இருப்பது அருள். நம்முடைய தொழிலும் அருளுதலே. நம்முடைய விருப்பம் என்பதும் அருளே என்று கூறிய சிவமே.

**அருளே நம் பொருள் அருளே நம் ஒளி**
**அருளே நாம் அறிவாய் என்ற சிவமே** (1010)

நம்மிடம் உள்ள பொருள் அருள். நம்முடைய புகழ்ப் பிரகாசம் அருள். அருளே நாம் என்று நீ தெரிந்து கொள்வாயாக என்று கூறிய சிவமே.

**அருளே நம் குலம் அருளே நம் இனம்**
**அருளே நாம் அறிவாய் என்ற சிவமே** (1012)

நம்முடைய பரம்பரையாகிய குலம் அருளே - நம்முடைய இனம் அருள். அருளே நாம் அறிந்து கொள்வாயாக என்று கூறிய சிவமே.

**அருளே நம் சுகம் அருளே நம் பெயர்**
**அருளே நாம் அறிவாய் என்ற சிவமே** (1014)

நாம் பெறும் இன்பம், சுகம் அருள். நம்முடைய பெயர் அருள். நாம் அருளே என்று அறிந்துகொள்வாயாக என்ற சிவமே.

**அருள் ஒளி அடைந்தனை அருளமுதுண்டனை**
**அருள் மதி வாழ்க என்றருளிய சிவமே.** (1016)

பரநாத நிலை அனுபவத்தில் பேரொளியாகிய அருள் ஒளியினை அடைந்துவிட்டாய், சிற்சபையிலே சிறப்புடையதான மதி

மண்டலத்த முதையும் உண்டாய். உன்னுடைய மதியிலும் அருள் நிறைந்துவிட்டது. எனவே நீடு வாழ்வாயாக என்று இயம்பிய சிவமே.

**அருள் நிலை பெற்றனை அருள் வடிவுற்றனை**
**அருள் அரசு இயற்றுக என்று அருளிய சிவமே**(1018)

அருள் நிலையைப் பெற்றுவிட்டாய். உன் பூத வடிவமும் அருள் வடிவம் ஆகப் பெற்றாய். அருள் அரசாட்சி செய்வாயாக என்று கூறிய சிவமே.

**உள்ளகத் தமர்ந்து எனது யிரினிற் கலந்தருள்**
**வள்ளல் சிற்றம்பலம் வளர் சிவபதியே** (1020)

எது வேண்டினாலும் இல்லை என்னாது அருள்கின்ற வள்ளலாக எனது சிற்றம்பலத்தில் இடங்கொண்டு வளர்ந்து எனது உயிரில் கலந்து நின்று வளர்கின்ற சிவபதியே.

**நிகரிலா இன்ப நிலை நடு வைத்தெனைத்**
**தகவொடு காக்கும் தனிச் சிவபதியே** (1022)

ஈடோ இணையோ கூறமுடியாத ஆனந்த நிலையில் எனை வைத்து எனக்குத் தந்தையாகத் தாயாக எல்லாமாக இருந்து என்னைக் காப்பாற்றுகின்ற ஒப்பற்ற சிவபதியே.

**சுத்த சன்மார்க்க சுக நிலை தனில் எனைச்**
**சத்தியன் ஆக்கிய தனிச் சிவபதியே** (1024)

இறைவன் அருள் பெற்று உலகத்திலே ஜீவர்கள் படக் கூடிய துன்பங்கள் அனைத்தினையும் நீக்குவது தான் உண்மையான ஜீவகாருண்யச் செயலாகும். அந்த ஜீவர்கள் துன்பம் நீங்கி மகிழ்வதோடமையும். துன்பம் நீங்கிய ஜீவர்கள் துன்பம் நீங்கி இன்பமடைவதைப் பார்த்துத் தானும் ஆனந்தமடைவதே சுத்த சன்மார்க்க சுக நிலை. இப்படிப்பட்ட

சுக நிலையிலே என்னை என்றும் நித்திய வாழ்வு பெற்றவனாக மாற்றிய ஒப்பற்ற சிவபதியே.

<u>சுத்த சன்மார்க்க சுக நிலை</u>:

உலகினில் உயிர்களுக்கு உறுமிடையூறெலாம்
விலக, நீ அடைந்து விலக்குக மகிழ்க
சுத்த சன்மார்க்க சுகநிலை பெறுக
உத்தமனாகுக ஓங்குக என்றனை (அகவல் 1592)

**ஐவரும் காண்டற்கரும் பெரும் பொருளென்**
**கைவரப் புரிந்த கதி சிவபதியே** (1026)

பிரும்மா, விஷ்ணு, ருத்ரன், மகேசுரன், சதாசிவன் ஆகிய ஐவருமே காணமுடியாத அரிய பெரிய பொருளை (சிவத்தை) நான் அடையும்படிச் செய்த சிவபதியே.

**துன்பம் தொலைத்து அருட் ஜோதியால் நிறைந்த**
**இன்பம் எனக்கருள் எழிற்சிவ பதியே** (1028)

பிறவியாகிய துன்பத்தைத் தொலைத்து அருள் ஒளி கொண்டு குறைவிலாத ஆனந்தத்தை அழகான சிவபதியே எனக்கருள் புரிவாயாக,

**சித்தமும் வாக்கும் செல்லாப் பெருநிலை**
**ஒத்துற வேற்றிய ஒரு சிவபதியே** (1030)

கரணங்களின் சிந்தனைக்கும் சொல்லுக்கும் எட்டாத ஒரு பெரு நிலை அனுபவத்தில் என்னுடன் இணைந்து நான் அனுபவிக்கும்படி அம் மேனிலைக்கு ஏற்றிய ஒப்பற்ற சிவபதியே.

ஒத்த அனுபவம் எது?

தத்துவ மனைத்தும் தனித்தனி கடந்தேம்
தத்துவா தீத மேனிலையில்
சித்தியல் முழுதும் தெரிந்தனம் அவைமேல்
சிவநிலை தெரிந்திடச் சென்றேம்

ஒத்த அந்நிலைக்கண் யாமும் எம் உணர்வும்
ஒருங்குறக் கரைந்து போயினம் என்று
அத்தகை உணர்ந்தோர் வழுத்த நின்றோங்கும்
அருட்பெருஞ்ஜோதி என்னரசே

(திருவருட்பா 4623)

**கையறவு அனைத்தும் கடிந்து எனைத் தேற்றி**
**வையமேல் வைத்த மா சிவபதியே** (1032)

மனதிலே தோன்றும் கசப்பான எண்ணங்கள், அருவருப்புகள், ஆசாபாசங்கள் முதலிய அனைத்தினையும் போக்கி என்னைத் தகுதியுடையவனாக்கி இவ்வுலகில் உயர்ந்த நிலையில் வாழும்படி வைத்த உயர்ந்த சிவ பதியே.

**இன்புறச் சிறியேன் எண்ணுதோறு எண்ணுதோறும்**
**அன்பொடு என் கண்ணுறும் அருட்சிவ பதியே**(1034)

சிறியேனாகிய நான் நினைத்த போது நினைத்த போதெல்லாம் ஆனந்தமடையும்படி என் மீது மிக்க அன்புகொண்டு என்னை வந்தடைகின்ற அருள் நிறைந்த சிவ பதியே.

**பிழையெலாம் பொறுத்தெனுள் பிறங்கிய கருணை**
**மழையெலாம் பொழிந்து வளர் சிவ பதியே** (1036)

நான் செய்த குற்றங்கள் அனைத்தினையும் பொறுத்து என்னுள்ளே விளங்குமாறு கருணையை மழையெனப் பொழிந்து வளர்கின்ற சிவ பதியே.

**உளத்தினும் கண்ணினும் உயிரினும் எனது**
**குளத்தினும் நிரம்பிய குரு சிவ பதியே** (1038)

என் உள்ளத்திலே நிறைந்து விளங்குகின்றாய். நான் பார்க்கும் பார்வையிலெல்லாம் நீயே தோன்றும்படி என் கண்களில் நிறைந்துவிட்டாய். என் உயிரிலும் இருப்பவன் நீயே. என்னுடைய ஞானத்தின் இருப்பிடமாகிய நெற்றியிலும் நிரம்பி என்னுடைய குருவாக விளங்கும் சிவ பதியே,

**பரமுடன் அபரம் பகர் நிலை இவை எனத்**
**திரமுற அருளிய திருவருட் குருவே** (1040)

சாஸ்திர ஞானம், அனுபவ ஞானம் ஆகிய இரண்டும் கூறுகின்ற நிலை இவைதான் என அவற்றை நான் அறிந்து அடையும்படி எனக்கு அறிவித்து அருளிய திருவருள் குருவே.

பரம் . சாஸ்திர ஞானம்
அபரம் . அனுபவ ஞானம்

**மதிநிலை, இரவியின் வளர்நிலை அனலின்**
**திதி நிலை அனைத்தும் தெரித்த சற்குருவே**(1042)

இடது நாசியில் வரும் சுவாசத்தைச் சந்திர கலை என்றும், வலது நாசியில் வரும் சுவாசத்தைச் சூரிய கலை என்றும் கூறுவார்கள். இடது நாசியில் மட்டுமே சுவாசம் நடந்தால் சக்தி அதிகம் விரயமாவதால் ஆயுள் குறையும் என்றும் வலது நாசியில் நடந்தால் ஆயுள் விருத்தியாகும் என்றும் விதித்திருக்கிறது.

சந்திர கலையையும், ஆயுள் வளரும் சூரிய கலையையும், நம் உடம்பில் தோன்றும் தவக்கனலைச் செலவழிக்காமல் எவ்வாறு காப்பாற்றிக் கொள்வது என்றும் எனக்கு முழுமையாக அறிவித்த சற்குருவே.

சிருட்டி - படைத்தல்
திதி - காத்தல்

சங்காரம் - அழித்தல்
திதி நிலை - காத்தல்

**கண நிலை அவற்றின் கருநிலை அனைத்தும்**
**குணமுறத் தெரித்துட் குலவு சற்குருவே** (1044)

மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய இந்திரியங்கள், மனம், புத்தி, சித்தம், அகங்காரம், உள்ளம் ஆகிய கரணங்கள் இவ்விரண்டும் இந்திரியக் கரணத் தத்துவங்களின் கூட்டமாகும், அவைகளின் மையமான உயிர் நிலையையும், இவைகளின் தொடர்பான மற்ற எல்லாவற்றயையும் அறிவித்து நல்ல குணங்கள் எல்லாம் நான் அடையுமாறு செய்தாய். நல்ல குணங்களை நான் அடைந்ததால் மட்டுமே, இந்திரிய கரணங்களின் மைய நிலையை எனக்குத் தெரிவித்து, என்னுடன் மகிழ்ந்து உறவாடும் என்னுடைய உண்மையான குருவே.

**பதிநிலை, பசுநிலை, பாசநிலை எலாம்**
**மதியுறத் தெரித்துள் வயங்கு சற்குருவே** (1046)

பதி, பசு, பாசம் என்று சொல்லப்படும் இறைநிலை, ஜீவன் நிலை, ஜீவன் அடைகின்ற பந்த பாச நிலை ஆகிய மூன்றையும் என் புத்தியிலே நன்கு பதியும்படித் தெரிவித்து என் உள்ளே விளங்குகின்ற உண்மையான குருவே.

**பிரம ரகசியம் பேசி என்னுளத்தே**
**தரமுற விளங்கும் சாந்த சற்குருவே** (1048)

யாரும் அறியாத பிரம ரகசியத்தை எனக்குத் தெரிவித்து என் உள்ளத்திலே நான் வளர்ந்து பக்குவ நிலை அடையுமாறு விளங்குகின்ற சாந்த நிறைவான சற்குருவே.

பிரமம் என்பது நாதம்: ஆதாரம்:

நாதமாம் பிரமமும் நாத அண்டங்களும்
ஆதரம் வகுத்த அருட்பெருஞ்ஜோதி. (அகவல் வரி 600)

நாத அனுபவம், தவத்தை மேற்கொண்டோர்க்கு ஒரு முக்கியமான அனுபவமாகும்.

**பரம ரகசியம் பகர்ந்தெனதுளத்தே**
**வரமுற வளர்த்து வயங்கு சற்குருவே** (1050)

பிறர் அறியக்கூடாத ஒன்றே பரம ரகசியமாகும்.

பிரும்மமாகிய நாதத்தின் பெரு நிலை அனுபவமாகிய பரநாத நிலையின்கண் தோன்றுவதே பரமமாகிய பேரொளி. இப்பேரொளியை எவ்வாறு அறிவது? பேரொளியைக் காணும் பரம ரகசியத்தை எனக்கு அறிவித்து சாகா வரம் நான் அடைய என்னை வளர்த்து என் உள்ளத்தினுள்ளே வீற்றிருக்கின்ற சற்குருவே.

**சிவ ரகசியமெலாம் தெரிவித்து எனக்கே**
**நவ நிலை காட்டிய ஞான சற்குருவே** (1052)

பேரொளியைக் கண்ட நிலையில் அமுதம் ஊற்றெடுக்கும். அமுதம் ஊற்றெடுக்கும் நிலை சிவ நிலையாகும். எந்தச் சாதனையை எப்படியிருந்து எந்த அளவிற்கு ஆற்றினால் அமுதம் பெறலாமோ அந்த ரகசியத்தை எனக்கு அறிவித்து புதியதொரு அனுபவ நிலையை (மரணமிலாப் பெருவாழ்வு) அறிவித்த ஞானம் நிறை சற்குருவே.

ஆதாரம் :

பிரமமே பிரமப் பெருநிலை மிசையுறும்
பரமமே பரம பதந்தரும் சிவமே (அகவல் வரி 944)

நவநிலை தரும் ஓர் நல்ல தெள் அமுதே
சிவநிலை தனிலே திரண்ட உள்ளமுதே (அகவல் வரி 1282)

**சத்தியல் அனைத்தும் சித்தியல் முழுதும்**
**அத்தகை தெரித்த அருட்சிவ குருவே** (1054)

சக்திகளாகிய ஆற்றல் எத்தனை வகையுண்டோ அவை அனைத்தினையும், சித்தாடல் வகை எத்தனையுண்டோ அவை அனைத்தினையும் அறிவித்த அருள் நிறை சிவகுருவே.

**அறிபவை எல்லாம் அறிவித்து என்னுளே**
**பிறிவற விளங்கும் பெரிய சற்குருவே** (1056)

நான் அறிந்து கொள்ளவேண்டிய அனைத்தினையும் (குறிப்பாகத் தவம் செய்ய வேண்டிய முறை) எனக்குத் தெரிவித்து பிரிவென்பதில்லாது என்னுளே வீற்றிருக்கும் பெரிய சற்குருவே.

குறிப்பு : பிறி - பிரி - எதுகை மாற்றம்.

**கேட்பவை யெல்லாம் கேட்பித் தெனுள்ளே**
**வேட்கையின் விளங்கும் விமல சற்குருவே** (1058)

முன்வரியில் தவம் செய்ய வேண்டிய முறை அறிந்ததாகச் சொல்லப்பட்டது. சாஸ்திர ஞானம் முதலில்- அனுபவஞானம்பின். அகவலில் 1039 வரி தொடங்கி 1058 வரை சாஸ்திர ஞானம்.

இந்த வரி தொடங்கி வருவது அனுபவ ஞானம். முதல் அனுபவம் நாதம். அது இங்கு எடுத்துக் காட்டப்படுகிறது.

நான் எதைக் கேட்க வேண்டுமோ (நாத அனுபவம்) அதனை நான் கேட்குமாறு செய்து என் உள்ளே பொங்கி எழும் தாபத்தின் விளைவான மலம் நீங்கிய சற்குருவே.

நாதத்தின் பின் தோன்றக் கூடிய காட்சி, அமுதம், சாகா நிலை போன்ற அனுபவங்கள் வரிசையாகக் கூறப்பட்டுள்ளன.

<u>அனுபவ வரிசை</u>:

சுற்றது மற்றவ் வழி மா சூதது என்றெண்ணாத்
தொண்டரெலாம் கற்கின்றார் பண்டு மின்றுங்காணார்.
எற்ற தும்பு மணி மன்றிலின்ப நடம்புரியும்
என்னுடைய துரையே நின்னருளால் நான்
கற்றது நின்னிடத்தே பின் கேட்டது நின்னிடத்தே
கண்டது நின்னிடத்தே உட்கொண்டது நின்னிடத்தே
பெற்றது நின்னிடத்தே இன்புற்றது நின்னிடத்தே
பெரியதவம் புரிந்தேன் என் பெற்றி அதிசயமே.

| | | |
|---|---|---|
| கற்றது | - | தவம் செய்கின்ற முறை |
| கேட்டது | - | நாதம் |
| கண்டது | - | காட்சி |
| உண்டது | - | அமுதம் |
| பெற்றது | - | மரணமிலாப் பெருவாழ்வு |
| இன்புற்றது | - | பேரின்பம் |

**காண்பவை எல்லாம் காட்டுவித்தெனக்கே**
**மாண்பதம் அளித்து வயங்குசற்குருவே** (1060)

காண்பவை என்பது ஆன்மானுபவத்தில் அகத்தே தோன்றுகின்ற காணாக் காட்சியைக் குறிப்பதாகும். காட்சி என்பது பரநாத நிலை அனுபவத்தில் சிற்சபையில் தோன்றும் பேரொளி. பின்னர் பொற்சபைக் காட்சியாகிய வெள்ளொளியின் நடுவே தோன்றும் பொன்னொளி. முடிவாக அப்பொன்னொளிக்குள் ஆடுகின்ற செவ்வொளி.

நான் காணவேண்டிய காட்சிகளையெல்லாம் எனக்குக் காட்டுவித்துச் சிறப்பான பதத்தை எனக்கு அளித்து விளங்குகின்ற சற்குருவே.

<u>ஆதாரம்</u> :

ஈற்றறியேன் இருந்திருந்திங்கதிசயிப்ப தென் நீ
என்கின்றாய் நீ எனை விட்டேகுதொறும் நான்தான்
காற்றறியாத் தீபம் போல் இருந்திடும் அத்தருணம்
கண்டபரி சென்புகல்வேன் அண்டபகிரண்டம்
தோற்றறியாப் பெருஞ்ஜோதி மலை பரநாதத்தே
தோன்றியது ஆங்கதனடுவே தோன்றியதொன்று அதுதான்
மாற்றறியாப் பொன்னொளியோ அவ்வொளிக்குள்ளாடும்
வள்ளலருளொளியோ ஈததிசயிக்கும் வகையே
(திருவருட்பா 5767)

**செய்பவை எல்லாம் செய்வித்து எனக்கே**
**உய்பவை யளித்தெனுள் ஓங்கு சற்குருவே** (1062)

நான் செய்ய வேண்டிய செயல்கள் எவையோ அவற்றை நான் என் சுதந்தரமற்றுத் தங்களின் பரிபூரண சுதந்தரத்தால் செய்யுமாறு செய்வித்து எனக்கே, நான் மேலோங்கி வாழத் தேவையானவற்றை அளித்து என்னுள்ளே ஓங்குகின்ற சற்குருவே.

**உண்பவை எல்லாம் உண்ணுவித் தென்னுள்**
**பண்பினில் விளங்கும் பரம சற்குருவே** (1064)

ஆன்மானுபவத்தில் நான் உண்ண வேண்டியவை எவையோ பஞ்சாமுதம், தெள்ளமுதம் உட்பட அனைத்தினையும் என்னை உண்ணவைத்து நான் கொண்ட குணப்பாங்கை அறிந்து அதனில் விளங்கும் மிக மிக மேலான சற்குருவே.
(ஆதாரம்)

**அம்மையைக் கண்டேன் அவளருள் கொண்டேன்**
அமுதமுமுண்டேனடி - அம்மா
அமுதமுமுண்டேனடி
(திருவருட்பா 4944)

கள்ளுண்டாளெனப்புகன்றார், கனகசபை நடுவே
கண்டதுண்டு சிற்சபையிலுண்டதுமுண்டடி நான்
எள்ளுண்ட பலவிடயத்திறக்கும் கள் அன்றே
என்றும் இறவா நிலையில் இருத்தும் கள் உலகர்
உள்ளுண்ட போது மயக்குற்றிடும் கள் அலவே
உள்ள மயக்கனைத்தினையும் ஒழித்திடும்கள் மடவாய்
அள்ளுண்ட பிறரும் எனை அடுத்தடுத்துக் கண்டால்
அறிவு தரும் அவர்க்கும் இங்கே யானுண்ட கள்ளே

(திருவருட்பா 5725)

**சாகாக் கல்வியின் தரமெலாம் கற்பித்து**
**ஏகாக் கரப்பொருள் ஈந்த சற்குருவே** (1066)

சாகாத்தலை, வேகாக்கால், போகாப்புனல் என்ற மூன்று பாகங்களையுடைய சாகாக் கல்வியையும் அதனுடைய உயர்வையும் எலாம் எனக்குக் கற்பித்து (அகவல் வரிகள் 1039 முதல் 1064 வரை) என்னைவிட்டு என்றும் பிரியாத, அகலாத பொருளை (அருளை) எனக்கு அளித்த சற்குருவே

<u>குறிப்பு</u> : <u>சா</u> காத்தலை, <u>வே</u> காக்கால்
<u>போ</u> காப்புனல்

இந்த மூன்று சொற்களில் உள்ள முதலெழுத்தை மட்டும் சேர்த்தால் சா வே போ என்று வரும்.

**சத்தியமாம் சிவ சித்திகள் அனைத்தையும்**
**மெய்த்தகை அளித்தெனுள் விளங்கு சற்குருவே**
(1068)

என்றும் அழியாது நிரந்தரமாக விளங்கும் சிவ சித்திகள் அனைத்தினையும் உண்மையாக எனக்கு அளித்த என்னுள் விளங்கும் சற்குருவே.

**எல்லா நிலைகளும் ஏற்றிச் சித்தெலாம்**
**வல்லான் என எனை வைத்த சற்குருவே.** (1070)

ஆன்மானுபவத்தின் முடிந்த அனுபவ நிலையாகிய சுத்த சிவ நிலை வரை 43 அனுபவ நிலைகளில் கடைசி வரை என்னை ஏற்றிச் சித்திகள் அனைத்திலும் வல்லவன் என எனைத் தூக்கி வைத்த சற்குருவே.

சித்திகள் பெறுதல் வேறு - அதில் வல்லவனாதல் வேறு

<u>ஆதாரம்:</u>

எந்தையைக் கண்டேன் இடரெலாம் நீங்கினேன்
சிந்தை மகிழ்ந்தேனென்றுந் தீபற
சித்திகள் பெற்றே னென்றுந் தீபற
(திருவருட்பா 4902)

தந்தையைக் கண்டேன் நான் சாகாவரம் பெற்றேன்
சிந்தை களித்தேனென்றுந் தீபற
சித்தெலாம் வல்லேனென்றுந் தீபற
(திருவருட்பா 4903)

<u>குறிப்பு</u> : அனுபவ நிலைகள் அனைத்திலும் ஏற்றிவைப்பது குருவின் கடமை.

**சீருற அருளாம் தேசுற அழியாப்**
**பேருற என்னைப் பெற்ற நற்றாயே** (1072)

வாழவைக்கின்ற அருளாகிய சீர் பெற்று, அழியாத அறிவையும் அடையவும், ஒளி உடம்பையும், (ஆன்ம இன்ப லாபத்தை) மரணமிலாப் பெருவாழ்வு என்ற பெரும் பேற்றை நான் பெறவும் என்னைப் பெற்றெடுத்த நற்றாயே.

**பொருந்திய அருட்பெரும்போகமே உறுகெனப்**
**பெருந்தயவால் எனைப் பெற்ற நற்றாயே.** (1074)

இறை அருளால் நான் பெற்ற பேரின்பம் என்றும் அழியாதது. எனக்கே பொருத்தமானது. அந்த இன்பமானது எனக்கே பொருந்தும்படி அடைவாயாக என்று ஆசி கொடுத்து பெருங்கருணையுடன் எனைப் பெற்ற நல்ல நற்றாயே.

**ஆன்ற சன்மார்க்கம் அணி பெற எனைத்தான்**
**ஈன்ற முதளித்த இனிய நற்றாயே.** (1076)

இறைவனை அடையச் சரியை, கிரியை, யோகம், ஞானம் அதாவது தாசமார்க்கம் சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் ஆகிய நான்கு மார்க்கங்களை முன்னோர் கண்டு வழிப்படுத்தினர். சன்மார்க்கம் என்பது மணிவாசகர் திருமூலர் ஆகியோர் காலத்திலேயே நிலை நாட்டப்பட்டுவிட்டது. வேரூன்றி நின்று விளங்கும் சன்மார்க்கத்தை மேலும் புனிதமானதாக்க எனைத்தான் ஈன்று அருளமுதம் அளித்து வளர்க்கின்ற இனிய நல்ல தாயே

குறிப்பு : சமரசம், சுத்தம், சத்தியம் ஆகிய நெறிகளைச் சன்மார்க்கத்துடன் இணைத்துச் சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம் என்று சமரசத்தை அழகுபடுத்தியவர் வள்ளலாரே.

**பசித்திடுதோறும் என் பாலணைந் தருளால்**
**வசித்த முதருள்புரி வாய்மை நற்றாயே.** (1078)

எனக்குப் பசி வந்தபோதெல்லாம் என்னருகே வந்து என்னை அன்புடன் அணைத்து அருளாய் விளங்கும் அமுதமளித்து அருள் புரிவாய் என்னருமைத் தாயே.

**தளர்ந்த தோறடியேன் சார்பணைந்தென்னை**
**உளந்தெளிவித்த ஒருமை நற்றாயே.** (1080)

எவ்வளவோ காரணங்களால் மனம் அடிக்கடிச் சோர்வடைந்துவிடுகிறது. அவ்வாறு மனம் தளர்வடைந்த போதெல்லாம் என்னை அடைந்து என் உளத்தே தெளிவையும், ஆற்றலையும் அளித்து என்னை ஊக்குவித்து என்னோடு இரண்டறக் கலந்த ஒருமையுடைய நல்ல அன்னையே.

**அருளமுதே முதல் ஐவகை அமுதமும்**
**தெருளூற எனக்கருள் செல்வ நற்றாயே.** (1082)

அருளாகிய அமுதம் தொடங்கி ஞான அனுபவத்தில் ஊறிவரக்கூடிய ஐந்துவகை அமுதங்களையும் நான் உண்மை நிலை பெற எனக்கருள்வாய் அருட் செல்வமுடைய நல்ல அன்னையே.

1. முதல் அமுதம் நாக்கு நுனியில்
2. இரண்டாவது அமுதம் நாக்கு மத்தியில் புவனாமுதம்
3. மூன்றாவது நாக்கு அடியில் மண்டலாமுதம்
4. நான்காவது உள் நாக்கினடியில் ரகசியமுதம்
5. உண்ணாக்குக்கு மேல் மௌனாமுதம்

இந்த ஐந்தாவது அமுதம் உண்டவர்கள் என்றும் அழியாத தேக சித்தியைப் பெற்றவர்கள்.

**இயலமுதே முதல் எழுவகை அமுதமும்**
**உயலுற எனக்கருள் உரிய நற்றாயே.** (1084)

இயல்பான அமுதம் தொடங்கி முன்வரியில் கூறிய ஐந்து அமுதங்களுடன் பரநாத நிலை அனுபவத்தில் சிற்சபையில் தோன்றும் பேரொளிக் காட்சியும் அப்பேரொளிக்குள் உதயமாகின்ற பொன்னொளிக் காட்சியும் ஆக ஏழு அமுதங்களும் நான் உய்வான் வேண்டி அவற்றைத் தருவதற்குரிய நல்ல அன்னையே தருவாயாக.

காட்சி எவ்வாறு அமுதமாகும்?

கள்ளுண்டாளெனப் புகன்றார் என்ற 5725 பாடலில் கனக சபையில் கண்ட காட்சியை அமுதமாகக் கூறுவது காண்க. அமுதம் வாழவைப்பது. நம்மை வாழவைப்பதெல்லாம் அமுதம் ஆகிறது.

**நண்புறும் எண்வகை நவ வகை அமுதமும்**
**பண்புற எனக்கருள் பண்புடைத்தாயே** (1086)

| | | |
|---|---|---|
| எண்வகை அமுதம் | பிண்டத்தில்(4) | அண்டத்தில்(4) = 8 |
| அக அமுதம் | தெள்ளமுதம் | கடல் நீர் |
| அகப்புற அமுதம் | ஆனந்தக் கண்ணீர் | பனி நீர் |
| புற அமுதம் | மனநெகிழ்வில் ஊறும் உமிழ் நீர் | சந்திர ஒளி |
| புறப்புற அமுதம் | வியர்வை | மழை |

<u>நவ வகை அமுதம்</u> :

1) 1வது அமுதம் நாக்கு நுனியில்
2) புவனாமுதம் நாக்கு மத்தியில்
3) மண்டலாமுதம் நாக்கினடியில்
4) ரகசிய அமுதம் உள்நாக்கினடியில்
5) மௌனாமுதம் உண்ணாக்கிற்குமேல்
6) உயிர்களுக்கான புறப்புற அமுதம்
7) தேவர்களுக்கான புற அமுதம்
8) ஐவர்கட்கான அகப்புற அமுதம்
9) சத்தி சத்தர்கட்கான அக அமுதம்

நன்மையே செய்யும் எட்டு வகை அமுதங்களையும் மற்றும் ஒன்பது வகை அமுதங்களையும் அவைகட்கு மேலுமுள்ள மற்ற அமுதங்களையும் நான் பண்பு பெறுமாறு பண்புடைய என் தாயே எனக்கருள்வாயாக.

**மற்றுள அமுத வகையெலாம் எனக்கே**
**உற்றுண வளித்தருள் ஓங்கு நற்றாயே** (1088)

இதுவரை கூறியதுபோக மீதமுள்ள மற்ற அமுத வகைகளையும் எனக்கே உண்ணுமாறு அளித்து அருள் ஓங்கு நற்றாயே.

**கலக்கமும் அச்சமும் கடிந்தெனதுளத்தே**
**அலக்கணும் தவிர்த்தருள் அன்புடைத்தாயே** (1090)

மனதிலே தோன்றும் குழப்பத்தையும் பயத்தையும் போக்கி எனதுளத்தே துன்பத்தையும் தவிர்த்து அன்புடைய என் அன்னையே, அருள்புரிவாயாக.

**துய்ப்பினில் அனைத்தும் சுகம் பெற அளித்தெனக்கு**
**எய்ப்பெலாம் தவிர்த்த இன்புடைத்தாயே** (1092)

நான் அனுபவிக்கும் எல்லா வற்றிலும் சுகம் ஒன்றையே அடையுமாறு அளித்ததுடன் இழிவைத் தரும் எல்லாவற்றையும் தவிர்த்து எனக்கே இன்பமளிக்கும் என்னுடைய அன்னையே.

**சித்திகள் எல்லாம் தெளிந்திட எனக்கே**
**சத்தியை அளித்த தயவுடைத்தாயே** (1094)

கரும சித்தி, யோக சித்தி, ஞான சித்தி ஆகிய சித்தி வகைகள் இவை எனத் தெளிவாக அறியும்படி எனக்கே ஆற்றலை அளித்த தயவுடைய அன்னையே.

**சத்தினி பாதம் தனை அளித்து எனை மேல்**
**வைத்த முதளித்த மரபுடைத்தாயே** (1096)

அருட்சக்தியின் திருவடி நிலையை எனக்கு அளித்து எல்லோர்க்கும் உயர்ந்த நிலையில் எனை வைத்து அமுதம் அளித்த கருணை வடிவான என் அன்னையே.

**சத்தி சத்தர்களெல்லாம் சார்ந்து என தேவல் செய்**
**சித்தியை அளித்த தெய்வ நற்றாயே** (1098)

காரியங்கள் புரிகின்ற சத்திகளும் அதற்குக் காரணமாயுள்ள சத்தர்களும் நான் இடும் பணியைச் செய்யக் கூடிய சித்தியை அளித்த தெய்வமே நல்ல அன்னையே.

**தன்னிகரில்லாத் தலைவனைக் காட்டியே**
**என்னை மேலேற்றிய இனிய நற்றாயே** (1100)

தனக்கு ஈடு இணை சொல்ல முடியாத தலைவனைக் காட்டி என்னை உயர்ந்த அனுபவ நிலைக்கு ஏற்றிய இனிய நல்ல அன்னையே.

அம்மையைக் கண்டேன் அவளருள் கொண்டேன்
அமுதமும் உண்டேனடி - அம்மா
அமுதமும் உண்டேனடி

தாங்கும் அவளருளாலே நடராசர்
சந்நிதி கண்டேனடி - அம்மா
சந்நிதி கண்டேனடி.

சந்நிதியிற் சென்று நான் பெற்ற பேறது
சாமி அறிவாரடி - அம்மா
சாமி அறிவாரடி.

**வெளிப்பட விரும்பிய விளைவெலாம் எனக்கே**
**அளித்து அளித்து இன்புசெய் அன்புடைத் தாயே**
(1102)

தீய எண்ணங்களும், தகாத ஆசைகளும் மனதிலே தோன்றினாலும், அவற்றை அப்படியே வெளியே கூறினால் இழிவு ஏற்படும் என்பதை உணர்ந்து தன்னை மிகவும் நல்லவராகக் காட்டிக் கொள்வதே மனித இயல்பு. தான் பொய்யே சொல்வதில்லை என்றும், அயலார் பொருள் மீது ஆசை கொள்வதில்லை என்றும், எந்தத் தவறும் மனமறிந்து

செய்வதில்லை என்றும் இப்படித் தான் வெளிப்படையாகக் கூறுவது. வெளிப்படையாக, விருப்பமாக என்னென்ன கூறுகின்றேனோ அவற்றையெல்லாம் எனக்கே அளித்து இன்பமுறச் செய்வாய் என் அன்னையே.

குறிப்பு : மனதிலே தோன்றும் தீய எண்ணங்களை அளித்துவிடாதே என்பது வேண்டுதல்.

**எண் அகத்தொடு புறத்தென்னை எஞ்ஞான்றும்**
**கண் எனக் காக்கும் கருணை நற்றாயே** (1104)

மனம், புத்தி, சித்தம், அகங்காரம், உள்ளம் எனும் அகத்துறுப்புக்களாகிய அந்தக் கரணங்களையும், மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய புற உறுப்புகளாகிய இந்திரியங்களையும் கண்ணை இமை எவ்வாறு காப்பாற்றுகின்றதோ அவ்வாறே எக்காலத்தும் காக்கின்ற தயவுடைய நல்ல அன்னையே.

**இன்னருள் அமுதளித்து இறவாத் திறல்புரிந்து**
**என்னை வளர்த்திடும் இன்புடைத் தாயே** (1106)

இன்பத்தை மட்டுமே அளிக்கின்ற அருளமுதத்தை அளித்து மரணமிலாப் பெருவாழ்வு அடையும் ஆற்றலை அளித்து என்னை வளர்க்கின்ற இன்புடைய என் அன்னையே.

**என் உடல் என் உயிர் என் அறிவெல்லாம்**
**தன்ன வென்றாக்கிய தயவுடைத் தாயே** (1108)

எனது சுதந்தரத்தினால் இயங்கி வந்த என் உடம்பு, என் உயிர், எனது அறிவு ஆகிய அனைத்தையும் தான் கொண்டு தன் வசமாக்கி தனதாக்கிக் கொண்ட தயவுடைய எனது அன்னையே.

**தெரியா வகையால் சிறியேன் தளர்ந்திடத்**
**தரியாது அணைத்த தயவுடைத் தாயே** (1110)

(என்ன நடக்கும் என்பதும் என்ன செய்ய வேண்டும் என்பதும்) எதுவும் தெரியாத காரணத்தால் யாரினும் சிறியேனாகிய

நான் தளர்ச்சியடையுங்கால் தாளாது எனை அணைத்த தயவுடைய எனது அன்னையே.

**சின முதல் அனைத்தையும் தீர்த்தெனை நனவினும்**
**கனவினும் பிரியாக் கருணை நற்றாயே** (1112)

கோபதாபம் முதல் எல்லாத் தீய குணங்களையும் நீக்கிக் கனவிலும் நனவிலும் பிரியாது விளங்கும் தயவுடைய நல்ல அன்னையே.

**தூக்கமும் சோம்பும் என் துன்பமும் அச்சமும்**
**ஏக்கமும் நீக்கிய என்தனித்தாயே** (1114)

தூக்கமும், சோம்பலும், என்னுடைய துன்பமும், பயமும், இல்லையே எனும் ஏக்கமும் நீக்கிய எனது ஒப்பற்ற அன்னையே.

**துன்பெலாம் தவிர்த்துளே அன்பெலாம் நிரம்ப**
**இன்பெலாம் அளித்த என் தனித் தந்தையே** (1116)

பிறவித் துன்பம் முதலாக எல்லாத் துன்பங்களையும் நீக்கி இறைவன் மீது பக்தி உள்ளம் முழுவதும் நிரம்ப, இன்பத்தையே எனக்களித்த என் ஒப்புயர்வற்ற எனது தனித் தந்தையே.

**எல்லா நன்மையும் என்றனக் களித்த**
**எல்லாம் வல்ல சித்தென் தனித் தந்தையே** (1118)

எல்லா நன்மைகளும் என்றனக்கு அளித்து எல்லாம் வல்ல சித்தனாய் விளங்கும் என் ஒப்பற்ற தந்தையே.

**நாயிற் கடையேன் நலம் பெறக் காட்டிய**
**தாயிற் பெரிதும் தயவுடைத் தந்தையே** (1120)

நாயினும் கடைப்பட்டவனாகிய நான் நன்மை அடையும்படி வழி காட்டிய என்னுடைய தாயினும் மிக அதிகமான தயவுடைய தந்தையே.

**அறிவிலாப் பருவத்து அறிவு எனக்களித்தே**
**பிறிவிலாது அமர்ந்த பேரருள் தந்தையே** (1122)

அறிவு விளங்காத சிறு பிராயத்திலேயே அறிவு விளக்கத்தை எனக்கு அளித்தும், என்னை என்றும் விட்டுப் பிரியாது என்னுள்ளே அமர்ந்த பேரருள் வாய்ந்த தந்தையே.

**புன்னிகரில்லேன் பொருட்டிவண் அடைந்த**
**தன்னிகரில்லாத் தனிப் பெருந் தந்தையே** (1124)

அற்பமான புல்லுக்குக் கூட ஒப்புவமை சொல்ல முடியாத என் பொருட்டும் இங்கே அடைந்த தனக்கு நிகரில்லாத ஒப்பற்ற பெரிய தந்தையே.

**அகத்தினும் புறத்தினும் அமர்ந்து அருட்ஜோதி**
**சகத்தினில் எனக்கே தந்த மெய்த் தந்தையே**(1126)

இறைவா என் உள்ளத்தை இடமாகக் கொண்டு அமர்ந்தாய். என்னிடமிருந்து புறத்திலே வெளிப்படும், செயலிலும் நீயே இருக்கின்றாய். அதாவது நான் உன் புகழே பேசுகின்றேன். உனக்குகந்த இரக்கமான தயவுடைய செயல்களே செய்கின்றேன். இவ்வாறு என் அகத்திலும் புறத்திலும் நீயே இருந்து இந்த உலகில் அருட்ஜோதி எனக்கே அளித்த என் உண்மையான தந்தையே.

குறிப்பு : உலகியல் தந்தை உபசாரத்தால் பெற்ற தந்தையே. இறைவனே உண்மையான தந்தை.

**இணையிலாக் களிப்புற்று இருந்திட எனக்கே**
**துணையடி சென்னியில் சூட்டிய தந்தையே** (1128)

ஈடு இணை இல்லாத ஆனந்தம் அடைந்து இருக்கும்படி உன்னுடைய மென் மலர்த்துணைப் பாதங்களை என் தலையில் சூட்டித் திருவடி தீட்சை செய்த என்னுடைய தந்தையே.

**ஆதியீறறியா அருளரசாட்சியில்**
**ஜோதி மா மகுடம் சூட்டிய தந்தையே** (1130)

அருளரசாட்சி எப்போது ஆரம்பித்தது? அதற்கு என்றைக்குமே முடிவு கிடையாதே. அப்படி ஆரம்பமும் முடிவும் இல்லாத உன் அருள் அரசாட்சியில் உன் அருட்ஜோதி மா மகுடம் எனக்குச் சூட்டி என்னை அந்த அருளரசாட்சிக்கு உற்றவனாக ஆக்கிய தந்தையே.

**எட்டிரண்டறிவித்து எனைத் தனி ஏற்றிப்**
**பட்டி மண்டபத்தில் பதித்த மெய்த் தந்தையே**(1132)

எட்டாகிய அகர விளக்கத்தையும் இரண்டாகிய உகர விளக்கத்தையும் எனக்குத் தெரியப்படுத்தி என்னை யாரும் ஏறியறியாத ஒப்பற்ற மேனிலைக்கு ஏற்றி அறிஞர்கள் சபையிலே நிலைக்க வைத்த உண்மையான தந்தையே.

"தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல்" (குறள்)

அகரம் என்பது ஜீவன்
உகரம் என்பது பரம்.

ஜீவன், பரம் இவை இரண்டும் நம் உடம்பில் எங்கு உள்ளன. எவ்வாறு செயல்படுகின்றன என்பதை அறிவதே எட்டு இரண்டு அறிதல்.

**தங்கோல் அளவது தந்து அருட்ஜோதிச்**
**செங்கோல் செலுத்தெனச் செப்பிய தந்தையே**(1134)

முதல்வரின் ஆட்சி தமிழ் நாட்டிற்குள் செல்லும். பிரதமரின் ஆட்சி இந்தியா முழுவதும் செல்லும். ஆனால் இறைவனின் ஆட்சி உலகம் மட்டுமல்ல - அண்ட சராசரங்கள் முழுவதும் அப்பாலும் செல்லும். உனது ஆட்சி எது வரை செல்லுமோ அந்த அளவு

அருட்ஜோதிச் செங்கோல் கொண்டு என்னையும் ஆட்சி செய்க எனக் கூறிய தந்தையே.

குறிப்பு : இறைவனுக்குச் சமமாக வள்ளலாரின் ஆட்சியும் செல்கிறது.

(தங்கோல் அளவு: ஆட்சி செல்லும் விஸ்தீரணம் - பரப்பளவு - அவனுடைய ஆட்சி செல்லாத இடமே இல்லை)

**தன் பொருள் அனைத்தினையும் தன் அரசாட்சியில்**
**என் பொருள் ஆக்கிய என் தனித் தந்தையே**(1136)

எனக்கென்று இருக்கின்ற அற்ப சுதந்தரமாகிய ஜீவ சுதந்தரம், போக சுதந்திரம், தேக சுதந்திரம் ஆகிய மூன்று சுதந்தரங்களையும் நீ ஆளும்படி உனக்கே சர்வ சுதந்தரமாகக் கொடுத்துவிட்டு இருக்கின்ற வேளையில் உன் பொருளாக உள்ள ஆற்றல்கள் அனைத்தினையும் என் பொருளாக்கிய என்னுடைய ஒப்பற்ற தந்தையே.

**தன் வடிவனைத்தையும் தன் அரசாட்சியில்**
**என் வடிவாக்கிய என் தனித் தந்தையே** (1138)

என்னை இழந்து நான் உன்னுடைய வசமாக இருக்கின்ற வேளையில் தன் வடிவாகிய ஞான வடிவை எனக்குத் தந்து என் வடிவையும் ஞான வடிவாக்கிய எனது ஒப்பற்ற தந்தையே.

இறைவன் வடிவம் ஞான தேகம் என்பதற்கு ஆதாரம்:

ஜோதி மலை மேல் வீட்டில் தூய திருவமுதம்
மேதினி-மேல் நானுண்ண வேண்டினேன்--ஓதரிய
ஏகா அனேகா எழிற் பொதுவில் வாழ் ஞான
தேகா கதவைத்திற:

**தன் சித்தனைத்தையும் தன் சமூகத்தினில்**
**என் சித்தாக்கிய என் தனித் தந்தையே** (1140)

எனைத் தனியாக்கி நின்னிடம் ஒப்படைத்து உனது சந்நிதியில் நின்ற வேளையில் தனது எல்லாச் சித்துக்களையும் என்னுடையதாக்கிய எனது ஒப்பற்ற தந்தையே.

**தன் வசமாகிய தத்துவ மனைத்தையும்**
**என் வசமாக்கிய என் உயிர்த் தந்தையே** (1142)

(என் வசமாக இருந்து இயங்கி வந்த இந்திரியங்கள், கரணங்கள் முதலிய தத்துவங்கள் அனைத்தையும் தன் வசமில்லாமல் இருத்தியபோது) உன் வசமாக இருக்கின்ற எல்லாத் தத்துவங்களையும் என் வசமாக்கிய என் உயிர்த் தந்தையே.

**தன் கையில் பிடித்த தனி அருட்ஜோதியை**
**என் கையில் கொடுத்த என் தனித் தந்தையே** (1144)

தன் கையிலே தான் கொண்டிருந்த அருட்ஜோதியாகிய (அனுபவ நிலையை) என் அனுபவமாக்கிய எனது ஒப்பற்ற தந்தையே.

**தன்னையும் தன் அருள் சக்தியின் வடிவையும்**
**என்னையும் ஒன்றென இயற்றிய தந்தையே** (1146)

என்னைப் பார்த்து நானும், என் அருள் சக்தியும், நீயும் வேறு வேறல்ல, மூன்றும் ஒன்றே என்று கூறிய என்னுடைய தந்தையே.

குறிப்பு : இறைவன் வள்ளலாரிடம் நானே நீ என்று கூறியதால் இறைவன் வேறு வள்ளலார் வேறு அல்ல. வள்ளலாரே இறைவனாக விளங்குகிறார்.

**தன் இயல் என் இயல் தன் செயல் என் செயல்**
**என்ன இயற்றிய என் தனித் தந்தையே** (1148)

தன்னுடைய இயல்பான தன்மை எதுவோ அதுவே உன்னுடையது என்றும் தன்னுடைய செயல் எல்லாம் உன்னுடைய செயலே என்றும் என்னிடம் கூறிய எனது ஒப்பற்ற தந்தையே.

**தன் உரு என் உரு தன் உரை என் உரை**
**என்ன இயற்றிய என் தனித் தந்தையே** (1150)

தன் உருவம்தான் என் உருவம் என்றும், தன்னுடைய வாக்கு என்னுடைய வாக்கே என்றும் என்னிடம் கூறிய எனது ஒப்பற்ற தந்தையே.

நானுரைக்கும் வார்த்தையெலாம் நாயகன் தன் வார்த்தை
நம்புமினோ நமரங்காள் நற்றருணம் இதுவே
வானுரைத்த மணிமன்றில் நடம்புரி எம்பெருமான்
வரவெதிர் கொண்டவனருளால் வரங்களெலாம் பெறவே
தேனுரைக்கும் உளமினிக்க எழுகின்றேன் நீவிர்
தெரிந்தடைந்தென்னுடன் எழுமின் சித்தி பெறலாகும்
ஏனுரைத்தேன் இரக்கத்தால் எடுத்துரைத்தேன் கண்டீர்
யானடையும் சுகத்தினை நீர் தானடைதல் குறித்தே
(திருவருட்பா 5594)

குறிப்பு : வள்ளலார் வாக்கெல்லாம் இறைவன் வாக்கே.

**சதுரப் பேரருள் தனிப்பெருந் தலைவன் என்று**
**எதிரற்று ஓங்கிய என்னுடைத் தந்தையே** (1152)

சாமர்த்தியம் நிறைந்தவன். எதனையும் விவேகத்துடன் சரியாகச் செயல்படுத்த வல்லவன். பேரருள் நிறைந்தவன். ஒப்பற்ற பெருந்தலைவன். தனக்கு நிகராகவும் எதிராகவும் யாரும் இல்லை என விளங்குபவன். இவ்வாறெல்லாம் சிறந்து ஓங்கிய என்னுடைய தந்தையே.

**மன வாக்கறியா வரைப்பினில் எனக்கே**
**இன வாக்கருளிய என் உயிர்த் தந்தையே** (1154)

மனதிலே எழும் எண்ணங்களும் சொல்லும் அறிய முடியாது நிற்கின்ற மாமவுன அனுபவத்தில் எனக்குப் பிரணவப் பொருளாகிய ஓங்கார விளக்கம் அருளிய என் உயிராய் விளங்கும் என் தந்தையே.

இனவாக்கு இறைவன் அருளினான்.

தனித்தலைவர் வருகின்ற தருணமிது தோழி
தனிக்க எனைவிடு நீயும் தனித்தொருபால் இருத்தி
இனித்த சுவைத் திரள் கலந்த திருவார்த்தை நீயும்
இன்புறக் கேட்டுளங்களிப்பாய் இதுசாலும் நினக்கே
மனித்தர்களோ வானவரோ மலரயனோ மாலோ
மற்றையரோ என் புகல்வேன் மகேசுரர்ஆதியரும்
தனித்த ஒரு திருவார்த்தை கேட்பதற்கே கோடித்
தவம் செய்து நிற்கின்றார் நவஞ்செய்த நிலத்தே
(திருவருட்பா 5731)

**உணர்ந்து உணர்ந்து உணரினும் உணராப் பெருநிலை**
**அணைந்திட எனக்கே அருளிய தந்தையே** (1156)

மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய இந்திரியங்களாலும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய கரணங்களாலும் எவ்வளவுதான் உணர்ந்தாலும் உணர்வதற்கு அரிதாகிய ஒரு பெருநிலை அனுபவமாகிய மாமௌன நிலையை நான் அடைந்திட அருளிய எனது தந்தையே.

**துரிய வாழ்வுடனே சுக பூரணமெனும்**
**பெரிய வாழ்வளித்த பெருந்தனித் தந்தையே** (1158)

சாக்ரத், சொப்னம், சுழுத்தி, துரியம் என்ற நான்கு நிலைகளில் துரிய நிலை அனுபவத்தில் பெறுகின்ற நல்வாழ்வும், குறைவுபடாது விளங்குகின்ற பூரண சுகமென்கின்ற பெரிய வாழ்வையும் எனக்களித்த பெரிய ஒப்பற்ற தந்தையே.

**ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த**
**பேறளித் தாண்ட பெருந்தகைத் தந்தையே** (1160)

முடிவு என்பதில்லாத பதங்கள் எல்லாவற்றையும் கடந்த பெரியதோர் பேறாகிய அருட்ஜோதியை அளித்து எனை ஆண்ட பெருந்தகையே என் தந்தையே.

அருட்ஜோதியைப் பெறுதலே பேறு என்பதற்கு ஆதாரம்:-

துரியமேல் பரவெளியிலே சுக நடம் புரியும்
பெரியதோர் அருட்ஜோதியைப் பெறுதலே எவைக்கும்
அரிய பேறு மற்றவை யெலாம் எளியவே அறிமின்
உரிய இம்மொழி மறைமொழி. சத்தியம் உலகீர்.
(திருவருட்பா 5548)

**எவ்வகைத் திறத்தினும் எய்துதற்கரிதாம்**
**அவ்வகை நிலை எனக்களித்த நற்றந்தையே**(1162)

எந்தவித ஆற்றல் மிக்க செயலாலும் அடைய முடியாததோர் அரிய அனுபவத்தை, பெரு நிலையை எனக்களித்த நல்ல தந்தையே.

கற்பங்கள் பல கோடிச் செல்லத் தீய
கனலின் நடு ஊசியின்மேல் காலை ஊன்றிப்
பொற்பற மெய்யுணவின்றி உறக்கமின்றி புலர்ந்து
எலும்பு புலப்பட ஐம்பொறியை ஓம்பி
நிற்பவர்க்கு ஒளித்து, மறைக்கு ஒளித்து,
யோக நீண் முனிவர்க்கொளித்து அமரர்க் கொளித்துச்
சிற்பரத்தில் சின் மயமாய் நிறைந்த ஞானத்
திருவாளர் உட்கலந்த தேவ தேவே.

அளவிறந்த நெடுங்காலம், சித்தர் யோகர்
அறிஞர் மலரயன் முதலோர் அனந்த வேதம்
களவிறந்தும் கரணாதியிறந்தும் செய்யுங்
கடுந்தவத்தும் காண்பரிதாங் கடவுளாகி
உளவிறந்த எம்போல்வார் உள்ளத்தினுள்ளே
ஊறுகின்ற தெள்ளமுத ஊறலாகிப்
பிளவிறந்த பிண்டாண்ட முழுதும் தானாய்ப்
பிறங்குகின்ற பெருங்கருணைப் பெரிய தேவே

எந்தத் தவம் செய்தும் அடைய முடியாத ஒன்றை வள்ளலார் அடைந்தார்.

எவ்வகைத்தாம் தவம் செய்யினும் எய்தரிதாம் தெய்வம்
எனக்கெளிதில் கிடைத்தென்மனம் இடங்கொண்ட தெய்வம்
அவ்வகைத் தாம் தெய்வம் அதற்கப்பாலாம் தெய்வம்
அப்பாலும் பெருவெளிக்கே அப்பாலாம் தெய்வம்
ஒவ்வகத்தே ஒளியாகி ஓங்குகின்ற தெய்வம்
ஒன்றான தெய்வம் மிக நன்றான தெய்வம்
செவ்வகைத்தென்றறிஞரெலாம் சேர் பெரிய தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம்
(திருவருட்பா 3912)

**இனிப் பிறவா நெறி எனக்களித் தருளிய**
**தனிப் பெருந் தலைமைத் தந்தையே தந்தையே** (1164)

மேலும் பிறவி எடுக்காத நிலையில் என்னை வாழ்விக்கும் நெறி ஒன்றினை எனக்கு அளித்து அருள்புரிந்த ஒப்பற்ற எச் சமயத் தேவர்க்கும் தலைமை பூண்டொழுகும் தந்தையே தந்தையே.

விளக்கம்: இறந்தால் மீண்டும் வினைக் கேற்பப் பிறவி வந்தே தீரும். உடல் மாய்ந்தால் பிறவி உண்டு. அதுவும் எந்தப் பிறவி வாய்க்குமோ? ஆதாரம்.

நயத்தால் உனது திருவருளை நண்ணாக் கொடியேன் நாயுடம்பை
உயத்தான் வையேன் மடித்திடுவேன் மடித்தால் பின்னர் உலகத்தே
வயத்தால் எந்த உடம்பு உறுமோ என்ன வருமோ என்கின்ற
பயத்தாலையோ இவ்வுடம்பைச் சுமக்கின்றேனெம் பரஞ்சுடரே.
(திருவருட்பா 3336)

இறந்தால் மீண்டும் பிறவி வந்தே தீரும் என்பது குறிப்பிடத்தக்கது. எனவே மீண்டும் பிறவாமைக்கு வழி இறவாமையே. பிறவாநெறி என்பது இறவா நெறி. இறவா நெறி என்பது எது?

ஆடுகின்ற சேவடிக்கே ஆளானேன் மாளாத யாக்கை பெற்றேன்
கூடுகின்ற சன்மார்க்க சங்கத்தே நடுவிருந்து குலாவுகின்றேன்
பாடுகின்றேன் எந்தைபிரான் பதப் புகழை அன்பினொடும் பாடிப்பாடி
நீடுகின்றேன் இன்பக் கூத்தாடுகின்றேன் எண்ணமெலாம்
நிரம்பினேனே (திருவருட்பா 5445)

புருவமத்தி நாட்டமே இறவாநெறி ஆதாரம்.

வாடுதல் நீக்கிய மணி மன்றிடையே
ஆடுதல் வல்ல அருட்பெருஞ்ஜோதி (அகவல் வரி 102)

**பற்றயர்ந்தஞ்சிய பரிவு கண்டணைந்தெனைச்**
**சற்றும் அஞ்சேல் எனத் தாங்கிய துணையே** (1166)

யான் எனது என்ற ஆணவத்தாலும் அகங்காரத்தாலும் வீடு, மனைவி., மக்கள் செல்வம் போன்ற பலவிதமான ஆசைகளால் அலைந்து அலைந்து தளர்ச்சியடைந்தேன். என்னுடைய பரிதாப நிலை கண்டு என்மீது இரக்கம் கொண்டு என்னை அணைத்துச் சிறிதும் பயப்படாதே என்று எனக்கு ஆதரவளித்த என்னுடைய துணையே.

**தளர்ந்த அத்தருணம் என் தளர்வெலாம் தவிர்த்துஉட்**
**கிளர்ந்திட எனக்குக் கிடைத்த மெய்த்துணையே** (1168)

எனக்குச் சோர்வு எப்போது ஏற்பட்டதோ அப்போதே அந்தச் சோர்வு முழுதும் நீக்கி என் உள்ளமானது உற்சாகத்தில் பொங்கும்படி எனக்குக் கிடைத்த எனது உண்மையான துணையே.

**துறையிது, வழியிது, துணிவிது நீ செயும்**
**முறையிது எனவே மொழிந்த மெய்த் துணையே** (1170)

சேரவேண்டிய இடமாகிய திருச்சிற்றம்பலம் இது எனக் காட்டி, அங்கு செல்லும் வழி இது எனவும் காட்டி, அவ்வழி செல்வதற்குரிய ஊக்கமும், விடா முயற்சியும் தந்து நீ செயல்பட வேண்டிய நெறி முறை இது எனவும் எனக்கு அறிவித்த எனது உண்மையான துணையே.

விளக்கம் : <u>சேரிடம்</u> : திருச்சிற்றம்பலம்.

சீரிடம்பெறுமோர் திருச்சிற்றம்பலத்தேதிகழ்
தனித் தந்தையே நின்பால்
சேரிடமறிந்தே சேர்ந்தனன் கருணை
செய்தருள் செய்திடத் தாழ்க்கில்
யாரிடம் புகுவேன் யார் துணை என்பேன்
யார்க்கெடுத்தென் குறை இசைப்பேன்
போரிடமுடியாதினித் துயரொடு நான்
பொறுக்கலேன் அருள்க இப்போதே (3842)

**எங்குறு தீமையும் எனைத் தொடராவகை**
**கங்குலும் பகலும் மெய்க் காவல் செய் துணையே** (1172)

எந்த இடத்திலிருந்தும் தீங்கு வர நேரிடலாம். அந்தத் தீமையானது எனை அடையாவண்ணம் இரவும் பகலும் சற்றும் அயராது சத்தியமாக என்னைக் காக்கின்ற என்னுடைய துணையே.

**வேண்டிய வேண்டிய விருப்பெலாம் எனக்கே**
**ஈண்டிருந்தருள்புரி என் உயிர்த் துணையே** (1174)

வேண்டிய : தேவைப்படுகின்ற
வேண்டிய : பிரார்த்தனை செய்த

என்னுடைய தேவைகள் என நான் ஆசைகளை நிறைவேற்றித்தரும்படி வேண்டுகின்றேன். என்னுடைய எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றியும் என் அருகிலேயேயிருந்தும் எனக்கே அருள் புரிவாயாக என் உயிர்த் துணையே.

**இகத்தினும் பரத்தினும் எனக்கிடர் சாராது**
**அகத்தினும் புறத்தினும் அமர்ந்த மெய்த் துணையே** (1176)

உலகியல் வாழ்விலும், அருளியல் வாழ்விலும் எனக்குத் துன்பம் ஏற்படாதவாறு எனக்கு உள்ளும் புறமும் அமர்ந்து காப்பாற்றுகின்ற உண்மையான துணையே.

**அயர்வற எனக்கே அருள் துணையாகி என்**
**உயிரினும் சிறந்த ஒருமை என் நட்பே** (1178)

சோர்வானது அற்றுப்போகும்படி எனக்கே அருள் துணையாக நீ இருந்து என் உயிரினும் மேலாக என்னுடன் பேதமற்றுக் கலந்த என்னுடைய நட்பே.

விளக்கம்: சோர்வு என்பது அயர்வு, அதாவது வேண்டிய ஒன்று எவ்வளவு, முயற்சி செய்தும் கிட்டாது போயின் ஏற்படுகின்ற தளர்வு, இறைவனை அடைந்தவர்க்கு இல்லாமை என்பதே இல்லாததால் சோர்வு இல்லை என்றார். ஆதாரம்

எல்லாமும் செய்யவல்ல தனித் தலைவர் பொதுவில் இருந்து
நடம்புரிகின்ற அரும்பெரும் சோதியினார்
நல்லாய் நன்னாட்டார்கள் எல்லாரும் அறிய நண்ணி எனை மணம்
புரிந்தார் புண்ணியனார் அதனால்
இல்லாமை எனக்கில்லை எல்லார்க்கும் தருவேன் என்னுடைய
பெருஞ்செல்வம் என்புகல்வேன் அம்மா
செல்லாத அண்டமட்டோ அப்புறத்தப்பாலும் சிவஞானப்
பெருஞ்செல்வம் சிறப்பது கண்டறியே
(திருவருட்பா 5740)

**அன்பினில் கலந்து எனது அறிவினில் பயின்றே**
**இன்பினில் அளைந்த என் இன்னுயிர் நட்பே** (1180)

நான் உன் மீது கொண்ட பக்திப் பெருக்கில் என்னுடன் கலந்தாய், எனது அறிவினில் அமர்ந்தாய் - என்னை எப்போதும் இன்ப வெள்ளத்தின் நடுவேயே வைத்திருந்தாய். இவ்வளவும் செய்த என் இன்னுயிர் நட்பே.

விளக்கம்: பிற உயிர்கள் மீது நாம் காட்டும் இரக்கத்தை, தயவு, கருணை, பரிவு, பாசம், இரக்கம், ஈரம் என்று குறிப்பிடும் வள்ளற் பெருந்தகை இறைவன் மீது நாம் கொள்ளும் பக்தியை மட்டுமே அன்பு என்கின்றார். ஆதாரம் :

"எவ்வகைப் பிரயாசத்தினாலாவது அந்த அருளை அடைய வேண்டும். அந்த அருள் எவ்வகையால் வரும் என்றால் - எல்லா உயிர்களிடத்திலும் தயவும், பிரபஞ்சத்தில் வெறுப்பும், சிவத்தினிடத்தில் அன்பும் மாறாது நம்மிடத்திருந்தால் அவ்வருள் நம்மை அடையும்"

(திருமுகம் 3 - உரைநடைப்பகுதி பக் 365)

**நான் புரிவன வெலாம் தான் புரிந்தெனக்கே**
**வான் பதமளிக்க வாய்த்த நன்னட்பே** (1182)

நான் ஆற்ற வேண்டிய செயல்களையெல்லாம் தானே செய்து எனக்கே வெளியோடு உறவாடுகின்ற மேலான பதத்தை, நிலையை அளிப்பதற்காக எனக்குக் கிடைத்த நல்ல நட்பே.

விளக்கம்: ஒழுக்கங்களில் பயின்றதும், ஜீவகாருண்யம் காட்டியதும் தவம் இயற்றியதும் நம் வள்ளற் பெருந்தகையே. ஆனாலும் தனது சுதந்திரங்களாகிய ஜீவ சுதந்தரம், தேக சுதந்திரம், போக சுதந்திரம் ஆகிய மூன்றையும் இறைவனிடத்தே ஒப்புவித்து தனக்கென ஒன்றும் இல்லையென வாழ்ந்ததால் அவர் செய்ததெல்லாம் இறைவன் செய்ததாயிற்று.

**உள்ளமும் உணர்ச்சியும் உயிரும் கலந்துகொண்டு**
**எள்ளுறு நெய்யில் என் உள்ளுறு நட்பே** (1184)

உள்ளத்திலும், என்னுடைய எல்லா இன்ப துன்ப உணர்வுகளிலும், என் உயிரிலும் கலந்து கொண்டு எள்ளினுள்ளே எவ்வாறு நெய்யானது முழுமையாக நிரம்பி இருந்தும் இல்லாதது போல் இருக்கின்றதோ அவ்வாறு என் உள்ளே நானடைந்த என்னுடைய நட்பே.

**செற்றமும் தீமையும் தீர்த்து நான் செய்த**
**குற்றமும் குணமாக் கொண்ட என் நட்பே** (1186)

எனக்கு நேரக்கூடிய தீங்கினையும், துன்பத்தையும் நீக்கி நான் செய்த குற்றங்களையெல்லாம் மன்னித்துக் குணமாகக் கொண்டு விளங்கும் என்னுடைய நட்பே

விளக்கம்: குற்றமெலாம் குணமாகக் கொண்டு என்பதற்குப் பொருள்.

நாம் குற்றம் செய்கிறோம், அவை குற்றந்தான். இறைவனோ குற்றம் புரிதல் மனித இயல்பு என்பதை நன்கு அறிந்தவன். குற்றம் புரிந்துவிட்டானே என எண்ணாது குற்றம் புரிதல் மனித குணம் எனக் குணமாகக் கொண்டு மன்னிக்கிறான்.

**குணங்குறி முதலிய குறித்திடாது எனையே**
**அணங்கறக் கலந்த அன்புடை நட்பே.** (1188)

என்னுடைய குணம் எப்படிப்பட்டது?

என்னுடைய வாழ்க்கை லட்சியம் அதாவது குறிக்கோள் எது? என்பனவற்றைக் கவனியாது என்னைப் பிரியாது எனைக் கலந்த என் அன்புடை நட்பே.

விளக்கம்: என்னுடைய குணமோ தீய குணங்களே - என்னுடைய லட்சியமோ உலகாயத ஆசைகளை அடைவதுதான். இவற்றை இறைவன் கவனித்தால் நம்மை அடைவானா? அவன் பெருங்கருணை நம்முடைய குற்றங்களைக் கவனியாது அருள்வதே என்று விளக்குகின்றார்.

**பிணக்கும் பேதமும் பேயுலகோர் புகல்**
**கணக்கும் தீர்த்தெனைக் கலந்த நன்னட்பே** (1190)

ஊடலும், அபிப்ராய பேதமும், உலகாயதத்தார் கைவிடாது வைத்துள்ள கொடுக்கல், வாங்கல் ஆகிய பொருளாதாரக் கணக்கு இவற்றையெல்லாம் போக்கி எனைக் கலந்த நல்ல நட்பே.

**சவலை நெஞ்சகத்தின் தளர்ச்சியும் அச்சமும்**
**கவலையும் தவிர்த்தெனைக் கலந்த நன்நட்பே** (1192)

கவலை போன்றவற்றால் இளைத்த நெஞ்சினுடைய சோர்வும் பயமும் கவலையும் போக்கி எனைக் கலந்து கொண்ட நல்ல நட்பே.

**களைப் பறிந்தெடுத்துக் கலக்கம் தவிர்த்தெனக்கு**
**இளைப் பறிந்து உதவிய என் உயிர் உறவே** (1194)

ஏதேனும் தடையினால் நான் சோர்வு அடைந்தால் அதை அறிந்து எனை அந்தத் தடையினின்றும் விலக்கிக் கலக்கத்தைப் போக்கி எனக்கு இளைப்பு (தொடர்ந்து முன்னேற முடியாத நிலை) ஏற்பட்ட போதும் அதையும் அறிந்து உதவிய என் உயிர்க்குயிராம் உறவே.

**தன்னைத் தழுவுறு தரஞ்சிறிதறியா**
**என்னைத் தழுவிய என் உயிர் உறவே.** (1196)

உன்னைத் தழுவி அணைந்து அடையக்கூடிய பக்குவமோ யோக்யதையோ கொஞ்சமும் அறிந்து கொள்ளாது இருக்கும், என்னைத் தழுவிக்கொண்ட என் உயிரின் உறவே.

**மனக்குறை நீக்கி நல்வாழ்வளித்து என்றும்**
**எனக்கு உறவாகிய என் உயிர் உறவே** (1198)

என் மனதிலே இருந்த குறைகளை அதாவது ஏக்கங்களைப் போக்கி நல்ல சுகமான வாழ்வையும் அளித்து எனக்கு என்றும் உறவாக விளங்குகின்ற என் உயிர் உறவே.

**துன்னும் அனாதியே சூழ்ந்தெனைப் பிரியாது**
**என் உறவாகிய என் உயிர் உறவே.** (1200)

என்றைக்கும் முடிவு என்பதே இல்லாது என் உள்ளும் புறமும் சூழ்ந்து எனைப் பிரியாது என் உறவாக விளங்குகின்ற என் உயிரான உறவே.

**என்றும் ஓர் நிலையாய் என்றும் ஓர் இயலாய்**
**என்றும் உள்ளதுவாம் என் தனிச் சத்தே.** (1202)

எந்தக் காலத்தும் மாறுபடாத ஒரே நிலையும், ஒரே தன்மையும் கொண்டு விளங்குவதாய் என்றென்னும் அழிவென்பதில்லாது என்றும் உள்ளதுவான என்னுடைய ஒப்பற்ற ஈடு சொல்ல முடியாத சத்தே.

குறிப்பு : சத்து, சித்து, ஆனந்தம் ஒன்று சேரச் சச்சிதானந்தம் ஆயிற்று. இவ்வரிகளில் முதலாவதான சத்தும், பின்வரிகளில் சித்தும் ஆனந்தமும் விளக்கப்படுவது காண்க.

**அனைத்துல கவைகளும் ஆங்காங்குணரினும்**
**இனைத்தென அறியா என் தனிச் சத்தே.** (1204)

எல்லா உவகத்திலும் உள்ள எல்லா ஜீவர்களும் ஆங்காங்கே உணர்ந்தும் இப்படிப்பட்டவன் நீ எனத்துளிக்கூட உன்னை உணரமுடியாது விளங்கும் என்னுடைய ஒப்புயர்வற்ற சத்தே.

<u>விளக்கம்</u>: இந்த உலகில் ஆங்காங்கே இந்தியாவில் மட்டுமின்றி மேல் நாடுகளிலும் அருளாளர்கள் தோன்றி இறைவனையறிய முற்பட்டிருக்கிறார்கள். இதைத் தான் ஆங்காங்குணரினும் என்ற சொற்றொடர் குறிக்கின்றது. அவ்வாறு உணரமுற்பட்ட அருளாளர்கள் தோற்றியதுதான் சமயங்களும் மதங்களும். இதன் விளைவாகப் பல்லாயிரக் கணக்கான சமய மதங்கள் தோன்றினவே தவிர யாராலும் இறைவனை இத்தன்மையன் என அறிய முடியவில்லை என்பது கருத்து.

**பொதுமறை முடிகளும் புகலவை முடிகளும்**
**இது எனற் கரிதாம் என் தனிச் சத்தே** (1206)

எல்லார்க்கும் பொதுவாய் விளங்கும் வேதங்கள் காட்டும் முடிபுகளும், அவைகள் கூடி வரையறை செய்யும் முடிபுகளிலும் கூட இதுதான் இறைவன் என்று கூறுதற்கு அரியதான என் ஒப்புயர்வற்ற சத்தே.

<u>குறிப்பு</u>: ஆங்காங்குள்ள அருளாளர்கள் இறைவனை அறிய முற்பட்டு அவர்கள் அறிவில் எழுந்த எண்ணங்களின் விரிவே அவ்வச் சமய மதங்களின் வேத நூலாக விளங்கியது. அருளாளர்களால் தோற்றப்பட்ட வேதங்களாகிய நூல்களுங்கூட இறைவனைப் பற்றிக் கூறுவதற்கு அரிதாய் உள்ளதாம், அந்த உண்மைப் பொருள்.

**ஆகம முடிகளும் அவை புகல் முடிகளும்**
**ஏகுதற் கரிதாம் என் தனிச் சத்தே** (1208)

ஆகமங்கள் கூறுகின்ற முடிவுகளும் அவைகளின் விளைவுகளான மேனிலைகளும் அடைய முடியாத நிலையில் விளங்குகின்ற என்னுடைய ஒப்பற்ற தனித் தன்மையான சத்தே. சத்து என்பது உண்மை.

**சத்தியம் சத்தியம் சத்தியம் எனவே**
**இத்தகை வழுத்தும் என் தனிச் சத்தே** (1210)

சத்தியம் என்பது உண்மை. அந்த வார்த்தை மூன்று முறை கூறப்பட்டுள்ளது.

உண்மையானது, ஒவ்வொருவருடைய மனதிலும் வாக்கிலும் செயலிலும் வெளிப்பட வேண்டும். இதைப் பற்றியே உண்மை, வாய்மை, மெய்ம்மை என வழங்கப்பட்டது. உள்ளே இருந்து வர வேண்டியதே உள் மெய், உண்மை. வாக்கினால் வருவது வாய்மெய் வாய்மை. செயலால் உடம்பிலே வருவது மெய்மெய் அதாவது மெய்மை. பொய் கலந்த உள்ளத்தில் இறைவன் வர மாட்டான். எனவே ஒவ்வொருவருடைய மனதிலும், சொல்லிலும் செயலிலும் சத்தியமே விளங்க வேண்டும். அவ்வாறு நின்றோர் வாழ்த்துகின்ற எனது ஒப்பற்ற சத்தே.

<u>குறிப்பு</u>. பொய் வந்த உள்ளத்தில் போகாண்டி
அந்தப் புண்ணியன் பொன்னடி போற்றுங்கடி.

பொய்யை ஒழித்துப் புறப்பட்டேன் மன்றாடும்
ஐயரைக் கண்டேனடி, - அக்கச்சி
ஐயரைக் கண்டேனடி.

**துரியமும் கடந்ததோர் பெரியவான் பொருளென**
**உரைசெய் வேதங்கள் உன்னு மெய்ச் சத்தே** (1212)

ஜாக்ரத் அவத்தையிலே மனம் செயல்படாத நிலையே துரிய நிலை. அதையும் கடந்து விளங்கும் ஒரு மா மவுன நிலையில் அடையக் கூடிய சூன்யமான வெளியில் உள்ள பொருள் என உரை செய்கின்ற வேதங்கள் வழுத்துகின்ற உண்மையான சத்தே.

**அன்று அதன் அப்பால் அதன் பரத்து அதுதான்**
**என்றிட நிறைந்த என் தனிச் சத்தே** (1214)

அன்றைக்கும் அதற்கு அப்பாலும் அதற்கு மேல் அப்பாலும் அதுவே மேலானது என்று கூறும் அளவிற்கு நிறைந்து விளங்கும் எனது ஒப்பற்ற சத்தே.

குறிப்பு : முன்வரியில் துரியமும் கடந்ததோர் பெரிய வான் பொருள் என்றார். மகாதேவ மாலைப் பாடலில் அப்பாலாய், அதற்கப்பாலாய், அப்பாலுக்கப்பாலாய் என்பார். எல்லாம் கடந்து அறிவிற்கப்பாற்பட்டு விளங்கும் அந்தப் பரம் பொருளுக்கு இணை வேறில்லை அதுவே என்பதே இந்த வரியின் திரண்ட கருத்து.

**என்றும் உள்ளதுவாய் எங்குமோர் நிறைவாய்**
**என்றும் விளங்கிடும் என் தனிச் சித்தே** (1216)

எக்காலத்தும் அழியாது விளங்குகின்ற தன்மை உள்ளதாய், அங்கிங்கெனாதபடி எங்கும் பூரணமாய் நிறைந்து விளங்குகின்றதாய் என்றும் இருப்பதான எனது ஒப்பற்ற சித்தே.

**சத்திகள் பலவாய்ச் சத்தர்கள் பலவாய்**
**இத்தகை விளங்கும் என் தனிச் சித்தே** (1218)

இரவு - பகல் மாறி மாறித் தோற்றுதல், பருவ காலம் தவறாது மழை பெய்தல், பயிர் விளைதல், மரங்களிலுள்ள இலைகள் சூரிய ஒளிச் சேர்க்கையினால் பிராண வாயுவை வெளிப்படுத்துதல் முதலியனவாகச் செயல்கள் பலவாயும், இச் செயல்களைத் தவறாது நடத்துவிக்கும் காரணர்கள் (சத்தர்கள்) பலவாயும் இவை எல்லாமாய் விளங்கும் எனது ஒப்பற்ற சித்தே.

**தத்துவம் பலவாய்த் தத்துவி பலவாய்**
**இத்தகை விளங்கும் என் தனிச் சித்தே** (1220)

தத்துவங்கள் 96 என வகைப்படுத்தப்பட்டுள்ளது. மேலும் அண்ட தத்துவம், பிண்ட தத்துவம் என இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவ்வாறு தத்துவங்கள் பலவாயும்

இத்தத்துவங்கட்கு மூலப் பொருளாய் உள்ளவைகள் பலவாயும் விளங்குகின்ற எனது ஒப்பற்ற சித்தே.

**படி நிலை பலவாய்ப் பதநிலை பலவாய்**
**இடிவற விளங்கிடும் என் தனிச் சித்தே** (1222)

மேலேற்றுகின்ற வழி முறைகள் பலவாய் அவற்றின் முடிவில் அடைகின்ற பதநிலைகள் பலவாய் அவற்றின் விளைவாக உடல் சிதையாமல் அதாவது மரணமிலாப் பெருவாழ்வு பெற்று விளங்குகின்ற எனது ஒப்பற்ற சித்தே.

**மூர்த்தர்கள் பலவாய் மூர்த்திகள் பலவாய்**
**ஏற்பட விளங்கிடும் என் தனிச் சித்தே** (1224)

பிரும்மா, விஷ்ணு, ருத்ரன், மகேஸ்வரன், சதாசிவன் என்போர் ஐம்மூர்த்திகள். சத்திகளைச் செயல்படுத்துவோர் சத்தர்கள். அதுபோல் மூர்த்திகளை நடத்துவோர் மூர்த்தர்கள். அப்படிப்பட்ட மூர்த்தர்கள் பலர்.

பரம்பொருள் ஒன்றே ஆனாலும் மூர்த்திகள் பலவாய் அம் மூர்த்திகளை இயக்கும் மூர்த்தர்கள் பலவாயும் ஏற்பட விளங்குகின்ற எனது ஒப்பற்ற சித்தே.

**உயிர் வகை பலவாய் உடல்வகை பலவாய்**
**இயலுற விளக்கிடும் என் தனிச் சித்தே** (1226)

தாவரம் முதல் மனிதர்கள் வரை ஜீவர்கள் பலவாய், ஒவ்வொருவகை ஜீவனுக்கும் அளிக்கப்பட்ட உடல்வகை பலவாய் நியதியுற விளங்கிடும் எனது ஒப்பற்ற சித்தே.

குறிப்பு: உயிர்த் திரள் ஒன்றேயானாலும் மனித உருவங்கள் ஒன்று போல் ஒன்று இல்லை. வெவ்வேறு வகை உடல்கள். அது போல் மிருகங்கள் என்றால் ஆடு, மாடு, நாய், நரி, யானை, சிங்கம் போன்ற எத்தனையோ வகை மிருகங்கள். அத்தனை வகையிலும் உடல் மாறுபாட்டைக் காண்கிறோம். மேலும் பறவை இனம், ஊர்வன போன்ற

அனைத்திலும் மாறுபட்ட உடல்கள். இவற்றைக் கருத்தில் கொண்டே உடல்வகை என்றார்.

**அறிவவை பலவாய் அறிவன பலவாய்**
**எறிவற விளக்கிடும் என் தனிச் சித்தே** (1228)

அறிந்து கொள்ளவேண்டியவைகள் (பக்தி, யோகம், ஞானம் முதலியன) எவ்வளவோ இருக்க அவற்றை அறிய முயலாது, அறிபவை (உலகியல் விவகாரங்களை மட்டும்) பலவாய் உள்ளன. இது குறித்து என்னை எறியாது அதாவது தள்ளிவிடாது, ஒதுக்காது விளங்கச் செய்கின்ற எனது ஒப்பற்ற சித்தே.

**நினைவவை பலவாய் நினைவன பலவாய்**
**இனைவற விளக்கிடும் என் தனிச் சித்தே** (1230)

இறை சிந்தனை, அருள் அனுபவங்கள் முதலிய பலவும் நினைக்க வேண்டியனவாய் இருக்க அவற்றை நாடாது உலக முகப்பட்ட பராக்கில் பொருள் தேடுவது, புகழ்தேடுவது, வேடிக்கை வினோதங்கள் நாடுவது மேலும் பெண் விஷய இச்சை, மண் விஷய இச்சை, பொன் விஷய இச்சை, முதலிய இச்சைகள் பற்றியே நினைக்குமாறு செய்து, இறை நிலையடையாது பிரியுமாறு செய்கின்ற எனது ஒப்பற்ற சித்தே.

**காட்சிகள் பலவாய்க் காண்பன பலவாய்**
**ஏட்சியின் விளக்கிடும் என் தனிச் சித்தே** (1232)

அகத்திலே காண வேண்டிய காட்சிகள் (ஞான நாடகக் காட்சி) பலவாய் இருக்க அவற்றைவிட்டு வேறு எதை எதையோ (நாடகம் சினிமா போன்றவை) காணுமாறு உலகியலை அமைத்து வைத்துள்ள என்னுடைய ஒப்பற்ற சித்தே.

வான நாடரும் நாடரும் மன்றிலே வயங்கும்
ஞான நாடகக் காட்சியே நாம் பெறல் வேண்டும்
ஊன நாடகக் காட்சியால் காலத்தை ஒழிக்கும்
ஈன நாடகப் பெரியீர்காள் வம்மினோயீண்டே

**செய்வினை பலவாய் செய்வன பலவாய்**
**எய்வற விளக்கிடும் என் தனிச் சித்தே** (1234)

செய்ய வேண்டிய செயல்கள் பலவாயிருக்க அவற்றை நாடாது உலகியல் சம்மந்தப்பட்ட பலவேறு செயல்களே செய்கின்றவாறு அமைத்து விளக்கம் செய்கின்ற எனது ஒப்பற்ற சித்தே

செய்வினை என்னவாயிருக்கலாமெனில் தானம், தவம், இச்சையின்றி நுகர்தல், இடந்தனித்திருத்தல், தெய்வம் பராவல், பிறவுயிர்க்கிரங்கல், பெருங்குணம் பற்றல், பாடிப்பணிதல், பக்தி செய்திருத்தல் முதலியன.

செய்வன: பணம் சேர்ப்பதற்கும், புகழடைவதற்கும், குடும்பத்தை வளர்ப்பதற்கும், சுய நலத்திற்கும் உலகியல் இச்சைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்கும் மட்டுமே வாழ்வது,

**அண்ட சராசரம் அனைத்தையும் பிறவையும்**
**எண்டற விளக்கும் என் தனிச் சித்தே** (1236)

எல்லாக் கிரகங்களும் சேர்ந்தது ஓர் அண்டம். அந்த அண்டத்திலே அசைவு உடைய அனேக பொருட்கள் உள்ளன. அவை அனேகமாக உயிருள்ள ஜீவ ராசிகளாகும். அதே போல் அசையாப் பொருள்களும் நிறைய உள்ளன. இவை அனேகமாக ஜடப் பொருள்களாக இருக்கலாம்.

இவ்வாறு உள்ள அண்டங்களையும் அண்டத்திலே உள்ள அசையும் பொருள்களையும் அசையாப் பொருட்களையும் மற்றுமுள்ள எல்லாவற்றையும் தன் ஆட்சியின் கீழ் நிறுத்தி வைத்துள்ள எனது ஒப்பற்ற சித்தே.

**எல்லாம் வல்ல சித்தென மறை புகன்றிட**
**எல்லாம் விளக்கிடும் என்தனிச் சித்தே** (1238)

உன்னால் ஆகாதது ஒன்றுமில்லை. எல்லாம் செய்யக்கூடிய ஆற்றலுடையவன். வேதங்கள், உன்னால் ஆகாத சித்து என்பது

எதுவும் இல்லை எனக் கூற, அவ்வாறே எல்லாவற்றையும் நின் வல்லபத்திற்குள் நிறுத்தி இயக்கிடும் எனது ஒப்பற்ற சித்தே

**ஒன்றதில் ஒன்றென்றுரைக்கவும் படாதாய்**
**என்றும் ஓர் படித்தாம் என் தனி இன்பே** (1240)

இதில் ஓர் இன்பம் அதில் ஓர் இன்பம் என்று கூற முடியாததாய் எக்காலத்தும் மாறுபடாத ஒரே தன்மையுடையதாய் விளங்குகின்ற எனது ஒப்பற்ற இன்பமே.

குறிப்பு: சத்து சித்து ஆனந்தம் ஒன்று சேரச் சச்சிதானந்தம் ஆகிறது. சத்தும் சித்தும் முன்பு கூறப்பட்டு சச்சிதானந்த இன்பம் இங்கு குறிப்பிடப்படுகிறது. அந்த இன்பம் என்றும் மாறுபடாத ஒரே தன்மையுடையதாய் விளங்குகின்றதாம்.

**இது அது என்னா இயல் உடையது வாய்**
**எதிரற நிறைந்த என் தனி இன்பே** (1242)

இந்த சச்சிதானந்த இன்பத்திற்கீடாக இன்னொரு இன்பம் இல்லை. இதுவும் இன்பம் அதுவும் இன்பம் என்று இன்னொரு இன்பத்தை இதற்கு எதிர் கூற முடியாத தன்மை கொண்டு எங்கும் பூரணமாய் விளங்கும் எனது ஒப்பற்ற இன்பமே.

**ஆக்குறும் அவத்தைகள் அனைத்தையும் கடந்து மேல்**
**ஏக்கற நிறைந்த என் தனி இன்பே** (1244)

இந்த உடம்பிற்கு வரக்கூடிய எல்லா அவத்தைகளையும் கடந்து இதற்கு மேல் தேவைகள் எதுவும் இல்லை என்ற ஏக்கமற்ற மனதில் நிறைந்து விளங்கும் எனது ஒப்பற்ற இன்பமே.

குறிப்பு: ஜாக்ரத், சொப்னம், சுழுத்தி, துரியம் என்பன அவத்தைகள், இவைகள் கடந்து துரியாதீத நிலையில் நிராசை கொண்ட மனதில் தோன்றுவதே நிறைந்த இன்பம் ஆகும்.

**அறிவுக் கறிவினில் அது அது அதுவாய்**
**எறிவற் றோங்கிய என் தனி இன்பே** (1246)

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய கரணங்கள் கடந்து அறிவாய் விளங்கி, அறிவினால் அறிவை அறியத் தொடங்கிய காலத்து அதுவாகிய அருட்பெருஞ்ஜோதி அதுவாக நின்று பிரிவென்பதில்லாது நின்று ஓங்க விளங்கும் எனது ஒப்பற்ற இன்பமே.

**விடயம் எவற்றினும் மேன்மேல் விளைந்து அவை**
**இடையிடை ஓங்கிய என் தனி இன்பே** (1248)

எந்த விஷயமாயினும் அதன் மேலும் மேலும் இன்பமானது தோன்றுமாம். இடைவெளி என்பது இல்லாமல் ஓங்குமாம். இவ்வாறு எந்தெந்த விஷயங்களிலும் இன்பமே இடையீடு இல்லாமலும் இடைவெளி இல்லாமலும் மேன்மேலும் ஓங்க விளங்கிய எனது ஒப்பற்ற இன்பமே.

**இம்மையும் மறுமையும் இயம்பிடும் ஒருமையும்**
**எம்மையும் நிரம்பிடும் என்தனி இன்பே**(1250)

சிறு சிறு முயற்சிகளைக் கொண்டு சிலகாலம் அனுபவிக்கின்ற சிறிய சிறிய இன்பங்கள் இம்மை இன்பம் என்பதாகும். பெரு முயற்சியால் பலகாலம் அடையும் பெரிய பெரிய இன்பங்களே மறுமை இன்பம் என்பதாகும். ஞானிகள் தவத்தில் ஈடுபட்டு அலைந்து கொண்டிருக்கின்ற மனதை அடக்க ஏற்படும் அநுபவ நிலையே ஒருமை ஆகும்.

இம்மை, மறுமை என்பதுடன் ஞான அனுபவிகள் கூறுகின்ற ஒருமையும் எக்காலத்தும் விலகுறாது நிரம்பியே விளங்கும் எனது ஒப்பற்ற இன்பமே

**முத்தர்கள் சித்தர்கள் சத்திகள் சத்தர்கள்**
**எத்திறத் தவர்க்குமாம் என் தனி இன்பே.** (1252)

முத்தி என்பது நிலை முன் உறு சாதனம். அந்நிலை பெற்றோர் முத்தர்கள் ஆவர். அவர்கள் பூமியிலே இடம் பெற்றிருக்கின்றவர்களாவர்.

சித்தி என்பது நிலை சேர்ந்த அனுபவம். இந்த அனுபவம் பெற்றவர்கள் சித்தர்கள். இவர்கள் ஆகாயத்தில் இடம் பெற்றவர்கள்.

முடிந்த முடிபாகிய சித்தி நிலைக்கு முன் உள்ள முத்தர்களும், சித்தி நிலை பெற்ற சித்தர்களும், எல்லாச் செயல்பாடுகளையும் நிகழ்த்துகின்ற சத்திகளும், அச்செயல்பாடுகட்குக் காரண கர்த்தராய் விளங்கும் சத்தர்களும் மேலும் எவ்வித ஆற்றல் பெற்றவர்களும் உரிமை பெற்று அனுபவிக்கின்ற எனது ஒப்பற்ற இன்பமே.

குறிப்பு: சச்சிதானந்த இன்பம் அனைவர்க்கும் பொதுவானது.

**எல்லா நிலைகளின் எல்லா உயிருறும்**
**எல்லா இன்புமாம் என் தனி இன்பே** (1254)

அசைவன, அசையாதன, ஊர்வன, பறப்பன, உறுவன, நடப்பன இப்படிப் பல நிலைகளில் வாழ்கின்ற எல்லா உயிர்களும் அடைகின்ற இன்பங்கள் எல்லாமாய் விளங்கும் எனது ஒப்பற்ற இன்பமே.

**கரும்புறு சாறும் கனிந்த முக்கனியின்**
**விரும்புறு மிரதமும் மிக்க தீம்பாலும்**

**குணங்கொள் கோற்றேனும் கூட்டி ஒன்றாக்கி**
**மணங்கொளப் பதம் செய்வகையுற இயற்றிய**

**உணவெனப் பல்கால் உரைக்கினும் நிகரா**
**வணமுறும் இன்ப மயமே அதுவாய்க்**

**கலந்தறி உருவாய்க் கருதுதற்கரிதாய்**
**நலந்தரு விளக்கமும் நவிலரும் தண்மையும்**

**உள்ளதாய் என்றும் உள்ளதாய் என்னுள்**
**உள்ளதாய் என்றன் உயிர் உளம் உடம்புடன்.**

**எல்லாம் இனிப்ப இயலுறு சுவையளித்து**
**எல்லாம் வல்ல சித்தியற்கையதாகிச்**

**சாகாவரமும் தனித்த பேரறிவும்**
**மாகாதலில் சிவ வல்லப சக்தியும்**

**செயற்கரும் அனந்த சித்தியும் இன்பமும்**
**மயக்கறத் தகுந்திறல் வண்மையதாகிப்**
**பூரணவடிவாய்ப் பொங்கி மேல் ததும்பி**
**ஆரண முடியுடன் ஆகம முடியும்**

**கடந்தெனது அறிவாம் கனமேல் சபை நடு**
**நடந்திகழ்கின்ற மெய்ஞ்ஞான ஆரமுதே** (1255-1274)

கரும்பிலிருந்து பிழிந்தெடுத்த கருப்பஞ்சாறும், விருப்பத்தை வளர்க்கின்ற நன்கு கனிந்த மா, பலா, வாழை முதலிய முக்கனிகளைப் பிழிந்தெடுத்த சாறும் சுவைமிகுந்த தீம்பாலும்

தன்மை கெடாத சுவைமிக்க கொம்புத் தேனையும் கலந்து ஒன்றாக்கி தீய்ந்து போகாமல் பதமாகக் காய்ச்சி எந்த முறையில் செய்ய வேண்டுமோ அவ்வகையில் தயார் செய்யப்பட்ட

உணவெனப் பலமுறை கூறினாலும், ஈடுஇணை இல்லாது அழகாய் விளங்கும்.

இன்ப மயமாய் இதனுடன் கலந்து அறிவே வடிவாய் நின்று மனதால் எண்ணிப் பார்க்கவும், நன்மையே தருகின்ற பெரு விளக்கமும் சொல்லுக் கடங்காத சாந்த நிறைவும்.

உள்ளதாய், அழிவற்று என்றென்றும் விளங்குவதாய், புறத்தேயன்றி என் உள்ளே உள்ளதாய் என்னுடைய உயிர், உள்ளம், உடம்புடன்

எல்லாம் ஆனந்தமடைய மாறுபடாத சுவை அளித்து எல்லாம் செய்யவல்ல சித்தை என்னுடைய இயல்பானதாக்கி

சாகாத வரமும் ஈடு இணை சொல்ல முடியாத பேரறிவும் தன்னையே அர்ப்பணிக்கின்ற பேரன்பில் மோனத்தினால் பெறப்பட்ட ஆற்றல் மிக்க சக்தியும்.

செய்வதற்கருமையான பலவித சித்திகளையும், ஆனந்தத்தையும், மும்மலங்களுள் ஒன்றான மாயையானது அறுபடும்படி அளிக்கக் கூடிய ஆற்றல் மிக்கதாகித் தூலவடிவத்தில் எங்கும் நிறைந்த பூரண வடிவமாகிய ஆனந்தம் உள்ளே எழுந்து பொங்கி மேலும் துளும்பி வேதம் கூறுகின்ற முடிவும், ஆகமம் விளக்குகின்ற முடிவும் கடந்து எனது அறிவெனும் உறுதி மிகுந்த மேலான சபை நடுவே நடனம் இயற்றுகின்ற மெய்ஞ்ஞான விளைவாய்க் கிடைத்த சிறந்த அருமையான அமுதமே.

**சத்திய அமுதே தனித்திரு அமுதே**
**நித்திய அமுதே நிறை சிவ அமுதே** (1276)

உண்மையில் விளைந்த அமுதே. அதாவது பொய் வந்த உள்ளத்தில் போகாண்டி என்றும், பொய்யை ஒழித்துப் புறப்பட்டேன் மன்றாடும் ஐயரைக் கண்டேனடி என்றும் கூறுவார். மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றிலும் பொய் கலவாது உண்மை, வாய்மை, மெய்ம்மை ஆகிய மூன்றும் கொண்டு ஒழுகுவோர் உள்ளத்தில் மட்டுமே இறைவன் குடிபுகுவதால் சத்திய அமுதாயிற்று.

ஒப்பற்ற தெய்வ சக்தி மிகுந்த அமுதே.
அழியா நிலை பெற்ற நித்திய அமுதே
குறைவற்ற பரிபூரணமாக விளங்கும் நிறை சிவ அமுதே.

**சச்சிதானந்தத் தனி முதல் அமுதே**
**மெய்ச் சிதாகாச விளைவருள் அமுதே** (1278)

சத்து சித்து ஆனந்தமென விளங்கும் சச்சிதானந்தத்தின் ஒப்பற்ற முழுமுதலாய் விளங்கும் அமுதே.

மெய்யானதாய் விளங்கும் அறிவாகாசமாய் உள்ள சிற்சபையில் விளைந்த அருள் அமுதே.

**ஆனந்த அமுதே அருள் ஒளி அமுதே**
**தானந்த மில்லாத் தத்துவ அமுதே** (1280)

ஆனந்தத்தைத் தருகின்ற அமுதே. அருள் ஒளியான அமுதே. தனக்கு முடிவு என்பது இல்லாத தத்துவ அமுதே.

**நவ நிலை தரும் ஓர் நல்ல தெள்ளமுதே**
**சிவ நிலை தனிலே திரண்ட உள்ளமுதே** (1282)

விந்து, நாதம், பர விந்து, பர நாதம், திக்கிராந்தம், அதிக்கிராந்தம், சம்மேளனம், சுத்தம் ஆகிய எட்டு நிலை அனுபவங்களைக் கடந்து ஒன்பதாவது நிலையாகிய அதீத அனுபவத்தில் பெறக் கூடிய சிறப்பான தெள்ளமுதே முடிந்த அனுபவமான சிவநிலை தனிலே திரண்டு எழுந்த அக அமுதே.

**பொய்படாக் கருணைப் புண்ணிய அமுதே**
**கைபடாப் பெருஞ்சீர்க் கடவுள் வானமுதே** (1284)

பலர் கருணை காட்டுகின்றார்கள். ஆழ்ந்து நோக்கினால் புகழுக்காகவும், பொருளுக்காகவும், சுய விளம்பரம் போன்ற தற்பெருமைக்காகவும் பிறர் மேல் கருணை காட்டி நடிப்பது தெரிய வருகிறது. இவ்வாறான கருணையெல்லாம் உண்மையான கருணையா?

பிற ஜீவன்கள் மீது உண்மையாகவே கருணை காட்ட வேண்டும். இது இறைவன் ஒருவனுக்கே சாத்தியம். அவன் கருணையோ பொய்படாதது - உண்மையானது - புண்ணியர்கட்கே கிடைக்கக்கூடியது. யாருடைய கையாலும் தயாரிக்கப்படாதது. பெருவாழ்வளிக்கக்கூடிய கடவுள் தருகின்ற வானமுதமாகும்.

உண்மையான கருணை காட்டும் புண்ணியர்க்கான அமுதே - யாராலும் தயாரிக்கப்படாத பெருவாழ்வு பெற வந்த கடவுள் எனும் வான வெளி அமுதே.

**அகம் புறம் அகப்புறம் ஆகிய புறப்புறம்**
**உகந்த நான்கிடத்தும் ஓங்கிய அமுதே** (1286)

அகமாகிய ஆன்மாவிலே அக அமுதாகவும் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய கரணங்களிலே புற அமுதாகவும், ஜீவனிலே அகப்புற அமுதாகவும், மெய் வாய், கண், மூக்கு, செவி ஆகிய இந்திரியங்களிலே புறப்புற அமுதாகவும் ஆகிய நான்கிடத்தும் ஓங்கிய அமுதமே.

**பனி முதல் நீக்கிய பரம்பர அமுதே**
**தனி முதலாய சிதம்பர அமுதே** (1288)

பனி என்பது நடுக்கம், பயத்தினால் ஏற்படும் நடுக்கம் முதலாகிய எல்லாத் துரிசுகளையும் நீக்கிய மேன்மைபொருந்திய அமுதே.

எல்லாவற்றிற்கும் முதன்மைத்தானத்தில் விளங்கும் சிதம்பர அமுதே.

**உலகெலாம் கொள்ளினும் உலப்பிலா அமுதே**
**அலகிலாப் பெருந்திறல் அற்புத அமுதே** (1290)

உலகத்தார் அனைவரும் உண்டாலும் குறைவுபடாத அமுதே. அளவற்ற பேராற்றல் கொண்ட அற்புதச் செயல்களை நிகழ்த்துகின்ற அமுதே.

**அண்டமும் அதன்மேல் அண்டமும் அவற்றுள**
**பண்டமும் காட்டிய பரம்பரமணியே** (1292)

அண்டத்தையும் அதனதன்மேல் அடுக்கடுக்காய் அமைந்துள்ள அண்டங்களையும் அவைகளுக்குள் அடங்கியுள்ள பொருட்களையும் நன்கு விளக்கிக் காட்டுகின்ற பரம்பரமணியே.

**பிண்டமும் அதிலுறு பிண்டமும் அவற்றுள**
**பண்டமும் காட்டிய பராபரமணியே** (1294)

தூல உடம்பையும் அதனுள்ளே இருக்கின்ற சூட்சும உடலையும் அவற்றுள் இருக்கின்ற பொருளாகிய சிவத்தையும் காட்டிய பரம் அபரம் ஆகிய இரண்டினுக்கும் காரணமான பராபரமணியே.

**நினைத்தவை நினைத்தவை நினைத்தாங்கெய்துற**
**அனைத்தையும் தரும் ஓர் அரும் பெறல் மணியே** (1296)

எண்ணிய எண்ணங்கள் அனைத்தினையும் நான் எண்ணியவாறே அடையும்படி எல்லாவற்றையும் அளிக்கும் அரியதோர் அரும்பெறல்மணியே.

**விண்பதம் அனைத்தும் மேற்பதம் முழுவதும்**
**கண்பெற நடத்தும் ககனமாமணியே** (1298)

ஆகாயத்திலே இருக்கின்ற கோள்கள் அனைத்திலும் அதற்கும் மேலாக விளங்குகின்ற இடங்கள் முழுவதும் நேரிலே கண்களால் காணுமாறு நடத்தி வைக்கின்ற ககன மா மணியே.

**பார்பதம் அனைத்தும் பகர் அடி முழுவதும்**
**சார்புற நடத்தும் சர ஒளி மணியே** (1300)

உலகிலுள்ள எல்லா இடங்களையும் அதற்குக் கீழே உள்ள பாதாள உலகம் எனச் சொல்லப்படும் இடங்கள் முழுவதும் அடைவிக்கும் சர ஒளி மணியே.

**அண்ட கோடிகளெலாம் அரைக் கணத்தேகிக்**
**கண்டு கொண்டிட ஒளிர் கலை நிறைமணியே** (1302)

எத்தனை கோடி அண்டங்கள் உண்டோ அத்தனை அண்டங்களையும் அரைக் கண நேரத்தில் நேரில் சென்று கண்டு கொளும்படிச் செய்யும் கலை நிறை மணியே.

**சராசர உயிர்தொறும் சாற்றிய பொருள்தொறும்**
**விராவியுள் விளங்கும் வித்தக மணியே** (1304)

அசையும் உயிர்கள் (தாவரம் தவிர ஏனைய எல்லா உயிர்களும்) அசையா உயிர்கள் (தாவரம் - இவை இடம் விட்டு இடம் நகர முடியாதவை யாதலால் அசையா உயிர்கள் எனப்பட்டன) மற்றுமுள்ள ஜடப் பொருள்கள் அனைத்திலும் பரவி அவற்றினுள்ளே விளங்கும் வித்தக மணியே.

**மூவரும் முனி வரும் முத்தரும் சித்தரும்**
**தேவரும் மதிக்கும் சித்தி செய் மணியே** (1306)

பிரும்மா, விஷ்ணு, உருத்திரன் ஆகிய மூவரும், உலகியல் ஆசைகளை வெறுத்து அருளடையத் தவத்தை மேற்கொண்டுள்ள முனிவர்களும், பிறவா நெறியாகிய, அதாவது முடிந்த முடிபாகிய சித்திக்கு முன் நிலையான முத்தி அனுபவத்தைப் பெற்ற முத்தரும், அனுபவத்தின் எல்லையாகிய சித்தியை அடைந்துவிட்ட சித்தரும் தயவே வடிவாய் விளங்கும் தேவரும் வியந்து பாராட்டும் சித்தி செய்கின்ற மணியே.

**தாழ்வெலாம் தவிர்த்து சகமிசை அழியா**
**வாழ்வெனக்களித்த வளர் ஒளி மணியே** (1308)

இழிவைத் தரக் கூடிய கேவலமான செயல்கள் அனைத்தினையும் போக்கி இவ்வுலகத்திலே என்றும் வாழ்கின்ற மரணமில்லாத அழியா வாழ்வை எனக்கு அளித்த வளர் ஒளி மணியே.

**நவமணி முதலிய நலமெலாம் தரும் ஒரு**
**சிவமணி எனும் அருட் செல்வ மாமணியே** (1310)

இதுவரை கூறப்பட்ட ஒன்பது மணிகள் நலமே பயப்பனவாகும். அவ்வாறு நலமே பயக்கின்ற ஒன்பது மணிகள் முதலிய நன்மைகள் எல்லாம் தருகின்ற ஒரு சிவமணி என்று கூறப்படும் அருள் நிறைந்த செல்வ மிகு மாமணியே.

**வான் பெறற்கரிய வகையெலாம் விரைந்து**
**நான் பெற அளித்த நாத மந்திரமே** (1312)

(வான் என்பது இடவாகு பெயரால் தேவர்களைக் குறிப்பதாகும்)

தேவர்களாலும் அடைவதற்கு அரிதாகிய எல்லாவற்றையும், மிக விரைவாக நான் அடையும்படி அளித்த நாதமாகிய மந்திரமே.

**கற்பம் பல பல கழியினும் அழியாப்**
**பொற்புற அளித்த புனித மந்திரமே** (1314)

நான்கு யுகங்கள் சேர்ந்ததை ஒரு கற்பகாலம் எனக் கூறுவர். அப்படிப்பட்ட கற்பகாலங்கள் எத்தனை கழிந்தாலும் அழியாத அழகுடன் நான் விளங்குமாறு எனக்களித்த புனிதம் நிறைந்த மந்திரமே.

**அகரமும் உகரமும் அழியாச் சிகரமும்**
**வகரமும் ஆகிய வாய்மை மந்திரமே** (1316)

உயிர் நிலையாகிய "அ" என்பதும் இறை நிலையாகிய "உ" என்பதும் அழிவே இல்லாத "சி" என்பதும் காற்றைப் பிடிக்கும் துறையாகிய "வ" என்பதும் எல்லாம் ஒன்றேயாகிய வாய்மை மிக்க மந்திரமே.

**ஐந்தென எட்டென ஆறென நான்கென**
**முந்துறு மறைமுறை மொழியு மந்திரமே** (1318)

நமசிவாய என்பது ஐந்தெழுத்து மந்திரம்
ஓ நமோ நாராயணாய என்பது எட்டெழுத்து மந்திரம்
சரவணபவ என்பது ஆறெழுத்து மந்திரம்
சிவசிவ என்பது நான்கெழுத்து மந்திரம்
முன்பு தோன்றிய வேதங்களால் ஐந்தெழுத்தாலும், எட்டெழுத்தாலும், ஆறெழுத்தாலும், நான்கெழுத்தாலும் மொழியப்பட்ட மந்திரமே

**வேதமும் ஆகம விரிவுகள் அனைத்தும்**
**ஓத நின்றுலவாது ஓங்கு மந்திரமே** (1320)

வேதங்களும் அதன் விரிவுகளாகிய உபநிஷத்துக்களும் ஆகமங்களும் அதன் விரிவுகளாகிய இதிகாச புராணங்களும் இவை அனைத்தும் எவ்வளவு தான் விளக்கிக் கூறியும் அதனுள் அடங்காதும் குறையாதும் ஓங்குகின்ற மந்திரமே.

**உடற்பிணி அனைத்தையும் உயிர்ப்பிணி அனைத்தையும்**
**அடர்பறத் தவிர்த்த அருட்சிவ மருந்தே** (1322)

நம் உடலுக்கு வருவது உடற்பிணி. நம் உற்றார் உறவினர் துயரப் படுவது கண்டு நாமடைவது உயிர்ப்பிணி. இவை இரண்டுமே நெருங்காமல் தவிர்த்த அருள் சிவ மருந்தே.

குறிப்பு: உடலில் ஏற்படும் ஊனம், பிணி முதலியன உடற்பிணி. மனதை வருந்தச் செய்யும் பிறரது துயரமே உயிர்ப்பிணியாகும்.

**சித்திக்கு மூலமாம் சிவ மருந்தென உளம்**
**தித்திக்கும் ஞானத் திருவருண் மருந்தே** (1324)

அடைய வேண்டிய பேறாகிய சித்திக்கு ஆதாரமானது சிவ மருந்து என உளம் இனிக்க விளங்கும் ஞானத் திருவருண் மருந்தே.

**இறந்தவரெல்லாம் எழுந்திடப் புரியும்**
**சிறந்த வல்லபமுறு திருவருண் மருந்தே** (1326)

இறந்தவர்கள் அனைவரையும் மீள உயிர்ப்பிக்கக் கூடிய மிகச் சிறந்த ஆற்றலுடைய திருவருள் மருந்தே.
குறிப்பு: எந்த அனுபவம் பெற்றவர்கள் இறந்தாரை எழுப்ப முடியும்?

துரிய மலை மேலுளதோர் ஜோதி வளநாடு
தோன்றும் அதில் ஐயர் நடம் செய்யும் மணி வீடு
தெரியுமது கண்டவர்கள் காணில் உயிரோடு
செத்தார் எழுவார் என்று கைத்தாளம் போடு

துரிய மலை மேல் = துரியாதீதம்
மணி வீடு = பொற்சபை

**மரணப் பெரும் பிணி வாராவகை மிகு**
**கரணப் பெருந்திறல் காட்டிய மருந்தே** (1328)

மரணம் என்பது எல்லாப் பிணிகளைவிடப் பெரும் பிணியாகும். அந்தப் பெரும்பிணி வராமல் தடுக்கும் பொருட்டு புடைத்து எழுகின்ற மனம், புத்தி, சித்தம், அகங்காரம் உள்ளம் என்கின்ற கரணங்களின் பேராற்றலை விளக்கிக் காட்டிய மருந்தே.

**நரை திரை மூப்பவை நண்ணா வகை தரும்**
**உரை தரு பெருஞ்சீர் உடைய நன் மருந்தே** (1330)

உடல் ரோமம் கருமை நிறம் மாறி வெளுத்து நரை உண்டாகின்றது. உடல் தோலில் சுருக்கங்கள் ஏற்பட்டுத் திரை உண்டாகிறது. இளமைக் கோலம் மாறி உடலில் முதுமை தோன்றுகிறது. இப்படிப்பட்ட நரை, திரை, மூப்பு முதலியவை நெருங்கா வண்ணம் புகழைத் தருகின்ற வாழ்வளிக்கும் சீர் உடைய நல்ல மருந்தே.

**என்றே என்னினும் இளமையோடிருக்க**
**நன்றே தரும் ஒரு ஞான மா மருந்தே** (1332)

வயது ஏற ஏற இளமை மாறி முதுமை ஏற்படுகிறது. ஆனால் என்றும் இளமை மாறாது இருக்கும்படி நன்மை தருகின்ற ஒப்பற்ற ஞான மா மருந்தே.

**மலப்பிணி தவிர்த்து அருள்வலம் தருகின்றதோர்**
**நலத்தகை அதுவென நாட்டிய மருந்தே** (1334)

ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மலங்களும் பிணிகளேயாகும். இந்த நோயையும் நீக்கி அருளாகிய ஆற்றலைத் தருகின்ற நல்லதரமுடையது அது என்று நிலை நாட்டிய மருந்தே.

**சிற்சபை நடுவே திருநடம்புரியும்**
**அற்புத மருந்தெனும் ஆனந்த மருந்தே** (1336)

சிற்சபையாகிய புருவ மத்தியின் நடுவே அருள் நடம் புரிகின்ற அற்புதமான மருந்து என்று கூறப்படும் ஆனந்தமான மருந்தே.

**இடையுறப் படாத இயற்கை விளக்கமாய்த்**
**தடை ஒன்றுமில்லாத் தகவுடையதுவாய்**
**மாற்றிவை என்ன மதித்தளப் பரிதாய்**
**ஊற்றமும் வண்ணமும் ஒருங்குடையதுவாய்க்**
**காட்சிக்கினிய நற்கலையுடையதுவாய்**
**ஆட்சிக்குரிய பன்மாட்சியும் உடைத்தாய்**
**கைதவர் கனவினும் காண்டற்கரிதாய்ச்**
**செய்தவப் பயனாம் திருவருள் வலத்தால்**
**உளம் பெறும் இடமெலாம் உதவுக எனவே**
**வளம்பட வாய்த்து மன்னிய பொன்னே** (1337 - 1346)

குறுக்கீடில்லாத இயற்கையான விளக்கமாய்த் தடையென்பது ஒன்றுமில்லாப் பெருமையுடையதாய்

அதனுடைய தரம் இத்தன்மையது என்று மதிக்கப்பட முடியாததாய் செழுமையும் அழகும் ஒருங்கே உடையதாய் காண்பதற்கினிய நல்ல அறிவுத் திறன் வாய்ந்ததாய் ஆட்சி செலுத்துதற்குரிய பெருமைகள் பல உடையதாய்.

வெறுப்பவர் கனவினும் காண முடியாததாய், ஆற்றுகின்ற தவத்தின் பயனாகிய திருவருட் சக்தியால்.

உள்ளமாகிய அறிவு எங்கெல்லாம் யாருக்கெல்லாம் உதவ எண்ணுகின்றதோ அவ்வாறெல்லாம் உதவுக என்று வளமோடு கிடைத்து விளங்குகின்ற பொன்னே.

**புடம்படாத் தரமும் விடம்படாத்திறமும்**
**வடம் படா நலமும் வாய்த்த செம்பொன்னே** (1348)

குற்றம் படாத தரம் உடையதாய் விஷத் தன்மை ஏறாத உறுதி உடையதாய் மாறுபாடடையாத நன்மையும் உடைய செம் பொன்னே.

**மும்மையும் தரும் ஒரு செம்மையை யுடைத்தாய்**
**இம்மையே கிடைத்திங்கிலங்கிய பொன்னே** (1350)

இறந்த கால வாழ்வு, நிகழ் கால வாழ்வு, எதிர்கால வாழ்வு, ஆகிய மூன்றையும் தரக்கூடிய ஒப்பற்ற சிறப்பை உடையதாய் இப்பிறப்பிலேயே எனக்குக் கிடைத்து இங்கேயே அனுபவிக்க விளங்கும் பொன்னே.

விளக்கம்: மும்மை என்பது முக்காலமே. நிகழ்காலம், எதிர்காலம் என்பவை மறுக்க இயலாது. இறந்த காலத்தை எப்படித் தர முடியும் என்ற வினா எழலாம்.

சுத்த சன்மார்க்க அனுபவத்தில் திரைந்து திரைந்து உளுத்தவரும் திரும்பவும் இளமை அடைய முடியும். எனவே கழிந்து போன இறந்த கால வாழ்வு மீண்டும் தர வல்ல பொன்னே என்று இறைவனைப் பாராட்டுகின்றார்.

(முக்காலத்தும் அழியா மூர்த்தம் அடைந்திடவே என்ற பாடல் வரியே ஆதாரம்)

மீண்டும் இளமையடைவதற்கு ஆதாரம்:

விரைந்து விரைந்து அடைந்திடுமின் மேதினியீ ரிங்கே
மெய்மை உரைக்கின்றேன் நீர் வேறு நினையாதீர்
திரைந்து திரைந்து உளுத்தவரும் இளமை அடைந்திடவும்
செத்தவர்கள் எழுந்திடவும் சித்தாடல்புரிய
வரைந்து வரைந்து எல்லாம் செய்வல்ல சித்தன்தானே
வருகின்ற தருணமிது வரம் பெறலாம் நீவிர்
கரைந்து கரைந்து உளம் உருகிக் கண்களில் நீர் பெருகிக்
கருணை நடக்கடவுளை உட்கருதுமினோ களித்தே

(திருவருட்பா 5583)

**எடுத்தெடுத்து தவினும் என்றும் குறையாது**
**அடுத்தடுத்து ஓங்கும் மெய்யருளுடைப் பொன்னே** (1352)

எவ்வளவுதான் எடுத்து எடுத்துக் கொடுத்தாலும் எக்காலத்தும் குறைவுபடாது மீண்டும் மீண்டும் வளர்ந்து கொண்டே இருக்கின்ற உண்மையான அருளுடைய பொன்னே.

**தளர்ந்திடேல் எடுக்கின் வளர்ந்திடுவேம் எனக்**
**கிளர்ந்திட உரைத்துக் கிடைத்த செம்பொன்னே** (1354)

எடுத்தால் குறையுமோ என்று தளராதே - எடுத்தால் குறையாது வளர்வோம் என உள்ளமானது குதூகலிக்குமாறு கூறி எனக்குக் கிடைத்த செம்பொன்னே.

**எண்ணியதோறும் இயற்றுக என்றெனை**
**அண்ணி என் கரத்தில் அமர்ந்த பைம் பொன்னே** (1356)

நினைத்த போதெலாம் செயல்படுக என்று எனையடைந்து என் கரத்தில் வீற்றிருக்கும் பைம்பொன்னே.

**நீ கேள் மறக்கினும் நின்னையாம் விட்டுப்**
**போகேம் என எனைப் பொருந்திய பொன்னே** (1358)

நீ என் உறவு என்பதை நானே மறந்தாலும் உன்னை நான் விட்டுப் பிரியமாட்டேன் என்று கூறி என்னைக் கலந்த பொன்னே.

குறிப்பு: நான் மறந்தேன் எனினும் எனைத்தான் மறவான் எனது நாயகன்...

**எண்ணிய எண்ணியாங்கு எய்திட எனக்குப்**
**பண்ணிய தவத்தால் பழுத்த செம்பொன்னே** (1360)

எண்ணியதை எண்ணியவாறு நான் அடைய நான் செய்த தவத்தால் கனிந்து எனக்குக் கிடைத்த செம்பொன்னே. ஆதாரம்:

பண்ணிய பூஜை நிறைந்தது சிற்றம்பல நடங் கண்டு
எண்ணிய எண்ணம் பலித்தது - மெய்யின்பம் எய்தியதோர்
தண்ணியல் ஆரமுதுண்டனன் கண்டனன் சாமியை நான்
நண்ணிய புண்ணியம் என்னுரைக்கேன் இந்த நானிலத்தே

(திருவருட்பா 5398)

**விண்ணியல் தலைவரும் வியந்திட எனக்குப்**
**புண்ணியப் பயனால் பூத்த செம்பொன்னே** (1362)

விண்ணவர்கட்கும் தலைவராய் உள்ளவர்கள்கூட ஆச்சர்யம் அடையும்படி நான் செய்த புண்ணியத்தின் விளைவாய் எனக்குக் கிடைத்த செம்மையான பொன்னே.

**நால்வகை நெறியினும் நாட்டுக எனவே**
**பால்வகை முழுதும் பணித்த பைம்பொன்னே** (1364)

சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு வகை நெறிகளிலும் ஒழுகி இறைவனை அடைக என்று ஆண் பெண் ஆகிய இரு பாலார்க்கும் ஆணையிட்ட பசும்பொன்னே.

**எழுவகை நெறியினும் இயற்றுக எனவே**
**முழுவகை காட்டி முயங்கிய பொன்னே** (1366)

1) கட்டகலுதல் - பந்தமறுத்தல்
2) கரணம் நீக்கிக் கலையகற்றுதல் - மனமடக்கல்
3) கருவியெலாம் கழற்றுதல் - பொறியடக்கல்
4) மாயைவிட்டகலுதல் - அவா அறுத்தல்
5) கரும மல போதம் யாவும் விடுத்தல் - இச்சையின்றி நுகர்தல்
6) சகசமல வீக்கம் நீக்கல் - மலமறுத்தல்
7) சுட்டகன்று நிற்றல் - தவம் செய்து தனித்திருத்தல்

ஆகிய ஏழு நெறிகளிலும் செயல்படுக எனக் கூறி நிறைவான பேறு அடையும் வகை காட்டி, எனைக் கலந்த பொன்னே. (ஆதாரம்: மட்டகன்ற எனத் தொடங்கும் மகாதேவ மாலைப் பாட்டு)

**எண்ணியபடி யெலாம் இயற்றுக என்றெனை**
**புண்ணிய பலத்தால் பொருந்திய நிதியே** (1368)

நினைத்தபடியெலாம் செயல் படுக என்று கூறி நான் செய்த புண்ணியத்தின் பயனாய் எனைப் பொருந்திய (கலந்த) நிதியே.

**ஊழி தோறூழி உலப்புறாது ஓங்கி**
**வாழி என்றெனக்கு வாய்த்த நன் நிதியே** (1370)

தோன்றிய உலகமானது முடிவு ஏற்படும்போது பிரளயத்தால் அழியும். அது ஓர் ஊழிக் காலமாகும். அவ்வாறு உள்ள ஊழிக் காலம் எத்தனையானாலும் நீ கொஞ்சங்கூடக் குறைவே இன்றி உயர்ந்து வாழி என்றெனக்கு வாய்த்த நல்ல நிதியே.

**இதமுற ஊழி தோறு எடுத்தெடுத்துலகோர்க்கு**
**உதவினும் உலவாது ஓங்கு நன்நிதியே** (1372)

பொருள் என்பது சாதாரணமாகக் கொடுக்கக் கொடுக்கக் குறைந்து முடிவில் தீர்ந்து விடும். ஆனால் இரக்கத்தின்பாற்பட்டு மேற்சொன்ன ஊழிக் காலங்கள் தோறும் உலகில் உள்ளோர்க்கு எடுத்தெடுத்து உதவினாலும் குறைவுபடாது வளர்கின்ற நல்ல நிதியே.

**இரு நிதி எழு நிதி இயல் நவ நிதி முதல்**
**திரு நிதி எல்லாம் தரும் ஒரு நிதியே** (1374)

சங்க நிதி பதுமநிதி என்று கூறப்படுகின்ற நிதியுடன் எடுத்தாலும் குறைவு படாது வளரக் கூடிய நிதியுடன் புதுப்புது அனுபவங்கள் முதல் அருள் நிதி முதலிய அனைத்தையும் தரும் ஒரு நிதியே.

**எவ்வகை நிதிகளும் இந்த மாநிதியிடை**
**அவ்வகை கிடைக்கும் என்றருளிய நிதியே** (1376)

எப்படிப்பட்ட நிதியை விரும்பினாலும் எவைக்கும் பெரிய சிறந்த மாநிதியாகிய என்னிடம் வந்தால் விரும்பியவாறே கிடைக்கும் என்று அருளிய நிதியே.

**அற்புதம் விளங்கும் அருட்பெருநிதியே**
**கற்பனை கடந்த கருணை மாநிதியே** (1378)

செயற்கரிய அற்புதங்கள் விளங்குகின்ற அருள் நிறைந்த பெரு நிதியே - கற்பனை எதற்கும் எட்டாத கருணையுடைய பெரிய நிதியே

குறிப்பு: இறைவன் கருணை எத்தன்மையது என்பது எவருடைய கற்பனைக்குங்கூட எட்டாதாம்.

**நற்குண நிதியே சற்குண நிதியே**
**நிற்குண நிதியே சிற்குண நிதியே** (1380)

நற்குணங்களே விளங்குகின்ற நிதியே.

சத்துவ குணங்கள் உடைய நிதியே நல்லது கெட்டது, விருப்பு வெறுப்பு போன்ற எந்த குணமும் இல்லாத நிதியே

**பளகிலாது ஒங்கும் பளிக்கு மாமலையே**
**வளமெலாம் நிறைந்த மாணிக்க மலையே** (1382)

சிதைவே இல்லாது ஓங்கும் கண்ணாடி போன்ற பெரிய மாமலையே.

எல்லா வளங்களும் நிறைந்த மாணிக்கம் போன்ற சிவந்த மாமலையே.

குறிப்பு: கண்ணாடி உடையும் தன்மையுடையது - ஆனால் இறைவனோ சிதைவு படாதவன். கண்ணாடி எதிரில் உள்ளதை அப்படியே காட்டும். உண்டு என்பார்க்கு இறைவனும் உண்டு. இல்லை என்பார்க்கு இறைவனும் இல்லை. எனவே தான் கண்ணாடிக்கு ஒப்பாகக் காட்டப்பட்டது.

**மதியுற விளங்கும் மரகத மலையே**
**வதிதரு பேரொளி வச்சிர மலையே** (1384)

புத்தி தத்துவமாகிய மன அறிவிலே விளங்குகின்ற மரகத மலையே - என்றைக்கும் அழியா நிலை தரும் பேரொளி வாய்ந்த வஜ்ஜிரம் போன்ற உறுதியான மலையே.

**உரை மனங்கடந்தாங்கு ஓங்கு பொன்மலையே**
**துரிய மேல் வெளியில் ஜோதி மாமலையே** (1386)

எப்போதும் ஏதாவது ஒன்றை நினைத்துக் கொண்டே இருக்கும் மனமானது செயல்படா நிலையில் அவ்வனுபவத்தில் ஓங்கி விளங்கும் பொன் மலையே.

துரிய நிலைக்கு மேல் தோன்றும் பெருவெளி அனுபவத்தில் ஜோதியாகப் பிரகாசிக்கும் பெரியதோர் மலையே.

**புற்புதம் திரை நுரைபுரை முதல் இலதோர்**
**அற்புதக் கடலே அமுதத் தண் கடலே** (1388)

புற்களும் (புல்) பூண்டுகளும் அலையும், நுரையும், குற்றம் முதலாகிய எதுவும் இல்லாத வற்றாத அற்புதங்கள் நிறைந்த கடலே - அமுதம் நிறைந்து விளங்கும் குளிர்ச்சியான சாந்தம் பொருந்திய கடலே.

**இருட்கலை தவிர்த்து ஒளியெல்லாம் வழங்கிய**
**அருட்பெருங்கடலே ஆனந்தக் கடலே** (1390)

இருளாகிய அறியாமையைப் போக்கி, அறிவு விளக்கம் அனைத்தையும் வழங்கிய அருள்நிறை பெருங்கடலே ஆனந்தம் நிறைந்து விளங்கும் ஆனந்தக் கடலே.

**பவக் கடல் கடந்து நான் பார்த்த போதருகே**
**உவப்புறு வளங்கொண்டு ஓங்கிய கரையே** (1392)

பிறவியைத் தருகின்ற பந்தம் எனும் கடலைக் கடந்து நான் பார்த்தபோது ஆனந்த முற பல வளங்கள் கொண்டு என்னருகே ஓங்கிய கரையே.

**என் துயர்ச் சோடைகளெலாம் தவிர்த்துளம்**
**நன்றுற விளங்கிய நந்தனக்காவே** (1394)

என்னுடைய துன்பங்களாகிய குற்றங்களையெலாம் போக்கி எனது உளமானது நன்மையே அடையுமாறு விளங்கிய நந்தவனம் போன்ற பூந்தோட்டமே.

**சேற்று நீரின்றி நற்றீஞ் சுவை தருமோர்**
**ஊற்று நீர் நிரம்ப உடைய பூந்தடமே** (1396)

சேற்று நீரில்லாமல் நல்ல தீஞ்சுவை தரக்கூடிய ஊற்று நீர் நிரம்ப உடைய பூங்குளமே.

**கோடைவாய் விரிந்த குளிர் தரு நிழலே**
**மேடைவாய் வீசிய மெல்லிய காற்றே** (1398)

கோடைகால வெய்யிலின் வெப்பந் தாக்காதவாறு குளுமையான விரிந்த நிழலே - மேடை மேல் வீசுகின்ற மென்மையான தென்றலே

(அல்லது)

வினையாகிய வெப்பமானது தாக்காதவாறு தடுத்து மனமானது எக்காலத்தும் சாந்தமாக அதாவது அமைதியாகவே இருக்குமாறு செய்யும் பரந்த ஆதரவே - புருவ மத்தியாகிய மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங்காற்றே.

**களைப்பறக் கிடைத்த கருணை நன்னீரே**
**இளைப்பற வாய்த்த இன்சுவை உணவே** (1400)

அயர்வும் சோர்வும் நீங்கும்படிக் கிடைத்த நல்ல கருணையாகிய நல்ல நீரே - அயர்வு அறுபட்டுப் போகும்படி அதாவது எப்போதும் உற்சாகமாகவே இருக்கும்படி எனக்குக் கிடைத்த இனிய சுவைமிக்க உணவே.

**தென்னை வாய்க் கிடைத்த செவ்விள நீரே**
**தென்னை வான் பலத்தின் திருகு தீம்பாலே** (1402)

வேரிலே வார்க்கப்பட்ட நீரைப் பின்னர் காலமறிந்து சுவையுடன் தலையாலே தருகின்ற தென்னையின் மூலம் கிடைத்த சிறந்த செவ்விள நீரே

அந்தத் தென்னையிலே பழுத்த தேங்காயைத் திருகி எடுத்த மிகுந்த சுவையுடைய (தேங்காய்ப்) பாலே.

**நீர் நசை தவிர்க்கும் நெல்லியங்கனியே**
**வேர்விளை பலவின் மென்சுவைச் சுளையே** (1404)

நீர் வேண்டித் தோன்றும் தாகத்தைத் தவிர்க்கின்ற நெல்லிக் கனியே.

வேரில் காய்க்கும் வேர்ப் பலாவின் இனிய சுவை மிகுந்த பலாச் சுளையே.

**கட்டு மாம்பழமே கதலிவான் பழமே**
**இட்ட நற்சுவை செய் இலந்தையங்கனியே** (1406)

கனிந்த மாம்பழமே. இறைவனுக்குகந்த வாழைப் பழமே மனம் விரும்பும் நல்ல சுவை தருகின்ற இலந்தைப் பழமே.

**புனிதவான் தருவில் புதுமையாம் பலமே**
**கனி எலாம் கூட்டிக் கலந்த தீஞ்சுவையே** (1408)

தூய்மையான கரணங்கள் செயலற்று வெளியான நிலையில் விளைந்த புதுமை அனுபவமாகிய ஞானப் பழமே.

எல்லாக் கனிகளையும் ஒன்று கூட்டி கலந்தவாறு உள்ள மிகுந்த சுவையே.

**இதந்தரு கரும்பில் எடுத்த தீஞ்சாறே**
**பதந்தரு வெல்லப் பாகின் இன்சுவையே** (1410)

மிகப் பக்குவமான கரும்பிலிருந்து பிழிந்தெடுத்த கருப்பஞ்சாறே. பதமான வெல்லப்பாகு தரும் இனிய சுவையே.

**சாலவே இனிக்கும் சர்க்கரைத் திரளே**
**ஏலவே நாவிற்கினிய கற்கண்டே** (1412)

மிக நன்றாகவே இனிக்கின்ற சர்க்கரைக் கட்டியே
நாவிற்கினிய சுவையளிக்கும் கற்கண்டே

**உலப்புறா தினிக்கும் உயர்மலைத் தேனே**
**கலப்புறா மதுரம் கனிந்த கோற்றேனே** (1414)

குறைவு படாத இனிப்பைத் தருகின்ற உயர்ந்த மலைத் தேனே எந்தக் கலப்புமில்லாத இனிய சுவை நிரம்ப உடைய கனிந்த கொம்புத் தேனே.

**நவையிலா தெனக்கு நண்ணிய நறவே**
**சுவையெலாம் திரட்டிய தூய தீம்பதமே** (1416)

ஆசைகள் அற்ற எனக்குக் கிடைத்த தேனே
எல்லாச் சுவைகளும் ஒன்று சேரத் திரட்டிய தூய்மையான பதமே

**பதம் பெறக் காய்ச்சிய பசு நறும்பாலே**
**இதம்பெற உருக்கிய இளம் பசு நெய்யே** (1418)

பக்குவமாகக் காய்ச்சப்பட்ட நல்ல பசுவின் பாலே
இதமாக உருக்கி எடுக்கப்பட்ட இளம் பசுவின் நெய்யே

**உலர்ந்திடா தென்றும் ஒரு படித்தாகி**
**மலர்ந்து நல் வண்ணம் வயங்கிய மலரே** (1420)

வாடி வதங்காது என்றும் ஒரே நிலையில் இருப்பதாய்ப் பூத்து நல்ல அழகுடன் விளங்கிய மலரே.

**இகந்தரு புவிமுதல் எவ்வுலகுயிர்களும்**
**உகந்திட மணக்கும் சுகந்த நன் மணமே** (1422)

இகலோக போகத்தை விரும்பும் இவ்வுலக உயிர்கள் முதல் எவ்வுலகத்திலும் உள்ள உயிர்களும் இன்பமடையுமாறு மணக்கின்ற இனிய நன் மணமே.

**யாழுறும் இசையே இனிய இன்னிசையே**
**ஏழுறும் இசையே இயல் அருள் இசையே** (1424)

யாழ் (வீணை) தருகின்ற நல்ல இசையே - இனிய தேன் போன்ற சங்கீதமே - ச - ரி - க - ம - ப - த - நி என்ற

ஏழு ஸ்வரங்களினால் அடைகின்ற இசை ஞானமே - அருளால் பெறப்பட்ட இசையே.

**திவள் ஒளிப் பருவம் சேர்ந்த நல்லவளே**
**அவளொடுங்கூடி அடைந்ததோர் சுகமே** (1426)

திரண்ட ஒளி வீசும் இளம் பருவங்கூடிய நல்ல குலமகளே அப்படிப்பட்ட இனியவளுடன் கூடி அடைகின்ற சுகமே.

**நாத நல்வரைப் பில் நண்ணிய பாட்டே**
**வேத கீதத்தில் விளை திருப்பாட்டே** (1428)

நாதத்தின் உச்சத்தில் கிடைத்த நல்லதொரு பாட்டே இசைக்கின்ற வேத கீதத்திலே விளைகின்ற திருப்பாட்டே.

**நன் மார்க்கர் நாவில் நவிற்றிய பாட்டே**
**சன் மார்க்க சங்கம் தழுவிய பாட்டே** (1430)

நல்ல மார்க்கத்தில் நிற்கின்ற நல்லோர் நாவிலிருந்து தோன்றிய பாட்டே.

சன்மார்க்க சங்கத்தார் விரும்பி ஏற்றுக் கொண்ட பாட்டே.

**நம்புறும் ஆகமம் நவிற்றிய பாட்டே**
**எம்பலம் ஆகிய அம்பலப் பாட்டே** (1432)

நம்பிக்கை ஊட்டுகின்ற ஆகமம் விளம்புகின்ற பாட்டே. நம்முடைய பலம் அதுவென ஆகிய அம்பலப் பாட்டே.

**என் மனக் கண்ணே என் அருட் கண்ணே**
**என் இரு கண்ணே என் கனுண் மணியே** (1434)

என் மனமாகிய கண்ணே - என் அருளாகிய கண்ணே, என் இரு கண்கள் போன்று விளங்கி என் கண்ணினுள் விளங்கும் மணியே.

**என் பெருங்களிப்பே என் பெரும் பொருளே**
**என் பெருந்திறலே என் பெருஞ் செயலே** (1436)

என்னுடைய பெரு மகிழ்ச்சியே எனது பெரிய பொருளே, எனது பேராற்றலே, எனது பெரிய செயலே.

**என் பெருந்தவமே என் தவப் பலனே**
**என் பெருஞ் சுகமே என் பெரும் பேறே** (1438)

என்னுடைய பெருந்தவமே என் தவத்தினால் அடையும் பயனே என் பெருஞ் சுகமே என் பெரும் பேறாகிய செல்வமே.

**என் பெரு வாழ்வே என் தன் வாழ் முதலே**
**என் பெரு வழக்கே என் பெருங் கணக்கே** (1440)

என்னுடைய பெரு வாழ்வே என் அருமையான வாழ்வில் கிடைத்த முதல் வைப்பே.

சிறு நெறிக்குத் தடையுண்டாக்கிப் பெரு நெறியில் பழக்கும் நீதியே.

நன்மை தீமைகட்குரிய பலா பலன்களைத் தரும் எனது பெரிய கணக்கே.

**என் பெரு நலமே என் பெருங் குலமே**
**என் பெரு வலமே என் பெரும் புலமே** (1442)

என்னுடைய பெரிய நன்மையே எனது பெரிய குலமே எனது பேராற்றலே எனது பெரும் ஞானமே.

**என் பெரு வரமே என் பெருந்தரமே**
**என் பெரு நெறியே என் பெரு நிலையே** (1444)

நான் பெற்ற பெருவரமே என்னுடைய பெருந் தகுதியே நான் பற்றிய பெரு நெறியே நான் அடைந்த பெரு நிலையே.

**என் பெருங்குணமே என் பெருங்கருத்தே**
**என் பெருந்தயவே என் பெருங்கதியே** (1446)

நான் பற்றிய பெருங் குணமே எனது பெரும் நினைப்பே எனது பெருங் கருணையே நான் அடைந்த பெரும் பதமே.

**என் பெரும் பதியே என்னுயிர் இயலே**
**என் பெரு நிறைவே என் தனி அறிவே** (1448)

எனது பெரிய இறைவனே, எனது உயிரின் தன்மையே, எனது பெருங் குறையற்ற நிறைவே பரிபூரணமே, எனது ஒப்பற்ற அறிவே.

**தோலெலாங் குழைந்திடச் சூழ் நரம்பனைத்தும்**
**மேலெலாங் கட்டவை விட்டு விட்டியங்கிட** (1450)

உடம்பின் மேலுள்ள ஏழு வகைத் தோல்களும் தன் நிலை மாறி குழைந்து விளங்க அதனைச் சூழ்ந்துள்ள நரம்புகளெல்லாம் புடைத்து மேலெழும்பிக் கட்டு விட்டுச் செயலாற்றிட.

**என்பெலாம் நெக்கு நெக்கிய லிடை நெகிழ்ந்திட**
**மென்புடைத் தசையெலாம் மெய்யுறத் தளர்ந்திட** (1452)

எலும்புகளானது முற்றிப் போன நிலையிலிருந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து விளங்கவும் உடம்பிலுள்ள மெல்லிய தசைகளெல்லாம் உண்மை நிலை அடைந்ததால் தளர்ந்து விளங்கவும்.

**இரத்த மனைத்தும் உள்ளிறுகிடச் சுக்கிலம்**
**உரத்திடை பந்தித்து ஒரு திரள் ஆயிட** (1454)

நல்லிரத்தம், புல்லிரத்தம், கலவை இரத்தம், கபிலை இரத்தம் ஆகிய நான்கு இரத்த வகைகளும் உள்ளே இறுகிடவும் சுக்கிலமானது இறுகி மணிபோல் உருண்டு திரண்டிட.

**மடலெலாம் மூளை மலர்ந்திட அமுதம்**
**உடலெலாம் ஊற்றெடுத்தோடி நிரம்பிட** (1456)

மூளையிலுள்ள மடிப்புகளெல்லாம் விரிந்து மலர்ந்திடவும் அமுதமானது உடம்பெல்லாம் ஊற்றெடுத்து ஓடி நிரம்பிட.

**ஒண்ணுதல் வியர்த்திட ஒளி முகம் மலர்ந்திடத்**
**தண்ணிய உயிர்ப்பினில் சாந்தம் ததும்பிட** (1458)

புருவ மத்தியாகிய நெற்றியிலே வியர்வை தோன்ற ஒளி பொருந்திய முகமானது மலரக் குளிர்ந்த மூச்சுக் காற்றினால் சாந்தம் ததும்பிட.

**உண்ணகை தோற்றிட உரோமம் பொடித்திடக்**
**கண்ணினீர் பெருகிக் கால் வழிந்தோடிட** (1460)

உள்ளே ஆனந்தம் தோன்றிட உரோமமானது புளகித்து நிற்கக் கண்களிலே நீரானது பெருகி வழிந்து ஒழுகிட.

**வாய் துடித்தலறிட வளர் செவித் துளைகளில்**
**கூயிசைப் பொறியெலாம் கும்மெனக் கொட்டிட** (1462)

வாயானது (உள்ளே தோன்றிய அன்புப் பெருக்கின் காரணமாக) துடிப்பினால் தன்னை மறந்து உன்னைப் புகழ்ந்திட காதுகளிலே கூ என்ற இசையானது கும் என அடைத்துக் கேட்டிட.

**மெய்யெலாங் குளிர்ந்திட மென் மார்பசைந்திட**
**கையெலாங் குவிந்திடக் காலெலாம் சுலவிட** (1464)

உடம்பெல்லாம் (வெம்மையளிக்கும் சினம் முதலியவை நீங்கியதால் வெம்மை தவிர்ந்து சாந்த நிறைவாய்க்) குளிர்ந்திட அதாவது சாதுவாய்க் கோபமற்று விளங்கிட மார்பானது மெல்லென அசையக் கைகள் இரண்டும் கூப்பி நிற்கக் கால்கள் சோர்ந்து போக

**மனங்கணிந்துருகிட மதி நிறைந்தொளிர்ந்திட**
**இனம்பெறு சித்தம் இயைந்து களித்திட** (1466)

மனமானது நெகிழ்ந்து உருகிடப் புத்தியானது நிறைவு பெற்றுப் பிரகாசிக்க அதே நிலை கண்ட சித்தமும் புத்தியுடன் இணைந்து களிப்படைய

**அகங்கார மாங்காங் கதிகரிப் பமைந்திட**
**சகங்காண உள்ளம் தழைத்து மலர்ந்திட** (1468)

அகங்காரம் என்கிற முனைப்பு எங்கெங்கே அதிகரிக்கத் தொடங்குகின்றதோ அவ்வப் பொழுதே அது அடங்கிடவும் உள்ளமானது இந்த உலக நடப்பைக் காணத் தழைத்து மலர்ந்திட.

**அறிவுரு அனைத்தும் ஆனந்த மாயிடப்**
**பொறியுறும் ஆன்ம தற்போதமும் போயிடத்** (1470)

அறிவானது ஆனந்த மடைந்து விளங்கவும், மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய பொறிகளின் வழியாகத் தோன்றும் சுய நலபோகமானது விலக.

**தத்துவ மனைத்தும் தாம் ஒருங்கு ஒழிந்திடச்**
**சத்துவம் ஒன்றே தனித்து நின்று ஓங்கிட** (1472)

தொண்ணூற்றாறு தத்துவங்களும் ஒன்று சேர விலகியவுடன் உண்மைப் பொருளாகிய சத்துவம் ஒன்றே தனித்து நின்று ஓங்கிட.

**உலகெலாம் விடயம் உளவெலாம் மறைந்திட**
**அலகிலா அருளின் ஆசை மேற் பொங்கிட** (1474)

உலகமும் உலக விடயங்களும் இன்னும் இருப்பவைகள் எல்லாம் மறைந்து போகவும் அளவற்ற அருளின் மேலுள்ள ஆசையானது உள்ளத்திலே மேன்மேலும் பொங்கி ஓங்கிட.

**என்னுளத் தெழுந்து உயிரெல்லாம் மலர்ந்திட**
**என் உளத்தோங்கிய என் தனி அன்பே** (1476)

என் உள்ளத்திலிருந்து எழுந்து என் உயிரிலே மலர்ந்து என் உள்ளத்தினுள்ளே ஓங்கிய எனது ஒப்பற்ற அன்பே.

**பொன்னடி கண்டருள் புத்தமுதுணவே**
**என்னுளத் தெழுந்த என்னுடை அன்பே** (1478)

இறைவனது பொன்னான திருவடி கண்டிடவும், அவனது அருளமுதமாகிய புத்தமுதை உண்டு சுவைக்கவும் என் உள்ளத்தே தோன்றிய என்னுடைய அன்பே.

**தன்னையே எனக்குத் தந்து அருளொளியால்**
**என்னை வேதித்த என் தனி அன்பே** (1480)

நின்னையே எனக்குத் தந்தது மன்றி நின் அருள் ஒளியால் என்னையும் நின்னைப் போல மாற்றி விட்ட என்னுடைய ஒப்பற்ற அன்பே.

**என்னுளே அரும்பி என்னுளே மலர்ந்து**
**என்னுளே விரிந்த என்னுடை அன்பே** (1482)

என் அகத்திலே அரும்பாகத் தோன்றி மலராகவும் என்னுளே மலர்ந்து என் அகமுழுவதிலும் விரிந்து பரந்து விளங்கும் என்னுடைய அன்பே.

**என்னுளே விளங்கி என்னுளே பழுத்து**
**என்னுளே கனிந்த என்னுடை அன்பே** (1484)

என் உள்ளத்திலே குடி கொண்டு வீற்றிருந்து என் அகத்திலேயே நன்கு விளைந்து அங்கேயே கனிந்து விளங்கும் என்னுடைய அன்பே.

**தன்னுளே நிறைவுறு தரமெலாம் அளித்தே**
**என்னுளே நிறைந்த என் தனி அன்பே** (1486)

உன்னுளே என்னென்ன தகுதிகள் ஆற்றல்கள் நிறைந்துள்ளனவோ அவற்றையெலாம் முழுமையாக எனக்கு அளித்து என்னுள்ளே நின்னைத் தவிர வேறில்லை என்னும் அளவிற்கு என்னுளே நீயே கலந்து பூரணமாக நிறைந்த எனது ஒப்பற்ற அன்பே.

**துன்புள அனைத்தும் தொலைத்தெனதுருவை**
**இன்புரு வாக்கிய என்னுடை அன்பே** (1488)

துன்பம் தரக் கூடியவை என்னென்ன உண்டோ அவை அனைத்தினையும் ஒன்றுகூட இல்லாமல் நீக்கி எனதுடம்பை ஞான உடம்பாக்கிய என்னுடை அன்பே.

சுத்த தேகம் - அருள் உரு

பிரணவ தேகம் - அன்புரு
ஞான தேகம் - இன்புரு

**பொன்னுடம்பு எனக்குப் பொருந்திடும் பொருட்டாய்**
**என்னுளங்கலந்த என் தனி அன்பே** (1490)

பொன்னுடல் எனக்கு வாய்க்க வேண்டும் என்பதற்காகவே என் உள்ளத்தில் கலந்து கொண்ட எனது ஒப்பற்ற அன்பே.

**தன் வசமாகித் ததும்பி மேற்பொங்கி**
**என் வசங் கடந்த என்னுடை அன்பே** (1492)

உன்வசமாகவே மாறியதோடன்றி பூரணமாக நிறைந்து மேலும் பொங்கி எழுந்து எனது வசம் என்ற ஒன்று இல்லாது நிறைந்த எனது அன்பே.

**தன்னுளே பொங்கிய தண்ணமுதுணவே**
**என்னுளே பொங்கிய என் தனி அன்பே** (1494)

உன்னுள்ளே பொங்கி எழுகின்ற குளுமை மிக்க அமுதை நான் உண்ணும் பொருட்டே என்னுளே பொங்கிய எனது ஒப்பற்ற அன்பே.

**அருள் ஒளி விளங்கிட ஆணவம் எனும் ஓர்**
**இருள் அற என்னுளத் தேற்றிய விளக்கே** (1496)

அருட்பிரகாசமானது விளங்கவும் ஆணவம் என்கின்ற ஓர் இருளானது என்னை விட்டு விலகவும் என்னுள்ளத்தே ஏற்றிய தீபமே.

**துன்புறு தத்துவத் துரிசெலாம் நீக்கி நல்**
**இன்புற என்னுளத் தேற்றிய விளக்கே** (1498)

துன்பம் தருகின்ற தத்துவக் குற்றங்களை யெல்லாம் (மனம் முதலாகிய 96 தத்துவங்கள்) போக்கி நல்ல இன்பத்தை நான் அடைய என் உள்ளத்தே ஏற்றிய தீபமே.

**மயலற அழியா வாழ்வு மேன்மேலும்**
**இயலுற என்னுளத் தேற்றிய விளக்கே** (1500)

மயக்கம் தருகின்ற மாயை அறுபடவும் அழியா வாழ்வாகிய மரணமிலாப் பெருவாழ்வு மேன் மேலும் என்னை அடையவும் என் உள்ளத்திலே ஏற்றிய விளக்கே.

**இடுவெளி அனைத்தும் இயல் ஒளி விளங்கிட**
**நடுவெளி நடுவே நாட்டிய விளக்கே** (1502)

பொறி புலன்கள் அனைத்தும் இயல்பான ஒளித் தன்மை தோன்றி விளங்கிட என் புருவ மத்தியாகிய சிற்சபை எனும் லலாடஸ்தானத்தினடுவே நிலை பெற்று விளங்கும் விளக்கே.

**கருவெளி அனைத்தும் கதிரொளி விளங்கிட**
**உருவெளி நடுவே ஒளிர் தரு விளக்கே** (1504)

உயிர்வெளி முழுவதும் அருட் பிரகாசமாகிய ஒளி தோன்றி விளங்க இந்த உடம்பின் நடுவெளி (சிற்சபை) நடுவே ஒளி தருகின்ற விளக்கே.

**தேற்றிய வேதத் திருமுடி விளங்கிட**
**ஏற்றிய ஞான இயல் ஒளி விளக்கே** (1506)

திருத்தி அமைக்கப்பட்ட வேதத்தின் முடிவானது விளங்குமாறு ஏற்றிய ஞானத் தன்மை பொருந்திய ஒளி விளக்கே.

**ஆகம முடிமேல் அருளொளி விளங்கிட**
**வேகம தறவே விளங்கொளி விளக்கே** (1508)

ஆகமங்கள் கூறுகின்ற முடிவு எதுவோ அதன் மேல் அருள் ஒளி விளங்கிட வேகம் கெடுத்து (சாந்தமற்ற தன்மையே வேகம் என்பது) அதாவது சாந்தத் தன்மை கொடுத்துச் சாதுவாக்கி விளங்குகின்ற அருள் ஒளி விளக்கே.

**ஆரியர் வழுத்திய அருள் நிலை அனாதி**
**காரியம் விளக்கும் ஓர் காரண விளக்கே** (1510)

ஆரியர்கள் அதாவது வேதங்களை நன்கு கற்றுணர்ந்தோர் போற்றி வழிபடுகின்ற அருள் நிலை அனாதியாகவுள்ள அக்காரியத்தை விளக்கும் ஓர் காரணமாகவுள்ள விளக்கே.

**தண்ணிய அமுதே தந்தெனதுளத்தே**
**புண்ணியம் பலித்த பூரண மதியே** (1512)

குளிர்ந்த அமுதத்தைத் தந்து எனதுள்ளகத்தே நான் செய்த புண்ணியப் பலனானது பலிக்குமாறு நிறைந்த மதியே.

**உய்தர அமுதம் உதவி என் உளத்தே**
**செய்தவம் பலித்த திருவளர் மதியே** (1514)

நான் மேன்மையடைய அமுதத்தை எனக்கு அளித்து என் உள்ளத்தே நான் செய்த தவம் பலிக்க தெய்வ நிலை வளர்கின்ற மதியே.

**பதியெலாம் தழைக்கப் பதம் பெறும் அமுத**
**நிதியெலாமளித்த நிறை திருமதியே** (1516)

இறைவிளங்கும் இடமெலாம் (உடம்பெல்லாம்) தழைக்கப் பக்குவம் பெற்ற அமுதமாகிய பொருளையெல்லாம் அளித்த பூரணமாகிய தெய்வ மதியே.

**பால் எனத் தண் கதிர் பரப்பி எஞ்ஞான்றும்**
**மேல் வெளி விளங்க விளங்கிய மதியே** (1518)

பால்போன்று குளுமையான ஒளி பரப்பி என்றென்றும் மேலான (இறை) வெளி விளங்க விளங்கிய மதியே.

**உயங்கிய உள்ளமும் உயிரும் தழைத்திட**
**வயங்கிய கருணை மழை பொழி மழையே** (1520)

கலங்கிய உள்ளமும் உயிரும் கலக்கம் நீக்கித் தழைத்திடப் பொருத்தமாக விளங்கும் கருணை மழையைப் பொழிகின்ற கருணை மழையே.

**என்னையும் பணி கொண்டு என்னுளே நிரம்ப**
**மன்னிய கருணை மழை பொழி மழையே** (1522)

என்னையும் உனக்குத் தொண்டு செய்பவனாக்கி என்னுளே பூரணமாக நிறைந்து என்றென்றும் மாறாத கருணை மழை பொழிகின்ற மழையே.

**உளங்கொளும் எனக்கே உவகை மேற் பொங்கி**
**வளங்கொளக் கருணை மழை பொழி மழையே** (1524)

உள்ளத்திலே உன்னைக் கொண்ட எனக்கே ஆனந்தமானது மேலும் மேலும் நிரம்பிப் பொங்கி எல்லா வளங்களும் நான் அடையுமாறு கருணை மழை பொழி மழையே.

**நலந்தர உடல் உயிர் நல் அறிவெனக்கே**
**மலர்ந்திடக் கருணை மழை பொழி மழையே** (1526)

உடலும் உயிரும் நலம் பெறுமாறு நல்லறிவு எனக்கே விளங்குமாறு கருணை மழை பொழிகின்ற மழையே.

**தூய்மையால் எனது துரிசெலா நீக்கி நல்**
**வாய்மையால் கருணை மழை பொழி மழையே** (1528)

தூய்மை என்ற எனது ஒப்பற்ற ஒழுக்கத்தினால் எனது குற்றங்கள் அனைத்தினையும் போக்கி நல்ல சத்திய வாசகத்தினால் கருணை மழையைப் பொழிகின்ற மழையே

**வெம்மல இரவது விடி தருணந்தனில்**
**செம்மையில் உதித்துளம் திகழ்ந்த செஞ்சுடரே** (1530)

வெம்மை தருகின்ற ஆணவம் மாயை கன்மம் என்கின்ற மல இருளானது விலகும் நேரத்தில் செம்மையான மனதில் உதித்து உள்ளத்திலே விளங்குகின்ற செஞ்சுடரே.

**திரையெலாம் தவிர்த்துச் செவ்வி உற்றாங்கே**
**வரையெலாம் விளங்க வயங்கு செஞ்சுடரே** (1532)

மறைப்பை யெலாம் போக்கிச் செவ்வையாக எனையடைந்து எல்லா முடிபுகளும் எனக்கு விளங்குமாறு விளங்கும் செஞ்சுடரே.

**அலகிலாத் தலைவர்கள் அரசு செய் தத்துவ**
**உலகெலாம் விளங்க ஓங்கு செஞ்சுடரே** (1534)

அளவற்ற தலைவர்கள் ஆட்சி செய்கின்ற தத்துவ உலகங்கள் எல்லாம் விளங்க ஓங்குகின்ற செஞ்சுடரே.

**முன்னுறு மல இருள் முழுவதும் நீக்கியே**
**என்னுள வரைமேல் எழுந்த செஞ்சுடரே** (1536)

எனக்கு முன் தானாகவே அதுவாகவே வந்து கொண்டிருக்கின்ற ஆணவம் மாயை கன்மம் ஆகிய மல அஞ்ஞானத்தை முழுவதும் போக்கி எனது தூய உள்ளமாகிய மலைமேல் தோன்றிய செஞ்சுடரே.

குறிப்பு: மல இருள் தான் முதலில் வருமாம்

**ஆதியும் நடுவுடன் அந்தமும் கடந்த**
**ஜோதியாய் என் உளம் சூழ்ந்த மெய்ச் சுடரே** (1538)

ஆரம்பம், நடு, முடிவு, என்ற சொற்களுக்கே அப்பால் பிரகாசமாய் என் உள்ளத்தில் சூழ்ந்த மெய்யான சுடரே.

**உள் ஒளி ஓங்கிட உயிர் ஒளி விளங்கிட**
**வெள்ளொளி காட்டிய மெய்யருட்கனலே** (1540)

ஜோதியுட் ஜோதியுட் ஜோதியான செவ்வொளி விளங்கவும் உயிர் ஒளியானது விளங்குமாறு செய்யவும் வெண்மை வண்ணம் உடைய பேரொளியைக் காட்டிய உண்மையான அருட்கனலே.

**நலங்கொளப் புரிந்திடு ஞான யாகத்திடை**
**வலஞ் சுழித்து எழுந்து வளர்ந்த மெய்க் கனலே** (1542)

நன்மையே அளிப்பதற்காகப் புரியும் ஞான யாகத்திலே வலப்பாகமாகச் சுழித்து எழுந்து வளர்ந்த மெய்க் கனலே.

குறிப்பு: ஞான யாகம் என்பது தவம்.

**வேதமும் ஆகம விரிவும் பரம்பர**
**நாதமுங் கடந்த ஞான மெய்க் கனலே** (1544)

வேதங்களும், ஆகமங்களும் அவைகளின் விரிவுகளான உபநிஷத் முதலியனவும் மேலான நாத அனுபவமும் கடந்த ஞான மெய்க் கனலே.

**எண்ணிய எண்ணிய எல்லாந்தர எனுள்**
**நண்ணிய புண்ணிய ஞான மெய்க் கனலே** (1546)

நான் எண்ணியவாறே எல்லாவற்றையும் எனக்கருள என்னுள் வந்தடைந்த புண்ணியம் நிறைந்த ஞான மெய்க்கனலே.

**வலமுறு சுத்த சன்மார்க்க நிலைபெறு**
**நலமெலா மளித்த ஞான மெய்க்கனலே** (1548)

ஆற்றல் மிக்க சுத்த சன்மார்க்க நிலை தருகின்ற நன்மைகளை யெல்லாம் எனக்கு அளித்த ஞான மெய்க்கனலே.

குறிப்பு. சுத்த சன்மார்க்க நிலை

பிற உயிர்கட்கு ஏற்படக் கூடிய இடையூறுகளை யெல்லாம் விலக்கி அதனால் ஏற்படக் கூடிய மகிழ்ச்சியில் திளைப்பதும் ஞான அனுபவத்தில் இந்திரியங்களும் கரணங்களும் கடந்த நிலை பெறுவதுமே சுத்த சன்மார்க்க நிலையாகும்.

**இரவொடு பகலிலா இயல் பொது நடமிடு**
**பரம வேதாந்தப் பரம் பரஞ்சுடரே** (1550)

இரவு பகல் அற்ற இடத்தே நினைப்பு மறப்பு அற்ற இடத்தே ஞான பூரண ஆகாயம் எனும் பொதுவில் நடமிடுகின்ற மேலான வேதத்தின் முடிவான பரஞ்சுடரே.

**வர நிறை பொதுவிடை வளர்திரு நடம்புரி**
**பரம சித்தாந்தப் பதி பரஞ்சுடரே** (1552)

வரங்கள் நிறைந்த ஞான பூரண ஆகாயம் எனும் பொதுவில் வளர்ந்து தெய்வ நடம்புரிகின்ற மேலான சித்தாந்தத்தின் பதியாகிய பரஞ்சுடரே.

**சமரச சத்தியச் சபையில் நடம்புரி**
**சமரச சத்தியத் தற்சுயஞ் சுடரே** (1554)

எத்துணையும் பேதமுறாத சம நோக்கும், பொய் கலவாத சத்தியமும், நிறைந்த உள்ளமாகிய சபையிலே ஒளியாக நடம்புரியும் எல்லாச் சமயத்தார்க்கும் பொதுவாகிய தானாகித் தோன்றி விளங்குஞ் சுடரே.

**சபை எனதுளம் எனத் தானமர்ந்தெனக்கே**
**அபயம் அளித்ததோர் அருட்பெருஞ்ஜோதி** (1556)

எனது உள்ளத்தை நீ விளங்கும் சபையாகக் கொண்டு அதிலே நீ (தான்) அமர்ந்து எனக்கே அபயம் அளித்த அருட்பெருஞ்ஜோதி.

**மருளெலாம் தவிர்த்து வரமெலாங் கொடுத்தே**
**அருளமுதருத்திய அருட்பெருஞ்ஜோதி** (1558)

உண்மைபோல் தோற்றமளிக்கும் பொய்யானவற்றைத் தவிர்த்து எல்லா வரங்களையும் அளித்தே அருளமுதை எனக்கு ஊட்டிய அருட்பெருஞ்ஜோதி.

**வாழி நின் பேரருள் வாழி நின்பெருஞ்சீர்**
**ஆழி ஒன்றளித்த அருட்பெருஞ்ஜோதி** (1560)

என்னை ஆருமறியாது மணந்து கொண்ட அருட்பெருஞ்ஜோதியே வாழி நின்னுடைய பெருமை மிக்க அருள். வாழி நின்னுடைய பெருஞ்செல்வம்.

**என்னையும் பொருளென எண்ணி என் உளத்தே**
**அன்னையும் அப்பனுமாகி வீற்றிருந்து**
**உலகியல் சிறிதும் உளம் பிடியா வகை**
**அலகில் பேரருளால் அறிவது விளக்கிச்**
**சிறுநெறி செல்லாத் திறனளித்து அழியாது**
**உறுநெறி உணர்ச்சி தந்து ஒளியுறப் புரிந்து**
**சாகாக் கல்வியின் தரமெலாம் உணர்த்திச்**

**சாகா வரத்தையும் தந்து மேன் மேலும்**
**அன்பையும் விளைவித்து அருட்பேரொளியால்**
**இன்பையும் நிறைவித்து என்னையும் நின்னையும்**
**ஓருருவாக்கி யான் உன்னியபடியெலாம்**
**சீருறச் செய்துயிர்த் திறம் பெற அழியா**
**அருளமுதளித்தனை அருள் நிலை ஏற்றினை**
**அருளறிவளித்தனை அருட்பெருஞ்ஜோதி.** (1561-1574)

என்னையும் ஒரு பொருட்டாக எண்ணி என் உள்ளத்திலே கருணையாகிய அன்னையாகவும் அறிவாகிய அப்பனுமாய் நிறைந்து விளங்குவதுடன்

இந்த உலக விவகாரங்கள் எதுவும், ஒருதுளியும் என் உள்ளத்திலே பற்றாவகை அளவில்லாத நின் பேரருளால் நான் அறிந்து கொள்ள வேண்டியவற்றை எனக்கு விளக்கிக் காட்டிச்

சிறு நெறி, தீ நெறி எதிலும் செல்லாதவாறு உறுதியையும் வல்லமையையும் தந்து நான் அடைய வேண்டிய அதாவது பெருநெறி செல்வதற்குரிய உணர்ச்சியானது என்றும் அழியாது விளங்கும்படி தந்து அருட்பேரொளியால் எல்லா விளக்கங்களையும் அறிந்து கொள்ளச் செய்து

சாகாத கல்வியின் அனுபவ நிலைகளையெல்லாம் நான் நன்றாக உணரும்படிச் செய்து, என்றும் சாகா வரத்தையும் அளித்து, மேலும் மேலும் உன் மீது பக்தியை விளைவித்து அருள் நிறைந்த பேரொளியினாலே இன்பத்தைக் குறைவின்றிப் பூரணமாக எனக்கு நிறையும்படிச் செய்து என்னையும் நின்னையும்

ஓர் உருவாக்கி (ஞான வடிவாக்கி) நான் வேறு நீ வேறு என்றில்லாது ஒன்று படுத்தி நான் எண்ணியபடியெல்லாம் சிறப்படையச் செய்து உயிரானது திடம் பெற்று என்றும் வாழ, அழியாத அருளமுதத்தை அளித்தீர், என்னை அருள் நிலைக்கு ஏற்றினீர், எனக்கு அருள் நிறைந்த அறிவையும் அளித்தீர்.

**வெல்க நின் பேரருள் வெல்க நின் பெருஞ்சீர்**
**அல்கலின் றோங்கிய அருட்பெருஞ்ஜோதி** (1576)

எனது மன மாயையை உனது பேரருளானது வெற்றி கொள்ள வேண்டும். உங்கள் பெருஞ்சீரானது வெற்றி பெற வேண்டும். பூரணமாக எங்கும் நிறைந்த அருட்பெருஞ்ஜோதி.

மேலும் சிறிய விளக்கம்:

வரிகள் 1561லிருந்து மீண்டும் படிக்கவும். இறைவன் வள்ளலார்க்கு அளித்த வாழ்வு எத்தன்மையது என்று சிந்தியுங்கள். இவ்வளவு பெரிய நிலை தந்த இறைவனைப் பின்வரும் வரிகளில் உள்ளதுபோல் போற்றி நின்பேரருள் போற்றி நின் பெருஞ்சீர் என்று பாராட்டாது வெல்க நின் பேரருள் என்று ஏன் எழுதினார்?

மனம் மாயைக்கு அடிமை அல்லவா. இறைவன் தர வேண்டிய அனைத்தையும் தந்து விட்டார். இறைவன்தந்த பேரருள் பெருஞ்சீரைவிட, மாயையாகிய மனம் ஆற்றல் பெற்றதாய் இருந்து விட்டால், என்ன செய்வது? அந்தப் பேரருள்கூட மனமான மாயையிடம் தோல்விகாண வாய்ப்பு உண்டோ? அருளியலில் என்னை ஈர்க்கும் நின்பேரருளுக்கும் உலகியலில் என்னைத் தள்ளும் மாயையின் அடிமையாகிய மனதிற்கும் போராட்டம் ஏற்பட்டால், இறைவா அருளைக் கொடுத்து விட்டோமே என்று பேசாமல் இருந்து விடாதே. ஒரு தந்தையின் கடமை தன் பெண்ணுக்குத் திருமணம் செய்துவித்து வேண்டிய சீர்வரிசைகளை அளித்துக் கணவனுடன் அனுப்பிவிட்டால் மட்டும் முடிந்து விடுவதில்லை. அங்கு தன் பெண் நன்றாக வாழ்கின்றாளா என்றும் கண்காணிக்க வேண்டும். அவ்வாறே உன் பேரருளை மாயையின் அடிமையாகிய மனம் வென்று விடாமல் நீ பார்த்துக் கொள்வாயாக. என் மனதை நின் பேரருள் வெல்லட்டும். நின் பெருஞ்சீர் வெல்லட்டும் என்று பிரார்த்திக்கின்றார்.

**உலகுயிர்த் திரளெலாம் ஒளி நெறி பெற்றிட**
**இலகும் ஐந்தொழிலையும் யான் செயத் தந்தனை** (1578)

உலகிலே இருக்கின்ற எல்லா ஜீவர்களும் ஒளி நெறி அடையப் படைத்தல், காத்தல், துரிசு நீக்குவித்தல், பக்குவம் வருவித்தல், விளக்கம் செய்வித்தல் ஆகிய ஐந்து தொழில்களையும் நான் செய்யும்படித் தந்தீரே.

**போற்றி நின் பேரருள் போற்றி நின் பெருஞ்சீர்**
**ஆற்றலின் ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி** (1580)

எல்லையற்ற ஆற்றலினால் யாவற்றினும் சிறப்புடையதாய் விளங்கும் அருள் நிறைந்த ஒளி வடிவாய்த் தோன்றியவரே. உன் பேரருள் போற்றப்படுவதாக உன் சீரும் போற்றப்படுவதாக.

**மூவரும் தேவரும் முத்தரும் சித்தரும்**
**யாவரும் பெற்றிடா இயல் எனக்களித்தனை.** (1580)

பிரும்மா, விஷ்ணு, ருத்ரன் ஆகிய மூவரும், மற்றைய தேவர்களும் முத்தர்களும், சித்தர்களும் யாவரும் இதுவரை அடையாத இயல்பை எனக்களித்தாய்.

**போற்றி நின் பேரருள் போற்றி நின் பெருஞ்சீர்**
**ஆற்றலின் ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி** (1584)

வல்லபத்தில் ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே தங்களின் பேரருள் போற்றப்படுவதாக - தங்களின் பெருஞ்சீரும் போற்றப் படுவதாக.

**சித்திகள் அனைத்தையும் தெளிவித்தெனக்கே**
**சத்திய நிலை தனைத் தயவினில் தந்தனை** (1586)

சித்திகள் எல்லாவற்றையும் எனக்குத் தெளிவாக நன்கு அறிவித்து, சத்திய நிலையையும் உனது தயவினால் எனக்கு அளித்தனை.

**போற்றி நின் பேரருள் போற்றி நின் பெருஞ்சீர்**
**ஆற்றலின் ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி** (1588)

சக்தி மிகுந்து ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே தங்களின் பேரருள் போற்றப்படுவதாக. தங்களின் பெருஞ்சீரும் போற்றப்படுவதாக.

**உலகினில் உயிர்களுக்குறும் இடையூறெலாம்**
**விலக நீயடைந்து விலக்குக மகிழ்க** (1590)

இந்த உலகத்தில் ஜீவர்கள் படும் துன்பங்களை நீ (அத் துன்பங்களை) அடைந்து விலக்குவாயாக - துன்பம் நீங்கி அவை அடையும் இன்பம் கண்டு நீ மகிழ்வாயாக.

<u>சிறு விளக்கம்</u>:

நீ அடைந்து என்பதற்கு அங்கு சென்று என்று பொருள் பண்ணக் கூடாது. ஏனெனில் சுத்த தேகம் பெற்றவர்களால் இருந்த இடத்திலிருந்து கொண்டே எதையும் செய்ய முடியும்.

சரித்திரத்தில் உமாயூன் எந்த நோயால் வருந்தினாரோ அந்த நோயை அவரது தந்தை பாபர் பிரார்த்தனையால் தான் அடைந்து தன் மகனைக் காப்பாற்றினாராம். அதாவது மகன் நோயைத் தான் அடைந்து காப்பாற்றினார்.

ஒரு முறை வடலூர் சத்திய தருமச் சாலையில் பணிபுரிந்த அத்தனை பேருக்கும் காய்ச்சல் கண்டு விட்டதாம். நம் பெருமானார் ஒவ்வொருவரிடமும் தான் சென்று "எனக்குக் கொடுத்து விடுகிறாயா" என்று கேட்டாராம். எல்லோரது காய்ச்சலும் இவருக்கு வந்து விட்டதாம். இவர் அனல் மயமாக ஒரு புறம் சற்று நேரம் அமர்ந்து தன்னைக் குணப்படுத்திக் கொண்டாராம். அங்கு பணி புரிந்தவர்கள் அப்போதே குணமடைந்து விட்டார்களாம். உலகில் ஜீவர்கள்படும் துன்பத்தை வள்ளலார் அடைந்து ஜீவர்களைக் காப்பாற்றுவார். இது வள்ளலாருக்கு ஆண்டவன் இட்ட கட்டளை. இதை வள்ளலார் மீற மாட்டார். இந்த உலக மக்கள் இதை நன்கு உணர்ந்து தங்களுக்கு இடையூறு நேருங்கால் வள்ளலாரிடம் முறையிட வேண்டும். ஆண்டவன் கட்டளைப்படி அந்த உயிர்களுக்குற்ற இடையூறை

வள்ளலார் நீக்குவார். இந்த அதிகாரத்தை ஆண்டவன் வேறு யாருக்கும் அளித்ததாக வரலாறு இல்லை. எனவே வள்ளலாரை மட்டும் வேண்டி இடையூறுகளை அறுத்து எறிவோம்.

**சுத்த சன்மார்க்க சுக நிலை பெறுக**
**உத்தமன் ஆகுக ஓங்குக என்றனை** (1592)

சுத்த சன்மார்க்க சுக நிலை அனுபவத்தைப் பெறுவாயாக. உத்தமனாகி ஓங்கி வளர்வாயாக என்று கூறினை.

சுத்த சன்மார்க்க சுக நிலை:

எல்லா ஜீவர்களிடத்துத் தயவும் பிரபஞ்சத்தின் மீது வெறுப்பும் இறைவன் மீது மாறாத அன்பும் கொண்டு, ஜீவகாருண்யத்தாலும் ஒழுக்கத்தினாலும் பக்தியினாலும் தவத்தாலும் இறையருள் பெற்று அவ்வருளால் பிற உயிர்கள்படும் துன்பத்தை நிவர்த்தி செய்து சிற்சபையில் பரநாத நிலை அனுபவத்தில் பேரொளி கண்டு, தெள்ளமுதம் உண்டு, பொற்சபையில் பொன்னொளி கண்டு ஞான சபையில் செவ்வொளியுடன் கலக்கப் பெற்று இத்தூல தேகத்தைச் சுத்தப் பிரணவ ஞான தேகமாக ஆக்கிக் கொண்டு எக் காலத்தும் எதனாலும் தடைபடாத ஒப்பற்றப் பேரின்பப் பெருவாழ்வைப் பெற்று இத்தூல தேகத்தையே நித்திய தேகமாக்கி என்றும் அழியாமல் கடவுள் மயமாகி வாழ்தலே சுத்த சன்மார்க்கச் சுக நிலை ஒருவாறு.

**போற்றி நின் பேரருள் போற்றி நின் பெருஞ்சீர்**
**ஆற்றலின் ஓங்கிய அருட்பெருஞ்ஜோதி** (1594)

எல்லாவற்றினும் சிறந்த ஆற்றலை உடைய அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே நின் பேரருள் போற்றப்படுவதாக நின் பெருஞ்சீர் போற்றப்படுவதாக.

**அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி**
**அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி** (1596)

ஏமசித்தி, சாகாக்கல்வி, தத்துவ நிக்கிரம் செய்தல், கடவுள் நிலையறிந்து அம்மயமாதல் ஆகிய நான்கு பெரும்

புருஷார்த்தங்களையும் அளித்துவிட்டீர். குற்றமே வடிவாய் இருந்த என்னுடைய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய நான்கு கரணங்களும் குற்றம் நீங்கிப் புனிதமாயின. சிற்சபை, பொற்சபை, ஞானசபை, ஆகிய மூன்று சபைகளிலும் விளங்கும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே வந்தனம்.

முச்சுடர்களும் ஒளி பெற அருளும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே வந்தனம் வந்தனம்.

அண்டத்தில் நான்கு இடங்களிலும்
பிண்டத்தில் நான்கு இடங்களிலும்
கடவுட் பிரகாசம் காரியத்தாலுள்ளது.

அவையாவன்.

| | அண்டத்தில் | பிண்டத்தில் |
|---|---|---|
| அகம் | அக்கினி | ஆன்மா |
| அகப்புறம் | சூரியன் | ஜீவன் |
| புறம் | சந்திரன் | மனம் புத்தி சித்தம் அகங்காரம் உள்ளம் ஆகிய அந்தக் கரணங்கள். |
| புறப்புறம் | நட்சத்திரம் | மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய இந்திரியங்கள் |

எல்லாம் வல்ல சித்து எனக்களித்து பிரும்மா விஷ்ணு ருத்ரன் மகேஸ்வரன் சதாசிவன் ஆகிய ஐவருங்கூடக் காணக் கிடைக்காத அருட்பெருஞ்ஜோதி இறைவன் எனது ஆன்மாவிலும், எனது ஜீவனிலும், எனது கரணங்களிலும், எனது இந்திரியங்களிலும் ஆக நான் என்று சொல்லக் கூடிய நான்கு இடங்களிலும் கலந்து கொண்டதால் எனது அகம், அகப்புறம், புறம், புறப்புறம் ஆகிய நான்கும் எனதாக இல்லாமல் அவனுடையதாகிவிட்டது. அவனே இவைகள் எல்லாமாய் விளங்குவதால் அந்த அருட்பெருஞ்ஜோதி என்னுள் பரிபூரணமாகக் கலந்து விளங்குகின்றது. எனது ஆன்மா முதல் இந்திரியங்கள்

வரை நான்கு இடங்களிலும் கலந்து விளங்குகின்ற அருட்பெருஞ்ஜோதி என் ஆண்டவரே என்னைத் தானாக்கிய அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே வந்தனம்.

குறிப்பு: எல்லா இறை அனுபவங்களையும் வள்ளலார் பெற்று இறைவனாகவே ஐந்தொழிலும் செய்யக் கூடிய ஆற்றல் பெற்றவராகதான் விளங்குவதையும் அவருடைய அகம், புறம், அகப்புறம், புறப்புறம் ஆகிய நான்கும் அருட்பெருஞ்ஜோதியாகவே விளங்குவதையும் உணர்த்தவே அருட்பெருஞ்ஜோதி நான்கு முறை விளிக்கப்பட்டது.

திருவருட்பிரகாச வள்ளலார்
திருவடிகளே சரணம்
வள்ளல் மலரடி வாழ்க வாழ்க
எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க
இராமலிங்க அபயம் துணை

## இராமலிங்க அபயம் துணை

இப்புத்தகம் வெளிவரப் பொருளுதவி செய்த புண்ணியவான்கள். நம் பெருமானார் நல்லருள் துணை பெற்றுச் சுகமாக நீடு வாழ்வார்களாக.

**திருவாளர்கள்**

1. சம்பந்தம் அவர்கள், சசுசச சங்கம், சீர்காழி
2. பரமேஸ்வரன் அவர்கள், பெங்களூர்
3. ருத்ரமூர்த்தி அவர்கள், பெங்களூர்
4. C.V. திரிபுராந்தகன் அவர்கள், சென்னை
5. திரு. V. சம்பத் அவர்கள், சென்னை
6. ந. வரதராசனார் அவர்கள், சென்னை
7. ந. சாந்தி ஞானமுத்து அவர்கள், சென்னை
8. பா. இராமலிங்கம் அவர்கள், சென்னை
9. திருமதி. கமலம்-பாலமுருகானந்தம் அவர்கள், சென்னை
10. திருமதி. சிவகாமி அம்மாள், பெங்களூர்
11. புலவர் கணேசன் அவர்கள், சைதை
12. திருமதி. மல்லிகா அவர்கள், சென்னை
13. திருமதி. சகுந்தலா-சிவராஜன் அவர்கள், சென்னை
14. திருமதி. ஜோதி கோதண்டம் அவர்கள், சென்னை
15. திரு. M. ஜெயச்சந்திரன் அவர்கள், சென்னை
16. திரு. M. சுந்தரம் அவர்கள், செயலாளர்,
    சன்மார்க்க சங்கம், தேனாம்பேட்டை, சென்னை
17. திரு. சிவதட்சிணாமூர்த்தி அவர்கள், சென்னை
18. திரு. க. நாகலிங்கம் அவர்கள், சென்னை
19. திரு. க. ஏகாம்பரம் அவர்கள், சென்னை